# ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் மஹாத்மியம்

(ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் வாழ்க்கை வரலாறு)



குருவடி சரணம்



திருவடி சரணம்

# ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் மஹாத்மியம்



எழுதியவர் :
**திருமதி. அருணா நாகராஜன்**

மேற்பார்வை :
**ஜோதிட நவரத்ன மணி**
**திரு. கே.வி.எல்.என். சர்மா**
தலைவர்
ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகள் பிருந்தாவன அறக்கட்டளை
(பதிவு பெற்றது)
சென்னை - 600 004., இந்தியா

வெளியீடு :
ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள்
பிருந்தாவனம் அறக்கட்டளை
(பதிவு பெற்றது)
ப.எண். 21/3, பு. எண். 43, அலமேலுமங்காபுரம்,
மைலாப்பூர், சென்னை - 600 004.
அலுவலகம் : 91-44-24938734; சக்திபீடம் : 91-44-22281408;
பாலாலயம் : 91-44-22281337
E-mail : guruji@seshadri.info
Website : www.seshadri.info

முதற் பதிப்பு : 1994
இரண்டாம் பதிப்பு : 2007

பதிப்புரிமை :
**ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள்**
**பிருந்தாவனம் அறநிலையம்** (பதிவு பெற்றது)
பழைய எண். 21/3, (புதிய எண். 43) அலமேலுமங்காபுரம்,
மயிலாப்பூர், சென்னை - 600 004.
தொலைபேசி : 24938734

ஸ்ரீ சக்ர மகாமேரு பதினெண் சித்தர் சக்தி பீட பிருந்தாவனம்,
எண். 1, சன்னதி தெரு, மாடம்பாக்கம்,
சென்னை - 600 073. தமிழ்நாடு, இந்தியா.
தொலைபேசி : 91-44-22281408, 91-44-22281337
E-mail : guruji@seshadri.info
Website : www.seshadri.info

விலை : ரூ. 75.00

அச்சிட்டோர் :
ஸ்ரீ மாருதி லேசர் பிரிண்டர்ஸ்,
சென்னை - 600 014. ✆ : 28522656

# பொருளடக்கம்

# முன்னுரை



எண்ணமே செயலாக்கம் பெறுகிறது. ஒரு சிறிய பொறியாக ஆத்மாவினுள் கிளம்பி பேரொளியாக மாறி பிரபஞ்ச சக்தியாக, மாபெரும் சக்தியாக உருவெடுத்து உலக இயக்கத்தை நடத்துகிறது. அதற்கு எடுத்துக்காட்டு மாடம் பாக்கம் பச்சைக்கல் ஸ்ரீ சக்ர மஹாமேரு பதினென் சித்தர் சக்தி பீடம்.

எண்ணமாகவும், செயலாகவும் இருந்து என்னுள்ளே என்னை இயக்கி ஆட்கொண்டு, அடிமையாக்கி, ஆணையிட்டு, அரவணைத்து, வழிகாட்டி, கருணை பொழிந்து உலக மகா ஸத்குருவாக விளங்கும் ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு நான் அடிமை. உலகம் முழுவதும் அவர் புகழ் ஓங்கவேண்டும். வானளாவிய ஆன்மீக விநோதங்கள், புரியாத அற்புத லீலைகள், அவரது மனம் கமழ மகிமைகள், சரித்திரம் படைத்த அவரது சரித்திரத்தில் இடம் பெற வேண்டும் என்று தோன்றியது.

ஜோதிட ஆலோசனை, ஆன்மீகப்பணி, சக்தி பீடத்தின் அரும் பணிகள், இதற்கிடையே குடும்ப வாழ்க்கை என்ற சூழ்நிலையில் நேரத்தை கண்டுபிடிப்பது மிகவும் கடினம். எனினும் "குருவருள் துணை நின்றது". ஜோதிடம் பார்த்து "குழந்தை கிடைக்குமா" என்று ஏங்கிய நிலையில் இருந்த ஆன்மாவிற்கு அருட்குழந்தையும் கிடைத்தது. அந்த அருள் பெற்ற புனித ஆத்மாதான் திருமதி. அருணா நாகராஜன்.

திரு.+திருமதி. நாகராஜன் தம்பதிகள் பண்பாளர்கள். அமைதி காப்பவர்கள். ஸத்குருவிடம் பரிபூரணமாக சரண் அடைந்தவர்கள். எல்லாவற்றிற்கும் மேலாக ஏறத்தாழ 20 ஆண்டுகள் நமது அற நிலையத்தின் அருட்பணியில் முழுமனதுடன் ஈடுபட்டு ஸத்குருவின் ஆணையை அப்படியே நிறைவேற்றுபவர்கள். சோதனையான நேரத்திலும், வேதனையான நேரத்திலும், சங்கடமான சூழ்நிலையிலும் தூண் போல் தோள் கொடுத்து சக்தி பீடம் அமைப்பதில் முக்கிய பங்கு வகிப்பவர்கள். எளிமையும், நேர்மையும், சத்தியமும்

குடிகொண்ட அவர்களிடம் தமிழ் புத்தகம் எழுதும் பணியை ஸத்குரு கொடுத்ததில் ஆச்சரியமில்லை. பாரம்பரியத்தின் புதுமையைக் காணும் இவ்வுலகில் பாரம்பர்யத்தின் பவித்ரமான தன்மையை காப்பதில் இவர்கள் காணும் புதுமை வியக்கத்தக்கது. பாராட்டப்பட வேண்டியது.

பரிபூரண, பரிசுத்தமான, சத்து, சித்து, ஆனந்த நிலையை அடைய இப்புத்தகம் வாசகர்களுக்கு பெரிதும் உதவும். இராமாயணம், மகாபாரதம் போன்ற புனித நூல்கள் போல் இப்புத்தகம் உங்கள் இதயத்தையையும் பூஜை அறையையும் அலங்கரிக்கும் என்பதில் ஐயமில்லை.

அற்புதமான உலக மகாஸத்குருவின் சரித்திரம் பேரானந்தத்தைக் கொடுக்கும். மாடம்பாக்கம் பதினெண் சித்தர் சக்தி பீடத்தில் தனிக் கோயிலில் கருணையின் உருவமாக அமர்ந்து அருள்பாலிக்கும் ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளின் திருவடித்தாமரைகளில் இப்புத்தகத்தை சமர்ப்பிக்கிறேன். அவரிடம் சரண் அடைவோம். பேரானந்த பெருவாழ்வு அடைவோம்.

வாழ்க வையகம்.

இப்படிக்கு
சக்திபீட சேஷ ஞானி
**குருஜி கே.வி.எல்.என். சர்மா**
தெய்வீக ஜோதிடர்
தலைவர், ஸ்தாபகர்
ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகள் பிருந்தாவன
அறக்கட்டளை (பதிவு பெற்றது)
சென்னை - 600 004. இந்தியா.

# என் உரை

ஸத்குரு ஶ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகள் துணை



''உலக மகா ஸத்குரு ஶ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளின் மகாத்மியம்'' என்ற புத்தகத்தை பன்னிரண்டு வருடங்களுக்கு முன் நான் எழுதியதற்கும் இப்பொழுது எழுதும் புத்தகத்திற்கும் நிறைய வித்தியாசம் இருக்கிறது. ஸத்குரு ஶ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளின் பூரண அனுகிரஹத்தை முழுவதுமாக அனுபவித்தவள்.

என் கணவருக்கு மும்பைக்கும் அதன்பின் குருவின் அருளால் கொழும்புவிற்கும் மாற்றம் ஏற்பட்டபொழுது, இதிலிருந்து போவதற்கே மனம் இல்லாமல் சென்றோம். எத்தனை விதமான சோதனைகள், இடர்பாடுகள், அத்தனையும் ஸத்குருவின் கருணையினால் கடந்தோம். மகான் சூட்சுமத்தில் கூறிய வெட்ட வெளியாக இருந்த மாடம்பாக்கம் நிலத்தில், பதினெண் சித்தர் சக்தி பீடம் உருவானதை எண்ணி மலைப்பாக இருக்கிறது. கடந்த காலத்தை மனது அசை போடுகிறது. மன அமைதி கிடைக்க வேண்டும் என்று ஏங்கிய மனத்திற்கு மருந்தாக சக்தி பீடம் அமைந்துள்ளது.

இராமாயணத்தில் ஶ்ரீ. இராமர், இலங்கையை அடைவதற்கு பாலத்தை கட்டும் பொழுது எவ்வாறு அணில், உதவி புரிந்ததோ அதுபோல உலக பொது வழிபாட்டு ஸ்தலமாக விளங்கும் இந்த சக்தி பீடம் அமைவதற்கு நாங்கள் எங்களால் இயன்ற சிறுபணியை செய்தோம். மனித முயற்சிக்கு அப்பாற்பட்ட சில பணிகளை எங்களை செய்ய வைத்து, தன்னம்பிக்கையை ஊட்டி எங்கள் வாழ்க்கையை வழிநடத்தி செல்பவர்தான் உலக மகா ஸத்குரு.

எங்கள் வாழ்வில் ஏற்பட்ட அனுபவங்கள் ஏராளம். அவற்றில் சிலவற்றை இதில் குறிப்பிட்டு இருக்கிறேன். அதுபோல் ஸத்குருவின் கருணையை அனுபவித்தவர்கள், தங்கள் அனுபவங்களை ஒரு சிலர் கூறியுள்ளார்கள். ஸத்குருவின் கொள்கைகளையும், உபதேசங்களை

யும் உலக முழுவதும் பரப்புவதற்காக எழுதப்பட்ட புத்தகம் இது. ஸத்குருவின் வாழ்க்கை வரலாற்றையும், மகாத்மியத்தையும் பற்றி விரிவாக கூறியுள்ளோம்.

சூட்சும குருவாக ஸத்குருவின் வழிகாட்டுதலிலும், ஸ்துல குருவான குருஜி சர்மா அவர்களின் மேற்பார்வையிலும் இப்புத்தகத்தை எழுதியுள்ளேன். இப்புத்தகத்தை அச்சிடுவதற்கு எங்களுக்கு பேருதவி புரிந்த மாருதி பிரிண்டர்ஸ்க்கு எங்கள் மனமார்ந்த நன்றியை தெரிவித்து கொள்கிறோம்.

இராமாயணம், மகாபாரதம் போல் மகாத்மியமும் ஒரு புனிதமான காவியமாகும். இதை பொக்கிஷமாக பாதுகாத்தல் வேண்டும். இதை படித்து மகானின் அருளை பெறுங்கள்.

அருள் பொங்கட்டும்!

வாழ்வு வளம் பெருகட்டும்!!

இப்படிக்கு
அருணா நாகராஜன்

## அத்தியாயம் - 1

# ஒரு புனித அவதாரம்

அது ஒரு இனிமையான காலைப்பொழுது, பறவைகள் இருள் நீங்கி ஒளி கிடைக்கப் போவதை உணர்த்துவது போல், சிறகடித்து பறக்கத் தொடங்கிய நேரம். கதிரவன் ஒளியைப் பெருக்குவதற்காக உதிக்கின்ற சமயம். ஜனவரி மாதம் 22-ஆம் தேதி 1870ம் ஆண்டு காஞ்சி மாநகரத்தில், ஸ்ரீ காமகோடி சாஸ்திரிகள் அவர்கள் இல்லத்தில் அனைவரும் ஒரு எதிர்பார்ப்புடன் இருந்தனர். ஸ்ரீ வித்யா உபாஸகர் பரம்பரையில் வந்த திரு. காமகோடி சாஸ்திரிகளின் குடும்பத்தினர் ஒரு குழந்தையின் ஜனனத்தை மிகுந்த ஆவலோடும், கவலையோடும் எதிர்பார்த்துக் காத்து இருந்தனர்.

காஞ்சி மண்டலம், நம் பாரத நாட்டின் தெற்குப் பகுதியில் தெய்வத் தன்மை வாய்ந்த ஒரு சிறந்த நகரம். இந்நகரம் சென்னையின் தென்மேற்குப் பகுதியில் சுமார் 80 கி.மீ. தொலைவில் அமைந்து உள்ளது. இந்நகரம் பிரம்மபுரம் என்றும், தர்ம க்ஷேத்திரம் என்றும், புராண நூல்களால் புகழ்ந்து கூறப்படுகிறது. இந்நகரம் பலநூறு ஆண்டுகளாகத் தெய்வத் தன்மையுடன் கூடிய ஒரு தலை சிறந்த நகரமாக இந்துக்களின் திருத்தலமாக விளங்கி வருகிறது. இது ஆயிரக்கணக்கான சிவலிங்கங்கள் நிறைந்து நிற்கும் பாக்கியம் பெற்றது. இங்குப் பல சைவ, வைணவ தேவாலயங்கள் நிரம்ப உள்ளன. இத்தலத்திலேயே அன்னை காமாட்சிக்கு நிறுவப்பட்ட ஆலயம் மிகவும் பிரபலமானது.

ஸ்ரீ ஜகத்குரு ஆதிசங்கரர் ஸ்வாமிகள், தம்முடைய திக் விஜயத்திற்குப் பிறகு இத்தலத்தில் சில காலம் தங்கி இருந்தார்கள்.

அச்சமயம் இத்திருத்தலத்தை ஸ்ரீவித்யா முறையில் வழிபாடு செய்ய ஒரு முக்கிய திருத்தலமாக அமைக்க உறுதி பூண்டார். அத்வைத சித்தாந்தத்தின் அடிப்படையிலே அம்பிகை லலிதா மஹா திரிபுர சுந்தரியை, சாக்த வழிபாட்டு முறையிலே ஈசனையும், அம்பிகையை யும், இரண்டறக் கலந்த தோற்றத்திலே வழிபாடு செய்யும், மிக உயர்ந்த, சிறந்த வழிபாட்டு முறைதான் ஸ்ரீ வித்யா தத்துவம். இந்த உடலையே ஆலயமாகப் பாவித்து, அதனுள்ளே அம்பிகை அமர்ந்து இருக்கிறாள், என்று நினைத்து வழிபாடு செய்வதுதான் ஸ்ரீ வித்யா முறை. ஸ்ரீ வித்யா உபாசகர் அந்தச் சக்தியைத் திரட்டி, ஒன்று கூட்டி, தன்னுள்ளே அடக்கிப் பார்க்கும் ஒரு அற்புத ஆற்றல் பெற்றவர். ஸ்ரீ வித்யா உபாசகர் என்பவர் தலைசிறந்த நன்னெறிகளை வாழ்க்கையில் கடைப்பிடித்து வரவேண்டும் என்பது ஒரு முக்கியமான அம்சமாகும். அத்தகைய நன்னெறிகளை சரிவர கடைபிடித்து வந்தவர்கள் காஞ்சி மாநகரத்தில் இல்லாத காரணத்தினால் ஸ்ரீ ஜகத்குரு ஆதிசங்கரர் ஸ்வாமிகள் நர்மதை நதிக்கரையில் இருந்து அன்னையிடம் மிகச் சிறந்த பக்தி கொண்ட பல குடும்பங்களை, ஸ்ரீ வித்யா வழிபாட்டு முறையைப் பரவச்செய்ய அழைத்து வந்தார். இவ்வழியில் வந்தவர்களே ஸ்ரீகாமகோடி வம்சத்தினர். இவ்வழி பாட்டு நெறிகளை, மிகச்சிறந்த முறையில் இன்று வரை நடத்தி வருகின்றனர். இவர்கள் ஜோதிட சாஸ்திரத்தையும் மக்களுக்கு எடுத்துக்கூறி வந்தனர்.

ஸ்ரீகாமகோடி சாஸ்திரிகள், அன்னை காமாக்ஷியை ஸ்ரீ வித்யா முறையிலேயே வழிபட்டு வந்தார். அவர் தன் வாழ்நாளை வஜூர் என்னும் காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள ஒரு சிற்றூரில் கழித்தார். இவர் கௌண்டிண்ய கோத்திரத்தில் உதித்தவர். இப்பெரியவர் சாஸ்திரங்களில் வல்லவர். இவருக்குச் சேஷம்மாள் என்ற பெயருடைய ஒரு புதல்வி மட்டும் இருந்தார். மகன்கள் இல்லை. இவருடைய தமையனார் சிதம்பர சாஸ்திரிகளுக்கு நான்கு குழந்தைகள். இரண்டு ஆண்கள், இரண்டு பெண்கள். ஸ்ரீ காமகோடி சாஸ்திரிகள், தன் தமையனார், சிதம்பர சாஸ்திரிகளின் குழந்தைகளை தன் குழந்தை களாகப் பாவித்து வந்தார். இந்நான்கு குழந்தைகளுள் மரகதம்மாள், கடைசிப்பெண். இப்பெண் இயற்கையிலேயே அதிக அழகும்.

நுண்ணறிவும், நல்லொழுக்கமும் நிரம்பப் பெற்றவள். இத்தகைய தலைசிறந்த குணங்கள் நிறைந்த மரகதம்மாளைக் கண்ட மக்கள், அவளை ஸ்ரீகாமாட்சி தேவியின் ஓர் அம்சம் என்று கொண்டாடி வந்தனர். இப்பெண், சிறுவயதிலேயே காவ்யம், நாடகம், சங்கீதம் இவை அனைத்திலுமே மிகச் சிறந்தவளாக விளங்கினாள். இயற்கை யாகவே சங்கீத ஞானம் அடைந்த அந்த பெண் பாடும்பொழுது பட்ட மரம் கூடத் துளிர் விட்டுப் பிரகாசிக்கும்.

ஸ்ரீ ஜகத்குரு ஆதிசங்கரர் அவர்களால் காஞ்சிபுரத்திற்குக் கொண்டு வரப்பட்ட 30 குடும்பங்களுக்குள் இரண்டு குடும்பத்தினரே எஞ்சி இருந்தனர். ஸ்ரீ வரதராஜர் என்பவர் ஸ்ரீ காமகோடி சாஸ்திரிகள் அவர்களின் சீடர். இவரும் காமகோடி வம்சத்தில் வந்தவர். இவர் அழகிலும், கல்வியிலும், மிகச் சிறந்தவர். ஸ்ரீ வித்யா முறையை நன்கு கற்று அறிந்தவர். வேத சாஸ்திரங்களில் கரை கண்டவர். நல் ஒழுக்கங்களுக்கு எல்லாம் இருப்பிடமானவர். இவ்வளவு அரிய குணங்களைக் கொண்ட ஸ்ரீவரதராஜருக்கு மரகதம்மாள்தான் சிறந்த மனைவி என்று பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டது.

சிறந்த ஜோதிட வல்லுநரும், ஸ்ரீ வரதராஜரின் தந்தையுமான ஸ்ரீ சேஷாத்ரி ஜோஸ்யரிடம் காமகோடி சாஸ்திரிகளும், ஸ்ரீ சிதம்பர சாஸ்திரிகளும், கலந்து ஆலோசித்து மரகதம்மாளை ஸ்ரீ வரதராஜருக்கு திருமணம் செய்ய நிச்சயம் செய்து கொண்டனர். மரகதம்மாளின் திருமணம் விசேஷ வைபவத்துடன் ஏழு நாட்கள் இனிது நடந்தேறியது. காஞ்சி மாநகரமே விழாக்கோலம் பூண்டு இருந்தது. மக்கள் எல்லோரும் ஒரு ஆதர்ச தம்பதியின், திருமண விழாவை மிகுந்த உற்சாகத்துடனும் மகிழ்ச்சியுடனும் கொண்டாடினார்கள்.

இறைத்தொண்டு செய்வதையே தலையாய கடமையாகக் கொண்டு இத்தம்பதியர் இல்லறத்தை நல்லறமாக நடத்தி வந்தார்கள். ஆண்டுகள் பல கழிந்தன. இவர்களுக்குக் குழந்தை பிறக்கவில்லை. அதைப் பற்றி, ஆழ்ந்த கவலையும், மனதிலே விரக்தியும் அவர் களை வாட்டின. ஆண்டவனைப் பலவாறு துதித்தும், சில பரிகாரங்களைச் செய்தும் அவர்களின் வேண்டுதல் நிறைவேறவில்லை. ஸ்ரீ வரதராஜர் 'தமக்கு ஏன் இந்த நிலை?' என்று தமக்குத் தாமே

## தாயின் வழிபிறப்பு




## தந்தையின் வழிபிறப்பு



கேட்டுக் கொண்டு மகிழ்ச்சி இல்லாமல் இருந்தார். 'தமக்கு ஒரு வாரிசு இல்லாமலேயே போய் விடுமோ?' என்று மரகதம்மாளும் ஸ்ரீ வரதராஜரும் வருந்தினார்கள். இறை அருளை வேண்டி கடும் தவம் புரிந்தனர். விரதங்கள் பல இருந்தனர். அவர்கள் இராமநாத ஸ்வாமியும், அன்னை பர்வதாம்பாளும் தங்களுடைய பிரார்த்தனையை நிறைவேற்றி வைப்பார்கள் என்ற நம்பிக்கையுடன், இந்துக்களின் புண்ணியத்தலமான இராமேஸ்வரம் சென்று வழிபட்டு வந்தனர். மங்கள சஷ்டி விரதம், மங்கள குமார விரதம் என்னும் கடுமையான விரதங்களை, உடலை வருத்தி, முறையாக அனுஷ்டித்து வந்தனர். தெளிவற்ற மனநிலையில் துக்கத்தை சுமந்து கொண்டு அவர்கள் அனுபவித்த அந்தக் கடுமையான நாட்களை வார்த்தைகளால் வருணிக்க இயலாது. நேர்மைக்கும், ஒழுக்கத்திற்கும் ஆன்மீகத்திற்கும் உறைவிடமாக இருந்தும், அத்தம்பதிக்குக் குழந்தை இல்லாதது மட்டுமே பெருங்குறையாக இருந்தது. 'அம்பிகை கண் திறந்து பார்க்கமாட்டாளா? கருணைகாட்ட மாட்டாளா?' என்று ஏங்கித் தவித்து கொண்டு இருந்தனர்.

தங்கள் கொந்தளிப்பையும், உணர்ச்சிகளையும், மனப் போராட்டங்களையும், மரகதம்மாளும் ஸ்ரீ வரதராஜரும் வெளிக் காட்டாமலிருந்தாலும், ஸ்ரீ காமகோடி சாஸ்திரிகள் தான் உயிருக்கு உயிராக நேசிக்கும் இவர்களுடைய மனக்குறையைக் கண்டு மிகவும் வருந்தினார். அதைப் போக்க அவருக்கு ஒரே வழிதான் தெரிந்தது. அவர், தன்னையே உருக்கி, தனிப்பொருளாக்கி அன்னையின் பாதங்களைத் தவிர தமக்கு வேறு கதியில்லை என்று சரணாகதி செய்தார். தன் பிரார்த்தனைக்கு அன்னை செவிசாய்க்கமாட்டாளா? இக்குடும்பத்திற்கு ஒரு மழலைச் செல்வத்தை அளிக்க மாட்டாளா? என்று மீண்டும், மீண்டும் காமாட்சி அன்னையிடம் முறையிட்டு வந்தார். மரகதம்மாளும், ஸ்ரீ வரதராஜரும், அனுபவித்துவரும் இந்த தாங்கொணாத்துயரத்தைத் துடைக்க, காமகோடி சாஸ்திரிகள் உறுதி பூண்டு கடும் முயற்சி எடுத்து, அம்பிகையை மிகவும் நெருங்கி வழிபடும் முறைகளை ஆராய்ந்து தீவிர உபாஸனையில் இறங்கினார். தன்னுடைய பிரார்த்தனையை அன்னை நிச்சயமாகத் தீர்த்து வைப்பாள் என்று பரிபூரணமாக நம்பினார். பால் நினைந்து அழுகின்ற குழந்தைக்கு அரவணைத்துப் பால் ஊட்டும் அன்னையான கருணைக் கடலான காமாட்சி, காமகோடி சாஸ்திரிகளின் கனவில் தோன்றி

“நவநீதம் கொடு. ஞானக்கலை உதிக்கும்” என்று கூறி மறைந்தாள். அதைக் கண்ட சாஸ்திரிகள் உற்சாகமாக எழுந்து, பராசக்தியைப் பலவாறாக அன்புடன் துதித்தார்.

சாஸ்திரிகள் பசுவின் வெண்ணெயை எடுத்து, காமாட்சி அன்னைக்கு அர்ப்பணம் செய்து மந்திரங்களை உச்சாடனம் செய்து, மரகதம்மாளுக்குக் கொடுத்து வந்தார். அதில் இருந்து தேவியின் கிருபை இவர்களுக்கு வெகு சீக்கிரத்தில் பலனைக் கொடுத்தது. மரகதம்மாள் மங்கள கர்ப்பம் தரித்தாள். இதை அறிந்த குடும்பத்தினர் அன்னையைப் பயபக்தியுடன் வணங்கினார்கள்.

தமிழ் ஆண்டு சுக்லவருஷம், தை மாதம், 11ஆம் தேதி சனிக் கிழமை (22.1.1870) கிருஷ்ணபக்ஷ சஷ்டி அன்று மரகதம்மாளின் மணிவயிற்றில் இருந்து தங்கப்பதுமை போன்ற நமது ஸ்வாமிகள் இப்புவியில் அவதாரம் செய்தார். திருக்கணிதப் பஞ்சாங்கப்படி, உத்திரம் 4-ஆம் பாதமும், வாக்கியப் பஞ்சாங்கப்படி, ஹஸ்தம் 1-ஆம் பாதமும் ஆக, ஸ்வாமியின் நட்சத்திரம் அமைந்தது. ஆண்டாண்டு-களாக அரும் தவம் புரிந்து, ஸ்ரீ சக்ரநாயகியின் தேவலோகப் பரிசாக, தங்களுக்குக் கிடைத்ததை எண்ணி, எண்ணி ஸ்ரீ வரதராஜரும் மரகதம்மாளும் ஆனந்தத்தில் திளைத்தனர். அவர்கள் இல்லமே ஆனந்த வெள்ளத்தில் மிதந்தது. குழந்தை மிகவும் அழகாக இருந்தது. அவர்கள் பிள்ளைப் பேற்றிற்காக மேற்கொண்ட கடும் தவத்திற்கும், விரதத்திற்கும், செய்த பூஜைகளுக்கும் கிடைத்த பெரும் பயனாக ஸ்வாமியின் அவதாரம் அமைந்தது. பிறந்த குழந்தை என்ன ஒரு சாதாரணக் குழந்தையா? அக்குழந்தை மனித வர்க்கத்திற்காக, மக்களுக்காக, அவர்களை நல்வழியில் நடத்திச் செல்வதற்காக, இந்த உலகத்திற்காக அம்பிகை கொடுத்த பரிசு அல்லவா?

குலதெய்வமான ஸ்ரீனிவாசனுக்கு உகந்த சனிவாரத்தில் உதித்ததை முன்னிட்டும், குலத்தின் மூதாதையரின் நாமதேயம் என்றும் கருதி, பாலகனுக்கு உரிய காலத்தில் உரிய நேரத்தில் ‘சேஷாத்ரி’ என்று பெயரிட்டனர் இப்படியாகப் புனித அவதாரத்தின் பேரொளி பிரகாசிக்கத் தொடங்கியது.

அத்தியாயம் - 2

# பால லீலைகள்

குழந்தை சேஷாத்ரி அனைவரின் அன்புக்கும் பாத்திரமாகத் திகழந்தார். தெய்வீக அம்சம் இருந்த காரணத்தினால் அனைவரையும் கவரக்கூடிய காந்தசக்தி அவரிடம் பரிமளித்தது. அவருடைய புன்னகை கரையாத நெஞ்சையும் கரைய வைக்கும். அவருடைய கள்ளமில்லாத புன்சிரிப்பு அனைவரையும் தன் வசப்படுத்தும். அவருடைய முதலாவது பிறந்தநாள்விழா, கோலாகலமாக அனைவராலும் கொண்டாடப்பட்டது.

குழந்தை சேஷாத்ரி, நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தார். மற்ற இளம் பிள்ளைகள் போல் பசுக் கன்றுகளின் பின்னால் திரிந்தும், தமக்குக் கிடைத்த பழங்களை உண்டும் காலம் கழித்து வந்தார். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கோகுலத்தை எவ்வாறு தன்வயப்படுத்திக் கொண்டாரோ, அவ்வாறே பாலகன் சேஷாத்ரியும், காஞ்சி நகர மக்களை மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தினார். மரகதம்மாளும், ஸ்ரீ வரதராஜரும், இவ்விதமாக குழந்தை வளருவதைக் கண்டு மகிழ்ச்சியையும், பெருமையையும், பூரிப்பையும் அடைந்தனர். கண்மணி சேஷாத்ரியை ஸ்ரீ காமகோடி சாஸ்திரிகள் அவருடைய கண்ணின் மணியாக எண்ணினார்.

நான்காவது வயதிலேயே, குழந்தை சேஷாத்ரியின் ஆழ்ந்த பக்தி வெளிப்பட்டது. தன் பெற்றோர்கள் வழிபாடு செய்யும் போதும், பூஜை செய்யும்போதும், அவரும் புஷ்பாஞ்சலி செய்து இறைவனை வழிபட்டு வந்தார். கரம் கூப்பி, சிரம் தாழ்த்தி, கண்ணை மூடிக்கொண்டு குழந்தை சேஷாத்ரி பூஜை செய்யும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும். அது மட்டும் இன்றி தன் தந்தையுடன் கூட அமர்ந்து தியானமும் செய்வார். குரு ஸ்துதி,



ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் நான்கு வயதிலிருந்து வழிப்பட்ட
ஸ்ரீ கிருஷ்ண விக்கிரகம்

மூஷிகவாகனம், இராமஸ்தோத்திரம், கிருஷ்ணாஷ்டகம் ஆகிய ஸ்லோகங்களை மிகவும் தெளிவாக, ஒரு சிறு பிழையும் இன்றிச் சொல்லும் வல்லமை பெற்று இருந்தார். குழந்தை சேஷாத்ரி மிகவும் அக்கறையுடன் அச்சிறுவயதிலே இறைவனை வணங்குவது வியக்கத்தக்கதாக இருந்தது.

இயற்கையான பல குழந்தைகளுக்கு இருக்கக்கூடிய விளையாட்டுத் தன்மை நீங்கி இளம் வயதிலேயே புறவிஷயங் களால் பாதிக்கப்படாமல், ஆழ்ந்த பக்தியோடு பூஜையில் ஈடுபட்டு இருந்தது ஆச்சரியமான நிகழ்ச்சி ஆகும். அச்சிறு வயதிலேயே வியக்கத்தக்க யோகியிடம் இருக்கக்கூடிய ஒரு அமைதியை அவரிடத்தில் காண முடிந்தது.

இந்த நேரத்தில் உங்களுக்கு ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அந்த சின்னஞ்சிறு உடலில் இருக்கக்கூடிய புனித ஆன்மா தெய்வீக ஒளியுடன் கூடிய பேராற்றல் மிகுந்த உள்ளொளியைக் கிளப்பக்கூடிய மாபெரும் சக்தியாகும். வெளித் தோற்றத்திற்குச் சாதாரண குழந்தை போல் தோன்றினாலும், அவதார நோக்கம் வேறு என்பதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். மற்றக் குழந்தைகளிடம் இருந்து ஒரு மாறுபட்ட தன்மை அவரிடம் இருந்தது. "விளையும் பயிர் முளையிலே தெரியும்" என்பதுபோல் வானிலே ஒரு ஜோதியாக மின்னி இந்த வையகத்திற்கே வாழ்த்து சொல்லப்போகும் அந்த மகானின் பாலலீலை ஒரு வித்தியாசமான அனுபவமாகும்.

மரகதம்மாள் தினந்தோறும் ஸ்ரீ வரதராஜ பெருமானின் கோயிலுக்குத் தனது நான்கு வயது மகன் சேஷாத்திரியுடன் சென்று வருவது வழக்கம். அப்பொழுது ஸ்ரீவரதராஜ பெருமாளுக்குப் பிரம்மோற்சவம் தொடங்கி இருந்தது. வழக்கம்போல் வெளியூர்களில் இருந்து வியாபாரிகள் வந்து, விதவிதமான விளையாட்டு சாமான்களை விற்பனை செய்ய கடை விரித்து இருந்தார்கள். குழந்தை சேஷாத்ரி வழக்கம்போல் தன் தாயாருடன் கோவிலுக்குச் சென்றுகொண்டு இருந்தபோது ஒரு வியாபாரி தவழும் கிருஷ்ண விக்கிரகங்களை வைத்து இருந்தான். குழந்தை சேஷாத்ரி அந்தக் கடையருகில் பாய்ந்து ஓடிச்சென்று, ஸ்ரீ கிருஷ்ண பகவானின் விக்கிரகம் ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டார். அந்த விக்கிரகமானது சுமார் இரண்டு அங்குல உயரமுடைய தவழும் வடிவில் அமைந்த நவநீத கிருஷ்ண விக்கிரகம் ஆகும். தான் பூஜை

செய்வதற்காக அந்தக் கிருஷ்ண விக்கிரகத்தை வாங்கிக்கொடுக்கும் படி தன் அன்னையிடம் குழந்தை சேஷாத்ரி கெஞ்சிக் கேட்டார். அன்னை வாங்கிக் கொடுக்க மறுத்ததும் பாலகன் சேஷாத்ரியின் கடவுள் பக்தியைக் கண்டு ஆச்சரியப்பட்ட அவ்வியாபாரி, விக்கிரகத்தைக் குழந்தைக்கு இலவச மாகக் கொடுத்து விட்டார். கிருஷ்ணனை எடுத்துக்கொண்டு அளவில்லா ஆனந்தத்துடன் நம் சேஷாத்ரி தாயைப் பின் தொடர்ந்தார். இருவரும் பகவானைச் சேவித்துவிட்டு வீடு வந்து சேர்ந்தனர். மறுநாள் காலை மரகதம்மாள் தன் உறவினர் சிலருடன் கூட குழந்தை சேஷாத்ரியையும் அழைத்துக்கொண்டு கோவிலுக்குப் புறப்பட்டாள்.

ஆலயத்திற்கு அருகில் சென்ற உடன் அந்த வியாபாரி எதிர் பாராமல் மரகதம்மாளையும், குழந்தை சேஷாத்ரியையும் சாஷ்டாங்க மாக நமஸ்கரித்தான். பாலகன் சேஷாத்ரியின் இருகரங்களையும் தன் கண்களில் ஒற்றிக்கொண்டு 'என் தங்கக்கை' 'என் தங்கக்கை'! என்று கண்களில் நீர்மல்க சொல்லிக் கொண்டான். "அக்குழந்தை தெய்வீகக் குழந்தை என்றும், அன்று நடந்தது ஒரு மிகப்பெரிய அற்புதம் என்றும் கூறினான். அவ்வியாபாரி ஒரு விக்கிரகத்தைக் குழந்தை சேஷாத்ரிக்கு அன்பளிப்பாகக் கொடுத்த அன்றைய தினமே ஆயிரம் விக்கிரகங்கள் ஆச்சரியப்படும் வகையில் விற்றுப்போயின! சாதாரண மாக இத்தகைய விழாக்காலம் முழுவதும் விற்றாலும் 200 அல்லது 300 விக்கிரகங்கள் மட்டுமே விற்கும். அதனால் அந்தக் குழந்தையை வாரி அணைத்து, கையை முத்தமிட்டு, அக்குழந்தையின் கை "தங்கக்கை" "தங்கக்கை" என்று சொன்னான். பாலகன் சேஷாத்ரியிடம் குறிப்பிடத்தக்க தெய்வீகத்தன்மை சிறு வயதில் இருந்தே தெள்ளத் தெளிவாக வெளிப்பட ஆரம்பித்தது. வித்யாப் பியாசத்திற்காக, அதாவது முறைப்படி ஐந்தாவது வயதில் கல்வி கற்க ஆரம்பிப்பதற்கான சில வைதீக காரியங்களை நிறை வேற்றிய பிறகு, தமது 5ஆவது வயதில் குழந்தை சேஷாத்ரி கோவில் பாடசாலையில் வேதம் படிக்க ஆரம்பித்தார். சாஸ்திரப் பாட சாலையிலும், சடகோப நிலையப் பாடசாலையிலும் அவர் அரிய நூல்களை ஆராய்ந்து கற்றார். பாலகன் சேஷாத்ரியின் அபூர்வமான புத்திசாலித்தனமும், அறிவுத்திறனும் அனைவரையும் வியப்பில் ஆழ்த்தின. அன்னை காமாட்சியின் இரத்தினமாக அவதரித்த குழந்தை சேஷாத்ரிக்கு கற்றவை அனைத்தும் எளிதாகப் பாடம் ஆயின. அதைக் கண்ட குடும்பத்தினர் எல்லையில்லாத மகிழ்ச்சியும், மன நிறைவும் அடைந்தனர். படிப்பில் மிகவும் ஆர்வம் உள்ள குழந்தை

சேஷாத்ரி சாஸ்திரங்களைக் கற்பதில் கவனம் செலுத்தி அதிகமாக உழைத்தார். அவர் மனம் இறைவனிடமே லயித்து இருந்தது. சிறு வயதில் இருந்தே சுயநலம் அற்ற முறையில் இறைவனிடம் பிரார்த்தனை செய்து வந்தார். பின்னாளில் அவர் ஒரு பெரிய மகானாக வரப்போகிறார் என்பதை ஒரு முன்னோடியாக உணர்த்துவது போல் அவருடைய செயல்கள் இருந்தன.

இந்த நேரத்தில் ஒரு பேரிடி போன்ற ஒரு நிகழ்ச்சி குழந்தை சேஷாத்ரியின் வாழ்க்கையில் நடந்தது. ஒரு நாள் காலை குழந்தை சேஷாத்ரி வழக்கம்போல் தன் தந்தையிடம் ஆசீர்வாதம் வாங்கச் சென்றார். தன் தந்தையின் கண்களில் இருந்து கண்ணீர் பெருகி ஓடிவருவதைப் பார்த்து மனம் வருந்தினார். பதைபதைத்துப்போன குழந்தை சேஷாத்ரி அதற்கான காரணத்தை தன் தந்தையிடம் வினவ, ஸ்ரீ வரதராஜர் ''நடப்பது நடந்தே தீரும்'' என்று கூறினார். பிறகு தன் மனைவியை அருகில் அழைத்து ''என் தம்பி இராமஸ்வாமி தனக்குச் சந்ததியில்லாததால், நம் குழந்தை நரசிம்மனை ஸ்வீகாரம் செய்து கொள்ள விரும்புகிறான். அவன் விருப்பப்படியே கொடுத்துவிடு என்று கூறினார். பிறகு தாம் இறைவனுடன் இரண்டறக் கலக்கும் நேரம் நெருங்கி விட்டது என்பதை எடுத்து உரைத்தார். இப்புண்ணிய பூமியை விட்டு விலகும் காலம் வந்துவிட்டது என்றும் உரைத்தார். துயரக்கடலில் ஆழ்ந்த தன் மனைவி மரகதம்மாளைச் சமாதானப் படுத்தி ''ஒரு பிரகாசமான எதிர்காலத்தை நோக்கி இருக்கும் குழந்தை சேஷாத்ரி யுடன் அவள் இருக்க வேண்டும் என்று கூறினார். ஒரு பிரதோஷ தினத்தன்று ஸ்ரீ வரதராஜர் ஏகாம்பரேசுவரர் கோவிலுக்குச் சென்று சிவபெருமானையும், அன்னை காமாட்சியையும் வணங்கி வீடு திரும்பினார். அன்று அவருடைய விரதநாள், சிறிதளவே தண்ணீரை அருந்தியபிறகு, அவருடைய ஆன்மா இப்பூவுலகை விட்டுப் பிரிந்தது.

ஸ்ரீ வரதராஜருடைய மறைவு மரகதம்மாளையும் குழந்தை சேஷாத்ரியையும், தீராத் துயரத்தில் ஆழ்த்தியது. பாலகன் சேஷாத்ரி, பற்றற்ற நிலையை அடைய எண்ணினார். அப்பொழுது அவருடைய வயது பதினான்கு. ஸ்ரீ காமகோடி சாஸ்திரிகள், ஸ்ரீ வரதராஜரின் மறைவினால் ஆழ்ந்த துக்கம் அடைந்தாலும் அதை வெளிக் காட்டாமல் கட்டுப்படுத்திக் கொண்டு, மரகதம்மாளுக்கும், சேஷாத்ரிக்கும் அமைதி கிடைக்க விரும்பினார். ஸ்ரீ அகத்தியர் முறைப்படி ''மந்திர

சாஸ்திர இரகசியத்தை'' சேஷாத்ரிக்கு உபதேசித்தார். சேஷாத்ரி வேதாந்த சாஸ்திரங்களைச் சுமார் ஒரு வருட காலத்திற்குள் நன்கு பயின்றார். இச்சமயத்திலே திரு. காமகோடி சாஸ்திரிகள் அவர் களுக்கு இராமாயணம், பாகவதம் ஆகியவற்றை உபன்யாஸம் செய்ய வந்தவாசியிலிருந்து அழைப்பு வந்தது. தனக்கு வயதாகி விட்ட காரணத்தினால் அப்பணியைச் சேஷாத்ரியிடம் ஒப்படைத்தார். இச்செயல் அனைவராலும், ஒப்புக் கொள்ளப்பட்டதால், மரகதம்மாள், சேஷாத்ரி, ஸ்ரீ காமகோடி சாஸ்திரிகள் ஆகிய மூவரும் வந்தவாசியை நோக்கிப் பயணத்தை தொடங்கினர். சுமார் ஓராண்டுக் காலம் சேஷாத்ரி, பாகவதத்தையும், இராமாயணத்தையும், மிகச் சிறந்த முறையில் உபன்யாஸம் செய்து அனைவரிடமும் பாராட்டைப் பெற்றார். அப்பொழுது சேஷாத்ரிக்கு 15 வயது நிரம்பியது. அவர் ஒரு பேரறிஞர். அவர் எல்லாத் துறையிலும் வல்லவர் என்ற அறிகுறிகள் தெரியலாயின.

உடல் வாட்டமும், மனவாட்டமும் அடைந்த காமகோடி சாஸ்திரிகள் இறுதிக் கட்டத்தை நெருங்கிக் கொண்டு இருந்தார். அவருடைய உடல்நிலை நாளுக்கு நாள் மோசமாகியது. மிகுந்த கடவுள் பக்தியும், சமயப்பற்றும் உள்ள இவர் தன் கடைசிக் காலம் நெருங்கியதை அறிந்து காஞ்சிபுரம் திரும்பினார். அவர் அங்கு 'ஆபத்சன்யாசம்' பெற்றுக் கொள்ள விரும்பினார். அவருடைய குரு கிருஷ்ணானந்த ஸ்வாமிகள் ஆவார். ''ஆபத்சன்யாசம்'' என்பது ஒரு உயிர் இந்த உடலை விட்டுப் பிரியும் தறுவாய் வந்துவிட்டது என்பதை உணர்ந்து, பற்றற்ற நிலையை அடைய விரும்பி, குறுகிய காலம் ஒரு சன்யாசியைப் போல் இறக்கும் வரையில் தனித்து வாழ்வது ஆகும். சன்யாசம் பெற்றுக்கொண்ட திரு. காமகோடி சாஸ்திரிகள், தன் பெயரை 'பிரம்மானந்த சரஸ்வதி' என்று மாற்றிக் கொண்டார். அடுத்த மூன்று மாதங்களை இவர், 'இவ்வுலகத்தை முற்றிலும் துறந்த ஞானியைப்போல் சக்கரத்தாழ்வார் சன்னிதியில் கழித்தார். மரகதம்மாளும், சேஷாத்ரியும் தினந்தோறும் உணவும், தண்ணீரும், கொடுத்து அவரைத் தரிசித்து விட்டு வந்தனர். பழுத்த பழம்போல் திகழ்ந்த திரு. காமகோடி சாஸ்திரிகள் இறைவனோடு ஒன்றிய நிலையில் இறுதி யாத்திரைக்குத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டார். குறுகிய காலத்திலேயே இரண்டாவது துயர நிகழ்ச்சியாக தன்னுடைய மகள் மரகதம்மாளுக்கும் பேரன் சேஷாத்ரிக்கும், தன்னுடைய மறைவு இருந்துவிடுமே என்ற வாட்டம் அவர் முகத்தில் தெரிந்தது.

திரு. பிரும்மானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகளான காமகோடி சாஸ்திரிகள் அத்தையின் மைத்துனர்தான் பரசுராம சாஸ்திரிகள் என்பவர். அவர் உடல் நலமில்லாத அறிஞரை, தாமலுக்கு அழைத்துச் செல்லத் தீர்மானித்தார். அங்கு அவருடைய ஆன்மா பிரிந்தது. காமகோடி சாஸ்திரிகளின் மறைவு மரகதம்மாளையும் சேஷாத்ரியையும் துயரக்கடலில் ஆழ்த்தியது. அடிமேல் அடியாக அந்த நிகழ்ச்சி இருந்தது. அவருடைய சமாதியைத் தாமலில் உள்ள சர்ப்பநதிக் கரையில் இன்றும் காணலாம். சுமை தாங்கிபோல் குடும்பப் பாரத்தைத் தாங்கிய ஸ்ரீ காமகோடி சாஸ்திரிகளின் மறைவு மரகதம்மாள், சேஷாத்ரி அவர்களின் மனநிலையைப் பாதித்து, அவர்களுடைய வாழ்க்கையையே அர்த்தமற்றதுபோல் காட்டியது. "மண்பாண்டங்கள் செய்யும் குயவன் எப்படிப் பக்குவமாக அதைச் செய்கிறானோ," அதுபோன்று தங்களுடைய வாழ்க்கையைப் பக்குவப்படுத்தி உயர் நிலைக்குக் கொண்டு வந்த அந்த மகானைப் பற்றிய நன்றியுணர்வு இருவருக்கும் இருந்த காரணத்தினால் அவரது மறைவு ஈடுசெய்ய முடியாத ஒரு பேரிழப்பாக இருந்தது.

தாமல் என்னும் கிராமத்தில் சேஷாத்ரியின் தந்தையின் சகோதரி வெங்கலக்ஷ்மி என்பவர் வசித்து வந்தார். அவருக்குக் "காகினி தேவி" என்ற ஒரு மகள் இருந்தாள். அவர்களைக் காகம்மாள் என்று அழைப்பதும் உண்டு. தந்தையின் சகோதரியான வெங்கலக்ஷ்மி தன் மகளைச் சேஷாத்ரிக்கு மணமுடிக்க விரும்பி அதைப்பற்றி மரகதம்மாளிடம் பேசி முடிக்க காஞ்சிபுரம் சென்றார். அப்பொழுது தான் இராமசாமி ஜோஸ்யர், சேஷாத்ரியின் ஜாதகத்தில் ஒரு சன்யாசி போல் திகழக்கூடிய யோகம்தான் இருக்கிறது என்ற விஷயத்தைச் சொன்னார். இதைக் கேட்ட அனைவரும் 'என்ன செய்வது?' என்று புரியாமல் அதிர்ந்து நின்றனர்! இதைக் கேள்விப் பட்ட வெங்கலக்ஷ்மி தன் ஊருக்குத் திரும்பி காகம்மாளுக்கும், வேறு ஒருவருக்கும் மணமுடித்து வைத்தார். ஏற்கெனவே இரண்டு துயர நிகழ்ச்சிகளில் "இருதலைக் கொல்லி எறும்புபோல்" சிக்கித் தவித்த மரகதம்மாளுக்குத் 'தன் மகன் சேஷாத்ரிக்குத் திருமணம் இல்லை!' என்ற செய்தி தாங்கொணாத் துயரமாக இருந்தது!

ஒரு ஏகாதசி தினத்தன்று மரகதம்மாள் தன்னுடைய மகன் சேஷாத்ரியை அருகில் அழைத்தாள். காமகோடி சாஸ்திரிகளால் இயற்றப்பட்ட ஒரு பஜனைப்பாடலைப் பாடச் சொன்னாள். பின் சேஷாத்ரியை வாரி அணைத்துக்கொண்டு ஆதி சங்கரரால் இயற்றப்

பட்ட பஜகோவிந்தத்திலிருந்து ஒரு புகழ் பெற்ற கீழ்க்கண்ட பாடலைச் சொன்னாள்.

सत्संगत्वे निस्संगत्वं निस्संगत्वे निर्मोहत्वम् ।
निर्मोहत्वे निश्चलतत्वं निश्चलतत्वे जीवन्मुक्तिः ॥

*"ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்*
*நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம்*
*நிர்மோஹத்வே நிஸ்சலதத்வம்*
*நிஸ்சலதத்வே ஜீவன் முக்தி.*

दर्शनात् अभ्रसदसि जननात् कमलालये ।
काश्यां तु मरणान्मुक्तिः स्मरणादरुणाचले ॥

*"தர்சனாத்அப்ரஸதஸி*
*ஜனனாத் கமலாலயே*
*காச்யாம்து மரணான் முக்திஹி*
*ஸ்மரணாத்அருணாசலே ||"*

"அருணாசலா" "அருணாசலா", "அருணாசலா" என்று மூன்று முறை கூறிய மரகதம்மாளின் ஆவி இறைவனோடு இரண்டறக் கலந்து அழிவற்ற பேரானந்த நிலையை அடையப் புறப்பட்டு விட்டது. "அடியற்ற மரம்போல்" சேஷாத்ரி மயங்கி விழுந்தார். தாயின் இறுதிச் சடங்குகளை மனதைத் தேற்றிக் கொண்டு முடித்தார். அன்னை உணர்த்திய வார்த்தையிலிருந்து திருவண்ணா-மலையில் இருந்து தனக்கு அழைப்பு வந்துவிட்டது என்று எண்ணி, ஒரு திருப்பு முனையாக அமையப்போகும். ஆன்மீகப் புதிய வாழ்க்கையாக இருக்கப் போகும், நமக்கு எல்லாம் கலங்கரை விளக்கமாகத் திகழப் போகும் இறை உணர்வு வாழ்க்கைக்குத் தன்னைத் தயார் செய்து கொண்டார்.

அத்தியாயம் - 3

# ஞானஒளி வீசுகிறது

மரகதம்மாளின் மறைவு சேஷாத்ரிக்கு ஒரு பற்றற்ற நிலையை ஏற்படுத்தியது. அவரைப் பின்னிப் பிணைத்த இப்பூவுலகில் உள்ள அனைத்து உறவுகளில் இருந்தும் அவர் தன்னை விடுவித்துக் கொள்ள எண்ணினார். வைராக்கியம் என்ற தீ அவர் உடல், பொருள், ஆன்மா அனைத்திலும் கொழுந்துவிட்டு எரிந்தது. வாழ்க்கையின் அர்த்தத்தையும், நிரந்தரமான நிம்மதியையும் தன் ஆன்மாவின் அடித்தளத்தில் தேட விழைந்தது. தன் தாயார் மறையும் தறுவாயில் திருவண்ணாமலையைப் பற்றிக் கூறியதைக் கற்பனையில் பார்த்து, அதை ஒரு படமாக வரைந்து, சேஷாத்ரி வணங்கத் தொடங்கினார். இதில் ஆச்சரியம் என்னவென்றால் திருவண்ணாமலைத் திருத்தலத்தை அவர் அதற்கு முன்பு தரிசித்ததும் இல்லை; அங்குச் சென்றதும் இல்லை. ஆனால், அந்தத் திருவண்ணாமலையைத் தத்ரூபமாக அவர் வரைந்து இருந்தார். அங்குதான் அவர் தன் எஞ்சியுள்ள வாழ்க்கையைக் கழிக்கப் போகிறார் என்பதற்கு அது ஒரு அறிகுறியாக இருந்தது.

சிறுவன் சேஷாத்ரி தன்னுடைய சிறிய தகப்பனாரான இராமசாமியுடனும், சிறிய தாயான கல்யாணியுடனும் இப்பொழுது வளர்ந்து வந்தார். உறுதி பூண்ட வைராக்கியத்துடன், நெருங்கிய இறைஉணர்வுடன் ஒரு பெரும் சாதனையை புதிய அத்தியாயமாகப் படைக்க எண்ணினார். ஸ்ரீ காமகோடி சாஸ்திரிகளால் சொல்லிக் கொடுக்கப்பட்ட, "துர்காஸ்துதி" என்னும் மந்திரத்தைச் சொல்ல ஆரம்பித்தார். பூஜையறையில் ஸ்ரீராமர், ஸ்ரீ காமாட்சி அம்மன் மேலும் தான் வரைந்த திருவண்ணாமலை படத்தை வைத்து அதன் முன்நின்று மதியம் வரை ஸ்லோகங்களைச் சொல்லி வந்தார். சில சமயம் சக்கரத்தாழ்வார் சன்னிதியில் உட்கார்ந்து தியானம்

செய்வார். இரண்டு மணிக்கு மேல் கொஞ்சம்கூடத் தங்குதடை இல்லாமல் காமாட்சி அம்மனின் சன்னிதியின்முன் மூகபஞ்ச ஸ்துதியைச் சொல்லுவார். தினந்தோறும் சந்தியாவந்தனம், காயத்ரி ஜபத்தையும் தவறாமல் செய்வார். ஏற்கெனவே வேத சாஸ்திரங்-களையும், தியானத்தையும் நன்கு அறிந்த இவருக்கு இந்த வைராக்கிய சாதனை அழகுக்கு அழகு சேர்ப்பதுபோல் இருந்தது. தன்னுடைய வெளித்தோற்றத்தில் அவ்வளவாகக் கவனம் செலுத்த வில்லை அவர். எண்ணெய் தேய்த்துக் கொள்வதில்லை. முக க்ஷவரம் கிடையாது. தேக சிந்தனை அற்று அன்ன ஆகாரம் இன்றி, பலகாலம் இருப்பார். கோவிலில் கொடுத்த அன்னத்தைக் கொஞ்சம் உண்டு, மீதியை மிருகங்களிடம் பகிர்ந்து உண்ணுவார். அவருடைய உடல்நிலையைப்பற்றிக் கவலை கொண்ட உறவினர்கள், உடம்பைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி வேண்டுவார்கள். ஆனால் அவைகள் எல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்கு போல் இருந்தது.

இந்நாட்களில் சேஷாத்ரியின் நடவடிக்கைகள் எல்லாம் கொஞ்சம் விநோதமாக இருக்கும். இவர் வானத்தை நோக்கி சூரிய நமஸ்காரம் செய்வார். பிறகு பிராமணர்களின் நல்வாழ்த்துக்களைப் பெறுவார். எல்லாப் பெண்களையும் தாயாகப் பாவித்து அவர்கள் கால்களில் விழுவார். இவர் எப்பொழுதும் ஸம்ஸ்கிருதத்தில் பேசி, பெரிய பெரிய அறிஞர்களிடம் சர்ச்சை செய்து விவாதித்துக் கொண்டு இருப்பார். இவர் தன் நெற்றியில் குங்குமம் அணிந்து இருப்பார். தெருக்களில் நடக்கும்போது, தனக்குத் தானே பேசிக் கொண்டே செல்வார். அவருக்கு என்று சொந்தமான வீடு என்று எந்த வீட்டையும் கருதாமல் எல்லா வீடுகளையும் தன் வீடாக நினைத்துக் கொள்வார். திரு. சீனிவாச அய்யர் என்பவருடைய இல்லத்திற்கு அடிக்கடி சென்று அங்குள்ள குழந்தைகளிடம் மிகவும் பிரியமாக விளையாடுவார் அவர். அகத்திலே ஜீவ ஒளியைப் பெருக்கிக் கொண்டு, புறத்திலே பித்தன் போல் திரிந்த சேஷாத்ரியை, அவரது உறவினர்கள் ஒருமுறை மூன்று நாட்கள் வைத்துப் பூட்டினர். ஜீவனான சிவன் அவரது உள்ளத்தில் ஒளியாக இருந்த காரணத்தினால், ஆழ்நிலைத் தியானத்தில் அமர்ந்து விட்டார். சலனமற்ற சத்து, சித்து, ஆனந்த நிலையில் இருந்தார். இதனைக் கண்ட அவருடைய உறவினர்கள், அவருடைய உடல் நிலையைக் கண்டு, பீதியுற்று உடனடியாக அவரை வெளியில் விட்டனர்.

சேஷாத்ரி ஞானப் பைத்தியம் ஆகிவிட்டார் என்றும், அதனால் தான் இவ்வளவு ஜபம் செய்கிறார் என்றும் மக்கள் பேச ஆரம்பித்தனர்.

कामोकार्षीत् मन्युरकार्षीत् नमो नमः ।

*காமோகார்ஷீத் மன்யுரகார்ஷீத் நமோநம:*

"மனிதனுடைய கர்மவினையை நீக்கும் மந்திரம் மேற்கண்ட வேத மந்திரம் ஆகும்", என்று சேஷாத்ரி சொல்வார். அந்த மந்திரத்தை ஒரு லட்சத்திற்கும் மேலாகத் திரும்பத் திரும்பச் சொன்னார். மக்களுக்கு நன்மை பயக்கும் இந்த மந்திரத்தை அடிக்கடி கூறுமாறு அறிவுரை கூறினார். ஆனால் துரதிஷ்டவசமாக இந்தக் கால கட்டத்தில் ஒப்புயர்வற்ற பேரானந்த நிலையிலிருந்து, அந்தப் புனித ஆன்மாவின் வாக்கிலிருந்து வந்த நல்முத்துக்களான சத்தான விஷயங்களை மக்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. சோதனையும், வேதனையும் இல்லையென்றால் சாதனை இருக்கா தல்லவா? மக்களால் தொல்லைக்கு ஆளான சேஷாத்ரி தியானத்தில் ஈடுபடமுடியாமல் ஒன்றிய நிலையை வேண்டி மயானத்தில் தியானத்தைச் செய்ய எண்ணினார். இது உறவினர்களையும், மற்றவர்களையும், அதிர்ச்சியில் ஆழ்த்தியது. ஆசார்ய வைதீக பரம்பரையில் வந்த சேஷாத்ரி, தன்னுடைய சாதனையைத் தொடருவதற்கு மயானத்தைத் தேர்ந்தெடுத்ததை மக்களால் ஏற்றுக் கொள்ளமுடியவில்லை. மன்னிக்க முடியாத பெரிய குற்றத்தைச் சமுதாயத்தில் அவர் செய்துவிட்டது போல் தோன்றியது. அதனால் திரும்பவும் சேஷாத்ரியைப் பலவந்தமாக வீட்டிற்கு அழைத்து வந்து ஒரு அறையில் வைத்துப் பூட்டினர். பிறவிப் பெருங்கடலை நீந்த வேண்டி, ஐம்புலன்களையும் ஒருங்கே அடக்கி, உள்ளொளி கிளப்பி, மாபெரும் சக்தியைப் பெருக்கிக் கொள்ளக்கூடிய ஆற்றல் இளமையிலேயே சேஷாத்ரியிடம் இருந்தது. அங்கே அந்த இளம் துறவி முற்றிலும் அமைதியான அந்த சூழ்நிலையில் அன்னம், ஆகாரத்தை ஒதுக்கிவிட்டுத் தியானத்தில் ஆழ்ந்தார். அதனால் உறவினர்களுக்கு அவரை வெளியில் விடுவதைத் தவிர வேறு வழியில்லை. ஆயிரம் நட்சத்திரங்கள் கூடினாலும் ஒரு சந்திரனுக்கு ஈடாகாது. அவருடைய முகத்தில் இருந்து ஞானஒளி பிரகாசிக்கத் தொடங்கியது. அதனால் அவரைக் கேலி செய்வதற்கோ, குறை கூறவதற்கோ ஒருவருக்கும் துணிவில்லை!

ஒருநாள் சேஷாத்ரி வீடு திரும்பும் வேளையில் அவருடைய சிற்றப்பா, தன்னுடைய இந்தச் செய்கையைப் பற்றி மிகவும் கேலியாக பேசுவதைக் கண்டார். பெரியவர்களிடம் மதிப்பும், மரியாதையும், சேஷாத்ரிக்கு இருந்தாலும், எடுத்துக்கொண்டு உள்ள பெரும் தெய்வீகப் புனிதப் பயணத்திற்கு இடையூறாக யாரும் தலையிடுவதை அவர் விரும்புவதில்லை. அவருக்கும் சித்தப்பா விற்கும் வாக்குவாதம் ஏற்பட்டது. சஞ்சலம் நிறைந்த மனத்தோடு இருக்கும் அவருடைய சிற்றப்பாவிடம் சேஷாத்ரி, "ஒவ்வொரு வரும், அவரவர்கள் முறைப்படி வாழ்க்கையை வகுத்துக் கொள்ள வேண்டும். ஆனால் ஒருவருடைய வழி மற்றவர்களுக்கு உகந்ததாக இருக்காது." என்று எடுத்து உரைத்தார். அவர்கள் உரையாடிக் கொண்டிருக்கும் பொழுதே சேஷாத்ரி வெளியில் ஓடினார். சிறிது நேரம் கந்தர்வர்கள் எல்லாம் வானத்திலே பாடிக்கொண்டே பறக்கிறார்கள் என்றும், சாதாரண மனிதர்களின் கண்கள், கர்ம வினையால் கட்டுப்பட்டதனால் அவர்களால் இந்தப் புனிதக் காட்சியைக் காணமுடியாது" என்றும் சொன்னார். இவ்வாறு சொல்லிக் கொண்டே அமைதியாகத் தன் வேலையைக் கவனிக்கச் சென்றார்.

சேஷாத்ரி மனித வர்க்கத்திற்குக் கிடைத்தற்கரிய, ஒரு பெரிய புனித ஆன்மா என்று அவர் செயல்கள் நிரூபித்தாலும் உறவினர்கள் அவரைப் பைத்தியமாகவே எண்ணினார்கள். திருமணம் என்னும் பந்தத்தினால் அவருடைய நடவடிக்கையை மாற்றி அமைக்கலாம் என்று எண்ணினர். குறிப்பாகச் சித்தப்பா திரு. இராமசாமி இந்தப் பாதையைச் சேஷாத்ரி தேர்ந்தெடுப்பதற்குத் தான்தான் காரணம் என்று மனதுக்குள் உருகினார். தன்னால்தான் சேஷாத்ரியின் திருமண வாழ்க்கை தடைபட்டதோ என்று எண்ணி வருந்தினார். ஆகையால் திருமணம் செய்து விடலாம் என்று முடிவுசெய்து முயற்சிகளை மேற்கொண்டார். இதை அறிந்த சேஷாத்ரி திருமணத்தைப் பற்றிய பேச்சு மீண்டும் எடுக்கப்பட்டால் 'இந்த வீட்டில் இனி இருக்க மாட்டேன் என்று உறுதியாகக் கூறினார். இறைவனால் பகுத்து வகுத்துக் கொடுக்கப்பட்ட தெய்வீக வாழ்க்கையிலிருந்து எவ்வித மாற்றமும் இல்லை என்பதைத் தெளிவாக எடுத்து உரைத்தார். அதன்பிறகு அவருடைய குடும்பமே அமைதியில் ஆழ்ந்தது.

சிறுவன் சேஷாத்ரி தொலைநோக்குப் பார்வையும், உறுதியான மனப்போக்கும் உடையவர். மயான பூமியில் அவர் செய்த ஜபம் தொடர்ந்தது. தாமல் பரசுராம சாஸ்திரிகள் சேஷாத்ரியை மயான

ஜபம் செய்ய வேண்டாம் என்று அறிவுரை கூறினார். இருவருக்கும் மூன்று மணிநேரம் வாக்குவாதம் தொடர்ந்தது. அப்பொழுது சேஷாத்ரி தான் "நைஷ்டிகப் பிரம்மச்சாரி" என்றும், அதனால் மயான ஜபம் செய்ய அனுமதி உண்டு என்பதைச் சாஸ்திரங்களிலிருந்து மேற்கோள்களை எடுத்துக்கூறித் தெளிவுபடுத்தினார். வானமே கூரையாக, பூமியே இல்லமாக, மரங்களே நிழல்களாக, பஞ்ச பூதங்களே துணையாகக் கொண்டு ருத்ர பூமி ஜபத்தை அன்னை காமாட்சி மாங்காட்டில் பஞ்ச அக்கினி நடுவில் செய்தது போல பல மாதங்களுக்குக் கடுமையாகச் செய்தார். இதனால் அவருக்கு என்ன இலாபம்? இந்த வையகத்திற்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டார் அவர்.

பிரகலாதனின் பிரார்த்தனைக்குத் திருமால் ஓடோடி வந்தது போல், சேஷாத்ரியின் வாழ்க்கையில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி நடைபெற்றது. ஒரு நாள் சேஷாத்ரி தெரிந்தவர்களுடன் பக்கத்தில் உள்ள விஸ்வநாதர் கோவிலுக்குச் சென்றார். பல சந்நியாசிகளின் நடுவில் கருத்தைக் கவரும் ஒரு உன்னதமான ஒளியுடன் ஒரு சன்யாசி அமர்ந்து இருந்தார். அவரைப் பார்த்த சேஷாத்ரி, "குரு தக்ஷிணாமூர்த்தியே இங்கே அமர்ந்து இருக்கிறாரோ," என்று எண்ணினார். அந்தப் பேரொளியுடன் அமர்ந்து இருந்த அந்த சந்நியாசி யாருமில்லை. பாலாஜி ஸ்வாமிகள் தான். அவர் ஹரித்வாரிலிருந்து இராமேஸ்வரத்திற்குப் புனிதயாத்திரை செல்லும் வழியில் ஸ்ரீகாமாட்சி அம்மனைத் தரிசிப்பதற்குக் காஞ்சிபுரம் வந்தார். அவரைக் கண்டு சேஷாத்ரி மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். பாலாஜி ஸ்வாமிகளின் கண்களில் இருந்து கிளம்பிய ஒளிக் கிரணங்கள், சேஷாத்ரியின் ஆன்மாவில் ஊடுருவிச் சென்று ஈர்த்தது. ஒளியோடு ஒளிசேர்ந்தது. ஸத்குருவைக் கண்ட சேஷாத்ரி பேரானந்தத்தில் திளைத்தார்.

குருவின் சேவையில் சேஷாத்ரி தன்னையே அர்ப்பணித்துக் கொண்டார். மணிக்கணக்காகத் தன் குருவின் கால்களையும், கைகளையும் பிடித்து விடுவார். அவருக்கு விசிறுவார். பழமும், பாலையும் அன்புடன் அவர் உண்பதற்குக் கொடுப்பார். தன் குருவின் எண்ணங்களைப் புரிந்துகொண்டு அதற்கேற்றவாறு செயல் பட்டார். அவர்கள் இருவரும் தெய்வீகத் தலைப்புகளை எடுத்துக் கொண்டு, பலகோணங்களில், புனிதநூல்களின் சாராம்சத்துடன்,

அலசி ஆராய்ந்தார்கள். கிடைத்தற்கரிய பேறாக இந்த வாழ்க்கையை சேஷாத்ரி எண்ணினார். இந்தக் காலகட்டம் தான் தெய்வீக உணர்வுகளைக் கொண்ட இளம் மனிதனாக வாழ்ந்த அவரை விவரிக்க முடியாத பேராற்றல் நிறைந்த ஒரு மாபெரும் துறவியாக மாற்றியது. இந்து மதத்தின் அடிப்படைத் தத்துவத்திலே. குருபக்திக்கும், குருசேவைக்கும்தான் முதல் இடம் கொடுக்கப் பட்டுள்ளது. "குரு அருள் இல்லையேல் திருவருள் இல்லை" என்பது நாம் அறிந்ததே. இறைவழிபாடே இதற்குப் பிறகுதான் சொல்லப்பட்டுள்ளது. அதனால் இளம் சேஷாத்ரி, குருவான பாலாஜி ஸ்வாமிக்கு எந்தவிதச் சிந்தனையும் இன்றி சேவை செய்வது இயற்கையே. குருவின் விருப்பங்களைச் சிரமேற்கொண்டு நிறைவேற்றினார். அற்ப ஆசைகளை ஒதுக்கி, சுயநலம் அற்ற குருசேவையில் தன்னை ஈடுபடுத்திப் பேரானந்தத்தை அடைந்தார்.

குருவிடம் இருந்து உபதேசம் பெற்று, பற்றற்ற துறவறத்தை மேற்கொள்ளும் சூழ்நிலை சேஷாத்ரிக்கு ஏற்பட்டது. தன்னுடைய சீடரின் சேவையிலும், பக்தியிலும் களிப்படைந்த பாலாஜி ஸ்வாமிகள் சேஷாத்ரிக்கு முறைப்படி சன்யாசம் அளித்து மகா வாக்கியங்களையும் உபதேசித்து அருளினார். அதன்பிறகு அவர் இராமேஸ்வரத்தை நோக்கிப் பயணமானார். பாலாஜி ஸ்வாமிகளின் அருள் சேஷாத்ரியின் வாழ்க்கையில் ஒரு புனித, புதிய பாதையைக் காட்டியது. தெய்வீக சுதந்திர உணர்வுகள் அதிகமாயின. தணியாத தாகமாக அவர் ஏங்கித் தவித்துக்கொண்டு, நீண்ட நாட்களாகக் காத்து இருந்த அந்தக் குருவின் அருளாசி கிடைத்தபின், இதயத்தின் அடித்தளத்திலிருந்து எதைப்பெற வேண்டுமோ, அதைப் பெற்று விட்ட பேரானந்தம் அந்தப் புனித ஆன்மாவிற்குக் கிடைத்தது. ஒரு துறவியின் அடையாளப் பொருளான கமண்டலத்தையும் தண்டத்தையும் உதறித் தள்ளி, அதன் அர்த்தமான வைராக்கியத்தையும், பக்தியையும் கூட்டி, ஜீவன் முக்திநிலையை அடைய எண்ணினார். மலையே குலைந்தாலும், நிலைகுலையாமல், சமரச சன்மார்க்க நெறியில் தன்னுடைய பயணத்தைத் தொடர்ந்தார். எந்தவிதப் பந்தமும் இல்லாமல் சுதந்திர இறைஉணர்வோடு அன்புக்கும், ஆழ்ந்த பக்திக்கும் அடையாளமாகக் காஞ்சி மாநகரிலே அந்த இளம் துறவி திரிந்துகொண்டு இருந்தார்.

இப்படி ஆத்ம விசாரணையில் ஈடுபட்டுத் திரிந்து கொண்டு இருந்த பொழுது சேஷாத்ரியின் தகப்பனாரின் வருடாந்தரத் திதி வந்தது. அவருடைய உறவினர்கள். குறிப்பாக அவருடைய சித்தி

சேஷாத்ரி துறவறம் மேற்கொண்டதை எண்ணி வருந்தினாள். அவர்களுக்கு சேஷாத்ரி இன்னும் சிறு பிள்ளைதானே? தன்னைத் தானே அறிந்து குறிப்பிடத்தக்க திறமைகளைப் பெற்ற அந்த இளம் சன்யாசியை அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. சேஷாத்ரி அவருடைய தகப்பனாரின் வருடாந்தரத் திதி சடங்கில் கலந்து கொள்ள வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது.

அவரை வீட்டிற்குக் கொண்டு வர முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. சேஷாத்ரி, அவர்களிடம் தான் ஒரு சன்யாசி என்றும், தனக்கு கர்மாவே கிடையாது என்றும் எவ்வளவோ மறுத்தும், அவரைப் பலவந்தமாக அழைத்து வந்து ஒரு அறையில் வைத்துப் பூட்டினர். சேஷாத்ரியின் சகோதரர் நரசிம்மர் ஹோமத்தைத் தொடங்கினார். சேஷாத்ரி கலந்து கொள்ளும் நேரம் நெருங்கியது. அவருடைய சித்தப்பா அவரை அழைத்து வருவதற்காகச் சென்றார். அவர் அந்த அறையைத் திறந்து பார்க்கும்பொழுது அதிர்ச்சி அடைந்தார். அந்த அறையில் ஒருவரும் இல்லை. இராமசாமிக்கு அவருடைய கண்களையே அவராலேயே நம்பமுடியவில்லை. உள்ளேயிருந்து சேஷாத்ரி வருவாரோ என்று பார்த்துக் கொண்டு இருந்த மக்களாலும் இதை நம்ப முடியவில்லை. எல்லாரும் ஏமாற்றம் அடைந்தனர். அவருடைய உறவினர்களுக்கும் நண்பர் களுக்கும் அப்பொழுதுதான் சேஷாத்ரியின் இறை உணர்வு, இறைச் சக்தி புரிந்தது. அடக்க வேண்டியவற்றை அடக்கி, உணர வேண்டியதை உணர்ந்து, செய்ய வேண்டியதைச் செய்து, பெற வேண்டியதைப் பெற்ற காரணத்தினால் பூட்டும், தாழ்ப்பாளும் அவருக்கு எம்மாத்திரம்? தெய்வீக சக்தியின் துணையோடு தான் யார் என்று சிந்தித்துத் தனக்குள்ளே இருக்கும் கதவைத் திறந்து, தன்னையே பார்த்த காரணத்தினால் எந்தப் பூட்டும் அவரை ஒன்றும் செய்யாது. எந்தப் பந்தமும் அவரை நெருங்காது. பல சக்திகள் ஒன்று திரண்டு. ஒரு புதிய சக்தியாக, பற்றற்ற ஒரு பேரானந்த நிலையை அடைந்தார். ஒரு இளம் துறவியாக இருந்த அவர் ஒரு யோகிபோல் சேஷாத்ரி ஸ்வாமியாக மாறிவிட்டார்!

அத்தியாயம் - 4

# புனித யாத்திரை

காஞ்சிபுரத்திலிருந்து கால்நடையாகவே திருவண்ணாமலைக்கு பயணமானார் சேஷாத்ரி ஸ்வாமிகள். அவருடைய அத்தையான, சுந்தரம்மாள் ஊரான, காவேரிப்பாக்கத்திற்கு வந்து சேர்ந்தார். அவர் அங்கு முகேஸ்வரர் சுவாமி கோயிலில் தங்கினார். அவருடன் சில சமயம் அவருடைய அத்தை மகனான பத்து வயது சேஷய்யரும் தங்குவார். ஒருநாள் அவர்கள் இருவரும் கோயிலைச் சுற்றிக் கொண்டு இருக்கும்பொழுது, திடீரென்று அங்குப் பக்கத்தில் உள்ள சுவரில் இருந்து ஒரு சர்ப்பம் வந்தது. அதைப் பார்த்த சேஷய்யர், மிகுந்த பீதியுடன் கத்தினார். சேஷாத்ரி ஸ்வாமிகள் கொஞ்சம்கூட மனக்கலக்கம் இல்லாமல் அந்தச் சர்ப்பத்தைத் தன்னருகில் அழைத்தார். அது அவர் உடலில் ஏறி, கழுத்தை மண்டலமிட்டு, படமெடுத்துக் குடைபிடித்தது. இந்தக் காட்சி அருணாசலப் பெருமானுக்கு நாகாபரணம் சாற்றியது போல் இருந்தது. மிகுந்த பயத்துடன் சேஷய்யர் ஓடிச் சென்று அழுதுகொண்டே ஸ்வாமிகளைச் சர்ப்பம் தீண்டி விட்டது என்று சொன்னார். ஆனால் மக்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு, அந்த அற்புதக் காட்சியைக் கண்டனர். சர்ப்பம் ஸ்வாமிகளின் தலையில், படமெடுத்து ஆடியது ஒரு குடைபிடித்தது போல் இருந்தது. ஸ்வாமிகளோ அமைதியின் உருவமாக இருந்தார்.

சேஷாத்ரி ஸ்வாமிகள் ஆழ்ந்த தியானத்தில் ஈடுபட்டார். அந்தத் தியானத்தில் மூழ்கி இருக்கும் பொழுது அவர் தன்னையே மறந்தார். புனிதமான இந்த ஆன்மாவைத் தரிசிக்க மக்கள் கூட்டம் கூட்டமாக வந்தனர். அவருடைய உறவினர்கள் ஸ்வாமிகளைத் தங்களுடன் அழைத்துப் போகும் எண்ணத்துடன் வந்தனர். ஆனால், அவர்கள் ஏமாற்றம்தான் அடைந்தனர். ஸ்வாமி தன் கண்களைத் திறந்து தன்னுடைய பந்துக்களைப் பார்த்தார். அவருடைய

உறவினர்கள் ஸ்வாமிகளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு அவரை வீட்டிற்கு வருமாறு வேண்டி நின்றனர். ஆனால் ஸ்வாமிகள் அமைதியாகத் தான் அவர்களுடன் வருவதற்கு இல்லை என்று கூறினார்.

அதற்குப்பிறகு, இரண்டரை மாதங்கள் ஸ்வாமிகளைப் பற்றியோ, அவருடைய இருப்பிடத்தைப் பற்றியோ, ஒருவித தகவலும் இல்லை. அதற்குப் பிறகு திண்டிவனத்தில் ஸ்வாமிகள் காணப்பட்டார். அந்நாட்களில் ஸ்வாமிகள் மௌன விரதத்தில் இருந்தார். ஆகையால் ஒருவருடனும் பேசவில்லை. தனிமையில் தியானம் செய்வதற்கு வேண்டிய வசதியை, ஸ்வாமிகள், சைகையின் மூலம் மக்களுக்கு விளக்கினார். திரு. கண்ணய்யர் என்பவர் முகேஸ்வரர் ஆலயத்தில் ஒரு அறையை ஸ்வாமிகளுக்கு ஒழித்துக் கொடுத்தார். அந்த அறையில் நுழைந்தவுடன் ஸ்வாமிகள் அந்த அறையை ஒரு மாதத்திற்கு பிறகுதான் திறக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். நான்கு நாட்கள் கழித்தபிறகு கண்ணய்யர் மனதில் ஒருவித பயம் உண்டாகியது. ''அன்ன, ஆகாரம் இன்றி, ஸ்வாமிகள் ஒரு மாதம் வரை எப்படிப் பிழைத்து இருப்பார்?'' ஒரு வேளை அவர் இறந்து விட்டால்? கோவிலைச் சுத்தப்படுத்தவும், புனிதமாக்கவும், உண்டாகும் செலவை அவர்தானே ஏற்றுக்கொள்ள வேண்டி இருக்கும்?'' என்று பலவாறான எண்ணங்கள் அவருடைய மனதில் தோன்றின. பதற்றத்துடன் கண்ணய்யர், ஓடிச்சென்று அந்தக் கதவைத் திறந்து பார்த்தார். அங்கு ஸ்வாமிகள் ஆழ்நிலை தியானத்தில் இருப்பதைக் கண்டார். அதற்குப் பிறகு கண்ணய்யர் அவருடைய சாதனையை வேறு எங்காவது தொடருமாறு ஸ்வாமிகளை வேண்டிக் கொண்டார். பிறகு சேஷாத்ரி ஸ்வாமிகள் தான் திருவண்ணாமலைக்குச் செல்வதாகக் குறிப்பாகச் சொல்லி விட்டு அங்கிருந்து புறப்பட்டார்.

காஞ்சிபுரத்திற்கு அருகில் ஐந்து கிலோ மீட்டர் தூரத்தில் ''தூசி'' என்னும் குகையில் இரண்டு மாதத்திற்குப் பிறகு மக்கள் அவரைக் கண்டனர். அவரைத் தரிசிப்பதற்கு விரைவாகச் சென்றனர். அவர்களிலே அவருடைய சகோதரரான நரசிம்மரும் ஒருவர் ஆவார். ஆனால், அவரால் ஸ்வாமிகளைத் தரிசிக்க முடியவில்லை. வாலாஜா வழியாக ஸ்வாமிகள் வேலூருக்கு விரைவாகச் சென்று விட்டார். ஆம்பூர், வாணியம்பாடி வழியாக ஸ்வாமிகள் திருப்பத்தூரைச் சென்று அடைந்தார். அங்குப் பிரம்மேஸ்வரர் ஆலயத்தில் சிலகாலம் தங்கி இருந்தார்.

படைவீடு என்னும் ஊரை அடைந்து அம்மன் ரேணுகாம்பாள் கோவிலில் சென்று தங்கினார். அவருடைய மாமா வெங்கட்ரமண சாஸ்திரிகளின் சொந்தஊரான ஆத்வாம்பாடிக்குத் தன்னுடைய பயணத்தை மேற்கொண்டார். சேஷாத்ரி ஸ்வாமிகள் அந்தக் கிராமத்தை கடக்கும்பொழுது அவருடைய மாமா அவரைப் பார்த்துவிட்டுக் கூப்பிட்டார். அவருடைய மாமாவின் குரலைத் தன் காதில் வாங்கிக் கொள்ளாமல் ஸ்வாமிகள் தன் பயணத்தை தொடர்ந்தார். விரைவாகச் செல்லும் அந்தச் சந்நியாசியைப் பின் தொடருவதற்கு அவருடைய மாமா ஒரு நபரை அனுப்பினார். சேஷாத்ரி ஸ்வாமிகள் துறிஞ்சிக் குப்பம் என்னும் ஊரைச் சென்று அடைந்து, அங்கிருக்கும் ஒரு கோவிலில் இரவுப்பொழுதைக் கழித்தார். அங்கே தான் அவருடைய மாமாவால் அனுப்பப்பட்ட அந்த நபர் ஸ்வாமிகளால் திருப்பி அனுப்பப்பட்டார். மனதில் உறுதியுடன் யாருக்காகவும், எங்கும் காத்திராமல் திருவண்ணாமலை அடைவதையே ஒரே குறிக்கோளாகக் கொண்டு தன்னுடைய பயணத்தைத் தொடர்ந்தார்.

அன்னை மறைந்தபொழுது கூறிய "அருணாசலா", "அருணாசலா" என்ற வார்த்தைகளை மகாமந்திரச் சொற்களாகக் கொண்டு அருணாசலேஸ்வரரைக் காணமுடியாமல், வரைபடத்திலே கண்டு ஆலயமணி ஓசையைப் போல் அந்த மணி ஓசையை உள்ளுக் குள்ளேயே கேட்ட சேஷாத்ரி ஸ்வாமிகள் திருவண்ணாமலையை அடைந்து, அருணாசலேஸ்வரரை வேண்டி விரும்பித் தரிசிக்கச் செல்லும்பொழுது ஆலயமணி அடித்து அவரை வரவேற்றது. ஸ்வாமிகளின் உள்ளம் உவகை எய்தியது. உச்சிமுதல் பாதம் வரை ஸ்வாமிகளின் உடம்பில் இருந்த நாடி நரம்புகள் எல்லாம் "எதைக் காண வேண்டுமோ, எதற்காக இவ்வளவு காலம் காத்திருந்தோமோ, அது கிடைத்துவிட்டது" என்று ஆனந்த வெள்ளத்தில் மிதந்தன. ஊனினை உருக்கி, உள்ளொளி பெருக்கி, உலப்பில்லா ஆனந்தமான தேனினைப் பருகும் சமயம் வந்துவிட்டது. கனவிலே கண்ட காட்சியை நினைவிலே காணும் அந்த அருணாசல ஜோதியைக் கண்டு ஸ்வாமிகள் மெய்மறந்தார். அதோடுமட்டுமின்றி இவ்வளவு காலம் அரவணைத்து, அமுத வார்த்தைகளோடு எவ்வளவோ சோதனைகளைக் கடக்கச் செய்து அருகிலேயே அழைத்துக் கொண்ட அன்னை பராசக்தி உண்ணாமலை அன்னையையும் வழிபட்டார். ஒரு பிறந்த வீட்டில், தன்னுடைய சொந்த வீட்டில் சுதந்திர எண்ணங்களோடு இருக்கும் உணர்வு ஸ்வாமிகளுக்கு இருந்தது.

அத்தியாயம் - 5

# அருணாசல மகிமை

वरुणादिसुराच्यार्य तरुणादित्वयवर्चसे ।
अरुणाचलनाथाय करुणामूर्तये नमः ॥

*வருணாதிஸுரார்ச்யாய தருணாதித்வயவர்ச்சஸே ।*
*அருணாசல நாதாய கருணாமூர்த்தயே நம: ॥*

அருணாசலேஸ்வரரின் புகழைப்பாடாமல், திருவண்ணா மலையின் பெருமைகளை எழுதாமல், மகானின் வாழ்க்கை வரலாற்றுப் புத்தகம் முழுமை அடையாது. சைவர்கள் திருவண்ணா மலையை லிங்கமாக வழிபடுகிறார்கள். சக்தி உபாசகர்கள் மகா மேருவாக வழிபடுகிறார்கள். வைணவர்கள், இம்மலையைச் சுதர்சன சக்ரமாக வழிபடுகிறார்கள். சுதர்சனசக்கரமும் அக்னி வடிவம் தானே? அருணாசல புராணத்தின்படி சூரியனும், சந்திரனும் அண்ணாமலையைத் தாண்டிச் செல்வதில்லையாம். ஆகவேதான் மலை உச்சியின் நிழல், எவரது கண்களுக்கும் தெரியாதாம். இந்தப் பூவுலகம் தோன்றும் பொழுது இந்த மலையும் தோன்றியதாம். பூகற்ப ஆராய்ச்சியாளர் கருத்துப்படி அண்ணாமலையில் சிதறி இருக்கும் கற்களை சோதனை செய்து பார்த்தபொழுது அவை உலகிலேயே மிகப் பழமையான கற்கள் என்று உறுதி செய்யப்பட்டு இருக்கிறது. ஒரு காலத்தில் அது எரிமலையாக இருந்ததாம். ஆகவேதான் அது ஜோதிலிங்கமாக வழிபடப்பட்டு வருகிறது. சமீப காலத்தில் வாழ்ந்து மறைந்த தபோவனம் ஸ்ரீ ஞானானந்த ஸ்வாமிகள் வாழ்விடமும் திருவண்ணாமலை அருள் சுற்றில் அடங்கிய அரகண்டநல்லூரில் தான் இருக்கிறது. ஸ்ரீ முருகனால் ஆட்கொள்ளப்பட்ட அருணகிரி நாதர் அவதரித்த தலம். மாபெரும் சித்தர்களையும் அரும்

தவயோகிகளையும் தன்னுள் அடக்கிக்கொண்டு எவ்வாறு வடக்கே கைலாயம் காட்சி அளிக்கிறதோ அதுபோன்று திருவண்ணாமலை காட்சி அளிக்கிறது. ஒருசமயம் சேஷாத்ரி ஸ்வாமிகள். ''சூட்சுமத்தில் கைலாயத்தைவிட ஆயிரம் மடங்கு உயர்ந்தது திருவண்ணாமலை'', என்று கூறி இருக்கிறார்கள். இன்னும் வருணிக்க முடியாத வரலாறு கண்ட பெருமைகள் நிறைந்த மலை திருவண்ணாமலை. அப்படிப் பட்ட பூலோக சொர்க்கத்தை, முக்தித் தலத்தை, மகான் தேர்ந்தெடுத்ததில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. ''தன்னைத்தான் அறிதல்'' என்ற தத்துவத்திற்கு விளக்கம் கொடுப்பது போல், ஒரு மனிதன் தன்னை முழுமையாக உணர்ந்து கொள்வதற்கு அந்தத் திருத்தலம் உதவுகிறது. எப்படிக் காந்த சக்தியானது இரும்புத் துண்டுகளைத் தன்னிடம் ஈர்க்கிறதோ, அதுபோன்று ஆத்மதாகம் அடைந்த புனித ஆன்மாக்-களைத் திருவண்ணாமலை ஈர்க்கிறது. சிவலிங்கமே மலையாகத் தோன்றி அமைதியான சூழ்நிலையில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி பகவானே அமர்ந்து இருப்பது போல் ஸ்ரீ ரமண பகவானுக்குக் காட்சி அளித்தது. அத்தகைய திருத்தலத்தை விட்டுப் பிரியாமல் அங்கேயே தங்கும் எண்ணத்துடன் சேஷாத்ரி ஸ்வாமிகள் திருவண்ணாமலைக்கு வந்தார். பிற்காலத்தில் சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு அத்தலத்தின் மீது உள்ள பற்றைப் பற்றிக் கேட்டதற்கு அவர் இவ்வாறு கூறினார். ''இங்கேதான் அருணாசலேசுவரரும், உண்ணாமலை அம்மனும், உங்களுக்கு எல்லாம் மோட்சம் கொடுப்பதற்கு அழைக்கிறார்கள். இங்குதான் வேணுகோபாலன் தன்னுடைய நாதத்தினால் மற்றவர் களை மகிழ்ச்சிக்கடலில் ஆழ்த்துகிறார்.''

திருவண்ணாமலையைப்பற்றி கதை ஒன்று புராணத்தில் கூறப் பட்டுள்ளது. படைப்புக் கடவுளான பிரம்மதேவனுக்கும் காக்கும் கடவுளான மகாவிஷ்ணுவிற்கும் இடையே 'யார் பெரியவர்?' என்ற போட்டி ஏற்பட்டது. போட்டியின் முடிவை சிவபெருமானிடம் விடுவதாக முடிவுசெய்து இருவரும் பரமசிவனிடம் சென்றனர். ''யார் முதலில் என்னுடைய சிரசையோ, பாதத்தையோ பார்க்கிறார் களோ அவர்களே உயர்ந்தவர்கள்'' என்று சிவபெருமான் கூறினார். அவர்களும் தங்களுடைய உயர்ந்த தன்மையைக் காட்டுவதற்காகப் புறப்பட்டனர். அன்னப் பறவையாக பிரம்மா மேலே பறந்து சென்றார். விஷ்ணுபகவான் பன்றியின் உருவம் எடுத்து பூமியைத் தோண்டிக்கொண்டே சென்றார். அப்பொழுதுதான் வழியில் சிவனின் முடியில் இருந்த உதிர்ந்து வந்த தாழம்பூவைப் பிரம்மா சந்தித்தார்.

முடிவில்லாத பயணத்தை மேற்கொண்ட களைப்பினால் பயணத்தை முடித்துக்கொள்ள எண்ணி, அவர் தாழம்பூவிடம் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டார். ''நான் சிவபெருமானிடம் சென்று, அவருடைய சிகையைப் பார்த்து விட்டதாகக் கூறுவேன். ''ஆம்'' என்று அதற்குச் சாட்சி சொல்ல வேண்டும் என்று தாழம்பூவிடம் கூறினார். தங்களுடைய கதையைச் சொல்வதற்காக இருவரும் சிவனைச் சென்று அடைந்தனர். உலக நாயகனான சிவன் அவர்களின் எண்ணத்தை அறிந்து மிகுந்த சினம் கொண்டார். அந்த நேரத்தில் பிரம்மனுக்குத் தகுந்த பாடம் கற்பிக்கும் எண்ணத்தில் ஆதியையும், அந்தத்தையும், காணமுடியாமல் ஒரு அக்னித் தூணாக நின்று காட்சி அளித்தார். காட்சி அளித்த இடம், திருவண்ணாமலை நகரம். அக்னித் தூணாக நின்றது இன்று நாம் காணும் அண்ணாமலை. பூமியில் அவருக்காகத் தனியாகக் கோவில் எதுவும் இருக்கக்கூடாது என்று பிரம்மா சிவனால் சபிக்கப்பட்டார். உண்மையை ஒத்துக் கொண்ட காரணத்தினால் மகாவிஷ்ணுவைத் தன் அருகிலேயே வைத்துக் கொண்டார். இன்றும் அருணாசலேஸ்வரர் கர்ப்பக் கிரகத்தின் பின்னால், மகாவிஷ்ணுவைக் குழலூதும் வேணு கோபாலனாகக் காணலாம். இந்தக் கதை ''லிங்கோத்பவர்'' என்னும் சிற்பத்தின் மூலம் கூறப்படுகிறது. எல்லா சிவன் கோவில்களிலும் சிவனின் பின்னால் தான் இந்தச் சிற்பம் இருக்கும். மோட்சத்திற்குச் செல்வதற் காகச் செல்லும் வழியைத் தேடிக் கொண்டிருக்கும் ஒரு ஆன்மாவைத் தன்னுடைய புனித ஒளியால் அழைக்கும் அருணாசலேஸ்வரர் இதற்கு ஒரு சான்றாக இருக்கிறார்.

''ஒருமுறை இந்தப் புனிதமான மலையைச் சுற்றிவந்தால், அதாவது ''கிரிவலம்'' வந்தால் ஆயிரம் முறை கைலாசத்திற்குச் சென்ற பயனை அடையலாம்,'' என்று சேஷாத்ரி ஸ்வாமிகள் சூட்சுமத்தில் கூறி உள்ளார்கள். யாராலும் தடை செய்யப்படாமல் இந்தக் கிரிவலம், அதாவது மலையைச் சுற்றிவருவது தொடர்கிறது. 14 கி.மீ. தூரப்பயணம், வாழ்க்கையில் தவறவிடாமல் மேற் கொள்ளும் மகிழ்ச்சியான அனுபவம் வாய்ந்த பயணம் ஆகும். கிரிவலப்பாதையில் நிறைய கோயில்கள் உண்டு. முக்கியமான கோவில் அருணாசலேஸ்வரர் ஆகும். பிறகு, ஆஸ்ரமங்களான ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் ஆஸ்ரமம், ஸ்ரீ ரமண மகரிஷியின் ஆஸ்ரமம் இடம்பெற்று இருக்கின்றன. லிங்க வடிவிலிருக்கும் இந்திரன், அக்னி, யமன், வருணன், வாயு, நிருதி, சூரியன், குபேரன்,

ஈசானன் ஆகியவர்களுக்கும் சிறுசிறு கோவில்கள் உண்டு. பிறகு ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ தட்சணாமூர்த்தி, ஸ்ரீ கிருஷ்ணர், ஆதி அண்ணாமலை, ஸ்ரீ இராஜராஜேஸ்வரி, ஸ்ரீ மாரியம்மன், ஸ்ரீ துர்க்கா, ஸ்ரீ முருகன், ஸ்ரீ ஹனுமான் ஆகியவர்களுக்கும் கோயில்கள் இருக்கின்றன. நந்திகேஸ்வரர், அருணாசலேஸ்வரரை எல்லாக் கோணங்களிலும் மௌனமாகப் பூஜித்துக் கொண்டு இருக்கிறார். அதைத்தவிர இசக்கி சித்தர், துர்வாசர், மாணிக்கவாசகர் ஆகியவர்களுக்குக் கோயில்கள் இருக்கின்றன. இயற்கை ரம்மியமான, ஆனந்தமான இந்தச் சூழ்நிலையில்தான், புனிதமான அருணாசலேஸ்வரரின் மகிமையால் மாணிக்கவாசகர், "திருவெம்பாவையை" இங்கு எழுதினார் என்று கூறப்படுகிறது. கிரிவலம் வரும்வழியில் உருவம் எதுவும் இல்லாமல் இடுக்குப் பிள்ளையார் வீற்றிருக்கிறார். அந்த இடுக்குப் பிள்ளையாரின் சிறிய துவாரத்தின் வழியாகத் தலையை முதலாக ஒருபுறம் செலுத்தி, மறுபுறம் உடம்பைக் கொண்டு வரவேண்டும். இது மனதிற்கும், உடலுக்கும், புத்துணர்ச்சி ஊட்டுவது மட்டும் இல்லாமல் கிரிவலம் வந்த களைப்பையும் தீர்த்து, புனித ஊட்டத்தை அளிக்கும். கிரிவலம் வந்தவர்கள் அனுபவபூர்வமாக அறிந்த ஒரு மாபெரும் உண்மை யாகும் இது. இன்னலே வாழ்க்கையாக, இடையூறே கவலையாக என்றென்றும் மனச்சுமையைத் தாங்கிக் கொண்டு இருக்கும் ஆன்மாக்கள் கவலைப்பட வேண்டாம். அதிகாலை வேளையில் கிரிவலம் வந்தால் போதும். மனச்சுமைகள் எல்லாம் நீங்கும். புதிய அனுபவம், புத்துணர்ச்சி ஏற்பட்டு புதிய அத்தியாயம் உருவாகும். மனதிற்கு இதமான பூக்களின் நறுமணமும், பறவைகளின், மிருகங்களின், சப்தமும் இதை எல்லாம் விட ஓங்கி உயர்ந்து நிற்கும், அருணாசல மலையின் கம்பீரத் தோற்றமும் சேர்ந்து கிரிவலத்தை ஒரு மறக்க முடியாத அனுபவம் ஆக்கிவிடும். மாபெரும் அரிய, பெரிய சித்தர்களின், சூட்சும சஞ்சாரங்கள், பூக்களின் நறுமணத்தாலும், விபூதியின் வாசனையாலும் உணர்த்தப் பட்டு மனநோயை நீக்கும். அதிகாலையில் வீசும் மூலிகை கலந்த குளிர்காற்றானது உடல் நோயைப் போக்கும். எங்குத் திரும்பினாலும் சித்தர்களைத் தவிர வேறெதையும் உணர முடியாது. உள்ளுக்குள் உண்மை வைத்து, உயிருக்குள் சிவனை வைத்து, நிறைமாத கர்ப்பிணி எப்படி நடப்பாளோ அதுபோன்று கிரிவலம் வந்தால் எந்தப் பிறவியில் எப்படிப்பட்ட பாவங்கள் செய்து இருந்தாலும் அது தொலைந்து விடும். ஆன்மாவிற்குப் புது மெருகு ஏற்றப்படும்.

வாரத்தில் ஒவ்வொரு கிழமையிலும் கிரிவலம் மேற் கொண்டால், என்ன பலன் கிடைக்கும் என்பது குறிப்பாகக் கூறப் படுகிறது. ஞாயிற்றுக்கிழமையில் கிரிவலத்தை மேற்கொண்டால் சிவபெருமானின் ஆசி கிடைக்கும். திங்கட்கிழமையில் செய்தால் வளமுடன் வாழ்க்கை கிடைக்கும். செவ்வாய்க்கிழமைகளில் மேற்கொண்டால் பாவங்கள் தொலைந்து மோட்சம் கிட்டும். புதன் கிழமைகளில் சுற்றினால் தேவர்களுடைய குணநலன்களைப் பெறுவர். வியாழக்கிழமைகளில் கிரிவலம் வந்தால் ஞானம் பிறக்கும். வெள்ளிக்கிழமைகளில் காக்கும் கடவுளான மகா விஷ்ணுவின் திருவடிகளை அடையலாம். வாழ்க்கையில் நிம்மதியைக் கொடுக்கும் ஒன்பது கிரகங்களும், சனிக்கிழமையில் கிரிவலம் மேற்கொண்டால் அனுக்கிரகம் செய்வார்கள். முக்கியமான நாட்களான சிவராத்திரியும், பௌர்ணமியும், தமிழ்ப்புத்தாண்டும், தீபத் திருநாளும் கிரிவலம் வருவதற்கு உகந்த நாட்களாகக் கருதப்படுகின்றன. தமிழ் மாதத்தில், ஐப்பசியில் கிரிவலம் வருவது புனிதமாகக் கருதப்படுகிறது. கிரிவலம் முழுமையான ஆத்ம திருப்தி அளிக்கக்கூடிய ஒரு அபூர்வ அனுபவம் ஆகும்.

மற்றும் ஒரு காரணத்திற்காகவும் திருவண்ணாமலை ஒரு புண்ணியத்தலமாகக் கருதப்படுகிறது. அக இருளை நீக்கி, திருவருளைப் பெருக்கக்கூடிய புனிதநாள் "கார்த்திகை தீப" நன்னாளாகும். ஒருநாள் விளையாட்டாகப் பார்வதி சிவபெருமானின் கண்களைத் தன் கைகளால் மூடினாள். அது கணநேரம் தான். ஆனால் அதன் விளைவுகளோ பூமியில் கடுமையாக இருந்தன. ஜீவனான சிவன் ஒவ்வொரு ஆன்மாவின் உள்ளுக்குள் இருப்பதால் தான் உலக இயக்கம் நடைபெறுகிறது. சகல ஜீவராசிகளுக்குச் ஜீவனாக இருக்கும் சிவபெருமானின் கண்களைப் பொத்தினால் உலகம் ஸ்தம்பிக்காமல் என்ன செய்யும்? மிகுந்த கோபத்துடன் சிவபெருமான், பார்வதியைப் பூமிக்குச் செல்லுமாறு சபித்தார். பிறகு பார்வதி, சிவனிடம் தன்னை மன்னிக்குமாறும், தன்மீது கருணை வைக்குமாறும் வேண்டினாள். சிவபெருமான் சாந்தமாகி, பார்வதியை காஞ்சீபுரத்தில் தவம் செய்து, தன்னை வந்து அடையுமாறு கூறினார். அங்கே பார்வதி தேவி, மண்ணினால் ஒரு இலிங்கத்தைப் பிடித்து வைத்து, பூஜை செய்து, கடும்தவம் செய்து வந்தாள். பார்வதியின் தவவலிமையைக் கண்டு மகிழ்ந்த சிவபெருமான் அவள் முன் தோன்றி, அவளைத் திருவண்ணாமலைக்குச் செல்லுமாறு பணித்தார். பார்வதி தேவியும்

பவழக்குன்ற மலையில் தன்னுடைய தவத்தைத் தொடர்ந்தாள். ஒரு கார்த்திகைமாதப் பௌர்ணமி தினத்தன்று அருணாசலேஸ்வரர் ஜோதிரூபமாக, பார்வதி தேவியைத் தன்னுள் அடக்கிக்கொண்டு அர்த்தநாரீஸ்வரராகக் காட்சி அளித்தார். பார்வதி தேவிக்கு இடப்பாகம் கொடுத்தார். இன்றும் திருவண்ணாமலை ஆலயத்தில் சுவாமி சன்னதியின் இடப்பாகத்தில் அம்பிகை சன்னதியைக் காணலாம். அந்த நாளை, "அண்ணாமலைதீபம்" என்ற மாபெரும் புனித விழாவாகக் கொண்டாடுகிறார்கள். இலட்சக் கணக்கான பக்தர்கள், அன்புக் காணிக்கையாக அளிக்கும் நெய்யினால், அருணாசலமலை உச்சியில் தீபம் ஏற்றப்படுகிறது.

அடியார்களைத் தடுத்தாட்கொண்டு நினைத்த மாத்திரத்திலேயே அருளை வாரி வழங்கும் அருணாசலேஸ்வரரின் மகிமையைப்பற்றி மற்றொரு கதையின் மூலம் தெரிந்து கொள்ளலாம். வல்லாள மஹாராஜா என்று ஒரு இராஜா ஆண்டு வந்தார். அவர் ஒரு சிறந்த வள்ளலாக இருந்தார். அருணாசலேஸ்வரர் மீது எல்லையற்ற பக்தி உண்டு. ஆனால் அவருக்கு மகப்பேறு அடையும் பாக்கியம் மட்டும் கிட்டவில்லை. அதனால் அவருக்கு மனது வேதனையுற்றது. ஒருநாள் சிவபெருமானே, சிவனடியார் வேடமிட்டு மன்னனின் முன் தோன்றினார். வல்லாள மஹாராஜா, மிகுந்த சந்தோஷத்துடனும், பக்தியுடனும் அவர் இட்ட பணியைச் செய்து, தன்னுடைய வீட்டிற்கு விருந்தாளியாக வந்த சிவனடியாரின் விருப்பத்தையும் வினவினார். சிவனடியார் தன்னுடன் அந்த இரவைக் கழிக்க ஒரு பெண் வேண்டும் என்ற தன் விருப்பத்தைக் கூறினார். சிவனடியாரின் ஆசையை நிறைவேற்றுவதற்காக, இராஜா எல்லா முயற்சிகளையும், மேற்கொண்டும் பயன் இல்லை. மிகவும் உன்னத நிலையில் இருக்கும் சிவனடியாரின் விருப்பத்தை நிறை வேற்ற முடியவில்லையே என்று வல்லாள ராஜா வருத்தப்பட்டார். இராஜாவின் தர்மசங்கட நிலையை அறிந்த இராணி, தானே சிவனடியாரின் விருப்பத்தைப் பூர்த்தி செய்யக் கிளம்பினாள். இராணி சிவனடியார் தங்கி இருக்கும் அறையை நோக்கிச் சென்றாள். அவரிடம் ஆசியைப் பெறுவதற்காக இராணி குனிந்தபொழுது, சிவனடியார் (சிவபெருமான்) குழந்தை ரூபத்தில் மாறி அவர்களுக்குக் காட்சி கொடுத்தார். அருணாசலேஸ்வரர், அரசகுல தம்பதிகளுக்கு, அவர்களுடைய பிரார்த்தனைக்குப் பதில் அளிக்கும் வகையில் குழந்தை ரூபமாக அவர்கள் முன் தோன்றிக்

காட்சி கொடுத்தார். இதைப் பார்த்த அரசனும், இராணியும், மிகுந்த மகிழ்ச்சியுற்றனர். அருணாசலேஸ்வரர், அவர்களுக்கு ஆசியை வழங்கினார். அவர்களுக்குக் குழந்தை இல்லை என்ற குறை இருக்கக் கூடாது என்றும், அவர்களுக்குத் தாமே குழந்தையாக இருப்பதாகவும் கூறினார். அவர்களுடைய கடைசிக்காலத்தில், அவர்களுடைய ஈமச் சடங்குகளைத் தாமே நிறைவேற்றுவதாக அவர்களுக்கு வாக்கு அளித்தார். அவ்வாறு கூறிவிட்டு அவ்விடத்தில் இருந்து அவர் மறைந்தார். இராஜகுலத் தம்பதி மறைந்த தினத்தன்று, சிவபெருமான், அவர்களுக்கு ஈமச்சடங்குகள் செய்த நாளான, மாசி மாதத்தில் மக நட்சத்திரம் கூடிய நன்னாளில் இன்றும், மக்களால் விழாவாகக் கொண்டாடப்படுகிறது.

ஜகத்குருவான ஆதிசங்கரர் புனிதத்தலமான திருவண்ணா மலையில் நுழையாமல் திரும்பி விட்டதாகச் சரித்திரம் கூறுகிறது. காரணம், சித்த, மஹாபுருஷர்களின் சிரசில் அவர் பாதம் பட்டு விடுமோ என்ற அச்சம்தான். இதிலிருந்து கணக்கற்ற சித்தர்கள் இன்றும் அங்கே வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள் என்பதை நாம் உணரவேண்டும். திருவண்ணாமலை மண்ணின் மகிமையை விளக்க இதைவிடச் சிறந்த சான்று இல்லை. இவ்வளவு மகிமை, பெருமைகள் நிறைந்த திருவண்ணாமலையை, உலகப்பற்றை அகற்றி, துறவறம் பூண்டு, ஞான வேள்வி செய்வதற்கு, சேஷாத்ரி ஸ்வாமிகள் வந்து அடைந்தார். அன்னை மறையும் தறுவாயில் அருளிய "அருணாசல" என்ற மந்திரச்சொல், திருவண்ணாமலையை அடைய சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு அமைந்தது. ஸ்வாமிகள், தன்னுடைய பத்தொன் பதாவது வயதில் திருவண்ணாமலைக்கு வந்து சேர்ந்தார். சுமார் 40 வருடகாலம் அந்தப் புகழ்மிக்க மண்ணிலே வசித்து பெருமை சேர்த்தார். மண்ணிற்குப் பெருமை சேர்ப்பது என்றால் மகான்களால் தானே முடியும்? திருவண்ணாமலைக் கோவிலில் உள்ள, ஸ்ரீகம்பத் திளையனார் சன்னதியிலும், கிரிவலம் வரும் வழியில் அமைந்துள்ள ஸ்ரீதுர்க்கை அம்மன் கோவிலிலும் அவருடைய திருஉருவப்படத்தை இன்றும் காணலாம். திருவண்ணாமலையில் இருந்த மக்களின் அன்புத் தோழராக இருந்த மகானுக்கு, இவை ஒரு குரு காணிக்கையாகத் தோன்றுகின்றன. எங்கெங்கு எப்பொழுது இருக்கவேண்டுமோ, அங்கங்கு, அப்பொழுது இருந்து தீர்க்கமுடியாத மக்களின் குறைகளை எல்லாம் தீர்த்து, அவர்களை ஆனந்த வெள்ளத்தில் ஆழ்த்தினார். மக்களின் மனதுள் வாழ்ந்து அவர்களுக்குக் கலங்கரை விளக்கமாகத்

திகழ்ந்தார். அவரது அருளாசிகள் மக்களுக்குக் கிடைத்த ஒரு பெரிய பொக்கிஷமாகும்.

உண்மையான பிரார்த்தனை செய்யும் ஒவ்வொரு ஆன்மாவிற்கும், அவருடைய அருள் நிச்சயமாகக் கிடைக்கிறது. அவருடைய வார்த்தையிலே சொல்ல வேண்டும் என்றால். "என்னை உண்மையான ஈடுபாட்டுடன் வணங்குபவர்களுக்கு, நான் அவர்களுடன் இருப்பதை அவர்கள் உணரும்படி செய்வேன்." **அச்சாணி எவ்வாறு ஒரு பெரிய பாரத்தைத் தாங்குகின்றதோ, அதேபோன்று, நமது வாழ்க்கைக்கு அச்சாணியாக இருந்து ஸ்வாமிகளும் உண்மைப் பக்தர்களின் மனபாரத்தைத் தாங்குகிறார்.**

## ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| சுக் | இராசி | | ராகு |
| புதன் சூரி செ கேது | | | |
| ல / சனி | | | சந் |

| | | | |
|---|---|---|---|
| சுக் சூரி சந் | சனி | | |
| கேது | நவாம்சம் | | செவ் |
| | | | ராகு |
| | | / ல | புதன் குரு |

1870-ஆம் ஆண்டு ஜனவரி 22-க்குச் சரியான, கலியுகாதி 4970 சுக்கில ஸ்ரீ தை-மீ 11-உ சனிக்கிழமை பஞ்சமி 14-23, உத்திரம் 13-5க்கு மேல் ஹஸ்தம் அதி 11-51, தை 14-23 ரா 11-17, உதயாதி நாழிகை 561/8க்கு, தனுர் லக்னத்தில் சிம்ம நவாம்சத்தில் சுபாவதாரம், ஹஸ்தம் ஆத்யந்தம் 56-நாழிகை சந்திரதசை இருப்பு வருடம் 2 மாதம் 3.

சிரவணம் 1-இல் ரவி, ஹஸ்தம் 4-இல் சிரவணம் 4-இல் சனி, பூசம் 1-இல் ராகு, உத்திரம் 3-இல் கேது.

**(இது வாக்கியப் பஞ்சாங்கப்படி கணிக்கப்பட்டது)**

அத்தியாயம் - 6

# புனித அவதாரத்தின் இரகசியங்கள்

திருவண்ணாமலை வந்தடைந்த ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் ஆன்மாவின் இரகசியத்தை இந்த நேரத்திலே மற்றொரு கோணத்தில் வெளிப்படுத்துவது அவசியமாகிறது. இப்பிறவியில் அவரால் ஆட்கொள்ளப்பட்டு அருளாசி பெற்ற ஆன்மாக்கள் ஏராளம். வாழ்க்கைப்பாதையில் ஒவ்வொரு நாளிலும், மனச்சுமையைத் தாங்கிக்கொண்டு அல்லல்களை அனுபவித்து, இருளே வாழ்க்கை யாக இருக்கும் நிலையை மாற்றி, ஒளிவிளக்காக அவர் இருக்கிறார் என்பதை உணர்த்திக் கொண்டு இருக்கிறார்.

ஜோதிட ஆராய்ச்சி, தத்துவ விளக்கங்கள், தெய்வீகத்தைப் பற்றிய குறிப்புகள், மதம், இவற்றில் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யும் பொழுது முரண்பாடான கருத்துகள் ஏற்படுவது இயற்கை. பண்டைக் காலத்து மக்கள் நட்சத்திரங்களின் மீதும், நவக்கிரகங்களின் மீதும், மிகுந்த நம்பிக்கை வைத்து இருந்தனர். கணித முறைப்படி கணக்கீடு செய்து நவக்கிரகங்களின் நிலையை வைத்து ஒருவருடைய வாழ்க்கையில் என்ன நடக்கும் என்பது ஜோதிட சாஸ்திரம் மூலம் சொல்லப்படுகிறது. **துல்லியமான பலன்கள் கிடைக்க வேண்டும் என்றால், அந்த ஜோதிடருக்குப் பின்னே, எந்தத் தெய்வீக சக்தி துணை நிற்கிறது என்பது முக்கியம். அந்த ஜோதிடர் அந்தத் தெய்வீக சக்தியைக் கூட்டி எவ்வளவுக் கெவ்வளவு புனிதத் தன்மையை நடைமுறையில் கடைபிடிக்கிறார் என்பது மிக முக்கியம். இது ஒவ்வொரு ஜோதிடருக்கும் இருக்க வேண்டிய அவசியமான அம்சமாகும்.** சேஷாத்ரி ஸ்வாமிகளின் சரித்திரத்தில் அவருடைய ஜாதக ஆராய்ச்சி என்பது அவசியமாகிறது. முன்னமே கூறியது போல் ஸ்வாமிகளின் ஜாதகத்தைப் பார்த்தால்,

ஸ்வாமிகளின் வாழ்க்கை, ஒரு யோகியின் வாழ்க்கை என்பது தெளிவாகிறது. நான்கு கிரகங்களும், ஒரே வீட்டில் கூடி அதில் ஒன்று உச்சமாக இருப்பது, பரிவ்ராஜ யோகத்தைக் குறிக்கின்றது. இது சந்நியாசிகளுக்கு இருக்கும் ஒரு அம்சம். லக்னத்திலிருந்து 2-ஆம் வீட்டில் செவ்வாய் உச்சமடைந்து, கேது பகவானுடன் சேர்ந்து 8-ஆம் வீட்டில் இருந்து இராகுபகவான் அந்த இடத்தைப் பார்ப்பது பராசக்தியின் அபரிமிதமான ஆசிகளை அவர் பெற்றுள்ளார் என்பதை உணர்த்துகின்றது. ஒரு சிறப்பு மிக்க அம்சத்தை இந்த நேரத்தில் குறிப்பிட வேண்டும். 6-ம் வீட்டில் குருபகவான் அமர்ந்து லக்னத்தைப் பார்ப்பதும் முற்பிறவியிலும், இவர் ஒரு மகானாகக் கண்டிப்பாக இருந்திருக்க வேண்டும் என்பது திண்ணம்.

இதனால், இதைத் தீவிரமான ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்ற நோக்கத்தில் புராதன ஓலைச் சுவடிகளான கந்த வாக்கிய நாடியில் ஆரா்ய்ச்சி செய்தோம். பண்டைக்காலத்தில் வாழ்ந்த ரிஷி களினால் எழுதப்பட்ட "நாடி ஜோஸ்யம்" மனிதனுடைய வாழ்க்கை முறையை விரிவாகக் கூறும் ஒரு ஜோதிடக் கலையாகும். "ஜீவநாடி" என்பது ஜீவன் உள்ள நாடி. மகான்கள் மனிதனோடு தொடர்பு கொள்ளுவதற்கு ஜீவநாடி ஒரு சாதனம். இது நம்பத் தகாததாக இருக்கலாம். ஆனால் உண்மையே. அதில் ஒன்று இந்தக் "கந்த வாக்கிய நாடியாகும்". இது அகத்திய முனிவரால் எழுதப் பட்டது. அந்தக் கந்த வாக்கிய நாடி, சேஷாத்ரி ஸ்வாமிகளின் முன் ஜென்ம வாழ்க்கையைத் தத்ரூபமாக விளக்கி உள்ளது.

தென்தமிழ்நாட்டில், மயிலாடுதுறைக்கு அருகே, 14 கி.மீ. தொலைவில் திருக்கடையூர் என்னும் சிறிய கிராமம் இருக்கிறது. முக்கியமான எட்டுச் சிவன்கோயில்களில் புண்ணியத்தலமான திருக்கடையூரும் ஒன்றாகும். அப்புண்ணியத்தலத்தில் ஈசுவரர் அமிர்தகடேஸ்வரரும், அபிராமி அம்பாளுமாக வீற்றிருக்கிறார்கள். இத்திருத்தலத்தில்தான் சிவபெருமான், மார்க்கண்டேயனை, மரணத்தின் வாயிலிருந்து காப்பாற்றி இருக்கிறார். முன்னொரு காலத்தில் இவ்வூரில் அமிர்தலிங்கய்யர் என்பவருக்குச் சுப்பிரமண்யன் என்ற ஒரு மகன் இருந்தான். அச்சிறுவன் அம்பிகையே கதியாக அபிராமி அன்னையின் சந்நிதியில் தன்னை மறந்த நிலையில் இருப்பது வழக்கம். ஆலயப்பணிகளைச் செவ்வனே செய்து அன்னை அபிராமியிடம் அளவு கடந்த ஈடுபாட்டின் காரணமாக "அபிராமி

பட்டர்'' என்று அழைக்கப்பட்டனர். ஆத்ம தாகம் தணியாத தாகமாகித் தன்னுள்ளே தலைவனைக் காணும் பேரானந்த நிலையை வேண்டி ஆழ்ந்த பக்தியில் ஈடுபட்டு இருந்த காரணத்தால், மக்களோடு ஒன்றிய நிலையில் அவனால் இருக்க முடியவில்லை. இந்த அசாதாரண நிலையை மக்களால் புரிந்துகொள்ள முடியவில்லை.

ஒரு அமாவாசை அன்று அபிராமி பட்டர் அம்பாளின் முன் தன்னை மறந்து துதிபாடிக் கொண்டு இருந்தார். அப்பொழுது சரபோஜி மகாராஜா ஆலயத்திற்கு வந்தார். பொறாமை கொண்ட அக்கிராமத்து மக்கள் இத்தருணத்தை நழுவவிடாமல், மன்னரிடம் சென்று, அவருடைய விசித்திரமான போக்கைப்பற்றி, புகார் செய்தனர். சரபோஜி மகாராஜா அபிராமி பட்டரை அழைத்து, ''இன்றைய தினம், அமாவாசை எவ்வளவு நேரம் இருக்கிறது?'' என்று வினவினார். ஆன்ம ஒளியைப் பெருக்கி, ஞானவெளியில் கோடி சூர்யப் பிரகாசமான அம்பிகையின் அழகிய திருமுருக ஒளியைக் கண்ட பேரானந்தத்தில் இருந்த காரணத்தினால் ''இன்று அமாவாசை இல்லை. பௌர்ணமி!'' என்று பட்டர் கூறினார். ஏற்கெனவே மக்களின் புகாரினால் கோபமடைந்த மன்னன் மேலும் கோபமடைந்து, அன்று இரவு, சந்திரன் வானத்தில் தன் ஒளியை வீசவில்லை என்றால், அவரைத் தூக்கில் ஏற்றுமாறு ஆணையிட்டான்.

அக இருள் நீங்கி, ஞானஒளி கிட்டியபின் அமாவாசை இருள் என்ன செய்ய முடியும்? ஒளிக்கெல்லாம் ஒளியாக, இரத்தினங் களுக்கு எல்லாம் இரத்தினமாக, அகில அண்டங்களுக்கும் அன்னை யாக அபிராமியின் அருள் இருக்கும்பொழுது, பட்டருக்கு என்ன கவலை? நூறு கயிறுகளால் தாங்கி இருந்த ஒரு ஆசனத்தில், அவருடைய இஷ்டதெய்வமான அபிராமியின்முன், அமர்த்தப் பட்டார். அந்த ஆசனத்தின்கீழ், உக்கிரமான தீ மூட்டப்பட்டு இருந்தது. இப்பொழுது பலராலும் கூறப்படும். ''அபிராமி அந்தாதி'' என்னும் செய்யுளிலிருந்து, ஒவ்வொரு பாடலாக, அபிராமியின் முன் சமர்ப்பிக்கும் பொழுது, ஒவ்வொரு கயிறாக அறுக்கப்பட்டது.

*''விழிக்கே அருள் உண்டு அபிராம வல்லிக்கு வேதம் சொன்ன*
*வழிக்கே வழிபட நெஞ்சு உண்டு எமக்கு அவ்வழி கிடக்கப்*
*பழிக்கே சுழன்று, வெம்பாவங்களே செய்து பாழ் நரகக் குழிக்கே*
*அழுந்தும் கயவர் தம்மோடு என்ன கூட்டு இனியே''*

இது அபிராமி அந்தாதியில் எழுபத்தொன்பதாவது பாடலாகும். இதில் அவர், ''பழிகளும், பாவங்களும் செய்யும், மனிதர்கள் நிறைந்த இவ்வுலக வாழ்க்கை தேவையில்லை. உன்னுடைய திருவடிகளில் இரண்டறக் கலக்க நான் தயாராயிருக்கிறேன்.'' என்று அம்பிகையிடம் முறையிட்டார். அப்பொழுது விண்ணிலே ஒரு பேரொளி கிளம்பியது. எண்ணற்ற மக்களின் வாழ்க்கையில் பேரொளியாகத் திகழும் அன்னை அபிராமி தன் காதில் இருக்கும் கம்மலை எடுத்து அமைதியான இருண்ட வானத்தை நோக்கி எறிந்த பொழுது அது பூர்ண சந்திரனாகக் காட்சி அளித்தது. அரசரும் மக்களும் ஒன்றும் சொல்லத் தோன்றாமல், புகழ் வாய்ந்த அபிராமி பட்டருக்கு வணக்கம் சொல்லும் வகையில் தலைகுனிந்து நின்றனர். அவருடைய ஆழ்ந்த புக்திதான் அவரை அவமானத்தில் இருந்து காப்பாற்றியது. மனதை உருக்கும் நூறு பாடல்களை, ''அபிராமி அந்தாதி'' என்ற பெயரில் அபிராமி பட்டர் இயற்றினார். அம்பாளைத் துதித்து அம்பாளின் பரிபூர்ண அனுக்கிரகத்துடன், ''அபிராமி பட்டர்'' நீண்டநாள் வாழ்ந்தார். அதிலிருந்து அவருடைய பெயர் ''அபிராமி பட்ட பாரதி'' என்றாயிற்று!

இந்தச் செய்தியை இங்குக் கூறவேண்டிய காரணம் என்ன? கந்த வாக்கிய நாடியிலும், சுகர்முனிவர் எழுதிய நாடியிலும், சேஷாத்ரி ஸ்வாமிகள், முற்பிறவியில், ''அபிராமி பட்டராக'' இருந்தார் என்பதை எவ்விதச் சந்தேகமும் இன்றிக் கூறிஉள்ளனர். அபிராமி பட்டர் தான், சேஷாத்ரி ஸ்வாமிகள். சேஷாத்ரி ஸ்வாமிகள் தான் அபிராமி பட்டர் என்பது இதன் மூலம் நிரூபணமாகிறது. இது ஒரு ஆச்சரியமான செய்தியாகும். அவருடைய ஜாதகத்தில் ''சுபமங்கள யோகம்'' இருக்கிறது. இது எதைக் குறிக்கிறது என்றால் சக்தியும், ஸத்குருவும் ஒன்றுதான் என்பதைக் காட்டுகிறது.

ஸ்வாமிகள் எங்குச் சென்றாலும் அன்னையின் அனுக்கிரகம் அவருக்கு மிகுதியாக இருக்கிறது. அதேபோல், ஸத்குருவை யார் வணங்கினாலும், அவர்களுடைய வாழ்க்கையில் நல்லதே நடக்கும். ஸ்வாமிகளின் கரங்களில் இருக்கும். ''திரிசூல ரேகையும்,'' ''அபய வரத ரேகையும்'' சக்தியின் அம்சம் என்பதைக் காண்பிக்கின்றன. ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் சக்தியின் அம்சமாக இருப்பதால், அவர் அடிப்பது அணைப்பதற்குச் சமம். கருணைக்கடலான அம்பிகையின் அவதாரமாக இருப்பதால், அடிப்பதும், அணைப்பதும் ஒன்றுதான்.

இவ்வாறாக அந்தக் "கந்த வாக்கிய நாடியில்" முன்ஜென்மம் விவரிக்கப்பட்டுள்ளது.

"நாடி ஜோதிடம்" ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளை "ஜீவன் முக்தர்" என்று கூறுகிறது. மேலும் சேஷாத்ரி ஸ்வாமிகள், பூத உடலை இழந்தாலும், ஞான சரீரத்துடன், சஞ்சாரம் செய்யும் பேராற்றல் மிக்க ஒரு மாபெரும் சக்தி என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது. இந்தக் கலியுகத்தில் மனித வர்க்கத்தினர் சந்திக்கும், சந்திக்கப் போகும், கடுமையான கொடூரமான நாட்களில் அவர் களுக்குக் கைகொடுத்து உதவும்கரங்களாகப் பலவகையில் செயல் படுவார் என்பதும் கூறப்பட்டுள்ளது. தகுதியுள்ள ஆன்மாக்களுக்கு உதவி கிடைப்பது உறுதி. எதிர்காலத்தில், குழப்பமே வாழ்க்கையாக அமைந்துவிடும் என்பது காலச்சக்கரம் சுழலும் வேகத்தில் இருந்து புரிகிறது. அந்தக் கடினமான நேரங்களிலே ஒரு சுமை தாங்கியாக இருந்து, வளமான வாழ்க்கையை மகான் கண்டிப்பாக அளிப்பார். அவருடைய ஒளி மங்காது. கருணை குறையாது. வற்றாத ஜீவநதி போல், இந்தக் கலியுகம் முடியும் வரையில் அருள் வெள்ளம் பொங்கும்.

---

1. குருவிடம் உண்மை நம்பிக்கை வை. அருள் பொங்கும்.
2. குரு தன்னிடம் பேசவேண்டும் என்று நினைக்க வேண்டாம், கடைக்கண் பார்வை போதும்.
3. மகான்களிடம் ஆணைப்படி நட, கேள்விகள் கேட்காதே

---

அத்தியாயம் - 7

# திருவண்ணாமலையில் மகான்!

திருவண்ணாமலையில் வாழ்ந்த சேஷாத்ரி ஸ்வாமிகளின் வாழ்க்கையைச் சொல்வதற்குமுன் அவருடைய உடல் தோற்றத்தைச் சொல்வது சாலச்சிறந்தது ஆகும். சேஷாத்ரி ஸ்வாமிகள், சுமாரான உயரமும், ஒல்லியான தேகமும் உடையவர். திருவண்ணாமலைக்குச் சென்ற புதிதில் பரட்டைத் தலையும், தன் உடல்நிலைபற்றி, எவ்விதச் சிந்தனையும் இன்றி இங்குமங்கும் ஊரில் அலைவதைப் பலர் கண்டனர். இயற்கையாகவே அவருடைய மேனி தங்க நிறத்தைக் கொண்டது. அதில் எப்பொழுதும் மண்ணும் புழுதியும் படிந்து இருக்கும். அவர் சிலசமயம் தலையில் எண்ணெய் வைத்துக் கொண்டு, குளிக்காமல், நாள்கணக்காக அலைந்து திரிவார். பலத்த முயற்சியுடன் அவரை க்ஷவரம் செய்யத் தூண்டவேண்டும். பாதி க்ஷவரம் நடந்துகொண்டு இருக்கும்பொழுது, எழுந்து ஓடிவிடுவார். தன்னுடைய புறத்தோற்றத்தைப்பற்றிக் கொஞ்சமும் அக்கறை எடுத்துக்கொள்ளமாட்டார், சேஷாத்ரி ஸ்வாமிகள். நெஞ்சம் நிறைந்து சிரிக்கக்கூடிய ஆற்றல் அவரிடம் உண்டு. சிலநேரம், தொடர்ந்து சிரித்துக்கொண்டே இருப்பார். அவர் மிகுந்த வேகத்துடன் நடப்பார். அவர் "ஸ்வஸ்திகா ஆசன" முறையிலே அமருவார். அவருடைய கண்கள், பாதிமூடி, பாதி திறந்து இருக்கும். சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு மதுரமான குரல் உண்டு. பலமுறை பாடும்படி கூறினால், சில வரிகளை மட்டுமே பாடிவிட்டு இது ஸ்ரீ காமகோடி சாஸ்திரிகளால் தொகுக்கப்பட்டது என்று கூறுவார். திரும்பவும் அவரைப் பாட வைப்பது என்பது, மிகவும் சிரமமான காரியம் ஆகும். சேஷாத்ரி ஸ்வாமிகள், தன்னுடைய உடைகளைப் பற்றிக் கவலைப்படாதவர். ஆகவே, அவர் எப்பொழுதும் அழுக்குத் துணிகளுடன் தான் காட்சி அளிப்பார். அவருடைய பக்தர்கள், புதிய துணியைக் கொடுத்தால்,

அதை அவர் மற்றவர்களுக்குத் தானம் செய்து விடுவார் அல்லது அதைத் துண்டுகளாகக் கிழித்து மிருகங்களின் கொம்புகளில் வைத்து அழகு பார்ப்பார். அப்படியே அவர் அணிந்து கொண்டாலும் அந்தப் புதிய துணி கொஞ்சம் நேரம் கழித்துப் பார்த்தால், அழுக்குத் துணியாக மாறிவிடும். லௌகீகங்கள் நிறைந்த அர்த்தமற்ற இந்த உலக வாழ்க்கையை அவர் வெறுத்தார்.

சேஷாத்ரி ஸ்வாமிகளின் உணவுப் பழக்கம் விசித்திரமானது. சிறிதளவே உண்பார். சில வேளை அதுகூடச் சாப்பிடமாட்டார். ஸ்வாமிகளுடைய பக்தர்கள் உணவைக் கொடுத்தாலும் அதைப் பக்கத்தில் வைத்து விடுவார். தேவதைகள் எல்லாரும் பசியுடன் இருக்கிறார்கள். அவர்களுக்குக் கொடுக்கலாம் என்றும் கூறுவார். அவருக்குப் பாலைக் கொடுத்தாலும், அதைப் பூமியில் கொட்டி விடுவார். திருவண்ணாமலையில் வசிக்கும் மக்கள், இந்தப் புதுமையான மகானைத் தரிசிக்க வருபவர்கள், இந்தச் செயலைப் பார்த்து அவருடைய அனுக்கிரகம் கிடைத்தது என்று மகிழ்ச்சியுடன் செல்வர். அதில் ஒரு சன்யாசி, சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் மிகுந்த பக்தியுடனும், ஈடுபாட்டுடனும் இருந்தார். அந்தச் சன்யாசிக்கு என்ன உணவு கிடைக்கிறதோ அதை ஸ்வாமிகளின்முன் வைத்து அதைச் சாப்பிடச் சொல்லிக் கெஞ்சுவார். ஸ்வாமிகள் ஒரு கவளமாவது உண்டால்தான் அந்த சன்யாசியும் சாப்பிடுவார். சேஷாத்ரி ஸ்வாமிகள் மூன்று நாள் வைத்திருந்த பழைய உணவைக் கூட முகம் சுளியாமல் உண்பார். அதிலிருந்து துர்நாற்றமே வீசினாலும் கவலைப்படமாட்டார். நறுமணமோ, நாற்றமோ, இவை உலக நாட்டமே இல்லாத மகானுக்கு ஒரு பொருட்டு இல்லை! உயர்வும் தாழ்வும், சுகமும் துக்கமும், இருளும் ஒளியும், பசியும் தாகமும், அழகும், அசிங்கமும் அவரைப் பந்தப்படுத்தாது.

ஸ்வாமிகள் எப்பொழுதும் பரிபாஷையில் பேசுவார். சிலேடையிலும் பேசுவார். அதை மற்றவர்களால் எளிதில் புரிந்து கொள்ள இயலாது. திருவண்ணாமலையில் அவர் கல்யாண ஊர்வலத்தில் கலந்துகொண்டு மணமக்களை ஆசீர்வதிப்பதைப் பார்க்கலாம் அல்லது குழந்தைகளுடன் விளையாடுவதைப் பார்க்கலாம். ஸ்வாமிகள் புனித ஆன்மாக்களை அரவணைப்பார். சிலரைத் திருத்த வேண்டும் என்பதற்காக அடித்துத் துரத்துவார். பார்த்த மாத்திரத்திலேயே ஆன்மாவினுள் ஊடுருவி நல்லவனா, கெட்டவனா என்பதை உணர்ந்துகொள்ளும் அபூர்வ சக்தி ஸ்வாமிகளிடம்

உண்டு. அவர் நெருங்கிப் பழகாததுபோல் தோன்றினாலும், அவருடைய பக்தர்களுக்கு எப்பொழுதும் அருகில் இருப்பது போன்ற உணர்வை ஏற்படுத்துவார்.

சேஷாத்ரி ஸ்வாமிகள் தூக்கத்தை ஜெயித்தவர். தூங்குவதே ஒரு அரிதான விஷயமாகும். ஒருசமயம் ஒரு பக்தன், அழகான மெத்தையை மகானுக்காக, அவர் எப்பொழுதும் அமர்ந்திருக்கும் அருணாசலேஸ்வரர் கோயிலில் இருக்கும் முருகன் சன்னதியின் அருகில் விரித்து வைத்தார். அம்மெத்தையைத் தீண்டுவாரில்லை. நாளாவட்டத்தில் அதில் தூசியே படிந்தது. ஸ்வாமிகள் எப்பொழு தாவது அம்மெத்தையில் மதியத்தில் அமருவார். ஸ்வாமிகள் உட்கார்ந்த இடத்திலிருந்து மக்கள் மெத்தையில் இருக்கும் தூசியைத் தட்டி அதை அருட்பிரசாதமாக, வீட்டிற்கு எடுத்துச் சென்றனர். அதை நோய் நீக்கும் அருமருந்தாகப் பயன்படுத்தினர். இப்படியாக, சேஷாத்ரி ஸ்வாமிகள் முக்தித்தலமான திருவண்ணாமலையைச் சொந்த வீடாக்கிக் கொண்டார். எந்த வீட்டைத் தேடி அலைந்தாரோ அந்த வீடு கிடைத்து விட்டது என்று ஆனந்தம் அடைந்தார்.

திருவண்ணாமலையில் அப்பொழுது நடந்த ஒரு நிகழ்ச்சியை இங்கு சொல்லவேண்டும். அதாவது ஏழு கழுதைகளிடம், அவருக்கு உள்ள அனுபவத்தைச் சொல்லவேணடும். கோயிலின் அருகில் ஏழு கழுதைகள் வரிசையாக நின்றுகொண்டிருந்தன. ஸ்வாமிகள், அந்த ஏழு கழுதைகளையும், சுற்றிச் சுற்றி வந்து நமஸ்கரித்தார். அதை, திரு. சூர்ய நாராயண சாஸ்திரி என்பவர் பார்த்து, "ஏன் இவ்வாறு செய்கிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு சேஷாத்ரி ஸ்வாமிகள், "புறத்தோற்றத்தைப் பார்க்காதீர்கள். அகத் தோற்றத்தை ஆழ்ந்து பாருங்கள். அவர்கள் ஏழு பேரும் சப்தரிஷிகள் ஆவார்கள்" என்று வரிசைக் கிரமமாக அவர்களின் பெயர்களைச் சொன்னார். இவ்வாறு, அவருடைய வாழ்க்கையில் விநோதமான, புதுமையான, எண்ணற்ற நிகழ்ச்சிகள் நடந்து கொண்டே இருந்தன.

இவ்வுலகில் ஸ்வாமிகளுக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. அவர் மழையில் முழுவதுமாக நனைந்து விளையாடுவதில் ஆர்வம் உள்ளவர். குப்பை வண்டியை வாகனமாகப் பாவித்து அதில் செல்வார். ஸ்வாமிகள் எந்தக் கடைக்குச் செல்ல வேண்டும் என்று தோன்றியதோ, அந்தக் கடைக்குச் சென்று அங்குள்ள சாமான்களை வைத்து விளையாடுவார். அவரை ஒருவரும் தடுக்க மாட்டார்கள்.

திருவண்ணாமலையில் இருக்கும் கடைக்காரர்கள் சேஷாத்ரி ஸ்வாமிகளின் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்து இருப்பார்கள். அவர் கடைக்குள் புகுந்து சாமான்களை எல்லாம் இழுத்துப் போட்டு, பணப்பெட்டியைத் திறந்து பார்த்து பணத்துடன் விளையாடுவதை அக்கடைக்காரர்கள் பார்த்து மகிழ்ச்சி அடைவார்கள். அவர் கடைக்குள் வந்து என்ன வேண்டுமானாலும் செய்யட்டும் என்று பேசாதிருப்பர். அக்கடைக்காரர்களுக்கு, ஸ்வாமியின் பூரண ஆசீர்வாதம் இதன் மூலமாகக் கிடைக்கும் என்பது நம்பிக்கை. உதாரணமாக, திரு. முத்தையாலு செட்டியாரைச் சொல்லலாம். அவருடைய கடைக்குச் செல்வது ஸ்வாமிகளுக்கு மிகவும் விருப்பமான வழக்கமான நிகழ்ச்சி ஆகும். ஸ்வாமிகள் எப்பொழுதும் அக்கடைக்குச் சென்று பணப்பெட்டியிலிருந்து பணத்தை எடுத்துச் சுற்றி வாரி இறைப்பார். அதன்பயனாக அவருடைய வியாபாரம் நாளுக்கு நாள் பெருகி அவரிடம் செல்வம் குவிந்தது!

இதன் தொடர்பாக மற்றொரு நிகழ்ச்சியை, நம்பிக்கையற்ற ஒரு மாம்பழ வியாபாரியைப்பற்றிச் சொல்லலாம். ஒரு மாம்பழ வியாபாரி வண்டி நிறைய மாம்பழத்தை வைத்துக்கொண்டு வியாபாரம் செய்துகொண்டு இருந்தான். அவ்வழியே சேஷாத்ரி ஸ்வாமிகள் சென்றுகொண்டு இருந்தார். அந்த வியாபாரியிடம் ஒரு மாம்பழத்தைக் கொடுக்குமாறு கேட்டார். வழக்கமான வியாபாரி அங்கு இல்லை. அங்கே மகானின் மகிமை தெரியாத ஒரு புதுப்பையன் இருந்தான். அவன் அவரைப்பற்றி, தகாத சொற்களை உபயோகித்தான். ஸ்வாமிகள் தன் வழியில் சென்றார். அன்றைக்குச் சூரியன் அஸ்தமனம் ஆவதற்குள், அனைத்து மாம்பழமும் அழுகி விற்பதற்குத் தகுதி இல்லாமல் போயிற்று. அப்பொழுதுதான் அச்சொந்தக்காரனுக்கு என்ன நடந்தது என்பது புரிந்தது. அவன் ஓடிச்சென்று மகானின் காலில் விழுந்து அப்பையனின் தவறுக்கு மன்னிப்புக் கேட்டான்.

சேஷாத்ரி ஸ்வாமிகளைப் பற்றியும், அவர் திருவண்ணாமலையில் வாழ்ந்த நாட்களைப் பற்றியும் எழுதும்பொழுது இன்னொரு மகானைப் பற்றியும் எழுதவேண்டும். அவர்தான் இரமண மகரிஷி ஆவார். சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு இரமணரிடம் மிகுந்த பற்று உண்டு. அவர்கள் இருவரையும், ஒருவரிலிருந்து ஒருவர் பிரித்துக் கூறமுடியாது. ஒருவரைச் சந்தித்தால், மற்றவரைச் சந்தித்தது போல் ஆகும். ஒருவரை வணங்கினால் மற்றவரை வணங்குவது போல்

ஆகும். இரமண மகரிஷிக்கும் சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் மிகுந்த மதிப்பும் மரியாதையும் உண்டு. இரமண மகரிஷிக்கு சேஷாத்ரி ஸ்வாமிகளின் தன்னைத்தானே உணர்ந்து கொள்ளும் தன்மையைப் பிடிக்கும். ஒருசமயம் இரமண மகரிஷிக்கு, ஒரு உட்காரும் நாற்காலியை ஒரு அன்பர் அவருக்கு அன்பளிப்பாகக் கொடுத்த பொழுது அவர், "அழியக்கூடிய இந்தப் பூதவுடலில் ஆத்ம தத்துவமே முக்கியம்" என்று சரீர சௌக்கியங்களுக்கு இடம் கொடுக்காமல் இருக்கும் சேஷாத்ரி ஸ்வாமிகளைப் போல் என்னால் இருக்க முடியவில்லை" என்று கூறினார். அவர்கள் இருவரும் ஆன்மீக தத்துவங்களைப் பற்றியும் ஞானமார்க்கத்தில் உயர்நிலையை அடைவது பற்றியும் அடிக்கடி கலந்து உரையாடுவார்கள்.

சேஷாத்ரி ஸ்வாமிகள், திருவண்ணாமலைக்கு வந்த புதிதில் இரமண மகரிஷி பாலபருவத்தில், பதின்மூன்று வயது இருக்கும் பொழுது அருணாசலேஸ்வரர் கோவிலுக்கு அருகில் இருக்கும் ஒரு குகையில் அமர்ந்து தியானம் செய்துகொண்டு இருந்தார். சிறுவர்கள் இரமண மகரிஷியை சிறுவனாக இருந்த காரணத்தினால், தங்கள் விளையாட்டுப் பொருளாகக் கருதி அவர்மேல் சரமாரியாகக் கற்களை வீசினார்கள். அங்கு சேஷாத்ரி ஸ்வாமிகள் தோன்றி, அச்சிறுவர்களைப் பயமுறுத்தி விரட்டி அடித்தார். அந்தக் குகைக்குள் தன்னுடைய மகன் தவம் செய்வதாகவும் அவர் மிகவும் மோசமான நிலையில் இருப்பதாகவும் விளக்கிக் கூறினார். ஸ்வாமிகளின் கட்டளைப்படி அவரை வெளியில் கொண்டு வந்தனர். இரமண மகரிஷியின் உடலில் புழுக்கள் மேய்வதுகூடத் தெரியாமல், ஆழ்ந்த தியானத்தில் அவர் இருப்பதைக் கண்ட மக்கள் மலைப்புடன் பார்த்தனர். அருணாசலேஸ்வரருக்குக் கொண்டு சென்ற பாலையும் தண்ணீரையும் கொடுத்து, சேஷாத்ரி ஸ்வாமிகள் அவரை இயல்பு நிலைக்குக் கொண்டு வந்தார். இதிலிருந்து சேஷாத்ரி ஸ்வாமிகளைப் பார்வதியின் அம்சமாகவும், இரமண மகரிஷியை முருகனின் அம்சமாகவும் மக்கள் புரிந்து கொண்டனர்.

இவ்வாறாக சேஷாத்ரி ஸ்வாமிகள், திருவண்ணாமலையைத் தன்னுடைய வீடாகப் பாவித்தார். அவருக்குத் திருவண்ணாமலை யின் மீது இருக்கும் பற்றைக் கீழே கொடுக்கப்பட்ட நிகழ்ச்சிகளில் இருந்து அறிந்து கொள்ளலாம். சேஷாத்ரி ஸ்வாமிகள் ஒரு சமயம் திருவண்ணாமலை இரயில் நிலையத்தில் நிற்கும் ஒரு இரயிலில்

ஏறினார். எவ்வித முன்னறிவிப்பும் இன்றி அந்த இரயில் திடீரென்று கிளம்பியது. ஸ்வாமிகள் இரயிலில் இருந்து கீழே குதிக்க முயன்ற பொழுது, அவருடைய சீடர்கள் அவரைத் தடுத்து நிறுத்தினர். அந்த இரயில் திருவண்ணாமலை ஊரின் எல்லையைக் கடக்கும்பொழுது, திடீரென்று ஸ்வாமிகள் குதித்து விட்டார்! தண்டவாளத்தின் பக்கத்தில் காயங்களுடன் படுத்து இருந்தார். அந்த இரயில் நின்று விட்டது. அதில் உள்ள பயணிகள் எல்லாம் கீழே இறங்கி, அடிபட்டுக் கிடந்த ஸ்வாமியைத் தூக்கிப் பக்கத்தில் கிடத்தினர். தேகம் முழுவதும் சிராய்ப்பு அவருக்கு இருந்தது. அந்த இரயில் ஓட்டுநர், இரயிலைக் கிளப்ப முயற்சி செய்தார். ஆனால் முடியவில்லை. அவரும் அவரைச் சுற்றி இருந்தவர்களும் என்ன முயன்றும் அந்த இரயில் ஒரு அடி கூட நகரவில்லை. அந்தப் புனிதமான மகானிற்குக் காயம் விளைவித்த காரணத்தினால்தான், இரயில் ஓடவில்லை என்பதைச் சுற்றி இருந்தவர்கள் விளக்கிக் கூறினார்கள். ஓட்டுனர் சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் சென்று மன்னிப்புக் கேட்ட பிறகுதான் இரயில் ஓடியது! அவருடைய சீடர்கள், உடனடியாக ஸ்வாமிகளைச் சென்று பார்த்தபொழுது அவருடைய தேகத்தில் அடிபட்ட காயங்கள் ஒன்று கூட இல்லை! அடிபட்ட இடங்களும், காயங்களும் அடையாளம் தெரியாமல் மறைந்து போயின! தனக்கு மிகவும் பிடித்தமான, திருவண்ணாமலையில் சேஷாத்ரி ஸ்வாமிகள், பத்திரமாக இருந்தார்! அந்த மண்ணை விட்டுப் பிரியக்கூடாது என்ற அவருடைய மன வைராக்கியத்தின் காரணமாக இந்நிகழ்ச்சி நடந்தது.

புனித நூல் ஆராய்ச்சி வல்லுநர்கள் இந்த அண்டத்தை, திருவண்ணாமலைத் தலத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கிறார்கள். அப்படிப் பார்க்கும்பொழுது திருவண்ணாமலையின் எல்லைக் கோடு, இந்த உலகத்தின் மதில் சுவராகவும், அந்த ஊரின் மொத்தப் பரப்பு, இந்த உலகத்தின் பரப்பாகவும், மலைசுற்றுப் பாதை கர்ப்பக்கிரக மாகவும், கர்ப்பக்கிருகத்தில் இருக்கும் ஸ்வாமியாக மலை இருப்ப தாகவும் கருதப்படுகிறது. இப்படிப்பட்ட உயர்ந்த வார்த்தைகளால் வர்ணிக்க இயலாத, மகிமை பெருமைகள் நிறைந்த இடத்தை, முக்தித்தலத்தை, மகான் தனது சொந்த வீடாக ஆக்கிக் கொண்டதில் ஆச்சரியம் இல்லை. புனித பூமியாக இருந்த அந்த மண்ணிற்கு, மகானின் வருகை, அழகுக்கு அழகு சேர்ப்பது போல், மேலும் மெருகு ஊட்டியது.

அத்தியாயம் - 8

# பொங்கும் கருணை வெள்ளம்

"பசுவிடம் இருந்து பாலை நீங்கள் எப்படி அடைகிறீர்களோ அதேபோல் மிகுந்த பக்தியுடன் நீங்கள் பூஜை செய்தால் உங்களுக்குப் பூரண அனுக்கிரகம் கிடைக்கும்". இது சேஷாத்திரி ஸ்வாமிகளின் சூட்சும அருள் மொழியாகும். குறைந்தது நூறு பக்தர்களின் வாழ்க்கையிலாவது இவர் அருள் மொழிகள் உண்மையாயின. உண்மையான, திடமான, மாறுபாடு இல்லாத நிரந்தரமான பக்தியையும், பிரார்த்தனையையும் செய்யும் ஒவ்வொரு மனிதனின் உள்ளத்திலும், மகான் வாழ்கிறார். உள்ளத்தில் இருந்து கொண்டே, உள்ளுணர்வைக் கிளப்பி, கேட்கும் கேள்விகளுக்கு விடை அளிக்கிறார். சூரியனும், சந்திரனும், எப்படி உதிக்கத் தவறுவது இல்லையோ அதுபோன்று உண்மை பக்தர்களுக்கு அருளாசி வழங்குவதில் மகான் தவறுவதே இல்லை.

திரு. வெங்கட்ராம அய்யர் என்பவர், திருவண்ணாமலையில் இருக்கும் டேனிஷ்மிஷன் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றி வந்தார். ஒருநாள் தமக்கு உடனடியாகத் தற்காலிக வேலை நீக்கம் செய்யப்படும் என்று அவருடைய மனதில் தோன்றியது. மிகுந்த கவலையுடன் திரு. வெங்கட்ராம அய்யர், பூத நாராயண கோவிலை தாண்டிச் செல்லும்பொழுது சேஷாத்ரி ஸ்வாமிகள் தன்முன் நிற்பதை அவர் பார்த்தார். உடனே திரு. வெங்கட்ராம அய்யர் தன் காலணி களைக் கழற்றி வைத்து, ஸ்வாமிகளை வணங்கினார். சேஷாத்ரி ஸ்வாமிகள், திரு. வெங்கட்ராமருடைய காலணிகளாலேயே அவருடைய தலையில் அடித்துவிட்டுத் தன் வழியில் சென்று விட்டார். ஏற்கெனவே மிகுந்த கவலையுடன் இருந்த வெங்கட்ராம அய்யர், செருப்படி வாங்கியதில், இன்னும் வேதனை அடைந்தார். மகானே

தன்னைக் கைவிட்டு விட்டாரே என்று அனாதை போல் உணர்ந்தார். அவர் பள்ளியைச் சென்று அடைந்தார். அவர் பயந்த படியே அங்கு ஒரு கடிதம், அவருடைய மேஜையின்மேல் இருந்தது. அவர், "எதற்காக அதைப் பார்க்க வேண்டும்? அதில் இருக்கும் கெட்ட செய்தியைத்தான் ஏற்கெனவே அறிவோமே," என்று எண்ணினார். மிகுந்த தயக்கத்துடன் அந்தக் கடிதத்தைக் கையில் எடுத்து அதில் இருக்கும் வாசகங்களைப் படித்தார். அதிசயத்திலும் அதிசயமாக அச்செய்தி அவர் கற்பனைக்கு முற்றிலும் மாறாக இருந்தது. அச்செய்தி என்னவென்றால், அவர் தலைமை ஆசிரியராகப் பதவி உயர்வு கொடுக்கப்பட்டுவிட்டார் என்பது. அவரது கண்களையே அவரால் நம்பமுடியவில்லை! மகான் செருப்பால் தலையில் அடித்த காரணத்தினால் மறைமுகமாகத் தலைமை ஆசிரியர் பதவிஉயர்வு விளக்கப்பட்டு இருக்கிறது. மிகவும் சந்தோஷத்துடன் சேஷாத்ரி ஸ்வாமிகளின் அனுக்கிரகத்தைப் பெறுவதற்கு அவரைத் தேடிக் கொண்டுச் சென்றார். கண் சிமிட்டும் நேரத்தில் அவருடைய துக்கம் சந்தோஷமாக மாறியதை எண்ணி வியப்படைந்தார். ஏற்கெனவே விவரித்தபடி, அன்னையின் அம்சமாக மகான் இருப்பதால், அடித்தாலும், அணைத்தாலும் கருணைதானே பொங்கும்?

B.V. நரசிம்ம ஸ்வாமி என்பவர், சேலத்தில் வக்கீலாக வாழ்ந்து வந்தார். ஒரு விபத்தில் இரண்டு குழந்தைகளையும் பறிகொடுத்தார். அதனால் மிகுந்த துக்கத்தில் இருந்தார். அதன் பிறகு அவருடைய வாழ்க்கைப் பாதையே மாறியது. மன அமைதியைத் தேட விழைந்தார். "இரமண மகரிஷியின் வாழ்க்கை நூலையும், ஷீரடி சாயிபாபாவின் வாழ்க்கை வரலாற்றையும், அவர் எழுதினார். அவர் சேஷாத்ரி ஸ்வாமிகளை ஒருசமயம் மிகவும் குறுகிய நேரத்தில் பார்த்தார், ஸ்வாமிகளுடன் இருக்கவேண்டும் என்று மிகுந்த விருப்பம் கொண்டார். ஸ்வாமிகளைச் சந்திக்க வேண்டும் என்று ஒரே விருப்பத்துடன் அவர் திருவண்ணாமலைக்குச் சென்றார். ஆனால் அவரால் ஸ்வாமிகளைச் சந்திக்க முடியவில்லை. இராம ஜபத்தைத் தினந்தோறும் செய்யச் சொல்லி ஸ்வாமிகளிடம் மிகுந்த பக்தி கொண்ட ஒரு முதியவர் அவருக்கு அறிவுரை கூறினார். ஸ்வாமிகள் அவருக்குக் கண்டிப்பாகத் தரிசனம் கொடுப்பார் என்றும் கூறினார். ஒருநாள் திரு. நரசிம்ம ஸ்வாமி ஒரு கடையில் உட்கார்ந்து கொண்டு இருந்தார். அப்பொழுது சேஷாத்ரி ஸ்வாமிகள் அமைதியாக வந்து அருகில் அமர்ந்தார். சிறிதுநேரம் கழித்து எழுந்து சென்றுவிட்டார்.

திரு. நரசிம்ம ஸ்வாமியின் பிரார்த்தனைக்கு விடை கிடைத்தது. அவர்தான் அகில இந்திய சாயி சமாஜத்தின் சென்னைக் கிளையின் (ஷீரடி) ஸ்தாபகர் ஆவார். இன்றும் அவர் உருவாக்கிய ஷீரடி ஸ்ரீ சாயிபாபாவின் ஆலயத்தை மயிலாப்பூரில் நாம் காணலாம்.

திரு. சுப்பிரமணிய அய்யர் என்பவர் தாலுகா அலுவலகத்தில் ஒரு குமாஸ்தாவாக இருந்தார். அவர் சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் மிகுந்த பக்தி உடையவர் ஸ்வாமிகளும் அவர் என்ன உணவு கொடுத்தாலும் அதை ஆசையுடன் உண்பார். ஒருநாள் சுப்பிரமணிய அய்யர் காசிக்குப் போவதற்குத் தன்னுடைய அலுவலகத்தில் விடுப்பு எடுத்தார். இத்தருணத்தைப் பயன்படுத்தி, அவருடைய மேலதிகாரி காரணமே இல்லாமல் அவர்மேல் திருட்டுப் பட்டம் சுமத்த எண்ணினார். அவர் விடுப்பு எடுத்ததற்குக் காரணமே, அவர் பணம் திருடியதால்தான் என்று அந்த அப்பாவி மேல் பழிபோட எண்ணினார். கோபமுற்ற சேஷாத்ரி ஸ்வாமிகள், திடீரென்று அவருடைய அலுவலகத்துக்குச் சென்று, நாணயம் இல்லாத அந்த மேலதிகாரியைப் பார்த்துப் பின்வருமாறு கூறினார். ''அந்த அப்பாவியின் மேல் ஒரு குற்றச்சாட்டைச் சுமத்தினாலும், உன் வீட்டில் பிணம் விழும், ஞாபகம் வைத்துக்கொள்'' என்று மிரட்டினார். அந்த மகானின் மிரட்டலைக் கேட்ட அய்யருடைய மேலதிகாரி, மிகவும் பயந்துவிட்டார். மேலும் ஸ்வாமிகளின் மிரட்டலுக்குத் தகுந்தவாறு, அவரும் அடுத்த வாரம் முழுவதும், ஜுரத்தினால் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. திரு. அய்யரின் மேல் பழிபோட வேண்டும் என்ற எண்ணம் எல்லாம் அவரை விட்டு விலகியது. சேஷாத்ரி ஸ்வாமிகளும், திரு. சுப்ரமண்ய அய்யரைப் பார்த்து எச்சரிக்கை செய்தார். ''நீ எதற்காக அந்த நாணயம் இல்லாத மனிதரிடம் வேலைபார்க்க வேண்டும்? ஐந்து மாதத்திற்குள் வேறு வேலைக்கு மாற்றிக்கொள். எதற்கும் கவலைப்படாதே. உன்னுடைய மேலதிகாரியால் உனக்கு எந்தவிதத் தொந்திரவும் வராது. அவர் என்னைப் பார்த்துப் பயப்படுகிறார்'' என்று மேலும் கூறினார். ஸ்வாமிகளின் ஆசிப்படி, திரு. சுப்பிரமண்ய அய்யருக்கு ஐந்து மாதத்திற்குள் திருச்சியில் வேறு வேலை கிடைத்தது. அவரும் முன் பார்த்த வேலையை விட்டுவிட்டுச் சென்றார். இந்த நிகழ்ச்சி 1919ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் நடந்தது. ஆதிமூலமே என்று, ஆபத்தில் அலறிய கஜேந்திரனுக்கு அபயம் அளித்தது போல், உண்மைப் பக்தர்களை ஆபத்திலிருந்து காப்பாற்றி சேஷாத்ரி ஸ்வாமிகள் அபயம் அளிப்பார்.

திரு. M.K. சுப்பிரமண்ய சாஸ்திரி என்பவர், தன் மகனைப் பறிகொடுத்து, புத்திரசோகத்தில் துக்கச் சுமைகளைத் தாங்கிக் கொண்டு மன அமைதி வேண்டி திருவண்ணாமலைக்கு வந்தார். சேஷாத்ரி ஸ்வாமிகள், அவரை அனுக்கிரகித்து, அவருக்கு ஒரு ரூபாய் நாணயத்தைக் கொடுத்தார். வாழ்க்கையின் அர்த்தமுள்ள தத்துவங்களை எடுத்துக்கூறி, மனதை அமைதியாக வைத்துக் கொள்ளுமாறு அறிவுரை வழங்கினார். சிலகாலம் கழித்து அவருக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அவரும் நிரம்பச் செல்வத்துடன், மனநிறைவுடன் வாழ்ந்தார்.

ஏற்கெனவே விவரித்தபடி புறத்தோற்றத்திற்கு முக்கியத்துவம் கொடுக்காமல், ஆன்மாவிற்கே முக்கியத்துவம் கொடுப்பது நமது ஸ்வாமிகளின் தனிச்சிறப்பு. சமரச சன்மார்க்கமே அவரது நெறி முறையாகும். ஒரு தாசி குலத்தில் பிறந்த ஒரு மாதுவின் பெயர் அலமேலு. ஒருநாள் சேஷாத்ரி ஸ்வாமிகள் அவளைக் கடந்து சென்றபொழுது மரத்தின்பின் சென்று ஒளிந்து கொண்டாள். புனிதமான அந்த மகானின் முன்பு பேடியான தான் வருவதற்கு அஞ்சி, வெட்கி, "பகலவனைக் கண்ட பனிபோல்" ஓடி ஒளிந்து கொண்டாள். அவளைக் கடக்கும்பொழுது அந்தப் பெண்ணின் தலையில், சாமந்திப்பூவை ஸ்வாமிகள் போட்டுவிட்டுச் சென்றார். அதிலிருந்து, ஒரு பெரும் தனவந்தரின் சேர்க்கையின் மூலமாக அமைதியான வாழ்வும், பணவசதியும் கிடைத்தது. அந்தப் புனித மகானிற்கு அவளது உள்ளம் நன்றி கூறியது.

இராஜமாணிக்கம்மாள் என்பவர் ஸ்வாமிகளிடம் முட்டாள் தனமாக நடந்து கொண்ட காரணத்தினால், மகானின் அனுக்கிரகத்தை இழந்தாள். அதைக் கீழே கண்ட நிகழ்ச்சியின் மூலம் அறியலாம். அந்த அம்மாள் குழந்தைப் பேற்றிற்காக ஆசைப்பட்டாள். சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் அவள் வேண்டி நின்றாள். அவளுக்குக் குழந்தை பெறும் பாக்கியம் இல்லை என்று சொல்லிக்கொண்டே ஸ்வாமிகள் சென்று விட்டார். பல வருடங்கள் கழித்தும், சேஷாத்ரி ஸ்வாமிகளின் வார்த்தைகளை அந்தப் பெண்மணி ஒப்புக்கொள்ளவில்லை. மீண்டும், மீண்டும் பிடிவாதம் செய்துகொண்டே இருந்தாள். ஒருநாள் அவளுடைய புருஷனுக்கு, உடல் நலம் சரியில்லாமல் இருந்தது. தன்னுடைய கணவன் சீக்கிரம் குணம் அடைய வேண்டும் என்று சேஷாத்ரி ஸ்வாமிகளைத் தேடிச் சென்றாள். அவள் ஸ்வாமிகளை முருகன் கோவிலில் கண்டு வணங்கினாள். திடீரென்று சேஷாத்ரி ஸ்வாமிகள், அவளுடைய கன்னத்தில் அறைந்து, அவளுடைய

காதுகளில் இருக்கும் கம்மல்களையும், இழுத்துவிட்டு, வேகமாக அந்த இடத்திலிருந்து சென்றுவிட்டார். அறியாமையில் இருந்த அந்த அம்மாளுக்கு இந்த நிகழ்ச்சி தனது வாழ்வில் அவள் சந்திக்கப் போகும் பெரிய துக்கத்திற்கு அறிகுறி என்பது தெரிய வில்லை. அடுத்தநாளே அவளுடைய புருஷன் இறந்துவிட்டான். அவர்களுடைய குலவழக்கப்படி கணவன் இறந்தால் காது கம்மல்களை அவிழ்க்க வேண்டும். இப்படித்தான் அனுக்கிரகம் வேண்டும். அப்படித்தான் அனுக்கிரகம் வேண்டும் என்று கேட்பதற்கு உரிமையில்லை. சரணாகதி அடைந்த, ஒவ்வொரு ஆன்மாவிற்கும் எதை எப்படி எப்பொழுது செய்யவேண்டுமோ அதை அப்படி உரிய தருணத்தில் மகான் நடத்திக் கொடுப்பார் என்பதில் ஐயமில்லை!

சேஷாத்ரி ஸ்வாமிகளின் தூரத்து உறவினரான திரு. சூரிய நாராயண அய்யர், ஸ்வாமிகள் ஒரு வேப்பமரத்தின்கீழ் நிற்பதைப் பார்த்தார். அவரிடம் சென்று, "மக்கள் எல்லாரும் நீ பெரிய மகான் என்று கொண்டாடுகிறார்களே, எனக்கு ஏதாவது ஒரு அற்புதம் செய்து காட்டு!" என்று கூறினார். உடனே சேஷாத்ரி ஸ்வாமிகள், அந்த வேப்பமரத்தின் காய்ந்த இலைகளைப் பறித்து வியப்புடன் இருக்கும் அய்யரிடம் கொடுத்து சாப்பிடச் சொன்னார். சந்தேகமாக ஒரு இலையை எடுத்து வாயில் போட்டுக்கொண்டார். சாதாரணமாக கசப்பாக இருக்கும். அந்த இலை, இப்பொழுது இனிப்பாக இருந்தது. சேஷாத்ரி ஸ்வாமிகள் இப்படியாக அவருடைய சந்தேகத்தைத் தீர்த்து வைத்தார். வாழ்க்கையில், கசப்பான நேரங்களை இனிப்பான நேரங்களாக மாற்றுவதும், இனிப்போடு இனிப்பு சேர்ப்பது போல், அற்புதங்களைச் செய்து, நமது வாழ்க்கையை இனிக்க வைக்க மகானால்தான் முடியும்.

தீராத நோய்களை எல்லாம் ஸத்குருநாதர் அருளாசி வழங்கித் தீர்த்து வைக்கிறார். ஸ்வாமிகளின் மாமாவான திரு. கிருஷ்ணசாமி அய்யரின் மனைவி அலமேலு, மிகவும் மோசமான நிலையில் இருந்தாள். தீராத வயிற்றுவலியும், வாந்தியும், உடல் முழுவதும் கொப்புளங்களும், பூச்சிக்கடித் தொந்தரவால் தொல்லையாக இருந்தன. எந்த மருந்துக்கும் அவை கட்டுப்படவில்லை. இத்தகைய நிலையில் அவளைத் திருவண்ணாமலைக்கு அழைத்து வந்தனர். அந்த வண்டி திருவண்ணாமலை ஊருக்குள் நுழையும் போதே ஸ்வாமிகள் அங்கு வந்து தோன்றினார். கிருஷ்ணசாமி அய்யர் வண்டியிலிருந்து கீழே குதித்து ஸ்வாமிகளின், பாதத்தைப் பற்றிக்

கொண்டு வாய்விட்டு கதறி அழுதார். "துன்புற்ற இப்பெண்ணை உன்னால்தான் காப்பாற்ற முடியும்" என்றும் கூறினார். "அப்படியா!" என்று கேட்டுக்கொண்டே ஸ்வாமிகள் குதித்து, வண்டியின் மேல் அமர்ந்தார். அலமேலுவின் வயிற்றிலும், கால்களிலும், இருக்கும் புண்ணின் மேல் உதைத்தார். கீழே இருந்து சிறிது மணலை எடுத்து, வியாதியுடன் போராடிக்கொண்டு இருக்கும், அப்பெண்மணியைச் சாப்பிடச் சொன்னார். அவர்மேல் சிறிது மணலை எடுத்துத்தூவி, அடுத்துவரும் மூன்று நாட்களில் அவள் உடலில் பூசிக் கொள்ளுமாறு சிறிது மணலை அவள் கையில் கொடுத்தார். அவர் சொற்படியே அலமேலு மூன்று நாட்கள் அம்மணலைப் பூசி வந்தாள். நான்காவது நாள் அவள் புண் ஆறி பூரண குணம் பெற்றாள். **மண்ணாக இருந்தால் என்ன? மருந்தாக இருந்தால் என்ன? சித்தனின் அருள் கிடைத்தால் தானே அது அருமருந்தாக வேலை செய்யும்!**

ஸ்வாமிகள் ஒருசமயம், விஷச்செடியின் பழத்தை மிளகாய்ப் பொடியுடன் சேர்த்து, தொடர்ந்து வாந்தி எடுத்துக் கொண்டிருந்த ஒரு குழந்தைக்கு அதை நிறுத்துவதற்காகக் கொடுத்தார். அது அற்புதமாக வேலை செய்தது. குழந்தை பூரண குணம் அடைந்தது. குரு மண்டலத்தில் இருக்கும் மகான்களின் தெய்வீக இயங்கு முறை ஒன்றுபோலவே இருக்கும். மகான் ஸ்ரீ ஷீரடி சாயிபாபாவும் இது போன்ற அற்புதங்களைச் செய்தார். மகான்கள் எதைக் கொடுக்கிறார்கள். **எதற்காகக் கொடுக்கிறார்கள்? எப்படிக் கொடுக்கிறார்கள்? என்பதைப் புரிந்துகொள்ள முடியாது. அது மனித சக்திக்கு அப்பாற்பட்ட மகத்தான சக்தியால் நடைபெறுகிறது.**

மதுராந்தகத்தில் இருக்கும். திரு. கிருஷ்ணமூர்த்தி என்பவருக்கு நடந்த இன்னொரு நிகழ்ச்சியை இங்குக் குறிப்பிடலாம். கடுங்குளிர் காலத்தில் அவருடைய கை, கால்களில் வீக்கம் இருக்கும். குளிர் காலத்தில் அவருடைய விரல்கள் மிகுதியான வலியால் உணர்ச்சி அற்று இருக்கும். இந்த நோய் வந்தபோது அவருடைய விரல்கள் செயலற்று இருக்கும். அவரால் ஒரு வேலையும் செய்யமுடியாது. இந்த உபாதை பத்துவருடங்களாகத் தொடர்ந்தது. அவரும் எத்தனையோவித மருந்துகள் சாப்பிட்டுப் பார்த்தார். ஆனால் ஒன்றும் பலன் இல்லை. அவர் கடைசியாகத் திருவண்ணாமலைக்குச் செல்ல எண்ணினார். அங்கு, சேஷாத்ரி இதற்கு ஒரு வழிசெய்வார் என்று எண்ணினார். திருத்தலமான, திருவண்ணாமலைக்கு அவர் சென்று அடைந்த பிறகு, மகானைத் தேடினார். ஆனால், ஸ்வாமிகளைப்

பார்க்க முடியவில்லை. மிகவும், மனம் உடைந்து ஒரு காபிக் கடையில் ஒரு நாள் திரு. கிருஷ்ணமூர்த்தி உட்கார்ந்து இருந்தார். தன் விதியை நினைத்து மிகவும் வேதனை அடைந்தார். திடீரென்று யாரோ ஒருவர் வந்து அவர் பக்கத்தில் வந்து அமர்ந்தார். திரு. கிருஷ்ணமூர்த்திக்காக வைத்த காபியை எடுத்து, இன்னொரு டம்ளரில் ஊற்றி அதை ஆற்றினார். தன் அருகில் உட்கார்ந்தவரின் இந்த வினோதமான நடவடிக்கையைக் கண்டு வியந்தார். திரு. கிருஷ்ணமூர்த்தி கொஞ்சம் மன எரிச்சலும் அடைந்தார். அவர் எதுவும் சொல்வதற்குமுன் பக்கத்திலிருந்தவர் அவருடைய உடல் நிலையைப் பற்றி விசாரித்தார். ''உன்னுடைய விரல்கள் மிகுதியாக வலிக்கின்றன இல்லையா? குங்குமத்தை அதன் மேல் தடவு'' என்று கூறி கிருஷ்ணமூர்த்தி யோசித்துப் பதில் சொல்வதற்குமுன் மகான் அங்கிருந்து விரைவாக எழுந்து சென்றுவிட்டார். சென்றபிறகுதான் கிருஷ்ணமூர்த்திக்கு புரிந்தது; வந்தவர் சேஷாத்ரி ஸ்வாமிகள் என்று! ''தேடித்தேடி அலைந்து கடைசியில் ஏமாந்து விட்டோமே!'' என்று மீண்டும் தேடினார். ஆனால் ஒருவித பிரயோஜனமும் இல்லை. பிறகு ஸ்வாமிகளின் அறிவுரை நினைவுக்கு வந்தது. குங்குமத்தை வலிமிகுந்த தன் விரல்களில் தடவினார். ஆச்சரியம்! வலி உடனே நீங்கியது. பத்து வருடங்களாக அவர் பட்ட கஷ்டங்கள் பறந்தோடின. அவர் அவ்வியாதியில் இருந்து விடுதலை அடைந்தார். வேதனை யான நேரங்களிலும், சோதனையான நேரங்களிலும், இக்கட்டான கால கட்டங்களிலும், சிறிய பிரச்சனைகள் ஆனாலும், பெரிய சங்கடம் ஆனாலும், அதைப் பூவைத் தள்ளுவது போல் எளிதாக மகான் தீர்த்து வைப்பார்.

திரு. நடேச அய்யர் என்பவர் சேஷாத்ரி ஸ்வாமிகளின் உறவினர் ஆவார். அவருக்கு ஐந்து வயதில், ஒரு மகன் இருந்தான். அவன் நீண்ட காலமாக ஜுரத்தினால் அவஸ்தைப்பட்டான். ஜுரத்தில் இருந்து, அவன் விடுபட்டவுடன், அவன் பார்வையை இழந்தான். என்ன செய்வது என்று தெரியாமல், அவனுடைய தந்தை அவனைத் திருவண்ணாமலைக்கு அழைத்துச் சென்றார். அச்சிறுவனைச் சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் அழைத்துச் சென்றவுடன், ''அம்பிகை எல்லாவற்றையும் பார்த்துக் கொள்வாள்'' என்று அவர் கூறினார். அவருடைய ஆணைப்படி, ஆதி அண்ணாமலை கோயிலில், அம்பாளின் கர்ப்பக் கிருகத்தில் ஒருநாள் இரவு அச்சிறுவனைப் பூட்டி வைத்தனர். அக்கோவிலின், மேலதிகாரிகளும், எந்தக் கேள்வியும் கேட்காமல் அதற்கு

ஒத்துக்கொண்டனர். காலையில் கர்ப்பக் கிருகத்தைத் திறந்தனர். அச்சிறுவனுக்குப் பார்வை கிடைத்து வெளியில் ஓடி வந்தான். ஸத்குருவும், அம்பாளும் ஒன்று என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும்!

திருவண்ணாமலையில், மகான் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் செய்த தெய்வீக அற்புத லீலைகளைத் தொடருவதற்குமுன் மீண்டும் ஒருமுறை அவரது வாழ்க்கையின் மர்மம் என்ன? என்பதை நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும். இந்த மாய உலகிலே உண்மைக்கும், போலிக்கும் வித்தியாசம் தெரியாமல் உழன்று கொண்டு இருக்கும் நிலையிலே புனிதமான தெய்வீகத் தத்துவங்களின் சாராம்சமாக மகான் வாழ்ந்துகொண்டு இருக்கிறார். ஸ்வாமிகளை, உள்ளன் போடும், நம்பிக்கையோடும் வழிபட்டு, முழுவதுமாக அவரைச் சரணாகதி அடைந்தால், வாழ்க்கையில் துக்கங்கள் மகிழ்ச்சியான நேரங்களாக மாறும். மனிதனின் வாழ்க்கையில் சுமைபோல இருக்கும் சிக்கலான பிரச்சனைகளை அவர் எளிதாகத் தீர்த்து வைப்பார். புனிதமான ஆன்மாக்களின் உள்ளொளியைக் கிளப்பி, ஒரு ஸத்குருவாக இருந்து, புரிந்துகொள்ள வேண்டிய விஷயங்களைப் புரியவைத்து ஞானவழியில் அழைத்துச் செல்வார். தெய்வீகப் பாதை கிடைக்காதா? மனம் தெளிவு அடையாதா? என்று ஏங்கித் தவிக்கும் ஆன்மாக்களுக்கு மகான் சேஷாத்ரி ஸ்வாமிகள் ஒரு அற்புத பொக்கிஷங்கள் நிறைந்த வீடாக இருக்கிறார். அந்த வீட்டைத் திறந்து, அந்தப் பொக்கிஷத்தை அனுபவிக்கலாம். அவருடைய வார்த்தையிலேயே சொல்ல வேண்டும் என்றால் "குருவின் தர்மம், சீடனைக் காப்பாற்றுவது. சீடனின் தர்மம் குருவின் வார்த்தையைப் பின்பற்றி அவரை எப்பொழுதும் மனதில் வைத்து வணங்குவது. எப்படி இராமபிரானின் நல்லாசிகளுடன், ஒரு பெரிய சமுத்திரத்தைத் தாண்டி அனுமான் இலங்கைக்குச் சென்று சீதையைக் கண்டு, இலங்கையைத் தகனம் செய்தாரோ, அப்படி மகானின் நல்லாசிகள் நமது வாழ்க்கைச் சமுத்திரத்தைக் கடந்து, மனிதனுடைய மனதில் இருக்கும் மாயையை எரித்து, அறியாமை என்ற மேக மூட்டங்களை நீக்கிவிடும்.

அத்தியாயம்-9

# அருணை ஒளியின் அற்புதங்கள்!

மகானின் நல்லாசிகளால், பயன் அடைந்த மக்கள் ஏராளம். அவை அனைத்தையும் விவரிக்க வேண்டும் என்றால் இயலாது. அது ஒரு நீண்ட நெடும் பயணமாகும். ஆகையால் வாழ்க்கைப் புயலில் சிக்கித் தவிக்கும் மக்களுக்காக மகானின் மகிமைகளைத் தெரிந்து கொள்ளுவதற்கு ஒரு சில நிகழ்ச்சிகளை மட்டுமே குறிப்பிட்டு உள்ளோம். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணத்தை நடத்திக் கொடுத்து இருக்கிறார். மக்களுக்குத் தீராத நோய்களைத் தீர்த்து வைத்துப் பீதி அடைந்த உள்ளங்களை மாற்றி, அமைதி கொடுத்து உள்ளார். வறுமையினால் கஷ்டப்படுபவர்களுக்குச் செல்வத்தை வாரி வழங்கி இருக்கிறார். எல்லாவற்றிற்கும் மேலாகத் தன்னுடைய பக்தர்களை, ஆன்மீக வழியில் ஈடுபடுவதற்கு உதவி புரிந்து இருக்கிறார். அவருடைய கருணை எல்லையற்றதாகும். இன்னும் அழகாக ஸத்குருவைப் பற்றிச் சொல்லவேண்டும் என்றால் மதியின் ஒளி எப்படி மனதிற்கு இதமாகச் சுகமாக இருக்கிறதோ, அதுபோன்று சீடர்களுக்கு ஞானஒளியைக் கொடுத்துச் சுகம் அளிக்கிறார். விளக்கும் திரியும், உயிரற்றது. ஆனால் அதை பற்ற வைக்கும்பொழுது சக்தி கிடைத்துப் பிரகாசிக்கிறது. அதுபோன்று மகான் உறங்கிக் கிடக்கும் ஆன்மாக்களின் இருளை நீக்கி, உள்ளொளியைக் கிளப்பி ஆன்மீகப் பாதையில் அழைத்துச் செல்கிறார்.

தற்காலிகமாக மூளை சரியில்லாத ஒரு பெண்மணியின் கதையைப்பற்றி இங்கு சொல்லலாம். T.K. சுப்பிரமணியம் என்பவரின், மனைவியின் சகோதரியின் நடவடிக்கை வினோதமாக இருந்தது. முன்னுக்குப் பின் முரணாகப் பேசினாள். மக்கள் எல்லோரும் அவள் உடலில் ஆவி புகுந்து விட்டது' என்ற முடிவுக்கு வந்தனர். நாளுக்கு நாள் உடல்நிலை அவளுக்கு மோசமாகியது. பிணம்போல்

இருந்தாள். அவளுடைய உறவினர்கள், அவளுடைய நிலையைப் பார்த்து மிகுந்த கவலை கொண்டனர். அவள் குணமாவதற்கு உண்டான முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின. அவளை சேஷாத்ரி ஸ்வாமிகள் ஒருவரால்தான் காப்பாற்ற முடியும், என்று எண்ணித் திருவண்ணாமலைக்குக் கொண்டு சென்றனர். அந்த மகான், சிறிது மஞ்சள் பொடி கேட்டார். அதை ஸ்வாமிகள், தன் மார்பில் கொஞ்ச நேரம் வைத்திருந்து விட்டு, நோயாளியின்மேல் தடவுமாறு கூறினார். அவர் ஆணைப்படி, அவர்களும் செய்தனர். அரைமணி நேரத்தில், அப்பெண்மணி எழுந்து உட்கார்ந்தாள். ஒரு சில நாட்களிலே, அவள் பூரண குணமடைந்தாள். அவர்களது **நெஞ்சிலே இருந்த துக்கத்தையும், வேதனையையும் தனது நெஞ்சிலே வாங்கிக்கொண்டு தனது இதயத்தில் இருந்து ஜீவசக்தியை அவளது இதயத்திற்கு மாற்றி உயிர் கொடுக்க மகானால் மட்டுமே முடியும். அவர் நினைத்தால் கற்சிலையும் கவிபாடும்!**

இன்னொரு சுவாரசியமான நிகழ்ச்சியைப் பார்க்கலாம். தாலுகா அலுவலகத்தின் தலைவர் திரு. வெங்கட்சுப்பையாவின் வீட்டிற்கு சேஷாத்ரி ஸ்வாமிகள் அடிக்கடி விஜயம் செய்வது வழக்கம். அவருடைய மைத்துனருக்கு ஸ்வாமிகளிடம் அறவே நம்பிக்கை கிடையாது. ஆனால், அவர் வீட்டில் உள்ள மற்ற அனைவருக்கும் சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் பற்று உண்டு. துரதிஷ்ட வசமாக ஒருநாள், இவரைத் தேள் கொட்டிவிட்டது. வலியினால் மிகவும் துடித்து, இங்குமங்கும் குதித்துக்கொண்டு இருந்தார். சேஷாத்ரி ஸ்வாமிகள் அங்கு நடந்தவை அத்தனையையும் மௌனமாகப் பார்த்துக் கொண்டு இருந்தார். "நீங்கள் உண்மை யாகவே சக்தி படைத்தவர் என்றால், என்னுடைய இந்த வலியை உடனடியாகப் போக்குங்கள்" என்று கத்தினார். இல்லாவிடில், உங்களை அறையில் வைத்துப் பூட்டி விடுவேன்" என்றும் கூறினார். மகான், சிரித்துக்கொண்டே, சிறிது மணலை எடுத்து, "தேள் கொட்டிய இடத்தில் போடு", என்று கூறினார். அவர் கூறியபடியே செய்தும் அவருக்கு வலி குறையவில்லை! ஏதேனும் மந்திரத்தை ஜபியுங்கள்" என்று தேள் கொட்டியவர் வலியால் கத்தினார். அதற்கு ஸ்வாமிகள், "சேஷாத்ரி" என்று சொல்லிக் கொண்டே மணலைப் போடு! என்று சொல்லி எழுந்து சென்று விட்டார். வேறு வழியில்லாமல் அந்த நம்பிக்கை இல்லாதவர். ஸ்வாமிகள் கூறியபடியே செய்தார்! அதற்கு உடனே பலன்

கிடைத்தது. அவ்வலி உடனே குறைந்தது. அந்த நம்பிக்கை இல்லாத மனிதன் ஸ்வாமிகளின் தீவிர பக்தனாகி விட்டார். அவர் எங்கு சென்றாலும் பின்தொடர்ந்தார். அன்றைய தினத்திலிருந்து, அவரைவிட, மகானின் தீவிர சீடனைப் பார்க்க முடியாது. முழு நம்பிக்கை வைக்கும் ஆன்மாக்களுக்கு, நமது மகான் நம்பிக்கை நட்சத்திரமாக விளங்குவார்.

மேலே கூறிய நிகழ்ச்சிகளிலிருந்து, எது நமக்குப் பகீரதப் பிரயத்தனமாகத் தோன்றுகிறதோ, அருணை ஒளியின் துணையோடு, ஞானவெளியில் இருக்கும் நமது ஸ்வாமி அதை சர்வசாதாரண மாகச் செய்துவிடுவார். இயல்பு வாழ்க்கைக்கு அப்பாற்பட்ட, இறை உணர்வு நிலையில் இருந்துகொண்டு, நமது துன்பங்களைத் துடைத்து, காத்து, இரட்சிக்கிறார். அவரது திருவடித் தாமரைகளில் நம் எல்லோருக்கும் இடம் உண்டு. குருவின் திருவருள் கிடைக்காமல், சிலநேரங்களில் நமது பாவ கர்மாக்கள் தடுப்பது உண்டு. பாவ மூட்டைகளைச் சேர்த்து வைத்துக்கொண்டு இருக்கும் ஆன்மாக் களுக்கு குரு அருள் செய்யவேண்டும் என்று என்ன முயற்சி செய்தாலும், அது அவர்களுக்குக் கிடைப்பது இல்லை. உள்ளத்தில் உண்மை வைத்து, தெளிவான தூய சிந்தனைகளை, மீண்டும், மீண்டும், நினைவூட்டிக்கொண்டு, ஜீவசக்தியான நமது மகானை இதயத்தில் நிறுத்தி வைத்தால், எதையும் சாதிக்கலாம்.

தாயம்மாள் என்பவர் சேஷாத்ரி ஸ்வாமிகளின், பக்தை ஆவர். அந்த அம்மாள், ஒரு ஷஷ்டி தினத்தன்று முருகருக்குப் பாலும், பழமும், கோயிலுக்கு எடுத்துக்கொண்டு சென்று கொண்டு இருந்தாள். அவள் கோயிலுக்குள் நுழையும் பொழுது சேஷாத்ரி ஸ்வாமிகள், அவளிடம் இருந்து பாலையும், பழத்தையும், எடுத்துக் கொண்டார். "நானே முருகன், எனக்கே கொடுத்து விடு!" என்று கூறினார். பழத்தைப் பலருக்குப் பகிர்ந்து கொடுத்துவிட்டு, பாலையும் பாதி குடித்துவிட்டு, அந்தப் பாத்திரத்தை வாயடைத்து நிற்கும் அந்த அம்மாளிடம் கொடுத்தார். தாயம்மாளுக்கு மிகவும் கோபம் வந்து விட்டது. முருகனுக்கு வைத்து இருக்கும் பாலையும், பழத்தையும் ஸ்வாமிகள், இவ்வாறாகச் செய்ததற்காக மனதில் திட்டிக்கொண்டே வீடு போய்ச் சேர்ந்தாள். சுத்தத்தைப்பற்றி சிறிதும் மதிக்காமல், அதைப்பற்றிய சிந்தனை எதுவும் இல்லாமல் இருக்கும் அத்துறவி, அவள் பாத்திரத்தைத் தொட்டு, பாலைக் குடித்ததற்காக மேலும் கலக்கமுற்றாள். மிகவும் கோபத்துடன் வீடு போய்ச்சேர்ந்து, அந்தப்

பாத்திரங்களை நன்றாகக் கழுவினாள். அடுத்தநாள் அவள் கோயிலுக்குப் போகும் பொழுது, சேஷாத்ரி ஸ்வாமிகளைக் கடக்கும் பொழுது அவரைப் பார்த்தாள். ஸ்வாமிகள், மிகுந்த கோபத்துடன், அவளைப் பார்த்து, ''பாத்திரத்தைக் கழுவி வைத்தாயோ? அவ்வளவு சுத்தமா நீ? இங்கிருந்து போ போ!'', என்று கூறி அங்கிருந்து விரட்டினார். ''தனக்கு மட்டும் தெரிந்த ஒன்றை ஸ்வாமிகள், எவ்வாறு அறிந்து தெரிந்து கொண்டார்?'' என்று மிகவும் ஆச்சரியப் பட்டாள். கடவுளே வந்து தான் கொடுத்த பாலையும், பழத்தையும் ஏற்றுக் கொண்டார் என்பதையும், அதை உணராமல், அதற்கு நன்றி உடையவளாக இல்லாமல், இப்படிச் செய்துவிட்டோமே என்று அப்பொழுதுதான் அவளுக்கு உரைத்தது. அடுத்த ஆறு மாதங்கள் சேஷாத்ரி ஸ்வாமிகள் வந்து அவரை அணுகும்போது எல்லாம் அவளை விரட்டினார். தான் செய்த தவற்றிக்காக மிகவும் வருத்தப் பட்ட தாயம்மாள், அதற்காகப் பரிகாரம் தேடுவதற்காகத் தன்னைத் தானே அடித்துக் கொண்டாள். ஸ்வாமிகளின் கருணையைப் பெறுவதற்காக இறைஞ்சி நின்றாள். அதற்குப் பிறகுதான் ஸ்வாமிகள் அவளை மன்னித்தார். **விநாயகரோ, முருகனோ, சிவனோ, பார்வதியோ, விஷ்ணுவோ, மகாலக்ஷ்மியோ, பிரம்மனோ சரஸ்வதியோ, இந்திரனோ, இந்திராணியோ, கிருஷ்ணனோ, இராதையோ, அனைத்துத் தேவதைகளும், பராசக்தியின் அம்சமாகத் திகழும் நமது ஸ்வாமிகளின் ரூபமாக வெளிப்படுவார்கள் என்பது திண்ணம்.**

நாற்பது வருடங்களில், சேஷாத்ரி ஸ்வாமிகள் ஒரே ஒரு தடவைதான், திருவண்ணாமலையை விட்டு, சீலைப் பந்தல் என்னும் ஊரில் சிறிதுகாலம் தங்கிவிட்டு வந்தார். T.S. ஜகதீஷ் அய்யர், என்பவரின் வீட்டில், கொஞ்சம் பணமும், தங்கமும் தொலைந்து விட்டன. எல்லாவித முயற்சிகள் செய்தும் தொலைந்த பொருள்கள் கிடைக்கவில்லை. திரு. ஜகதீஷ் அய்யர், திருவண்ணாமலையை நோக்கிச் சென்றார். அவர் அந்த ஊரின் எல்லையை அடைந்தவுடன், சேஷாத்ரி ஸ்வாமிகள், தன்னை நோக்கி வருவதைக் கண்டார். அவர் வண்டியிலிருந்து இறங்கி, தன்னுடைய குறையை ஸ்வாமிகளிடம் சொன்னார். ஸ்வாமிகள், அதற்கு, ''நான் அதற்காகத்தான் அங்கு கிளம்பிவருகிறேன்'' என்றுகூறி அய்யருடன் வண்டியில் ஏறி ''சீலைப்பந்தலை'' நோக்கிச் சென்றனர். ஸ்வாமிகள் அய்யரின் வீட்டை அடைந்தவுடனே, ''திருடன் இந்த வீட்டில்தான் இருக்கிறான்'' என்று கூறிவிட்டு உடனே சென்றுவிட்டார். அதனுடைய அர்த்தம் கூடிய

சீக்கிரம் அவர்களுக்குப் புரிந்தது. அக்குடும்பத்தின் சாஸ்திரியான தீக்ஷிதர்தான் அப்பொருள்களை எடுத்து, அக்கிராமத்தின் கோவிலில் உள்ள சிலையின் பின்னால் மறைத்து இருந்தார். கோவிலின் உள்ளே, அம்மனிதனின் சந்தேக நடவடிக்கையைக் கவனித்த அக்கிராமத்து மக்கள் ஜகதீஷ் அய்யரிடம் வந்து புகார் கூறினார். தகுந்த விசாரணைக்குப் பிறகு திருடனைக் கண்டுபிடித்தனர். சேஷாத்ரி ஸ்வாமிகளின் கூற்றின்படி, அந்த வீட்டில் கண்டிப்பாகத் திருடன் இருந்தான். ஸ்வாமிகளின் அனுக்கிரகத்திற்கும், வழி காட்டுதலுக்கும், அய்யர் குடும்பத்தினர், ஸ்வாமிகளிடம் நன்றி உணர்ச்சியுடன் இருந்தனர். **ஒரே சூரியன், தனது ஒளிக் கிரணங்களை, எப்படி உலகம் முழுவதும் பரப்புகிறாரோ அதுபோன்று நமது ஸ்வாமிகள், அருள்ஒளியைப் பரப்புவதால், பொய் நசுக்கப் படுகிறது. உண்மை வெளிப்படுகிறது.**

சேஷாத்ரி ஸ்வாமிகள், ஒருவனுடைய வாழ்க்கையில், எதிர் கால நிகழ்ச்சிகளை முன்னமேயே கூறும் ஆற்றல் நிறைந்தவர். புதுப்பாளையத்தில் இருக்கும். திரு. அப்பாவுச் செட்டியார், அருணாசலேஸ்வரருக்கு ஒரு தேர் ஒன்றைக் கட்டினார். அதைப் பார்த்த ஸ்வாமிகள். 'அத்தேரில் மகாலக்ஷ்மியின் சாபம் இருக்கிறது' என்று கூறினார். மூன்று வருடங்களுக்குப் பிறகு, பெரும் புயல் ஒன்று வந்தது. அந்தநேரத்தில், மின்னல் ஒன்று தாக்கி அத்தேர் முழுவதுமாக எரிந்து சாம்பலாகி விட்டது. ஸ்வாமிகளின் கூற்று உண்மையாகி விட்டது. **உருவத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடி போல், அருள் ஆற்றல் பெற்ற நமது மகானுக்கு, எதிர்கால நிகழ்ச்சிகள் பிரத்யட்சமாகத் தெரிகிறது. மகான் எச்சரிக்கை செய்யும்பொழுது, அலட்சியம் செய்யாமல், பரிகாரம் தேடிக் கொண்டால், வாழ்க்கையில் விபத்துகளைத் தவிர்க்கலாம்.**

சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு, தூக்கத்தைக் கண்டாலே ஒருவித வெறுப்பு உண்டாகும். மற்றவர்களும் தூக்கத்திற்கு முக்கியத்துவம் கொடுத்தால், அவர்களைத் திட்டுவார். அவர் ஒருநாள் மதியம், கம்பத்து இளையநாயனார் சன்னதியில், மாணிக்க ஸ்வாமியுடன் உட்கார்ந்திருந்தார். மாணிக்க ஸ்வாமிக்கு மிகுந்த தூக்கம் வந்தது. சேஷாத்ரி ஸ்வாமிகள் அவரைத் ''தூங்காதே'' என்று தடுத்துக் கொண்டு இருந்தார். ஸ்வாமிகள் எவ்வளவு சொல்லியும் தூக்கத்தை அடக்க முடியாமல், நன்றாகத் தூங்கி விட்டார் அவர். அவருக்குப் பயங்கரமான கனவு ஒன்று வந்தது. யமதூதர் அவரை இருள்

உலகத்திற்குக் கொண்டு செல்வதாகக் கனவு கண்டார். அத்தூதர்கள் அவரைக் கொண்டுசென்ற இடம் மிகவும் பயங்கரமாக இருந்தது. எவ்வளவு கெஞ்சியும் அவர்கள் அவரை விடவில்லை. மாணிக்க ஸ்வாமி மிகவும் பயந்துவிட்டார். அவர் தன்னை விடுவித்துக் கொள்ள முயலும்போது, அவரைக் காப்பாற்ற, திடீரென்று சேஷாத்ரி ஸ்வாமிகள் அங்கு வந்துவிட்டார். தான் கண்ட கனவை நினைத்து மிகவும் பயந்துபோய் மாணிக்க ஸ்வாமிகள், திடுக்கென்று விழித்துப் பார்த்தார். ஸ்வாமிகள் அவரையே பார்த்துக்கொண்டு இருப்பதைப் பார்த்தார். ஸ்வாமிகளின் எச்சரிக்கையையும் மீறித் தான் தூங்கியதை நினைத்து, தன் முட்டாள் தனத்தை எண்ணி மிகவும் வெட்கப்பட்டார். சேஷாத்ரி ஸ்வாமிகள் அவருடைய தலையில் விபூதியைப் போட்டு விட்டு, இனிமேலிருந்து, தூங்குவதற்குமுன் ஒவ்வொரு நாளும் தவறாமல் அதனை இட்டுக்கொண்டு தூங்குமாறு அறிவுரை கூறினார். அதற்குப் பிறகு அவருக்குக் கெட்ட கனவோ, சாவைப் பற்றிய கனவோ வரவில்லை. **கனவுகளைக் கொடுப்பதும், அதைக் கலைப்பதும், உணர்வுகளைத் தூண்டி, உண்மையைப் புரிய வைப்பதற்காக; காரணம் இல்லாமல், காரியம் இல்லை!**

குப்புசாமி குருக்கள் என்பவர், அருணாசலேஸ்வரர் கோவிலில் குருக்களாக இருந்தார். அவருடைய மனைவி மீனாம்பாள், காச நோயால் பாதிக்கப்பட்டு, தன் வாழ்க்கையின் இறுதிக்கட்டத்தில் இருந்தார். ஒருநாள் மதிய வேளையில், குருக்கள் தன் பூஜையை செய்யக் கோவிலுக்குச் சென்று இருந்தார். அவருடைய மனைவி, அந்தச்சமயத்தில், வீட்டில் அவளுடைய அறையில், தனது தாயின் (சுவர்ணாம்பாள்) பின் சாய்ந்து உட்கார்ந்து இருந்தாள். அவளுடைய அம்மாவும், கண்பார்வை இழந்தவள். மீனாம்பாளின் உடலில் இருந்து உயிர் பிரிந்தது. இதை எதையும் அறியாமல் சுவர்ணாம்பாள், தன் மகளை தன்மேல் சாயவைத்துக்கொண்டு இருந்தாள். அவளுடைய மருமகன் கோவிலில் இருந்தார். மாலை நான்கு மணி இருக்கும். சேஷாத்ரி ஸ்வாமிகள், அந்தச்சமயத்தில் வல்லாள மஹாராஜா மண்டபத்தில் இருந்தார். "மீனா இறந்து விட்டாள்!" என்று நான்கு, ஐந்து முறை, திரும்பத் திரும்பக் கூறினார். மக்கள் எல்லோரும் குருக்களின் வீட்டில் சென்று பார்க்கலாமே, என்று அவர் வீட்டை நோக்கிச் சென்றனர். அங்கு மீனாம்பாளின், உயிரற்ற உடலைப் பார்த்தனர். சேஷாத்ரி ஸ்வாமிகளின் கூற்றின்படி அவள் இறந்திருந்தாள். குருக்களுக்குச் செய்தி அனுப்பி, பிறகு ஈமச்

சடங்குகள் நடந்தன. பார்வை இழந்தால் என்ன? மகானின் கடைக்கண் பார்வை இருந்தால் போதும்!

இதேபோல் இன்னொரு நிகழ்ச்சியும் நடந்தது. விட்டோபா ஸ்வாமி ஒரு சந்யாசி ஆவார். அவர் போளூர் என்னும் ஊரில் வாழ்ந்தார். ஸ்வாமிகளுக்கு விட்டோபாவின்மேல் தீவிரமான பக்தியும், அன்பும் உண்டு மனித குலத்தின்மேல், விட்டோபாவிற்கு இருக்கும் அன்பைக் கண்டு நம் ஸ்வாமிகளுக்கு அவரை மிகவும் பிடிக்கும். ஒருநாள் காலை ஆறு மணிக்குச் சேஷாத்ரி ஸ்வாமிகள், வானத்தைச் சுட்டிக் காண்பித்து, "அதோ விட்டோபா போகிறார்" என்று கூறினார். அவரைச்சுற்றி இருந்தவர்களுக்கு அவர் சொன்னதன் பொருள் அப்பொழுது புரியவில்லை என்றாலும், பதினொரு மணிக்குத் தபால் தந்தி மூலம் அந்தச் செய்தி கிடைத்தது. அதில் விட்டோபா ஸ்வாமி, அன்று காலை ஆறுமணிக்கு இறந்து விட்டார் என்ற வாசகம் அந்தத் தந்தியில் இருந்தது. எங்கிருந்தோ இந்த உலகத்தின் ஒரு பகுதியிலிருந்து, ஒளிபரப்பும் நிகழ்ச்சியைத் தொலைக்காட்சிப் பெட்டியில், நாம் காண்பது போல, சகல ஜீவராசிகளுக்கும் தலைவனான சிவன், நமது ஸ்வாமியின் உருவமாக இருப்பதால், எதையும் தொலைநோக்குப் பார்வையில் அவரால் பார்க்க இயலும்!

---

1. குருபக்தி மிகவும் முக்கியம்.
2. குருவே துணை என்று எப்போதும் நினை.
3. உன் கடமையை செய்; குருவின் அருள் தானே கிடைக்கும்.

---

அத்தியாயம் - 10

# தொடரும் அற்புதங்கள்

ஒருசமயம் இரமண மகிரிஷியை சித்து விளையாட்டைப் பற்றிக் கேட்டபொழுது, "கடும் பாடுபட்டு அடைந்த தெய்வீக சக்தியை அது குறைக்கும்" என்று கூறினார். மேலும், கருணை அவதாரமான சேஷாத்ரி ஸ்வாமிகள் போன்ற மகான்கள், கேட்காமலேயே வரம் கொடுப்பது, கருணைக்கடலாக அவர்கள் இருப்பதை உணர்த்துகிறது என்றும் கூறினார். இறைஉணர்வை உணர்ந்த ஆன்மாக்கள், ஞான ஒளி கிளம்பியதன் காரணமாக, மற்றவர்களால் சாதிக்க முடியாதது போல தோன்றும் செயல்களை, செய்து காட்டும் சக்தியை அடைகிறார்கள். இதற்குப் பெயர் தான் ஸித்தி. சாதாரண மனிதனால் செய்யமுடியாத செயல்களை, கடும் தவம் புரிந்து உழைத்து, கடவுளின் ஆசியைப் பெறுவதால் முழு நிறைவு கிடைக்கிறது. இதற்குப் பெயர் தான் ஸித்தி. கடவுளை உணர்ந்த மகான்கள், அபரிமிதமான சக்தியை, தங்களது கட்டுப் பாட்டில் வைத்துக்கொள்வதால் மற்றவர்களுக்குக் கடினமாகத் தோன்றும் செயல்களை, சர்வ சாதாரணமாகச் செய்து விடுகிறார்கள். சேஷாத்ரி ஸ்வாமிகள் போன்ற சித்தருக்கு, அதுவும் சக்தியோடு ஒன்றியவர்க்கு, எதுவும் கடினம் இல்லை. விக்கிரகங்களை வரவழைப்பதும், விபூதியை வரவழைப்பதும், ஒருவகையான ஸித்தி தான். அது ஒரு மனிதனின் வாழ்க்கையில், கண்கட்டு வித்தையே தவிர, ஆன்மாவிற்கு நிரந்தர மன அமைதியைத் தராது. ஆனால், சேஷாத்ரி ஸ்வாமிகள், அவரது அற்புத சக்தியால், அந்த ஆன்மாவினுள் தான் வாழ்வதை உணர வைப்பார். ஒரு மனிதனின் இதயத்தின், அடித்தளத்தைப் பிடித்து, அவனது நாடி நரம்புகளில் எல்லாம், இறைசக்தியைக் கூட்டி, இறைவழியே வாழ்க்கை என்பதை உணர வைப்பார். இந்த அத்தியாயத்தின் முதல்

பகுதியில், தெளிவான ஸத்குருவின் அற்புத சக்திகளைப்பற்றித் தெரிந்துகொண்டாலும், பிற்பகுதியில், மனித ஆன்மாவை விழிப்பூட்டும் அவரது தீவிர சக்தியைப் புரிந்துகொள்ளலாம்.

நெருப்புக் கோளம் போல மலை இருப்பதால், திருவண்ணா மலையில், உஷ்ணம் அதிகமாக இருக்கும். கோடைகாலத்தில் மிகவும் உஷ்ணமாக இருப்பதுடன், தண்ணீர் இக்கோடைகாலத்தில், கிடைப்பதே மிகவும் அரிதாகும். தாங்கமுடியாமல், உஷ்ணம் அதிகமாகும்போது, மக்கள் சேஷாத்ரி ஸ்வாமிகளை, உஷ்ணத்தைத் தவிர்க்குமாறு இறைஞ்சுவர். அப்பொழுது, அந்த மகான் வானத்தை நோக்கிப் பார்த்தவுடன், சில நிமிடங்களிலே மழைபெய்து தண்ணீர் பெருகும். இது பொதுவாக நடக்கும் ஒரு நிகழ்ச்சியாகும். திரு. அர்த்தநாரி அய்யர் என்பவர். மிகுந்த உஷ்ணத்தைப்பற்றிப் பிரஸ்தாபித்தார். அப்பொழுது அந்த மகான், அதற்கு, "உன்னுடைய துணிகள் எல்லாம் ஈரமாகப் போகிறது, நீ வேறு உடைதான் மாற்ற வேண்டும்" என்று கூறினார். சிறிதுநேரத்தில் அவர் சொன்னதன் பொருள் விளங்கியது. தெளிவாக, இருண்ட மேகங்களே இல்லாமல், நிர்மலமான வானத்திலிருந்து கனமழை பெய்தது. இது மூன்று மணி நேரம் விடாமல் பெய்தது. திரு. அர்த்தநாரி அய்யரின் துணி எல்லாம் முழுவதுமாக நனைந்து விட்டது. ஸ்வாமிகள் ஒரு பக்தர் வீட்டின் வராந்தாவில் அமர்ந்து மழையை இரசித்துக்கொண்டு இருந்தார். இந்த அற்புதம், அவருக்குச் சிறு குழந்தை விளையாடுவது போன்றது. மனப் புழுக்கம் ஆனாலும், உடல் உஷ்ணமானாலும் மகானிடம் முறைப்படி முறையிட்டால் சரத்காலச் சந்திரனில் ஒளிபோல், குளிரச் செய்து விடுவார்.

திரு. T.K. சுந்தரலோக அய்யர், திரு. இராமராவ், திரு. வெங்கட் ராம அய்யர் ஆகிய மூவரும் வெவ்வேறு இடத்தில், ஒரே நேரத்தில் பூஜித்து வந்தனர். "எங்கெல்லாம் என்னை வழிபடுகிறார்களோ, அங்கு எல்லாம் நான் இருப்பேன்", என்று அந்தப் புனிதமான மகான் கூறினார். அது உண்மை என்று நிரூபிக்கப் பட்டது. 'ஆயிரம் நட்சத்திரங்கள் சேர்ந்தாலும், ஒரு சந்திரனுக்கு ஈடாக முடியாது.' நமது மகானின் இயக்கம் தனிச் சிறப்பு வாய்ந்தது.

சேஷாத்ரி ஸ்வாமிகளின் பக்தையான சுப்புலக்ஷ்மி அம்மாளுக்கு வீட்டின் மதில் சுவரில் இரண்டு மரங்கள் சொந்தமாக இருந்தன. ஒரு நாள் சுப்புலக்ஷ்மி அம்மாவிடம் ஸ்வாமிகள் ஒரு மரத்தில் இரண்டு

பறவைகள் உட்கார்ந்து இருப்பதைச் சுட்டிக் காட்டினார். சிறிது நேரத்திற்கெல்லாம் அந்த மரம் பூராவும் பறவைகள் உட்கார்ந்து விட்டன. சிறிய பறவைகளும் பலவித வண்ணத்தில் பலவித அளவுகளில் அந்தத் தோட்டத்தில் வந்துவிட்டன. சேஷாத்ரி ஸ்வாமிகள், அந்தப் பறவைகளின் நடுவில் நின்றுகொண்டு, அவற்றுடன் பேசிக் கொண்டும் இருந்தார். அன்பார்ந்த அந்த மகானும், அவருடன் கூட இருந்த அந்தப் பறவைகளும், பார்ப்பதற்கே அழகாகவும், இரம்மியமான காட்சியாகவும் இருந்தன. சுப்புலஷ்மி அம்மாள் ஸ்வாமிகளைப் பார்த்து, ''இன்னும் எத்தனை நேரத்திற்குப் பறவைகள் அவருடன் இருக்கும்?'' என்று கேட்டாள் அப்பறவைகள் வீட்டிற்குச் செல்ல வேண்டாமா? என்றும், அப்பறவைகளின் குடும்பத்தினர் காத்துக் கொண்டிருக்க மாட்டார்களா? என்றும் வினவினாள். ''சீக்கிரம் அப்பறவைகளை வீட்டிற்கு அனுப்புகிறேன்'' என்று கூறினார் ஸ்வாமிகள். தான் உடுத்தி இருக்கும் உடையில் இருந்து, ஒரு நூலை எடுத்து வானத்தைப் பார்த்து ஊதினார். ஒவ்வொரு பறவையாகப் பறந்து சென்றன. எஞ்சி நின்றவை அந்த மரங்கள்தான்! சர்வ வல்லமை படைத்த அந்த மகான் கூப்பிடும் குரலுக்கு, சகல ஜீவராசிகளும், ஓடோடி வந்து உதவும். ஜீவனே சிவன். சிவனே ஜீவன்!

சேஷாத்ரி ஸ்வாமிகள், தன் பக்தர்களின் வாழ்க்கையில் அன்றாடம் நடக்கும் சிக்கலான பிரச்சினைகளைத் தீர்த்து வைத்தாலும், அவர் பக்தர்களை ஆன்மிக வழியில் நடத்துவதற்கே ஆசைப் படுவார். ஒரு குருவிற்கு, ஒரு நல்ல சிஷ்யன் அமைவது தான் அவருக்கு உயர்ந்த பரிசாகும். சேஷாத்ரி ஸ்வாமிகளின் செயல்படி, மகான்கள், சீடன் நினைத்த மாத்திரத்திலேயே அவனுக்கு வந்து அருள் புரிவார்கள் என்று குறிப்பிட்டுள்ளார். இதுபோன்று, அவர் நடத்திய அற்புத, ஒளி பொருந்திய பல நிகழ்ச்சிகள், மனித ஆன்மாவிற்கு, இதமான, சுகமான, காட்சிகளைக் கொடுத்து, ஒரு புனித உலகத்தை அறிமுகம் செய்து வைத்துள்ளது. 'கரும்பு தின்னக் கூலியா' என்பதுபோல் சுவைக்குச் சுவை சேர்ப்பது போன்று அவர் செய்த அரும்பெரும் அற்புதங்கள் ஏராளம்.

ஒருநாள், திரு. வெங்கடாசல முதலியார் என்பவர், சென்னை சென்று இருந்தார். அவர் வெளியூர் சென்ற சமயம், மகான் தனது குடும்பத்தைக் கவனித்துக் கொள்வார், என்று எண்ணிச் சென்றார். அன்று மாலையே ஸ்வாமிகள், முதலியாரின் மனைவி சுப்புலக்ஷ்மி

யிடம், அடுத்த வீட்டில் திருட்டு போகப்போகிறது என்றும். ஆனால் அவள் கவலைப்பட வேண்டாம், ஆபத்து இல்லை என்றும் கூறினார். ஸ்வாமிகள் சொன்னபடியே அன்று இரவே அடுத்த வீட்டில் அச்சம்பவம் நடந்தது. சேஷாத்ரி ஸ்வாமிகள், முதலியாரின் வீட்டிற்குச் சென்று அக்குடும்பத்தினருக்கு ஆறுதல் கூறினார். பிறகு முதலியாரின் மனைவி சுப்புலக்ஷ்மி அம்மாளைச் சிரசில் தொட்டு, ஸ்பரிச தீட்சை அளித்தார். அந்த நேரத்திலே சுப்புலக்ஷ்மி அம்மாள், தரிசனம் கிடைத்து, இதுவரையில் தனது வாழ்க்கையில் கண்டிராத காட்சியைக் கண்டார். பிறவிப்பயன் அடைந்தார். ஒரு வித்தியாசமான உலகத்தில் அவளை விட்டுவிட்டு, சேஷாத்ரி ஸ்வாமிகள் அங்கிருந்து புறப்பட்டு விட்டார். மறுநாள் காலை இயல்புநிலைக்கு மெதுவாக சுப்புலக்ஷ்மி அம்மாள் வரும் பொழுது, இரண்டு கண்களிலும் பார்வை இழந்தது புரிந்தது. தட்டுத் தடுமாறி வேலைகள் செய்ய முயன்றபோது, சேஷாத்ரி ஸ்வாமிகள் வீட்டினுள் நுழைந்தார். நீண்டநாள் சிஷ்யையான சுப்புலக்ஷ்மி அம்மாள், அவரிடம் விழுந்து அழுது, "எதற்காக இந்தச் சோதனை? வேதனையை தீர்க்கக் கூடாதா?" என்று வேண்டினாள். சேஷாத்ரி ஸ்வாமிகள் தனது அங்கவஸ்திரத்தால், அவளது இரு கண்களையும், துடைத்து விட்டார். இழந்த பார்வையை மீண்டும் பெற்றாள். அவளது நெஞ்சம் ஆனந்த வெள்ளத்தில் திளைத்தது. அக இருளை நீக்கி, அற்புத ஒளியைப் பெருக்கி, திருவருளைக் காட்டி, மீண்டும் லௌகீக வாழ்க்கைக்கு அழைத்து வந்துள்ளார். மகான் ஆசை, பாசம் நிறைந்த லௌகீக வாழ்க்கையிலேயே இருந்து உழன்று விட்டோம் என்று சொன்னால், இருள் உலகம் தான் கிட்டும் என்பதை உணர்த்துவதற்காக, புறப்பார்வையைக் குறைத்து, அகப் பார்வையைக் கூட்டினார். குருவருள் ஒருவருக்குக் கிடைத்துவிட்டது என்றால், திருவருள் கிடைத்துவிடும் என்பதை உணர்த்துவதற்காக, மீண்டும் புறப்பார்வையைக் கொடுத்தார்.

திரு. சுந்தரேஸ்வரர் என்பவர், சேஷாத்ரி ஸ்வாமிகளின் எச்சரிக்கையைக் காது கொடுத்துக் கேளாததால் அதன் பலனை அவர் அனுபவித்தார். அவர் மனைவியின் துக்கமான முடிவைப் பற்றிய நிகழ்ச்சிதான் அது. அப்பெண்மணி அடிக்கடி, ஸ்வாமி களைத் தரிசிப்பது வழக்கம் ஆகும். மூன்று மாதகாலமாகவே, ஒவ்வொரு தடவையும் அவள் ஸ்வாமிகளைத் தரிசிக்கச் செல்லும் போது எல்லாம் அவர் அப்பெண்மணியைப் பார்த்து, "யமபட்டினம் பார்க்க ஆசையா?" என்று கேட்பார். அப்பெண்மணி குழப்பமாகி,

நடு நடுங்கிப் போவாள். சேஷாத்ரி ஸ்வாமிகள் மீண்டும், மீண்டும் கேட்கும் பொழுது, "காண்பியுங்களேன்!" என்றாள். அந்த மகான் தன் வாயைத் திறந்து அவளைப் பார்க்கச் சொன்னார். அந்தக் காட்சி மிகவும் பயங்கரமாக, கொடூரமாக இருந்தது. அது நரக லோகமல்லவா? சுந்தரேஸ்வரரின் மனைவி, அவள் பார்த்த காட்சியைக் கண்டு அரண்டு விட்டாள். ஸ்வாமிகள் அவளுக்கு ஏன் அந்தக் காட்சியைக் காண்பிக்க வேண்டும்? என்று அவள் யோசித்துக் கொண்டே இருந்தாள். சிறிதுநாள் கழித்து, கல்யாணத்திற்காக, அவள் சென்னை செல்ல இருந்தாள். சேஷாத்ரி ஸ்வாமிகள், அவள் போவதை அறிந்து அவளைத் தடுத்தார். அவள் குடும்பத்தினருடன் செல்லக் கூடாது என்று கண்டிப்பாகக் கூறினார். அவள் போக வேண்டாம் என்று எண்ணியிருந்தாலும், கடைசி நிமிடத்தில் நிர்ப்பந்தமாக அவள் போக வேண்டிய சூழ்நிலை வந்தது. கடைசி நேரத்தில், உறவினர்களின் மனக்கசப்பு இல்லாமல் இருப்பதற்காகப் புறப்பட்டுச் சென்றாள். போனவுடனே, "காலரா" நோயினால் பாதிக்கப்பட்டு இறந்து விட்டாள். சேஷாத்ரி ஸ்வாமிகள், அவள் பக்தைக்கு நிகழ இருக்கும் அழிவு பற்றி எச்சரித்தும், அவள் புறக்கணித்தாள். திருமதி. சுந்தரேஸ்வரர், குருவின் அறிவுரைகளைக் கேட்காததால், தன்னுடைய உயிரையே விலையாகக் கொடுத்து விட்டாள். காக்கும் கரங்களாக மகான் ஸத்குரு இருக்கிறார். சரியாகப் பயன்படுத்திக் கொண்டால் பலன் அடையலாம்.

சேஷாத்ரி ஸ்வாமிகள், குருவின்மேல் கண்மூடித்தனமான பக்தி வைத்து, அவருடைய உத்தரவுகளை அப்படியே நிறைவேற்றுவது தான் சாலச்சிறந்தது என்று அடிக்கடி கூறுவார். அறிவுரைகள் கூறும் பொழுது, சீடனுக்கு அந்தநேரத்தில் தெளிவாகப் புரியாது. ஏனென்றால் சாமானியமான மனிதனால், அவனது வாழ்க்கையின் எதிர்காலத்தை அறிந்துகொள்ள இயலாது. ஏன்? எதற்கு? என்று கேள்வி கேட்காமல் மகானிடம் முழுவதுமாகச் சரணாகதி அடைவது, என்றும் அமைதியான முடிவில்லாத மகிழ்ச்சியை நம் வாழ்க்கையில் அளித்துக்கொண்டே இருக்கும்.

திரு. முருகேச முதலியார் என்பவர், மிகுந்த சமயப்பற்று உடையவர். அவருக்கு நீண்டநாளாக, சேஷாத்ரி ஸ்வாமிகளைப் போய் தரிசிக்க வேண்டும் என்னும் அவா இருந்தது. அதனால் அவர் குடும்பத்தினருடன், திருவண்ணாமலைக்குச் சென்றார். அவர் ஸ்வாமிகளிடம் ஆன்மிக வழிகளில் அறிவுரை கூறுமாறு, பிரார்த்தனை

செய்தார். அவருடைய உண்மையான ஆசையைக் கவனித்த ஸ்வாமிகள், அவரைக் கோயிலில் இருக்கும் முருகன் சன்னதியின் கர்ப்பக்கிருஹத்திற்குள் அழைத்துச் சென்றார். ஸ்வாமிகள் தன் வலது கையை அவர் தலை மேல் வைத்தார். திரு. முதலியாருக்கு விவரிக்க முடியாத அனுபவமாக இருந்தது. அவர் ஒரு தெய்வீக ஒளியைக் கண்டார். அந்த விவரிக்க முடியாத பேரின்பம் அவரை உலகையே மறக்கச் செய்தது. அவர், "சேஷாத்ரி, சேஷாத்ரி" என்று கூறிக்கொண்டே மிகுந்த மகிழ்ச்சியில் ஆனந்தக் கண்ணீர் விட்டுக் கூத்தாடினார். இந்த நிகழ்ச்சி சிறிதுகாலம் தொடர்ந்தது. அவருடைய இந்நிலையைக் கண்ட அவர் குடும்பத்தினர், மிகவும் குழப்பம் அடைந்து, சேஷாத்ரி ஸ்வாமிகளைப் பார்த்து வழிகாட்டும்படி கூறினர். "அவர் தெய்வீகமான ஒளியைப் பார்த்ததால், மிகுந்த மகிழ்ச்சிக் கடலில் இருக்கிறார். சிறிது நாட்களில் அவர் சரியாகி விடுவார்" என்று ஸ்வாமிகள் கூறினார். ஒரு சில நாட்களில், முருகேச முதலியார் இயல்பு நிலைக்குத் திரும்பித் தன் அன்றாடக் கடமைகளைச் செய்தார். ஆனால் அவர் கண்டு அனுபவித்த அந்த ஒளியானது அவருக்கு விவரிக்க முடியாத அளவுக்கு மன அமைதியைக் கொடுத்தது. **கருணை வேண்டி நின்றால், காட்சி தந்து ஆட்சி செய்வார் மகான்!**

முன்விவரித்த அத்தியாயங்களில், மக்களின் இயல்பு வாழ்க்கையில், மகானின் தெய்வீக லீலைகளைப் பார்த்தோம். நம்பிக்கையோடு உண்மை பக்தி வைத்த ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும், மகான் கருணை மழையைப் பொழிந்து, அரவணைத்துச் செய்த அற்புதங்களை அனுபவித்தோம். உலக வாழ்க்கைக்காக ஓரிரு வசதிகளைத் தனது அற்புதத்தால் செய்து கொடுத்தாலும், ஆன்மாவை ஆன்மீகப்பாதையில் அழைத்துச் செல்வதுதான் மகானின் குறிக்கோள். உலகப்பற்றை அறுத்து, எப்பொழுதும் இறைவனோடு இரண்டறக் கலந்துகொண்டு, சரீர அவஸ்தைகளை மறந்து ஆன்மிக ஒளியிலே இருந்து கொண்டு இருக்கும் அவரிடம் இருந்து, சீடர்கள் பெறும் வாழ்க்கை வசதிகள், அவர்களது அறிவுத் திறனையும், ஆத்ம விசாரணையையும், கூட்டும் மைல்கல்லாக இருக்கவேண்டும். எவ்வாறு சுவை அறிந்து உணவானது சாப்பிடப்படுகிறதோ, அதே போல் அறிவதை அறிந்து, அடங்கி இருத்தல்தான் ஞானம். ஈடு இணையற்ற ஞானக்கடலான ஸத்குருவிடம் சரணாகதி அடைந்து விட்டால், தெளிவான அமைதியான, நிம்மதியான வாழ்க்கைக்கு, அசைக்க முடியாத அஸ்திவாரமாக அது அமைந்துவிடும்.

அத்தியாயம் - 11

# ஸத்குரு பேசுகிறார்

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் ஒரு பிரம்மஞானி, ஒப்புயர்வற்ற, வர்ணிக்க இயலாத, தன்னைத்தான் அறிதல் என்ற தத்துவத்தை உணர்ந்த பேரொளி பெற்ற யோகியாகும். ஸ்வாமிகளின் பக்தர்களால், அவருடைய தெய்வத்தன்மை வாய்ந்த கட்டளை களை அப்படியே கடைப்பிடிக்க முடியாது. மற்றவர்கள் எளிதில் புரிந்து கொள்ளும்படியாக மிகவும் சுலபமான முறையில் சொல்வார். பரிபூரணமான நிலையில் இருந்து பரிசுத்தமாக வரும் ஸ்வாமிகளின் ஒவ்வொரு சொல்லும், அவரது செயலைப் போன்று, வாழ்க்கையின் உண்மைத் தத்துவங்களை அழகாக எடுத்து உரைப்பதாக இருக்கும். அவர் யாரோடும் ஒப்பிடமுடியாத ஒரு பேரொளி ஆவார். ஒரு புத்தகமும் எழுதியது இல்லை; உரையாற்றியதும் இல்லை. ஆனால் அவர் பக்தர்களுக்குக் கொடுத்த அறிவுரைகளிலிருந்து அவ்வப் பொழுது உதிர்ந்த நல்முத்துகளை, ஒன்று திரட்டிக் கீழே கொடுத்து உள்ளோம். அந்த அரும் பெரும் ஸத்குரு கொடுத்துள்ள புனித அறிவுரைகளை விவரிப்பதற்கு எடுத்துக்கொண்ட முயற்சி போதாது என்றாலும், அர்த்தமுள்ள வாழ்க்கையை அமைத்துக்கொள்ள அது கண்டிப்பாக உதவும்.

சேஷாத்ரி ஸ்வாமிகள் மிகுந்த நெருக்கமான சீடனாகத் தேர்ந்தெடுத்துக் கொள்வதற்கு ஒரு சில நியமங்களை நிர்ணயிப்பார். அவர்கள், அதைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதில் கண்ணும் கருத்துமாக இருப்பார். நெருக்கத்தில் இருக்கும் ஆன்மாக்களாகத் தேர்ந்தெடுத்து அவர்களது வைராக்கியத்தை அறிவதற்காக மீண்டும் மீண்டும் சோதனை செய்வார். அவர்களிடம் பொய் ஒரு சிறிதுகூட

இருக்கக்கூடாது. அவர் திருப்தி அடைந்துவிட்டால், கருணை வெள்ளம் பொங்கி சீடர்களுக்கு ஆத்ம திருப்தியும், அமைதியும், மகிழ்ச்சியும் கிடைக்கும். கீழ்நிலை வாழ்க்கையில் இருந்தாலும், எக்காரணத்தை முன்னிட்டும் ஆன்மீக வாழ்க்கையைத் தியாகம் செய்யக்கூடாது என்பதில் எவ்வித மாற்றமும் இல்லை. முக்கியமாக ஆன்மீக வாழ்க்கையில் மேக மூட்டங்கள் இருக்கக் கூடாது என்பது உண்மை. குருநாதர் ஏற்றுக்கொண்டு விட்டார் என்று சொன்னால், சோதனையான நேரங்கள் இருந்தாலும், அவரது கருணையும், வழிகாட்டுதலும், சீடர்களுக்கு கண்டிப்பாகக் கிடைக்கும். நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய முக்கியமான கருத்து என்னவென்றால் லௌகீக வாழ்க்கைக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்காமல், ஆத்ம ஒளியைப் பெருக்குவதே குருநாதரின் குறிக்கோளாகும். நிரந்தரமற்ற அநித்யமான வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக்கொண்டே போகாமல், நித்யமான அர்த்தமுள்ள, தன்னைத் தானே உணருதல் என்ற ஆத்ம விசாரணையில் நாம் ஈடுபட வேண்டும்.

''எந்தக் காரியம் ஆரம்பித்தாலும், விநாயகரை வணங்கி விட்டு ஆரம்பித்தால் இடர்ப்பாடுகளை அவர் நீக்கிவிடுவார்''. ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் இவ்வாறு அருளினார். கீழ்க்கண்ட மந்திரத்தைக் கூறுமாறு கூறினார்:-

"शुक्लांबरधरं विष्णुं शशिवर्णम् चतुर्भुजम् ।
प्रसन्नवदनं ध्यायेत् सर्व विघ्नोपशान्तये ॥"

*''சுக்லாம் பரதரம் விஷ்ணும், சசிவர்ணம்சதுர்ப்புஜம்*
*ப்ரஸன்ன வதனம் த்யாயேத் ஸர்வவிக்னோபசாந்தயே''*

வெள்ளை வஸ்திரம் தரித்தவரும், சந்திரனைப் போன்ற நிறமுடையவரும், நான்கு கரங்களை உடையவரும், இரம்மியமான உருவத்தை உடையவரும், மந்தகாசமான சிரிப்பை உடையவரும், எல்லா இடையூறுகளையும் போக்கக் கூடியவருமான விநாயகப் பெருமானை நான் வணங்குகிறேன்.

மனிதன் பிரம்மத்தை உணர வேண்டும். மனிதன் மனதை ஈசனிடம் ஐக்கியப்படுத்தும்பொழுது உடலை மறக்கிறான். அப்படிப் பட்டவன் மரணத்தை வென்று, பயமற்ற அமைதியான வாழ்க்கை வாழ்கிறான் யமனை நினைத்து பயந்து வாழ்பவன் மனிதனே

அல்ல. இம்மரணபயத்தை வெல்ல ஈஸ்வரனிடம் மனம் ஒன்றுபட வேண்டியது மிக முக்கியம்.

சேஷாத்ரி ஸ்வாமிகள் ஸ்ரீ இராமசந்திர மூர்த்தியை வணங்கி வந்தார். தன்னுடைய பக்தர்களையும் அவ்வாறு வணங்கச் சொல்வது அவர் வழக்கம். "இராமாயணம்" ஸ்ரீ இராமர் வாழ்ந்து காட்டிய வழி ஆகும். இராமாயணத்தைப் படித்தால் மட்டும் போதாது. அதன் வழி நடக்கவேண்டும். ஸ்வாமிகள் நம்மிடம் எதைச் சொல்லுகிறார் என்றால், ஒவ்வொருவரும் நடத்தையில் ஸ்ரீ ராமனைப் போல், தர்மஸ்வரூபியாக இருக்கவேண்டும். ஆண்டவனின் அனுக்கிரகம் வாழ்க்கையை எவ்வாறு மேம்படுத்துகிறது என்பதை இராமாயணத்தை உதாரணம் காட்டி விளக்குகிறார். அனுமன் இராமனுடைய அனுக்கிரகத்தால், கடலை அனாயாசமாகக் கடந்து ஸ்ரீ இராமனிட மிருந்து பிரிந்து துன்பத்தில் வாடித் தவிக்கும் ஸ்ரீ சீதா பிராட்டி யாருக்கு ஆறுதல் அளித்தார். அனுமன், பின் இலங்கையை எரித்தார்.

*"உல்லங்க்ய ஸிந்தோஸ்ஸலிலம் ஸலீலம்"*

சக்தி வாய்ந்த அனுமான், ஸ்ரீ இராமபிரானின் ஆசியினால் எளிதாகச் சமுத்திரத்தைக் கடந்தார். அதுபோன்று குருவின் திருவருள். சீடனுக்கு இருந்தால், அறியாமையையும், மாயையும் நிறைந்த போலியான இந்த உலகத்திலிருந்து விடுபட்டு, இறைவனோடு இரண்டறக்கலக்க வசதி கிடைக்கும். இதிலிருந்து சீடனின் வாழ்க்கையில், ஸத்குருவின் தலைசிறந்த பங்கு, எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பது வலியுறுத்தப்படுகிறது. இன்னொரு உவமையும் கூறப்படுகிறது.

आपदामपहर्तारं दातारं सर्वसंपदाम् ।
लोकाभिरामं श्रीरामं भूयो भूयो नमाम्यहम् ॥

*"ஆபதாமபஹர்த்தாரம் தாதாரம் ஸர்வஸம்பதாம்*
*லோகாபிராமம் ஸ்ரீ ராமம் பூயோ பூயோ நமாம்யஹம்"*

ஆபத்துகளிலிருந்து காப்பாற்றுபவரும், எல்லா சம்பத்துகளையும் கொடுப்பவரும், இந்த உலகத்திற்கு நாயகனாக, இரம்மியமாக விளங்கும் ஸ்ரீ இராமபிரானை நான் மீண்டும், மீண்டும் வணங்குகிறேன்

அசுரக் கூட்டத் தலைவனான இராவணன் எப்படியும் அழிக்கப் பட வேண்டும். மனித மூளையில் அடிக்கடி தோன்றும்

அமைதியைக் குலைக்கக்கூடிய அசுர எண்ணங்களை அழித்து, நிம்மதியைத் தரக்கூடிய உண்மையையும், பொறுமையையும் கடைப் பிடிக்க வேண்டும். ஸ்ரீ இராமபிரானின் வாழ்க்கைத் தத்துவங்களை உணர்ந்து, அவர் வாழ்ந்துகாட்டிய வழியில் நடந்து, ஸத்சங்கத்தில் ஈடுபட்டு, ஸத்கர்மாக்களை நாம் அடிக்கடி செய்யவேண்டும் என்று ஸத்குரு நாதர் கூறுகிறார்.

ஆதித்யஹ்ருதய ஸ்தோத்திரத்தை, மோட்ச கதியை அடைய, அடிக்கடி பாராயணம் செய்யவேண்டும். சூரிய பகவானை வழி படுவதால், கோபத்தை ஜெயிக்க அது உதவுவது மட்டுமல்லாமல், இராக்ஷஸ குணமான கோபத்தை, ஒட்டு மொத்தமாக விலக்குவதற்கு அது வழி செய்யும். தெய்வீகப்பாதையில் உயர்வு நிலையை அடைய, ஒருநிலைதியானத்திற்கு, இடையூறாக இருக்கும் கோபம், விலக்கப்படவேண்டும் என்பதைக் குருநாதர் அடிக்கடி வலியுறுத்திக் கூறுவார். அதிகமான கோபம் இருந்தால் அது ஸத்குருவிற்கு மகிழ்ச்சி தராது. அது விலகி உண்மை ஒளிகிடைக்க, மனம் ஞான நிலை அடைய, ஒளியைக்கூட்ட சூரிய வழிபாடு உதவி செய்யும்.

குரு வழிபாட்டிற்கு, ஸத்குருநாதர் உயர்ந்த ஸ்தானத்தை எப்பொழுதும் கொடுப்பார். அவர் குருவை ஈசனோடு ஒப்பிட்டு உண்மை வழிபாட்டின் முக்கியத்துவத்தை விளக்குவார். ஒருசமயம், "பிரம்மன் பெரியவரா? வசிஷ்டர் பெரியவரா?" என்று ஸத்குருநாதரை வினவிய பொழுது, வசிஷ்டர் தான் பெரியவர் என்று கூறியுள்ளார். பிரம்மன் விசுவாமித்திரரை, பிரம்மரிஷி என்று கூறினாலும், தனது குருவான வசிஷ்டரின் வாக்கினால் பிரம்மரிஷிப் பட்டம் கிடைக்க வேண்டும் என்பதில் விசுவாமித்திரர் தீவிரமாக இருந்தார். அப்பொழுது தான் தனக்கு அந்த ஸ்தானம் கிடைக்கிறது என்று கூறுவார்.

சீடனுக்கு, குருபக்தி முக்கியம். ஒரு நல்ல சீடன் கிடைப்பது குருவிற்கும் மிகுந்த மகிழ்ச்சியை அளிக்கும். புனிதத் தன்மையே ஒரு நல்ல சீடனின் முதன்மையான குணமாக இருக்க வேண்டும். "ஈயைப் போன்று சுத்தமாகவும், எறும்பைப் போன்று உறுதியாகவும், நாயைப் போன்று நன்றியுணர்ச்சியுடன் சீடன் இருக்கவேண்டும்" என்று சேஷாத்ரி ஸ்வாமிகள் கூறுவார். இது வினோதமாகத் தோன்றினாலும், ஈ எப்படிச் சுற்றித் திரிந்தாலும், அது அப்பொழுதும்

தன்னைத்தானே சுத்தம் செய்துகொண்டே இருப்பதால், பரிசுத்தமாகக் கருதப்படுகிறது. எறும்பு பார்ப்பதற்கு சிறியதுபோல் தோன்றினாலும், ஓய்வில்லாமல் கடினமாக உழைத்துக்கொண்டே இருப்பதால் உறுதியானது. நாய் நன்றியுள்ள பிராணி என்பது நாம் அனைவரும் அறிந்ததே. இதனால் குருபக்தியின் முக்கியத்துவம் விளக்கப்படுகிறது.

தியானம் செய்யும்பொழுது, ஆழ்நிலை தியானம், மிகவும் முக்கியம் என்பதை சேஷாத்ரி ஸ்வாமிகள் வலியுறுத்திக் கூறுவார். ஒருமுறை ஸ்வாமிகளின் சீடர் நாராயண சாஸ்திரிகள் தியானம் செய்ய முயற்சி செய்துகொண்டு இருக்கும்பொழுது சேஷாத்ரி ஸ்வாமிகள், அவரது தலையைச் சுற்றி ஒரு கத்தியைச் சுழற்றுவது போன்ற காட்சியைக் கண்டு பயந்தார். சுழன்ற கத்தியைப் பார்த்தே அவரது கண்கள் சுழன்றுகொண்டே இருந்தன. அங்கே ஸ்வாமிகள் வந்து, ''என்ன தியானம் செய்கிறாய்? கத்தியைத் தீட்டாதே, புத்தியைத் தீட்டு. ஆழ்நிலைதியானம் செய். அதுவே உன்னை நீ உணர உதவி செய்யும்'' என்று அறிவுறுத்தினார்.

இதேபோன்று திரு. இராமசாமி சாஸ்திரி தியானம் செய்யும் பொழுது மனதை ஒரு நிலைப்படுத்த இயலவில்லை. அந்த இடத்தில் சேஷாத்ரி ஸ்வாமிகள் தோன்றி, அவருடைய வாயைத் திறந்து, உள்நாக்கைப் பிடித்து அழுத்தினார். அதன் பிறகு சுழன்று திரிந்த மனது அடங்கி, ஒருநிலைத் தியானம் கிட்டி, அமைதி பெருகியது. சமரச சன்மார்க்கநெறி, மிகவும் முக்கியமான ஒன்றாகும். ஜாதி, .மத, பேதம் இன்றி எல்லா வர்ணத்தவருக்கும், மகானின் அருள் கிடைத்துள்ளது. எங்கும் நிறைந்த இறைவனால் படைக்கப்பட்ட மனித ஆன்மா ஜாதி மத, இன வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்டது. குறுகிய கண்ணோட்டத்தை விலக்கி, பரந்த நோக்கத்தைப் பெருக்கி, வேறுபாடுகளை அழிக்க வேண்டும். ஞானநிலை அடைதலை, மனித ஆன்மாவிற்குக் கிடைக்கும், அந்த மன அமைதியை, சந்திரனின் ஒளியோடு, மகான் ஒப்பிடுவது வழக்கம்.

சூரியனின் பிரதிபலிப்பை நீரில் பார்க்கும்பொழுது தண்ணீரில் ஏற்படும் அசைவின் காரணமாக சூரியனே அசைவது போல் தோன்றியது. இது மாயை தானே! சூரியனை யாராலும் அசைக்க முடியாது. நீரில் ஏற்படும் சலனங்கள் சூரியன் அசைவது போல்

தோன்றுகிறது. சூரியன் எப்படி அசைவற்ற நிலையில், சலனம் இல்லாமல் செயல்படுகிறாரோ அதுபோன்று ஆத்மா இருக்க வேண்டும். புறத் தொந்தரவுகள், தொல்லைகள், ஆன்மாவைப் பாதிக்கக் கூடாது. 'தெளிவற்ற நிலையில் இருந்து, தெளிவான நிலையை அடைவதே ஞானம்' என்று மகான் அறிவுரை கூறுவார்.

இதேபோன்று, மற்றோர் உதாரணத்தையும் மகான் கூறி யுள்ளார். கண்ணாடியின் முன் நிற்கும் உருவங்களின் பிரதிபலிப்பு, கண்ணாடியில் தெரிகிறது. உண்மை உருவங்களும் நிற்கின்றன. பிரதிபிம்பங்களும் கண்ணாடியில் தெரிகின்றன. கண்ணாடியை எடுத்துவிட்டால், பிரதிபிம்பங்கள் மறைந்து, உருவங்கள் மட்டுமே எஞ்சி உள்ளன. பிரதிபிம்பங்கள் உண்மை போல் தோன்றினாலும் உண்மையானவை அல்ல. அதுபோன்று, ஆத்ம விசாரணையில் அறிவுத்திறன்கொண்டு ஆராய்ந்து பார்க்கும்பொழுது, ஒன்று ஜீவாத்மா. மற்றொன்று ஒப்புயர்வற்ற பரமாத்மா. மாயைத் திரை இருக்கும் வரையில், இரண்டும் இரு துருவங்களாகத் தெரிகின்றன. அந்தத் திரை விலகிவிட்டால் ஜீவாத்மா, பரமாத்மாவோடு ஐக்கியப் பட்டு நிரந்தரத் தன்மையை அடைகிறது. வேதாந்த சாஸ்திரத்தில் இருந்து, மகாநாராயண உப்நிஷத்திலிருந்து கீழ்க்கண்ட ஸ்லோகத்தை மகான் கூறுவார்.

यो वेदादौ स्वरः प्रोक्तो वेदान्ते च प्रतिष्ठितः ।
तस्य प्रकृतिलीनस्य यः परः स महेश्वरः ॥

*யோ வேதாதௌ ஸ்வர: ப்ரோக்தோ: வேதாந்தேச ப்ரதிஷ்டித: ।*
*தஸ்யப்ரக்ருதிலீனஸ்யலீய: பரஸ்ஸ மஹேச்வர: ॥*

வேதங்கள் கிடைப்பதற்கு முன்பே ஸ்வரங்கள் இருந்தன. வேதாந்த சாராம்சமாக, பிரணவத்தின் தத்துவமாக "ஓம்" இருக்கிறது. ஆனால், சகல ஜீவராசிகளின் சிருஷ்டிக்குப் பின்னால், இரகசியமாக 'உலக நாயகன்' பரமேஸ்வரன் இருக்கிறான். திரு. A.V. கோபாலாச் சாரியார் வேதாந்த உபந்யாசம் செய்துகொண்டு இருக்கும்பொழுது, மேற்கண்ட ஸ்லோகத்தைச் சொல்லிக்கொண்டு இருந்தார். அந்த நேரத்தில், சேஷாத்ரி ஸ்வாமிகள், எங்கிருந்தோ அங்கு வந்து "அப்படி இல்லை, அப்படி இல்லை!" என்று கூறினார். உடனே திரு. கோபாலாச்சாரியார் மகானையே விளக்கம் சொல்லுமாறு வேண்டிக்

கேட்டுக்கொண்டார். உடனே மகான், ஐம்புலன்களையும் அடக்கி, கடவுளை வழிபடுவது "பலாப்பழம் சாப்பிடுவது போன்றது" என்று கூறினார். எப்படி பலாச்சுளையை நாம் சாப்பிடவேண்டும் என்றால், ஐந்து நிலைகளைக் கடந்து, அதை எடுத்துச் சாப்பிடுகிறோமோ, அதேபோன்று, கடவுளை அடைவதற்கு ஐம்புலனடக்கம் மிகவும் முக்கியமான ஒன்று. உணவை சாப்பிட்டுப் பார்த்தால்தான் ருசி தெரியும். அதுபோன்று தெளிவான நிலை அடைந்தால்தான் ஞான மார்க்கத்தை அனுபவத்தில் புரிந்துகொள்ள முடியும்.

---

1. தகுதியுள்ள சீடனாய் இருப்பதே குருவுக்கு மகிழ்ச்சி கொடுக்கும்.
2. குருவின் அருள் துக்கத்தையும் துயரத்தையும் நீங்கும்.
3. குருவிடம் சரணாகதி செய்; கவலையை விடு.

---

அத்தியாயம்-12

# ஆன்மீக வழி

''மனிதன் மோக்ஷத்தை அடைவதற்குப் பல வழிகள் இருக்கின்றன'' என்று பகவத்கீதையில் ஸ்ரீ கிருஷ்ணர் தெய்வீகத் தன்மை வாய்ந்த பாடல்களின் மூலம் கூறுகிறார். கர்மயோகம் என்பது மனதை ஒருநிலைப்படுத்தி, கடவுளைத் தியானம் செய்துகொண்டு, பிரதி பலனை எதிர்பார்க்காமல், தன்னால் முடிந்தவரை கடமைகளைச் சரிவரச் செய்வதுதான், உள்ளொளியாக இருக்கும் ஆத்மாவின் உண்மை நிலையை உணர்வது, இறுதியில் பரமாத்மாவோடு ஐக்கியப் படுவது ஞானயோகமாகும்.

பகவத்கீதையில், பன்னிரண்டாவது அத்தியாயத்தின், இறுதியில், பக்தியோகத்தைப்பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. பக்தியோகம் என்பது, உண்மையான, முழுமையான பக்தியுடன் சரணாகதி அடைவது தான். ஒரே பாதையில் செல்வதுதான் ஜோதி ஸ்வரூபமான கடவுளை அடையச் சிறந்த வழி என்று புராணங்கள் கூறுகின்றன. சேஷாத்ரி ஸ்வாமிகள், இந்த மூன்று யோகங்களில் எதைப் பின்பற்றினால் இறை உணர்வு பெறலாம் என்பதை, இராமாயணத்திலிருந்து மேற்கோள் காட்டி கீழ்க்கண்டவாறு விளக்குகிறார். படகோட்டி குகனின் வாழ்க்கையைப்பற்றி உதாரணத்திற்குச் சொல்லலாம். ஸ்ரீ இராமர், தந்தையின் சொல்லுக்கு மதிப்பு வைத்து, இராஜ்யத்தைத் துறந்து, காட்டிற்குச் செல்லும் வழியில், குகன்தான் ஸ்ரீ இராமரைத் தன்னுடைய படகில் ஏற்றி, ஆற்றைக்கடந்து அக்கரைக்குக் கொண்டு விட்டான். படகோட்டி குகன் தனது தர்மத்தைக் கடைப்பிடித்து மற்றவர் களுக்கு வாழ்ந்து காட்டினான். அவர் கர்மயோகத்தைக் கடைப் பிடித்து, நிர்ணயிக்கப்பட்ட பொறுப்பைச் சரியாகச் செய்து காட்டினான். அவன் ஸ்ரீ இராமனின் மனதில் நிலைத்த உண்மையான பக்தன். அதனால், கர்மயோகத்தைச் சரிவர செய்ததால், இறுதியில்

அவனை ஸ்ரீ இராமர் வாரி அணைத்துக் கொண்டார். அவன் பக்தி யோகத்தினாலும், ஸ்ரீ இராமருடைய மனதில் இடம்பிடித்தான். இறுதியில் கடவுளின் பணியாளனாகக் குகன், புனிதநதியான கங்கையில் மூழ்கி, உயிர் நீத்து, மோட்சம் அடைந்தான். இது ஞான யோகத்தைக் குறிக்கின்றது. கர்மா, ஞானம், பக்தி யோகங்கள் மூன்றும், 'இறைவனோடு இரண்டறக் கலத்தல்' என்ற ஒரே இலக்கிற்குத்தான் மனிதனை அழைத்துச் செல்கின்றன. யோகம் என்ற வார்த்தைக்கு உட்கருத்து, சேர்க்கை என்று பொருள். அந்தச் சேர்க்கையை எப்படி அடைவது, என்பதை விளக்குவதுதான், கர்ம, ஞான, பக்தி யோகங்கள்.

ஞானியான சேஷாத்ரி ஸ்வாமிகளோ, பக்திக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கிறார். "ஒரே கடவுளை வணங்கு. அவன் உன்னைப் பாதுகாப்பான்" என்று ஸ்வாமிகள் கூறியுள்ளார். இக்கலியுகத்தில் குருவிடம் சரண் அடைவது அறியாமையையும், இருளையும் போக்க ஒரே வழி என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஈஸ்வரனைத் தவிர, வேறு எவராலும், கர்மவினையிலிருந்து தப்பிக்க வைக்க முடியாது. வாழ்வில் அவரவர்களுக்குக் கொடுத்த வாழ்க்கை நெறிப்படி வாழ்ந்து, எது வந்தாலும் அதை இறைவனின் ஆசியாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று சேஷாத்ரி ஸ்வாமிகள், தன் சீடர்களுக்கு அறிவுரை கூறியுள்ளார். இதற்கு அசைக்க முடியாத வைராக்கியத்துடன் கோபம், காமம், இவற்றை ஜெயிக்கவல்ல நிலையான மனப்பக்குவம் அடையவேண்டும் என்று ஸ்வாமிகள் கூறுவார். அமைதியான, தெளிவான வாழ்க்கைக்கு, பக்தியும், ஆராதனையுமே திறவுகோல்களாகும் என்று சேஷாத்ரி ஸ்வாமிகள் பக்தியைப்பற்றி மேலும் கூறுவார். எல்லா உலகங்களும், ஸ்ரீ கிருஷ்ணா, ஸ்ரீ சக்தி, ஸ்ரீ சிவா, வழிபாட்டில் அடங்கிவிட்டன என்றும் கூறுவார். ஆணவத்தை அழித்து, மன ஒழுக்கம் அடைய, "ஸ்ரீ கிருஷ்ண காணாமிர்தம்," "ஸ்ரீ லலிதா ஸகஸ்ரநாமம்" "ஸ்ரீ சிவ ஸகஸ்ரநாமம்", இவற்றைப் படிக்குமாறு யோசனை கூறுவார். "திருப்புகழ்" படிப்பதும், "மகாபாரதத்தைப்" படிப்பதும் "நாராயண ஜபம்" செய்வதும் ஒரே பலனைத் தான் கொடுக்கும், "தியாகத்தினால் தான், கர்மா நீங்கி, ஆன்மாவிற்கு விடுதலை கிடைக்கும்" என்று சேஷாத்ரி ஸ்வாமிகள் சுட்டிக்காட்டுகிறார். தியாகத்தை ஸ்வாமிகள், கசப்பான பழத்திற்கு ஒப்பிடுகிறார். தியாகம் செய்வது கசப்பாக இருந்தாலும், தொடர்ந்து செய்தால் இறைவனை அடையலாம்.

''அருணாசலேஸ்வரரை உண்மையான பக்தியோடு வணங்கினால், மன அமைதி பெறுவீர்கள்'' என்று கூறினார். ''திருவண்ணாமலையில், அருணாசலேஸ்வரரை, வழிபடும்பொழுது, ஒருவருடைய மனது, சிவனுடனும், சக்தியுடனும், ஒன்றிவிட வேண்டும். புறச் சலனங்களில் மனதைச் சிதறவிடக் கூடாது'', என்றும் சொல்வார். திருவண்ணா மலையில் இருக்கும் கடைக்காரர்களை, அவர்கள் பக்தியைக் காட்டத் தவறினால், அவர்களுடைய தவற்றை ஸ்வாமிகள் சுட்டிக்காட்டாமல் இருக்கமாட்டார். ''கடைகளைத் திறக்கவும், மூடவும்தான் நேரம் இருக்கிறதோ? அருணாசலேஸ்வரரை வணங்குவதற்கு நேரம் இல்லையோ?'' என்று கேட்பார். அந்த மகான், மனித குலத்தை ஆன்மீக வழியில் உயர்த்துவதையே குறிக்கோளாகக் கொண்டு இருந்தார்.

சமதிருஷ்டிபாவம் சேஷாத்ரி ஸ்வாமிகளின் தனிச்சிறப்பு. ஏழை, பணக்காரன், படித்தவர்கள், பாமரர்கள், மனிதன், விலங்கு மற்றும் இன வேறுபாடு என்று ஆயிரக்கணக்கான பாகுபாடுகள் நிறைந்த இவ்வுலகத்திலே, எல்லாவற்றையும் மறந்து, ஒரே ஆத்மாவாக, சமரச சன்மார்க்க நிலையைக் கடைப்பிடித்துப் பார்க்க வேண்டும் என்று கூறுவார். பலதரப்பட்ட மக்களை, எவ்வித பாகு பாடும் இன்றி நடத்தும், ஸ்வாமிகளின் இந்த உயரிய குணத்தைப் பற்றி, சென்ற அத்தியாயத்தில் விவரமாகக் கூறியிருக்கிறோம்.

ஒருசமயம், ஸ்வாமிகளுக்கு என்று வைத்திருந்த பாலை, பூனை ஒன்று குடித்துவிட்டது. குடித்த பால்கிண்ணத்தை எடுப்பதற்குள், சேஷாத்ரி ஸ்வாமிகள் அங்கே வந்து, மீதியிருந்த பாலைக் குடித்து விட்டார். அங்கு சுற்றி நின்றிருந்த பக்தர்களும் எல்லோரும் தடுத்த போது, ஸ்வாமிகள், ''எல்லா உயிர்களும் ஒன்று தான். மனித மனம் தான் அதை வேறுபடுத்துகிறது,'' என்று அமைதியாகக் கூறினார்.

ஒரு சர்ப்பத்தைப்பற்றிய நிகழ்ச்சியை இங்கு கூறவேண்டும். ஒருநாள் ஸ்வாமிகள் உட்கார்ந்து இருக்கும்பொழுது, பக்கத்திலிருந்த சுவரிலிருந்து, சர்ப்பம் ஒன்று அவருடைய கழுத்தைச் சுற்றி வந்து அவருடைய முகத்திற்குக் குடைபிடித்தது. பீதி அடைந்த மக்கள், அதைத் துரத்த முயலும்பொழுது, ''அதைத் தொடக்கூடாது என்றும், அதை ஒன்றும் செய்யவேண்டாம்'' என்றும் கூறினார். எல்லா விலங்கினங்களிடமும் ஸ்வாமிகளுக்கு ஒரேவிதமான அன்புதான்.

உடல் தேவைகளைப்பற்றி, ஸ்வாமிகளுக்கு இருக்கிற வெறுப்பைப்பற்றி இன்னொரு நிகழ்ச்சியின் மூலம் அறியலாம். ஒரு திருமணக்கூடத்தின் வெளியே உள்ள குப்பைத்தொட்டியில் போட்ட எச்சில் இலைகளிலிருந்து சாப்பாட்டை ஒருபுறம் ஸ்வாமிகள் சாப்பிட்டுக்கொண்டு இருந்தார். மறுபுறம், நாய், சாப்பிட்டுக் கொண்டு இருந்தது. திருமணக்கூடத்தில் இருந்த மக்கள், எல்லோரும் வெளியில் ஓடிவந்து, ஸ்வாமிகளை உள்ளே வரும்படி கெஞ்சினார்கள். உள்ளே வந்து சாப்பிடும்படியும், வெளியில் இருக்கிற உணவுப் பொருட்கள் எல்லாம் உடலுக்குக் கெடுதல் என்றும் கூறினார்கள். "எது நல்லது? எது கெட்டது?" என்று அந்த மகான், எவ்வித மனக்கலக்கம் இல்லாமல் கேட்டார். அவரோ ஞானாக்னியில், தீமைகளை அழித்து, பரிசுத்தத்தைக் கண்டவர், மற்றவர்களால் கனவிலும் நினைத்துப் பார்க்கமுடியாத சமதிருஷ்டி பாவம், நமது ஸ்வாமியின் குணத்திற்குச் சிகரம்.

எல்லா விலங்கினங்களிடமும், ஸ்வாமிகளுக்கு ஒரே விதமான அன்பு இருக்கிறது என்பதற்குச் சான்றாக இன்னும் ஒரு நிகழ்ச்சியை இங்கு குறிப்பிட வேண்டும். ஒருசமயம் மகான், அப்பொழுதுதான் பிறந்திருந்த சின்ன நாய்க்குட்டியை, அதன் அம்மாவிடம் இருந்து எடுத்துக்கொண்டு வந்து கொஞ்சிக்கொண்டு இருந்தார். சிறிதுநேரம் கழித்து, எவ்வித பயமும் இன்றி, அந்தக் குட்டியை, அதன் அம்மாவிடம் கொண்டுபோய்ச் சேர்த்தார். சேஷாத்ரி ஸ்வாமிகளைப் பற்றி முன்பின் அறியாத அந்த நாயும், ஸ்வாமிகளின் கருணையைப் பற்றி அறிந்தது போல் ஒன்றும் செய்யாமல் இருந்துவிட்டது. பொதுவாகக் குட்டியைப் பிரிந்த தாய், தவித்துக்கொண்டு இருப்பது வழக்கம். ஆனால் சகல ஜீவராசிகளுக்கும் தாயாக மகான் இருப்பதால், தனது குட்டி மிகவும் பத்திரமாக இருக்கும் என்ற நம்பிக்கையுடன், அந்த நாய் அமைதியாக இருந்துவிட்டது போலும்! ஜீவனுக்கு ஜீவன் தரும் தேவன் அல்லவா நம் மகான்! பகவத்கீதையில் கூறியபடி, சமதிருஷ்டி பாவமே நமது மகானின் முழுமூச்சு.

தினமும் பிரார்த்தனை செய்யும்பொழுது கீழே கொடுக்கும் மந்திரத்தையும் சொல்லவேண்டும் என்று சேஷாத்ரி ஸ்வாமிகள் கூறினார்.

मौन व्याख्या प्रकटितपरब्रह्मतत्त्वं युवानं ।
वर्षिष्ठाने वसत् ऋषिगणैरावृतं ब्रह्मनिष्ठैः ।।
आचार्येन्दरं करगलित चिनमुत्रमानंद मूर्तिम
स्वातमारामं मुदिदवधनमस दक्षिणामूर्तिमीडे

*"மௌன வ்யாக்யா ப்ரகடித பரப்ரஹ்மதத்வம் யுவானம்
வர்ஷிஷ்டாந்தே வஸத்ரிஷிகணை: அவ்ருதம் ப்ரம்மநிஷ்டை:
ஆசார்யேந்தரம் கரகலித சின்முத்ரமானந்த மூர்த்திம்
ஸ்வாத்மாராமம் முதிதவதனமச தக்ஷிணாமூர்த்திமீடே"*

அமைதியான மௌன நிலையில் இருந்துகொண்டு, என்றும் இளமையாக இருப்பவரும், பரப்பிரம்ம தத்துவத்தை தன்னைச் சுற்றி அமர்ந்துள்ள பிரம்மரிஷிகளுக்கும், ரிஷிகணங்களுக்கும் எடுத்துரைப் பவரும், குரு ஸ்தானத்தில் இருந்துகொண்டு அழகிய புன்னகை யுடன் எல்லையில்லாக் கருணையைப் பெருக்கிக்கொண்டு சின் முத்திரையின் மூலம், ஆத்ம தத்துவத்தை விளக்கிக் காண்பித்து, அமைதியாக அமர்ந்து இருக்கும் குரு தக்ஷிணாமூர்த்தி பகவானை நான் வணங்குகிறேன்.

मन्दस्मितस्फुरितमुग्धमुखारविन्दं
कन्दर्पकोटि शतसुन्दर दिव्यमूर्तिम् ।
आताम्रकोमल जटाकलितेन्दुलेखम्
आलोकये वटतटीनिलयंदयालुम् ॥

*"மந்தஸ்மிதம் ஸ்புரிதமுக்த முகாரவிந்தம்
கந்தர்ப்ப கோடி சதஸுந்தர திவ்யமூர்த்திம்
ஆதாம்கோமளர ஜடாகலிதேந்துலேகம்
ஆலோகயேவடதம நிலயம் தயாளும்"*

ஆயிரம் இதழ் தாமரைகள் போன்ற புன்னகை உடைய முகத்தை உடையவரும், காமதேவனை மயக்கக்கூடிய ஆயிரம் மடங்கு அழகுள்ள தெய்வீக உடலைப் பெற்றவரும், ஜடாமுடியில் சந்திரபிறையைத் தரிப்பவரும், தயாள குணத்தோடு மோன நிலையில் ஆலமரத்தின்கீழ் அமர்ந்து இருக்கும் குரு தக்ஷிணா மூர்த்தியாகிய உங்களை நமஸ்கரிக்கிறேன்.

மேலும் சேஷாத்ரி ஸ்வாமிகள், கீழ்க்கண்ட ஸ்லோகத்தைப் படிக்குமாறு கூறுவார்:

ज्ञानानन्दमयं देवं निर्मलस्फटिकाकृतिम् ।
आधारं सर्वविद्यानां हयग्रीवं उपास्महे ॥

*"ஞானனந்தமயம் தேவம் நிர்மலஸ்படி காகிருதிம்
ஆதாரம் ஸர்வவித்யானாம் ஹயக்ரீவமுபாஸ்மஹே"*

ஞான, ஆனந்த, பரிபூரணநிலையில் இருப்பவரும், ஸ்படிகத்தைப் போன்று பரிசுத்தமான தெள்ளத் தெளிவான தோற்றம் உடையவரும் அறிவுக் களஞ்சியமாக எல்லா வித்தைகளுக்கும் அஸ்திவாரமாக விளங்குபவரும் ஆகிய ஹயக்ரீவப் பெருமாளாகிய உங்களை வணங்குகிறேன்.

மேலும் ஸ்வாமிகள் கூறுகிறார்.

अनन्याश्चिन्तयन्तो मां येजनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ।।

*"அனன்யாஸ் சிந்தயந்தோமாம் யேஜநா: பர்யுபாஸதே!
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோக க்ஷேமம் வஹாம்யஹம்"*

அணையாமல் சதாசர்வகாலமும் நிலைத்த பக்தியோடு எப்பொழுதும் என்னிடம் சரணாகதி செய்துகொண்டு இருப்பவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்து, அவர்களுடைய துக்கங்களையும், சுமையையும் நான் தாங்கிக் கொள்கிறேன்.

பரிபூர்ண சத்து, சித்து, ஆனந்த நிலையில்தான் மகான் வாழ்ந்தார். அதேபோன்று தனது சீடர்களும் தெய்வீக வளர்ச்சியைப் பெற வேண்டும் என்று விரும்பினார்.

அவர் தொடர்ந்து வலியுறுத்துவது எல்லாம், மனதை எப்பொழுதும் இறைவனோடு வைத்திருக்க வேண்டும், சிந்தனைகள் சிதறக்கூடாது என்பதுதான். கடந்த சில அத்தியாயங்களில், நாம் படித்த அவரது அறிவுரைகள், நமது முயற்சிக்குப் பேருதவியாக இருக்கும். மனதை ஒழுக்கமாக ஒருநிலைக்குக் கொண்டு வரவேண்டும் என்றால், உண்மையான பக்தியும், முழுசரணாகதியும் தேவை. ஸத்குருநாதரிடம் வாழ்க்கையை ஒப்படைத்து, சரணாகதி செய்த பின்பு, அவர் பிறப்பிக்கும் ஆணைகளை உண்மையாக பயபக்தியுடன், ஒவ்வொரு சீடரும் நிறைவேற்ற வேண்டும். மக்களுக்கு உதவி செய்வதே மகானின் விருப்பம். அந்த மகேசனின் வாக்குப்படி நடப்பதே, நமது வாழ்க்கையைத் திருப்பும். அவருடைய அறிவுரைப்படி நாம் உண்மையாக நடந்தால், உண்மையான பேரானந்தம் மிக்க பெருவாழ்விற்குக் கதவுகள் திறக்கப்படும் என்பது சத்தியம்.

## அத்தியாயம்-13

# மகா சமாதி

करुणासागरं शान्तम् अरुणाचलवासिनम् ।
श्रीशेषाद्रिगुरुं वन्दे ब्रह्मीभूतं तपोनिधिम् ॥

*''கருணாசாகரம் சாந்தம் அருணாசல வாஸினம்,*
*ஸ்ரீ சேஷாத்ரிகுரும் வந்தே பிரம்மீபூதம் தபோநிதிம்.''*

1929-ஆம் வருடம், சேஷாத்ரி ஸ்வாமிகள், திருவண்ணா மலையில் வாழ்ந்தது நாற்பதாவது வருடம் ஆகும். அது, தமிழ் மாதத்தில் கார்த்திகை ஆகும். ஆங்கிலப் பஞ்சாங்க முறைப்படி அம்மாதம் நவம்பர், டிசம்பர் ஆகும். கார்த்திகை மாதம், திருவண்ணாமலையில் இருக்கும் மக்களுக்கு முக்கியமான மாதமாகும். கார்த்திகை தீப விழாவைப் புனித விழாவாக அம்மாதத்தில் தான் மக்கள் கொண்டாடுவர்.

அப்பொழுது சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு ஐம்பதொன்பதாவது வயது. ஒருநாள் நீண்டநாள் பக்தையான, சுப்புலக்ஷ்மி அம்மாள் வீட்டிற்குச் சென்றார். ''இன்னொரு வீடுகட்டி அதில் யோகம் செய்யட்டுமா?'' என்று அப்பெண்மணியை வினவினார். ஸ்வாமிகள் அவளிடம் இவ்வாறு சிலேடையாகப் பேசுவது வழக்கம். ஆகையால் அவர் சொல்லில் இருக்கும் மறைவான பொருளைப்பற்றி எண்ணாமல், ''போங்கள்! போய் வேறு வீடு கட்டிக்கொள்ளுங்கள்'' என்று கூறிவிட்டாள். சுப்புலக்ஷ்மி அம்மாளுக்கு மட்டும், அவர் கேள்வியின் பொருள் விளங்கி இருந்தாலோ, அல்லது எந்தக் காரணத்திற்காக அவ்வாறு அவர் கேட்டார் என்பதை உணர்ந்து இருந்தாலோ, அவ்வாறு பதிலை சொல்லி இருக்க மாட்டாள்! அந்தச் சமயத்தில்,

சேஷாத்ரி ஸ்வாமிகள் இந்த உலகைத்துறந்து, இந்த உடலைவிட்டு இறைவனிடம் ஒன்றிவிட வேண்டும் என்று ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டு இருந்தார். சுப்புலக்ஷ்மி அம்மாளின் வார்த்தையைக் கேட்டவுடன் பராசக்தியிடம் இருந்து உத்தரவு கிடைத்து விட்டது என்று கருதி, இவ்வுலகை விட்டுப் போவதற்கு நேரம் வந்து விட்டது என்று எண்ணினார்.

அந்நேரத்தில் திருவண்ணாமலை விழாக்கோலம் பூண்டு இருந்தது. அப்பொழுது திருவிழா நடந்துகொண்டு இருந்தது. திருவண்ணாமலையில் சமயச் சொற்பொழிவுகளும், பக்தர்களின் வழிபாடும் சேர்ந்து அருள்ஒளியைப் பெருக்கிக்கொண்டு இருந்தன. எல்லோரும் அருணாசலேஸ்வரையும், உண்ணாமலை அம்மனையும் தரிசித்துக்கொண்டு இருந்தனர். இவ்வுலகில் நடமாடும், வழிகாட்டும் தெய்வமாகவே கருதப்பட்டு வந்தவர் சேஷாத்ரி ஸ்வாமிகள். பலகாலம் ஸ்வாமிகளின் கருணை வெள்ளத்தில் ஆழ்ந்து குளித்த சீடர்கள் எல்லோரும் உணர்ச்சிப் பெருக்கால் மகானுக்குக் குளிர அபிஷேகம் செய்ய எண்ணினர். ஸ்வாமிகள் அதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. தனக்கு ஜுரம் வரும் என்ற காரணத்தைச் சொன்னார். சந்தோஷத்தினால், துள்ளிக்கொண்டு இருக்கும் சீடர்களைக் கட்டுப்படுத்த முடியவில்லை. மிகவும் திரும்பத் திரும்ப, வேண்டி வேண்டிக் கெஞ்சியபிறகு ஸ்வாமிகள் அதற்கு ஒப்புக் கொண்டார். அவர் உடலில்தான் தண்ணீர் ஊற்ற வேண்டும் என்றும், தலையில் இலேசாகத் தெளித்தால் போதும் என்றும் கூறினார். சீடர்கள் ஸ்வாமிகளிடம் வைத்திருந்த பக்தியும் அன்பும் இதிலிருந்து வெளிப்பட்டன. ஸ்வாமிகளுக்கு க்ஷவரம் செய்து, அவரை நீராட்டி, அவரை வழிபாட்டு முறைக்குத் தயார்படுத்தினார்கள். பிறகு அவர்கள் கிணற்றிலிருந்து தண்ணீரைக் குடம் குடமாகக் கொண்டு வந்தனர். ஸ்வாமிகளின் உத்தரவையும் மீறி, அவருக்கு பூர்ணாபிஷேகம் செய்து ஆனந்தத்தில் திளைத்தனர். கருணா மூர்த்தியான அத்தெய்வத்திற்குத் தங்களுடைய நன்றி உணர்ச்சியை யும், அன்பையும் இவ்வாறு வெளிப்படுத்திக் கொண்டு இருந்தனர். கணக்கிலடங்கா சீடர்கள், நீரூற்றுபோல குடம், குடமாக அபிஷேகம் செய்துகொண்ட அந்த அபிஷேகமே முடிவே இல்லாத மகானின் வாழ்க்கைக்கு முடிவாக அமைந்துவிடும்போல் தோன்றியது. கருணைக் கடலான மகான், ஆடாமல் அசையாமல், எல்லாச் சீடர்களுக்கும் சந்தர்ப்பம் கிடைக்கட்டும் என்று அமைதியாக அமர்ந்து இருந்தார்.



மகாசமாதி அடைவதற்கு சில மாதங்கள் முன் எடுக்கப்பட்ட
ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் அபூர்வ புகைப்படம்



ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளின் மகாசமாதி - திருவண்ணாமலை

பூரணமாக அபிஷேகம் முடிந்தபின், மெதுவாக எழுந்தார். அப்பொழுதே ஜுரம் வந்து விட்டது!

நாற்பது நாட்கள் ஜுரம் தொடர்ந்து இருந்தது. அவர் மிகுந்த நோய்வாய்ப்பட்டார். அந்த ஜுரத்துடனே அவர் எதையும் பாராட்டாமல், இங்குமங்கும் நடந்துகொண்டு இருந்தார். ஓய்வு எடுக்கச் சொல்லியும் அவர் கேட்கவேயில்லை. ஜுரம் மிகவும் அதிகமாக இருந்தது. ஏற்கெனவே மெலிந்த தேகத்தை உடைய அந்த மகான் இன்னும் மெலிந்து விட்டார். ஸ்வாமிகளால் நடக்க முடியாமல் போனபிறகுதான், கோவில் குருக்களின் வீட்டில் வராண்டாவில் படுத்துக் கொண்டார். ஸ்வாமிகளின் உடல்நிலை சரியில்லாத செய்தி காட்டுத்தீயைப்போல் பரவியது. மக்கள் எல்லா இடத்திலிருந்தும் ஓடிவந்து அவரைப் பார்த்தனர். அதில் மருத்துவர் களும் இருந்தனர். ஸ்வாமிகளைக் காப்பாற்றியே தீரவேண்டும் என்ற முடிவில் இருந்தனர். ஆனால் என்ன பயன்? ஸ்வாமிகள் மன உறுதியுடன் எந்த மருந்தையும் ஏற்றுக்கொள்ளவில்லை. உணவு தண்ணீர் எதையும் ஏற்றுக்கொள்ளவில்லை. அவருடைய சீடர்கள் என்ன செய்வார்கள்? அதை மிகுந்த கவலையுடனும் துக்கத்துடனும் பார்த்துக்கொண்டு இருந்தனர்.

சேஷாத்ரி ஸ்வாமிகளின் பூதஉடல் படுத்துக்கொண்டு இருந்தாலும், அவருடைய மனமானது தெய்வீகப் பேரொளியில் ஐக்கியமாகி இருந்தது. அவருடைய சீடர்கள் அவரைப் பார்க்க, நெடுந்தூரத்திலிருந்தும், பக்கத்திலிருந்தும் ஓடி வந்தனர். 'சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு உடல்நிலை சரியில்லை' என்னும் செய்தியைக் கேட்ட ஒரு அன்பர், சேலத்திலிருந்து திருவண்ணாமலைக்கு ஓடி வந்தார். சேஷாத்ரி ஸ்வாமிகளுக்காக சில ஆரஞ்சுப் பழங்களைக் கொண்டுவந்து இருந்தார். சேஷாத்ரி ஸ்வாமிகள் படுத்து இருந்த இடத்தை அடைந்தார். அவரைப் பார்த்தவுடன் ஸ்வாமிகள் எழுந்து உட்கார்ந்தார். அந்த அன்பர் கொண்டு வந்த ஆரஞ்சுப் பழத்திலிருந்து ஒன்றை எடுத்து, அதைக் கையினால் கசக்கிவிட்டு முகர்ந்து பார்த்துவிட்டு சாலையில் எறிந்தார். ஸ்வாமிகளைச்சுற்றி நின்று கொண்டிருக்கும் சீடர்கள் எல்லாரும் அவருடைய ஒவ்வொரு செயலையும் பார்த்துக் ' கண்ணீர் வடித்தனர். அவர்களுடைய அன்பான ஸ்வாமிகளின் முடிவுக்கான நேரம் நெருங்கிவிட்டது என்றும், ஸ்வாமிகள் இனிமேல் எப்பொழுதும் அவர்களுடன் இருக்க மாட்டாரோ என்று எண்ணியும் சோகத்தோடு இருந்தனர். கற்பனை

கூட செய்துபார்க்க முடியாத சோகம் அவர்களது உள்ளத்தில் குடி கொண்டு இருந்தது. நகமும் சதையும் போல, உடலும் உயிரும் போல, வானும் நிலவும் போல, மகானுக்கு இருந்த திருவண்ணாமலைப் பந்தத்தைப் பிரித்துப்பார்க்க முடியவில்லை. சேஷாத்ரி ஸ்வாமிகள் இல்லாமல், திருவண்ணாமலையை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. பலருடைய வாழ்க்கையில் அவர் முக்கிய அங்கமாகவே இருந்தார்.

கார்த்திகை மாதம் முடிந்தது. மார்கழி மாதம் ஆரம்பம் ஆயிற்று. மார்கழி மாதத்தில் கோயிலிலும், வீடுகளிலும், பூஜையும் விசேடமான வழிபாடுகளும் நடக்கும். சேஷாத்ரி ஸ்வாமிகள் எழுந்து கோயிலை நோக்கி நடந்து சென்றார். ஒரு சால்வையை மட்டும் அவருடைய மெலிந்த தோளில் போட்டிருந்தார். கோயிலுக்குள் நுழைந்தவுடன், அந்த மகான் கடைசி தடவையாக, அவருடைய தாய், தந்தையரான அருணாசலேஸ்வரரையும், உண்ணாமலை அம்மனையும் வழிபட்டார். முருகன் சந்நிதிக்கு, அவர் எப்பொழுதும் உட்காரும் இடத்திற்குச் சென்றார். அவரால் நடக்கக்கூட முடியவில்லை. மழையும் கடினமாகப் பெய்தது. எதையும் இலட்சியம் செய்யாமல் அந்த மகான் நடந்து சென்றார். தனது பத்தொன்பதாவது வயதிலிருந்து, நாள் தவறாமல், தரிசித்துக் கொண்டு இருந்த தெய்வங்களைத் தரிசிக்காமல் அவரால் எப்படி இருக்க முடியும்? நாற்பது வருடகால தெய்வீக வாழ்க்கை அல்லவா அது? மழை பெய்வதையும் இலட்சியம் செய்யாமல் தரிசனத்தை முடித்துக்கொண்டு, குருக்களின் வீட்டை நோக்கி வந்தார்.

சேஷாத்ரி ஸ்வாமிகள் வீட்டை நெருங்கிய போது அங்கே சேறுடன் கூடிய தண்ணீர் அந்தச் சாலையில் இருந்தது. சேஷாத்ரி ஸ்வாமிகள், அதில் வழுக்கி அந்தச் சேற்றிலேயே விழுந்து விட்டார். அதிலிருந்து எழுந்திருக்க அவர் மறுத்துவிட்டார். அவருடைய சீடர்கள், அவரை உள்ளே கொண்டுசெல்ல முயன்றனர். ஆனால் அந்த மகானோ யாரையும் தொடவே விடவில்லை! அவர் அந்தத் தண்ணீரிலேயே படுத்திருந்தார். மழை விடாமல் பெய்தது. ஜுரத்தினால் சக்தியற்று இருந்தபோதிலும், தொடர்ந்து அந்தச் சேற்றுத் தண்ணீரிலேயே படுத்துக்கொண்டு இருந்தார். அவருடைய அந்தக் காட்சி இறுதிக் காட்சியாக இருந்தாலும் உடலுக்கு முக்கியத்துவம் கொடுக்கக் கூடாது. உள்ளிருக்கும் ஆத்மாவிற்குத் தான் தலைசிறந்த முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும் என்பதைக் கடைசி முறையாக மக்களுக்குத் தெரிவிப்பதுபோல் இருந்தது.

இரவு இரண்டு மணிக்குத்தான் சேஷாத்ரி ஸ்வாமிகள், அவரை உள்ளே கொண்டுசெல்ல அனுமதி கொடுத்தார். வழிபாடுகள் எல்லாம் நடந்தன. நள்ளிரவு வரை சுந்தரகாண்டம் படிக்கப்பட்டது. சுப்புலக்ஷ்மி அம்மாள், குருவை வந்து பார்த்து மிகவும் கதறி அழுதார். "இந்த வீட்டிற்கு நீங்கள் மாறவேண்டும் என்று நான் சொல்லவில்லை. எப்படி நீங்கள் இப்படிச் செய்தீர்கள்?" என்று சேஷாத்ரி ஸ்வாமிகளைப் பார்த்துக் கேட்டாள். சேஷாத்ரி ஸ்வாமிகள் அவளை அன்புடன் பார்த்தார். அந்த யோகியின் ஆன்மா, ஆண்டவனுடன் இரண்டறக் கலக்கக்கூடிய சமயம் வந்து ஜோதியாய் ஒளிவீசத் தொடங்கியது. அந்த மகானின் முகத்தில் ஒரு புனித புதிய பேரொளி பிரகாசிக்கத் தொடங்கியது. அதைப்பார்த்த பொழுது, அது மற்றொரு உலகத்திலிருந்து வீசுவதாகத் தோன்றிற்று. கடைசி முறையாக மகானைத் தரிசிக்க வந்த அன்பர்கள், அந்தக் காட்சியைக் கண்டு திக்குமுக்காடிச் செய்வது அறியாது விழித்தனர்.

4-1-1929 விபவ வருடம், மார்கழிமாதம், இருபத்தொன்றாம் தேதி, வெள்ளிக்கிழமை பகுள நவமி அன்று, சேஷாத்ரி ஸ்வாமிகள், இந்த பூத உடலை விட்டு ஞான சரீரத்துடன் ஜீவசமாதி அடைந்தார். அவருடைய முகம், அமைதியாக, தெளிவாக இருந்தது. அவருடைய மனம், கடவுளின் வழிபாட்டுடன் ஒன்றிவிட்டது. அவருடைய ஆன்மா சிவனுடனும், சக்தியுடனும் இரண்டறக் கலந்து விட்டது. மகான் பிறந்த நேரத்தில் இருந்த கிரகநிலைதான், அவர் ஜீவன் முக்தி அடைந்த சமயத்திலும் இருந்தது. சத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் மஹாசமாதி அடைந்து, அருட்ஜோதியில் இரண்டறக் கலந்தார்.

சேஷாத்ரி ஸ்வாமிகள் நோய்வாய்ப்பட்டிருந்த நாளிலிருந்து, துக்கத்தில் வாடித் தவித்த திருவண்ணாமலை, அவர் மறைவைக் கேட்டு அழுதது. இறப்பு மனிதனுக்குத் துக்கத்தையே தருகிறது. பல ஆன்மாக்களுக்கு அருள்புரிந்த ஸத்குரு, இம்மண்ணுலகை விட்டுப் பிரிந்தபொழுது, மக்கள் அடைந்த துக்கமும், வருத்தமும், கட்டுக் கடங்காமல் இருந்தன. அதை வார்த்தையால் வர்ணிக்க இயலாது. சோகத்தின் மொத்த உருவமாகத் திருவண்ணாமலை இருந்தது.

துக்கத்தினால் வாடித் தவித்த சீடர்கள், மகானின் பூத உடலை இறுதி யாத்திரைக்குத் தயார் செய்துகொண்டு இருந்தனர். சந்தனம், தேன், பன்னீர் இவற்றால் ஸ்நானம் செய்யப்பட்டு புஷ்பங்களால்

அலங்கரிக்கப்பட்டது. பூஜையும் செய்யப்பட்டது. மகானின் அன்புக்குப் பாத்திரமான இரமண மகரிஷியும், தான் மிகவும் விரும்பிப் போற்றி, வணங்கிய மகானுக்கு இறுதி மரியாதை செலுத்த வந்தார். திருவண்ணாமலை மக்கள் அனைவரும் இப்பூவுலகிலே தெய்வமாக வாழ்ந்த அந்த மகானுக்கு அமைதியாக இறுதி அஞ்சலி செலுத்தினர். ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் பூதஉடல் மிகுந்த மரியாதையுடன் இப்பொழுது அவர் ஆசிரமம் இருக்கும் இடத்திலே அடக்கம் செய்யப்பட்டது.

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள், ஆயிரக்கணக்கான தன்னுடைய பக்தர்களைத் துயரத்தில் ஆழ்த்தி, இறைவனுடன் இரண்டறக் கலந்தார். நறுமணம் மிக்க அவருடைய தெய்வீக வாழ்க்கை இன்றும் மணம் வீசிக்கொண்டு இருக்கிறது. மாட்சிமை மிகுந்த வாழ்க்கை, இடைவிடாத தியானத்தோடு ஐம்பத்தொன்பது வருடகாலம் இருந்தது. ஸத்குருநாதர் தனது சீடர்களின் அக இருளைப் போக்கி, கருணைக்கடலாக, அருள்வெள்ளத்தைப் பெருக்கிக்கொண்டு, இந்த மனித சமுதாயம் மகிழ்ச்சியுடனும், அமைதியுடனும் வாழ, திருவண்ணாமலையில் அடிவாரத்தில் அமைந்துள்ள சூக்ஷ்ம ஜீவசமாதியிலிருந்து ஒளிவீசிக் கொண்டு இருக்கிறார். மகான் இறக்கவில்லை! ஜோதியே குருவாய், குருவே ஜோதியாய் மகான் நம்முடன் இன்றும் மாடம்பாக்கம், ஸ்ரீ சக்ர மஹாமேரு சக்திபீட பிருந்தாவனத்தில் 18-சித்தர்கள் புடைசூழ வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார்! முடிவில்லாத பயணம், கலியுகம் முடியும் வரையில் தொடரும். பேரொளி பரவும், ஒளிவீசும். ஆனந்தம் பெருகும்.

---

1. குருவருள் இல்லையேல் திருவருள் இல்லை.
2. குருவின் ஆசைகளை கட்டாயபடுத்தி பெறமுடியாது; இயல்பாகவே அது உன்னிடம் வரும்.
3. ஆத்மாவின் தகுதிக்கேற்ப குருவருள் கிடைக்கும்.

---

அத்தியாயம்-14

# சூட்சும ஒளி

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் 1929-ஆம் ஆண்டு தன் பூத உடலை விட்டுப் பிரிந்தார். அதனால் பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் தேற்றமுடியாத துக்கத்தில் ஆழ்ந்தனர். சேஷாத்ரி ஸ்வாமிகள் ஜீவசமாதியடைந்த பிறகு பல நிகழ்ச்சிகள் வெளிச்சத்திற்கு வரத் தொடங்கின. சூட்சுமப் பிரவேசத்தில் சீடர்களோடு தொடர்பு கொள்ளுவதும், மத்தியஸ்தர் மூலமாகத் தொடர்பு கொள்ளுவதும், தன்னை மறந்து அருள் நிலையில் மகான் சீடர்களுடன் பேசுவதும், அடிக்கடி தோன்றி காட்சிகொடுத்து மகான் அருள் செய்வதுமாகத் தகவல்கள் வந்தவண்ணம் இருக்கின்றன. முக்கியமாகத் திருவண்ணாமலை, ஊஞ்சலூர், கோயம்புத்தூர், மற்றும் சென்னை, ஆகிய இடங்களில் தெய்வீக சூட்சும இயக்கம் மூலம் மகான் அவ்வப்பொழுது ஆணை பிறப்பித்து வருகிறார். "எனது பூத உடல்தான் அழிந்து விட்டது. ஞான ஒளியில் ஆயிரம் சூரியன்கள் ஒன்று திரண்டாற்போன்று சக்தியோடு உங்களோடு காலம் எல்லாம் நான் வழிகாட்டுவேன்" என்று மகான் உணர்த்தி வருகிறார். தணியாத தாகத்தில் இருந்த சீடர்களுக்குத் தேனருவி பாய்வதுபோன்ற, இந்த மகிழ்ச்சிகரமான செய்தி புத்துணர்ச்சியை அளிக்கிறது. சரீரத்தோடு இருந்த நிலையைவிட சூட்சும அருள் மிகவும் வேகமாகப் பரவிவருகிறது. கருணைக்கரங்களால் அணைத்து, அவர் ஆட்கொண்ட ஆத்மாக்களைச் செம்மையான, மென்மையான பாதையில் இன்றுவரை நடத்திச் செல்கிறார். அவநம்பிக்கை அதிகமாக உலவும் இந்த உலகத்தில் இவை போன்ற செய்திகளை நம்பிக்கை அற்ற ஆன்மாக்களுக்குப் புரியவைப்பது மிகக்கடினம். தெய்வீக நிலையில் மனிதனை உயர்த்துவதே நோக்கமாகக் கொண்ட ஜீவன் முக்தரான சத்குருவிற்குச் சரீரம் தேவை இல்லை. எந்தச் சரீரத்தை வேண்டுமானாலும், புனித

ஆன்மா தகுதி உடையதாக இருந்தால், மகான் ஆட்கொண்டு அதன் மூலம் சீடர்களுக்கு வேண்டியதைச் சொல்லவேண்டிய நேரத்தில் சொல்லி, உணர்த்துவதை உணர்த்தி, செய்வதைச் செய்யவைப்பார். ஒளி பொங்கும் உள்ளத்தோடு அந்த ஆன்மாவின் இயல்புநிலையை இழக்கச் செய்து, மகான் ஆக்கிரமித்துக் கொள்வார். இது இன்றும் நடைபெறும் அதிசயம் ஆகும். நம்பாதவர்களைப்பற்றிக் கவலை இல்லை. நம்பியவர்களுக்கு இது ஒரு அரிய பெரிய வரப் பிரசாதமாகும்.

சென்ற அத்தியாயங்களில் மகான் பூதஉடலோடு அவரவர் வாழ்க்கையில் செய்த அற்புத நிகழ்ச்சிகளைப் படித்தோம். இனிவரும் அத்தியாயங்களில் ஜீவன் முக்தி அடைந்த பின்பும், சூட்சும இயக்கத்தில் அவர் செய்துவரும் அற்புதங்களைக் காண்போம். திருவண்ணாமலையில் உள்ள ஆஸ்ரமமும் மற்றும் அதிஷ்டானமும் இருப்பதுபோன்று, ஊஞ்சலூரிலும் காணலாம். கோயம்புத்தூர், சென்னை, காஞ்சிபுரம் ஆகிய இடங்களில் திருவுருவப்படப் பிரதிஷ்டையைக் காணலாம். மகான் விரும்பும் ஆன்மா உலகப் பணிக்கு, சமுதாய நலத்திற்காக உழைக்கத் தகுதி உடையது என்று எண்ணினால் அதை மகான் விட்டு விடுவதில்லை. அதுபோன்ற ஒரு நிகழ்ச்சியைக் கீழே காணலாம்.

தஞ்சாவூர் ஜில்லாவில், கும்பகோணத்திற்கு அருகில் கஞ்சனூர் என்னும் ஊரில், சமயப்பற்றும், ஆன்மீக வழியில் ஈடுபாடும் கொண்டிருந்த ஒரு குடும்பத்தில், இலட்சுமிநாராயண சர்மா என்பவர் பிறந்தார். அவர் தன் படிப்பை முடித்தவுடன் ஒரு தனியார் நிறுவனத்தில் பணிபுரிந்தார். குருஜி. சர்மாவின் ஒரு சகோதரி ஸ்ரீமதி. விசாலாட்சி சுவாமிநாதன் என்பவர் திரு. நாகசுப்ரமணிய சாஸ்திரி களிடம் ஸ்ரீ வித்யா வழிபாட்டு முறைப்படி உபதேசம் பெற்றவர். ஒவ்வொரு பௌர்ணமி அன்றும், அவர்கள் மிகவும் சிறப்பாகப் பூஜை செய்வார்கள். அந்த அம்மாளின் வீட்டில்தான் முதன்முதலில் குருஜி. சர்மா, சேஷாத்ரி ஸ்வாமிகளின் படத்தைப் பார்த்தார். அவருடைய சகோதரி, மகானைப்பற்றி மிகவும் விரிவாக அவருக்கு எடுத்துரைத்தார்.

ஸ்ரீமதிவிசாலாட்சியின் குரு ஸ்ரீநாகசுப்ரமணிய சாஸ்திரிகள், அவருடைய குரு பூக்கடை ஸ்ரீ சுந்தர சாஸ்திரிகள் ஆவார். அவருடைய தீட்சை நாமம் ''ஸ்ரீ ஆத்மாநந்தா'' என்பது. திரு. சுந்தர



ஸ்ரீமதி சரஸ்வதி அம்மாள், ஸ்ரீ விஸ்வநாதன்
(ஸ்ரீமதி. விசாலாட்சி, குருஜி சர்மாவின் பெற்றோர்கள்)



குருஜி சர்மாவும், ஸ்ரீமதி விசாலாட்சி ஸ்வாமிநாதனும்
மாடம்பாக்கம் ஸ்ரீ சக்ர மகாமேருவிற்கு பூஜை செய்கிறார்கள்



ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள்



ஸ்ரீ பூக்கடை சுந்தர சாஸ்த்ரிகள்
ஸ்ரீ நாக சுப்ரமண்ய சாஸ்த்ரிகள்



குரு ஸ்ரீமதி, ஸ்ரீ சுவாமிநாதன் தம்பதியினர்



குரு ஸ்ரீமதி, ஸ்ரீ கே.வி.எல்.என். சர்மா தம்பதியினர்

சாஸ்திரிகள், சேஷாத்ரிஸ்வாமிகளைத் தேடிக்கொண்டு திருவண்ணாமலைக்குச் சென்றார். மகானின் தரிசனம் மூன்று நாட்கள் அவருக்குக் கிடைக்கவில்லை. பிறகுதான் அவருக்கு அருணாசலேஸ்வரர் கோவிலில் உள்ள முருகன் சன்னிதியில் மகானின் தரிசனம் கிடைத்தது. ஸ்வாமி, அவருடைய தலையில் தண்ணீரைத் தெளித்துவிட்டு, ''அவரைப் போகலாம்'' என்று சொன்னார். அதுதான் அவருக்குக் கிடைத்த உபதேசமாகும். ஸ்ரீ சுந்தரேச சாஸ்திரிகள், சென்னைக்குத் திரும்பி, அவருடைய வைதீகப்பணியைத் தொடர்ந்தார். ஒருநாள் அவர் ஒரு வீட்டில் மணிவிழா வைபவத்தை முடித்தபிறகு, திருவண்ணாமலையிலிருந்து ''ஆபத்சஹாயர்'' என்பவர் அவரைத் தேடிக்கொண்டு வந்தார். சேஷாத்ரி ஸ்வாமிகள் அவரை உடனே பார்க்கவேண்டும் என்றும், அவரைத் திருவண்ணாமலைக்கு அழைத்துப் போவதற்காகவே வந்திருப்பதாகவும் கூறினார். திரு. சுந்தரசாஸ்திரிகளும், ஆபத்சஹாயர் உடன் கிளம்பி சென்றார். அங்கே அவருடைய குரு, சுந்தர சாஸ்திரிகளின் கையில் இருக்கும், ''நித்யோத்சவம்'' என்ற புத்தகத்தை வாங்கி, ''இதில் எல்லாம் அடங்கி இருக்கிறது'' என்று ஸ்வாமிகள் சொல்லிக் கொடுத்தார். திரு. சுந்தரேச சாஸ்திரிகளும், தனக்கு வேண்டிய அனைத்து விஷயங்களும் அதில் இருப்பதைக் கண்டார். அவருக்கு மகானின் பரிபூர்ண ஞான உபதேசம் இப்படியாகக் கிடைத்தது.

இப்படிப்பட்ட திரு. நாகசுப்பிரமண்ய சாஸ்திரிகள் ஸ்ரீ விசாலாட்சி குடும்பத்தினரோடும், குருஜி. சர்மா அவர்களுடனும் 1975-ஆம் வருடம் திருவண்ணாமலைக்குச் சென்றார். திரு. நாகசுப்பிரம்ணிய சாஸ்திரிகள், சேஷாத்ரி ஸ்வாமிகளின் சமாதியில் அபிஷேகம் செய்துவிட்டு, அந்த வருட ஆராதனை விழாவை அங்கே செய்தார். குருஜி. சர்மாவிற்கு அது ஒரு மறக்கமுடியாத அனுபவமாக இருந்தது. கடந்த கால அனுபவங்கள் மூலம் ஒவ்வொரு படியாகக் குருநாதரிடம் அவர் நெருங்குவதை உணர்ந்தார். இப்படியாக, ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் அருளாசி அவருடைய வாழ்க்கையில் கிடைக்கத் தொடங்கியது. திருவண்ணாமலையில் இருந்து திரும்பியவுடன், குருஜி. சர்மா ஒவ்வொரு பௌர்ணமி அன்றும் தவறாமல் பூஜை செய்து வந்தார். 1975-ஆம் ஆண்டு தொடங்கிய பௌர்ணமி பூஜை இன்றுவரை எவ்விதத் தடங்கலும் இல்லாமல் மகானின் அருளால் நடந்து வருகிறது.

1977-ஆம் வருடம் குருஜி. சர்மாவின் ஊரான கஞ்சனூரில், அவருடைய இளைய சகோதரியான ஸ்ரீமதி. இராஜேஸ்வரியுடன், பௌர்ணமி பூஜை செய்தார். குருஜி. சர்மா மெய்மறந்த நிலையில் இருந்தார். அவருடைய சகோதரி, பூஜைக்காக ஏற்றிவைத்த விளக்கின் ஒளியில் இருந்து மகான் எழுந்து வருவதைப் பார்த்தாள். அந்நாளிலிருந்து திரு. சர்மாவை ஆட்கொண்டு, சேஷாத்ரி ஸ்வாமிகள் வழிகாட்டியாக விளங்கத் தொடங்கினார். 1977-ஆம் ஆண்டு மார்ச் மாதம், 31-ம் தேதி, அன்னை பராசக்திக்கு ஒரு கோயில் கட்டுமாறு, ஸத்குருவிடம் இருந்து, ஆணை பிறந்தது. ஸ்வாமிகளின் வழி காட்டுதலின்படி அன்னை பராசக்தியின் சிலை ஒன்று கிடைத்தது. அதற்குத் திண்டுக்கல்லுக்கு அருகில் தெத்துப்பட்டி என்ற கிராமத்தில் தான் கோயில் கட்டவேண்டும் என்று அன்னை யிடமிருந்து ஆணை பிறந்தது. 'இராஜகாளியம்மன்' என்று திருநாமம் சூட்ட வேண்டும் என்றும் உத்தரவு கிடைத்தது. அன்னையின் ஆலயத்தைப் பார்த்தாக வேண்டும் என்ற தீவிர முயற்சியில், குருஜி. சர்மா தீட்சை வைத்துக் கொண்டு, சங்கல்பம் செய்துகொண்டு மற்றும் பல முக்கியஸ்தர்களின் துணையோடு செயல்பட்டார். ஸ்ரீ ராஜகாளியம்மனின் திருவருளைப் பற்றிய விவரங்களை பின்வரும் "ஸ்ரீ ராஜகாளியம்மனின் மகிமை" என்ற தனி அத்தியாயத்தில் தெரிந்து கொள்ளலாம்.

குருஜி. சர்மாவின் பூஜையும், வழிபாடும் தொடர்ந்தன. அச்சமயத்தில் அவருடைய வாழ்க்கையில் பலவித அற்புத அனுபவங்கள் ஏற்பட்டன. இந்த நேரத்தில்தான் 18 மாபெரும் சித்தர்களோடு சூட்சுமத்தில் பேசும் பாக்கியம் கிடைத்தது. தன் வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் சேஷாத்ரி ஸ்வாமிகள் வழிகாட்டுவார் என்ற முழு நம்பிக்கையுடன் குருஜி. சர்மா தன் வாழ்க்கை முழுவதும் ஸ்வாமிகளின் பாதத்தில் ஒப்படைத்தார். 1986-ஆம் வருடம், திரு. சர்மாவிற்குத் திடீரென்று மனதில் சொல்ல முடியாத துக்கம் உண்டாயிற்று. "இப்படியெல்லாம் நமது வாழ்க்கைக்கு வழிகாட்டியாக, கலங்கரை விளக்கமாகத் திகழும் மகானிற்குக் குரு காணிக்கையாக ஒன்றும் செய்யவில்லையே" என்று மனது ஏங்கிற்று. அந்த உணர்ச்சி நாளுக்கு நாள் அதிகமாகியது. அந்த அன்பான குருவிற்கு, தன் மீது கருணையைப் பொழிந்த அந்த மகானிற்கு, தான் என்ன கைம்மாறு செய்யப் போகிறோம் என்று ஆழ்ந்து யோசித்தார். பலவித நூல்களை ஆராய்ந்து பார்த்ததில், மகானிற்கு ஒரே விழாதான் கொண்டாட முடியும். அதுவும் அவர் மகாசமாதி ஆன அன்றைய

தினத்தில் ஆராதனை நடத்தலாம் என்பதைத் தெரிந்துகொண்டார். அந்த ஆண்டில் ஆராதனை நடத்துவதற்குத் தனக்கு உத்தரவு கொடுக்குமாறு தன்னுடைய குருவைப் பிரார்த்தனை செய்தார். முதலில் குருநாதர் மறுத்தார். பிறகு திரும்பத் திரும்ப வேண்டியதின் பயனாக, அவரைப் பலவிதமாகக் கெஞ்சி அவரிடமிருந்து உத்தரவு வாங்கினார். முதல் ஆராதனை சிறிய அளவில், குருஜி. சர்மாவின் வீட்டில் நடைபெற்றது.

அச்சமயத்தில் குருஜி. சர்மா அவர்கள், தனியார் நிறுவனத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். ஒருநாள் சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் இருந்து கட்டளை வந்தது. அவர் பார்த்து வந்த அந்த வேலையை உடனடியாக விடவேண்டும் என்றும், அவர் மக்களுக்காகச் சேவை செய்யவேண்டும் என்றும் கூறினார். இத்தருணத்தில் ஒன்று கூறவேண்டும். குருஜி. சர்மாவிற்குத் தன் பதினெட்டாவது வயதிலிருந்தே ஜோதிடத்திலும், நாடி ஜோதிடத்திலும் மிகுந்த ஆர்வம் இருந்தது. ஏகாக்ர சித்தத்துடன் குருவின் உத்தரவை அப்படியே நிறை வேற்றுவதைத் தவிர அவருக்கு வேறு எதுவும் தெரியாமல் தன் வேலையை இராஜினாமா செய்தார் குருஜி. சர்மா. பராமரிக்க மனைவியும், குழந்தைகளும் இருந்தும், ஸ்வாமிகள் தனக்கு ஒரு வழி காட்டுவார் என்று அவர் முழுநம்பிக்கையுடன் அந்த வேலையை விட்டார்.

வேலையை விட்ட குருஜி. சர்மா அவர்கள், குருநாதர் காட்டிய பாதையில் வாழ்க்கையை வகுத்துக்கொள்ள வழி தேடி அலைந்தார். தன் ஜோதிடக் கலையை மக்களிடையே பரப்ப ஆரம்பிக்கத் தகுதியான இடத்தை எங்கே போய் தேடுவார்? அதுவும் அதிகமான வாடகையும், அதிகமான நிலத்தின் விலையையும் உள்ள சென்னை மாநகரில் எங்கு போய் தேடுவார்? மயிலாப்பூரில் ஷீரடி சாயிபாபா கோவிலின் பின்புறம் உள்ள ஆஞ்சநேயர் கோவிலில் விசாரிக்குமாறு அவருக்கு சேஷாத்ரி ஸ்வாமிகள் வழிகாட்டினார். ஒரு பூ வியாபாரி ஒருவரை அணுகச்சொல்லி அவருக்கு உத்தரவு வந்தது. அவ்வாறே குருஜி. சர்மாவும் செய்தார். அந்த வீதியின் கடைசியில் அலுவலகத்துக்கு விடும்படியாக ஒரு இடம் இருக்கிறது என்று அந்த பூ வியாபாரி சொன்னான். குருஜி. சர்மா 1987-ஆம் வருடம் அக்டோபர் மாதம் 2-ஆம் தேதி மகானால் தேர்ந்தெடுக்கப் பட்ட அந்த இடத்தை உறுதி செய்தார். அன்றைய தினம் திரு. இராமமூர்த்தி அவர்கள் தலைமையில் ஜோதிட அலுவலகம் மகானின் அருளாசியால் தொடங்கப் பட்டது. இன்றும் அதே இடத்தில்தான்

''ஸ்ரீகுரு கம்ப்யூட்டர் ஜோதிடம்'' இருக்கிறது. அந்த இடத்தில்தான் குருஜி. சர்மா ஜோதிடக் கலையை மக்களுக்கு எடுத்துச்சொல்ல ஆரம்பித்தார். சேஷாத்ரி ஸ்வாமிகளின் கருணையினால் தீர்க்க முடியாத பல மனிதர்களின் பிரச்சினைகளைத் தீர்த்து வைத்தார்.

1987-ம் வருடம் குருஜி சர்மா அவர்கள் வாடகைக்கு எடுத்த அதேஇடத்தில் ஏறத்தாழ 20 ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. தன்னை நாடிவரும் அன்பர்களுக்கு ஸத்குருவின் துணையோடு அவர்களின் துன்பத்தைக் குறைப்பதற்கு ஆன்மீக வழியில் பரிகாரத்தைக் கூறுகிறார். 1986-ம் ஆண்டு முதல் குருஜி சர்மா அவர்கள் ஸத்குருவிற்கு சிறிய அளவில் ஆராதனையைத் தொடங்கினார். வருடங்கள் செல்ல, செல்ல மகானின் ஆராதனை, ஜெயந்தியைக் கண்டு களித்து பலனடைவதற்காக மக்களின் கூட்டம் அவருடைய மகிமையால் அதிகரித்தது.

உலகத்திலேயே முதன்மையான சக்திபீடமாக உருவாக்க வேண்டும் என்பது ஸத்குருவின் ஆணையும் அறநிலையத்தில் குறிக்கோள் ஆகும். மகானின் சூட்சும ஆணைப்படி அம்பிகையை மையமாக வைத்து சக்திபீடமாக அமைப்பதற்கு அறநிலையத்தினர் அயராது பாடுபட்டு வருகின்றனர். ஸ்ரீ ஆதிசங்கரர் வகுத்து கொடுத்த ஸ்ரீ வித்யா முறைப்படி உலகமாதா ஸ்ரீ லலிதா மகாதிரிபுர சுந்தரியை 4½ அடி உயரத்தில் ஒரே பச்சைக்கல்லில் ஸ்ரீ சக்கர மகாமேருவாக அறநிலையத்தினர் உருவாக்க இருக்கின்றனர். அம்பிகைக்கு வலப்புறம் உலக மகா ஸத்குருவான ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் சன்னதியும், இடப்புறத்தில் கேரளாவில் உள்ள குருவாயூரில் கொலுவீற்றிருக்கும் ஸ்ரீ குருவாயூரப்பனைப் போல் மாடம்பாக்கம் பதிணென்சித்தர் சக்திபீட பிருந்தாவனத்தில் அமைக்க இருக்கின்றனர். அதைத் தவிர ஸ்ரீ விக்னேஸ்வரர்க்கும், ஸ்ரீ முருகனுக்கும், ஸ்ரீ ஐயப்பனுக்கும், ஸ்ரீ ராமர், ஸ்ரீ நாகராஜர், ஸ்ரீ ராஜகாளியம்மன் ஆகிய தெய்வங்களுக்கும் தனித்தனி சன்னதிகள் அமையப் போகிறது.

அம்பிகையைச் சுற்றி உலகத்திலேயே வாழ்வில் ஒளி கொடுக்கின்ற 18-சித்த மகா புருஷர்களின் சன்னதிகளும் அமையப் போகிறது. மனிதன் துக்கக் கடலில் மூழ்கும்போது, உருவாக்கப் போகும் இந்த ஆலயம் மன அமைதியையும், மகிழ்ச்சியையும் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை. அறநிலையம் எடுத்துக் கொண்ட இந்த மாபெரும் பணி மிகவும் கடினமானதாகும். பதினெட்டு சித்த

மகா புருஷர்களுக்கும் ஒரே இடத்தில் சிலைகள் உலகத்திலேயே எந்தக் கோவிலிலும் வடிவமைத்தது இல்லை. அது இந்த கோவிலில் தான் வரப்போகிறது. இந்தக் கோவிலை உருவாக்குவது என்பது கடினமான முயற்சியாகும். அதுமட்டுமின்றி முதியோருக்கு இல்லம் கட்டுதல், ஏழைகளுக்கு இலவச உணவு அளிக்கும் அன்னதானக் கூடம், மருத்துவ உதவி, பள்ளிக்கூடம் அமைத்தல், சமரச சன்மார்க்க நெறிப்படி எல்லா மதத்தவர்களுக்கும் இடமளித்தல் போன்ற சமுதாய சமூக நலப்பணிகள் நிறைவேற்ற அறநிலையம் அயராது பாடுபட்டு வருகிறது.

குறைவான மனித உதவியும், நிதியுதவியும் வைத்து இப்பீடத்தை அமைப்பது என்பது கனவிலும் நினைக்க இயலாத முயற்சி ஆகும். இதற்கு எல்லாம் மூலக்காரணமாக இருப்பவர் தான் குருஜி கே.வி.எல்.என்.சர்மா அவர்கள். அவருடைய அயராத உழைப்பும், மகானிடமும் அம்பிகையிடமும் அவருக்கு உள்ள முழுநம்பிக்கையும், தன் வாழ்க்கையையே இதற்காக அர்ப்பணித்த அவருடைய தியாக உள்ளத்தையும் இங்கு கண்டிப்பாகக் குறிப்பிட வேண்டும். மகானிற்கு மகானாக விளங்கும் ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளின் பாதார விந்தங்களில் தன் வாழ்க்கையை அர்ப்பணித்தார். மகான் காட்டிய பாதையில் இன்றளவும் வாழ்ந்து வருகிறார்.

மகான் குருஜி சர்மா அவர்களிடம் சூட்சுமத்தில் பதினெட்டு சித்தர்களுக்கு கோவில் அமைக்கவேண்டும். பதினெட்டு சித்த மகா புருஷர்கள் யார் யார், அதற்கான சிலை அமைப்புகள், வழிபாட்டு முறைகள், எல்லாவற்றையும் தெளிவாகக் கூறினார். உலக க்ஷேமத்திற்காக, உலக நன்மைக்காக, மனித நேயத்திற்காக இக்கோவிலை உருவாக்க வேண்டும் என்றும் கூறினார். இது எப்படி சாத்திய மாகும்? ஸத்குருவின் அருளால் தான் முடியும். தெய்வங்களே துணையாக நின்று தெய்வங்களே தெய்வங்களுக்கு அமைத்துக் கொள்ளும் ஒரு மாபெரும் புண்ணிய ஸ்தலமாக, பதினெண் சித்தர் சக்திபீடம் மாடம்பாக்கத்தில் விளங்கும் என்பதற்கு இதுவே சாட்சியாகும்.

அப்படியென்ன இக்கோவிலில் சிறப்பு அம்சம் இருக்கிறது? தமிழ்நாட்டில் கோவிலுக்கு குறைவேது! அரிய பல கோவில்கள் திருப்பணிக்காக காத்துக் கொண்டிருக்கும் நிலையில், புதிதாக கோவில் கட்டுவதன் அவசியமென்ன? என்ற எண்ணம் வருவது

இயற்கை. பழனியில் எவ்வாறு ஸ்ரீ விநாயகர் அம்மை அப்பனை (பார்வதி, பரமேஸ்வரன்) சுற்றி வந்து ஒரு மாம்பழத்தின் மூலம் ஆசிகளை பெற்றாரோ அதுபோல, எல்லாத் தெய்வங்களின் அருளும் ஒரே இடத்தில் கிடைக்காதா என்று ஏங்கித் தவிப்பவர் களுக்கு, ஆன்மீக ஒளிவீசும் இந்தக் கோவில் ஒரு வரப்பிரசாதமாக அமையும் என்பதில் ஐயமில்லை. இக்கோவிலில் சிறப்பு அம்சங்கள் பல இருக்கிறது. அரூபமாக சிவனும், சக்தியும் இணைந்து சிவசக்தி ஐக்கியமாக காட்சி தருவதே ஸ்ரீ சக்ர மஹா மேருவாகும். ஸ்ரீ சக்ர மஹா மேரு பொதுவாக பஞ்சலோகத்தில் தான் இருக்கும். அதுவும் ஒன்று அல்லது ஒன்றரையடி உயரம் தான் இருக்கும். முன்னே குறிப்பிட்டது போல் சங்கரர் வகுத்துக் கொடுத்த, தலைசிறந்த ஸ்ரீ வித்யா முறைப்படி நாலரை அடி உயரமுள்ள ஒரே பச்சைக்கல்லில் ஸ்ரீ சக்ர மஹா மேரு அமைய உள்ளது. அதுமட்டுமின்றி, பச்சைக்கல் ஸ்ரீ சக்ர மஹா மேரு தங்கக் கலசம், விமானத்தில் அமைந்துள்ள திதி நித்யா தேவிகள் ஆகிய மூன்றும் ஒரே நேர்க்கோட்டில் அமையப் போவது இந்த பீடத்தின் ஒரு சிறப்பம்சம். திருநாகேஸ்வரத்தில், ராகுபகவான் எப்படி அருள் பாலித்துக் கொண்டிருக்கிறாரோ, அப்படி மாடம்பாக்கத்தில் அமைய உள்ளது. ஜாதகத்தில், ராகு, கேது, நாகதோஷம் உள்ளவர்கள், இத்தலத்திற்கு வந்து பரிகாரம் செய்து பலனைப் பெறலாம். ஸ்ரீ குருவாயூரப்பனுக்கு இக்கோவிலில் தனிச்சன்னதி உண்டு. குருவாயூரில் எப்படி கிருஷ்ண பகவானுக்குக் கோவில் அமைந்து உள்ளதோ அதுபோல் இத்தலத்திலும் அமைக்கத் திட்டமிட்டிருக் கின்றனர். சித்திர வேலைப்பாடும், கை வண்ணத்துடனும் மிக அழகாக, நேர்த்தியாக அமைக்கப் போகிறார்கள். இப்பீடம், லௌகீக வாழ்க்கையில் சுழன்று, அதிலேயே உழன்று கொண்டிருக்கும் மனித உள்ளத்துக்கு ஒளி கொடுக்கும் ஆலயமாக அமையும் என்பது சந்தேகமில்லை.

தத்துவம், உண்மை நிலை நாள்தோறும் நாம் அனுபவிக்கும் துன்பங்கள், ஆகியவற்றைப் பற்றியும் அதற்குண்டான அணுகு முறையும் நாம் சென்ற அத்தியாயத்தில் பார்த்தோம். எவ்வளவு தான் மனித முயற்சிகள் இருந்தாலும், ஸத்குருவின் ஆசிகளும், அவரின் வழிகாட்டுதலும் இல்லாமல், நாம் ஒரு அணுவைக் கூட அசைக்கமுடியாது. ஸத்குருவின் ஆன்மீக ஒளிதான், இருட்டான வாழ்க்கையிலிருந்து வெளிச்சத்திற்கு வருவதற்கு துணை இருக்கும்.

மதத்திற்கும், ஆன்மீகத்திற்கும் நடைபெறும் போராட்டத்திற்கு ஒரு தீர்வாக, ஒரு முடிந்த முடிவாக, சித்தர் தத்துவநெறிப்படி இந்த ஆலயம் அமைய இருக்கிறது. மதத்திற்கு அப்பாற்பட்டது சித்தர் தத்துவம். இந்தக் கருத்தைத் தான் ஸ்ரீ வித்யாவும் உபதேசிக்கின்றன. இவ்விரண்டிலும் ஆன்மாதான் பரிசுத்தமாக இருக்கவேண்டும் என்று போதிக்கின்றது. உடல் ஒரு கருவிதான் என்றாலும், திருமூலர் அவர்கள் கூறியது போல், நமது உடலே ஒரு கோவில். கோவிலில் வீற்றிருக்கும் உலக நாயகி ஸ்ரீ சக்ர மகா திரிபுரசுந்தரியை நமது ஆன்மாவினுள் இருக்கச் செய்து உடலையும் உள்ளத்தையும் சுத்திகரிப்பது தான் ஸ்ரீ வித்யா தத்துவம். அந்த உடலையே ஸ்ரீசக்ரமாக இயங்கச் செய்வது ஸ்ரீ வித்யா தத்துவம். உடலையே ஸ்ரீ சக்ரமாக்கி பூஜைசெய்வதுதான் ஸ்ரீ வித்யா முறை. அதைத்தான் சித்தர்களும் வாலை பரமேஸ்வரி என்று அவர்களுடைய பாடலில் குறிப்பிட்டிருக்கிறார்கள். கடவுள், ஒளி, எல்லையில்லா பயணம், இதை எப்படி வேண்டுமானாலும் கூறலாம். அதை அடைவதற்குத் தான் மனிதன் ஆன்மீக ஒளியோடும் குருவின் ஆசியோடும் முழு முயற்சியுடன் ஈடுபடவேண்டும்.

---

1. குருவே துணை என்று எப்பொழுதும் எண்ண வேண்டும்.
2. குருவின் புகழ்பரப்ப சீடன் ஒழுக்கத்துடன் இருந்து செயலில் ஈடுபட வேண்டும்.
3. மாயா சக்தியால் குரு விலகி இருப்பது போல் உனக்கு தோன்றுகிறது. அவர் உன்னிடம் தான் இருக்கிறார்.

---

அத்தியாயம்-15

# தங்கப் பாதுகைகள்!

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் 1929-ஆம் ஆண்டு மஹாஸமாதி அடைந்தார். நாட்கள் ஆக, ஆக மகான் சூட்சுமத்திலே அவர்களோடு வாழ்வதை சீடர்கள் உணரத் தொடங்கினார்கள். அந்த சூட்சும ஒளி அவர்களது வளமான வாழ்க்கைக்கு வழிகாட்டிற்று. ''வரருசி'' என்ற ஒரு பெரிய முனிவரால் இயற்றப்பட்ட இலட்சண சாஸ்திரத்தை முறைப்படி படித்த திரு. அரங்கராஜன், தான் படித்த அந்தக் கலையை குருஜி. சர்மா அவர்களுடன் விவாதிக்க ஒருநாள் தொடர்புகொண்டார். அந்த நேரத்திலே சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் இருந்து, அதிக கனம் இல்லாத, மரத்தில் பாதுகைகள் செய்து தருமாறு உத்தரவு வந்தது. திரு. அரங்கராஜன் அவர்கள் மகானின் ஆணைப்படி உடனே ஏற்பாடு செய்து பாதுகைகளைக் கொண்டு வந்து ஒப்படைத்தார். திரு. அரங்கராஜன் அவர்கள் வேதாந்த தேசிகரால் இயற்றப்பட்ட ''பாதுகா சகஸ்ரம்'' என்ற ஆயிரம் பாடல்களை முறைப்படி கற்றுத் தெரிந்தவர். ஸ்ரீரங்கநாதனின் பாதுகை மகிமைகளை வர்ணிப்பதாக அந்தப் பாடல்கள் அமைந்து உள்ளன.

நமது புராணங்களிலும், இதிகாசங்களிலும், பாதுகைகளுக்கு எவ்வளவு உன்னதமான உயர்ந்த நிலை அளிக்கப்பட்டுள்ளது என்பதை விவரிக்கத் தேவையில்லை. ஸ்ரீ இராமபிரான் வனவாசம் செய்தபோது, பரதாழ்வார், ஸ்ரீ இராமனின் பாதுகைகளை ஸ்ரீ இராமனையே நினைத்து நினைத்து பூஜை செய்து வந்ததை இராமாயணம் விவரிக்கிறது. ஸ்வாமி எங்கோ இருப்பதுபோல் தோன்றினாலும் தன் அருகிலேயே இருப்பதை உணர்த்துவதாகப் பாதுகைகள் திகழ்கின்றன. பாதுகைகள் கடவுளாகவே வழிபடப்படு கின்றன. வேதாந்த தேசிகர் பாதுகா சகஸ்ரத்தில் பாதுகைகளின் மகிமைகளைக் கீழ்க்கண்டவாறு விவரிக்கிறார்:-



ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளின் தங்கப்பாதுகைகள்




"குருவே சரணம்" - நாட்டிய நாடகம் -
ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் வாழ்க்கை வரலாறு -
நாட்டியக் கலைஞர்கள் மகானின் தங்கப் பாதுகைகளில்
மலர் தூவும் காட்சி

मणिपादुकयोर्युगं मुरारेः मम नित्यं विदधातु मङ्गलानि ।
अधिकृत्य चराचरस्य रक्षां अनुकंपाक्षमयोरिवावतारः ॥

*"மணிபாதுகயோர் யுகம் முராரே:*
*மமநித்யம் விதா தது மங்களானி*
*அதிக்ருத்ய சராசரஸ்ய ரக்ஷம்*
*அனுகம்பாக்ஷமயோ ரிவாவதார:*

'மஹாவிஷ்ணுவின் அந்தப் பொற்பாதுகைகள் எப்படி இருக்கின்றன?' என்றால் எல்லாவித மங்களங்களையும் மனமகிழ்ச்சி யையும் நமக்கு அளிப்பதாக இருக்கின்றன" சாமானிய மனிதனையும் காப்பாற்றக்கூடிய, இரட்சிக்கக்கூடிய, அந்த அழகிய திருப்பாதங்கள் என்னை ஆசீர்வதிக்கட்டும்!

திரு. அரங்கராஜன் அவர்கள் செய்துகொடுத்த பாதுகைகள் 1990-ஆம் ஆண்டு மயிலாப்பூர் பொம்மைச் சத்திரத்தில் நடந்த ஸத்குருவின் ஆராதனையின்போது, மக்கள் வழிபடுவதற்காக வைக்கப்பட்டு இருந்தன. அந்தப் பாதுகைகளுக்கு மஹா அபிஷேகம் நடந்து கொண்டிருந்த தருணத்தில் குருஜி. சர்மா அவர்களுக்குத் திடீரென்று மனதிலே ஒரு எண்ணம் உதித்தது. "இருள்வாழ்க்கையை நீக்கி, ஒளிபொருந்திய அருள் உலகத்திற்கு, தடுத்து ஆட்கொண்டு நம்மை எல்லாம் வழிகாட்டி நடத்திச்செல்லும் மகான் சேஷாத்ரி ஸ்வாமிகளின் பாதுகைகள் தங்கத்தில் அல்லவா ஜொலிக்க வேண்டும்? ஒரு குரு காணிக்கையாக அந்த மரப்பாதுகைகளுக்குத் தங்கக்கவசம் செய்ய வேண்டும்" என்னும் எண்ணம் பிறந்தது. அந்த எண்ணம் அவர் மனதிலே ஏற்பட்ட உடனே, குருஜி. சர்மா அவர்கள், ஒலிபெருக்கிமூலம் அங்குக் குழுமியிருந்த பக்தர்களுக்கு "அந்தப் பாதுகைகள் அடுத்த ஆராதனைக்குள் தங்கத்தால் செய்யப்பட வேண்டும்" என்று அறிவித்தார். அந்த வேண்டுகோளுக்கு உடனடியாகச் செவிசாய்க்கும் வண்ணம், திருமதி. ஜெயலஷ்மி சங்கரநாராயணன் அவர்கள், தன் கைகளில் இருந்த அந்தத் தங்க வளையல்களை அமைதியாக ஸத்குருவின் பாதுகைகளின்மீது சமர்ப்பித்தார் முழுமனதுடன், முழுநம்பிக்கையுடன் ஆனந்தக் கண்ணீர் பெருக அக்காணிக்கையை அவர் சமர்ப்பித்தார். இதைத் தொடர்ந்து மற்றும் சிலரும் மோதிரம், சங்கிலி, வளையல் போன்ற வற்றைக் காணிக்கையாகச் செலுத்தினர். அவர்கள் சேஷாத்ரி

ஸ்வாமிகளின் பாதுகைகள் தங்கத்தால் செய்யப்பட வேண்டும் என்று பேராவல் கொண்டனர். நம்மையே நாம் அலங்கரித்துக் கொண்டால் போதுமா? நமது ஆத்மாவிற்கு மெருகேற்றி அலங்கரிக்கும் மகானின் தங்கப் பாதுகைகளை நமது ஆபரணங்கள் அலங்கரிக் கட்டும் என்று எண்ணி, வாரி வழங்கிய அந்தப் பெண்மணிகள் எல்லாரும் பாக்கியசாலிகள்.

திரு. இலட்சுமிகாந்தன், அந்தப் பாதுகைகளுக்குத் தங்கக் கவசம் செய்யும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். மயிலை மாட வீதியில் அமைந்துள்ள "சோழா ஜுவல்லரியின்" உரிமையாளர்கள் செய்கூலி எதுவும் வாங்கிக்கொள்ளாமல், கடுமையாக உழைத்து, மிக அற்புதமாக அந்தப் பாதுகைகளை வடிவமைத்துக் கொடுத்தனர். அத்தருணத்திலே அப்பாதுகைகளுக்கு வெள்ளியின் பற்றாக்குறை ஏற்பட்டது. தேவையான வெள்ளியைத் தந்து உதவ திரு. இராமமூர்த்தி அவர்களும், அவருடைய மனைவி உமா ராமமூர்த்தியும் (பேபி) தாமாகவே உதவ முன்வந்தனர். பக்தர்களின் அன்புக் காணிக்கையாலும் உண்மையான பிரார்த்தனையாலும், பாதுகைகள் நேர்த்தியாகச் செய்து முடிக்கப்பட்டன. மஹா பாதுகை களுக்குமேல் வெள்ளியால் கவசம் செய்யப்பட்டு அதற்குமேல் நவரத்தினங்களால் இழைக்கப்பட்டு, மிக அழகாக உருவாக்கப்பட்டு, ஆத்ம திருப்தி அளிக்கும் வகையில் மகானின் அருளோடு ஒளி வீசிக்கொண்டு இருக்கின்றன. அப்பாதுகைகளைப் பூஜிப்பதற்காக, தங்கத்தில் தோய்த்து எடுக்கப்பட்ட வெள்ளி நாணயங்களும் செய்யப்பட்டன.

1990-ஆம் ஆண்டு நடந்த ஆராதனை விழாவில் வாக்குறுதி அளித்தபடி, 1991-ஆம் ஆண்டு ஆராதனை விழாவில் மரப் பாதுகைகள், தங்கப்பாதுகைகளாக மாறி மக்களின் வழிபாட்டுக்காக வைக்கப்பட்டு இருந்தன. யானை அந்தப் பாதுகைகளை முதலில் பூஜித்தது. பிறகு பக்தர்களும், சீடர்களும், எல்லோரும் பூஜித்தனர். இத்தருணத்தில் ஒன்றைச் சொல்லியே ஆகவேண்டும். பல சிக்கலான பிரச்சினைகளை வாழ்க்கையில் சந்தித்து வழிதெரியாமல் தத்தளித்துக் கொண்டிருந்த அன்பர்கள் பாதுகை பூஜை செய்தனர். அத்தனை பேருடைய சிக்கல்களும், நிவர்த்தியாகி மனசாந்தி அடைந்தனர். ஆராதனை விழா நிறைவு அடையும் தருணத்தில் பாதுகைகளை ஊர்வலமாக திருவீதி உலா எடுத்து வந்தனர். குருஜி. சர்மா குருநாதரின் பாதுகைகளைத் தன் தலையின்மேல் வைத்து, மேடையை

நோக்கி எடுத்துவரும் நேரத்தில், விண்ணுலக தேவதைகள் எல்லாரும் பூ மழை பொழிவது போல் இலேசாக மழைத் தூறல்கள் விழுந்தன. அளவிட முடியாத பேரானந்தத்தில் இங்குமங்கும், வேகமாக நடந்து கொண்டு இருந்த சேஷாத்ரி ஸ்வாமிகளின் தோற்றம் குருஜி. சர்மாவிற்குக் கிடைத்தது. பக்தர்கள் அன்போடு அளித்த அன்புக் காணிக்கைகளால் உருவான, அந்தத் தங்கப்பாதுகைகளை மகான் ஏற்றுக்கொண்டதை அது உணர்த்தியது. அந்தத் தங்கப் பாதுகைகளைப் புகைப்படம் எடுத்து, அதை அச்சடித்து எல்லோரும் வழிபடும் வகையில் புகைப்படங்களாக உருவாக்கி அறநிலையம் வழங்கி வருகிறது. இப்பாதுகைப் படத்தை வைத்துப் பூஜித்தால் போதும். நினைத்த காரியம் சித்தியாகும்.

திரு. அனந்தராமன் என்பவர், அவருடைய சொந்த அனுபவங்களை இங்கு சொல்கிறார். "என் வாழ்க்கையில் நடந்த ஒரு நிகழ்ச்சி இது. ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் கருணைக்கு ஒரு சான்றாகும். சில மாதங்களுக்குமுன் என்னுடைய குடும்பத்தினர் குருஜி. சர்மா அவர்களைச் சென்று பார்த்தனர். அவர் எங்களுடைய ஜாதகத்தைப் பார்த்து, "இந்த வருடம் முடிவதற்குள், மருத்துவச் செலவுகள் செய்யவேண்டிவரும்" என்று எச்சரிக்கை செய்தார். அந்தச் சமயத்தில் அதற்கு அவ்வளவாக முக்கியத்துவம் நாங்கள் கொடுக்கவில்லை. ஆனால், நவம்பர் மாதம் என் மகன் படிக்கும், இராஜஸ்தானில், பிலானியில் உள்ள பொறியியல் கல்லூரியிலிருந்து ஒரு அதிர்ச்சி தரக்கூடிய செய்தி வந்தது. அவன் தற்செயலாகப் பாதரசத்தை உட்கொண்டு விட்டான் என்றும், அவன் மிகவும் மோசமான நிலையில் இருக்கிறான் என்றும், அந்தக் கல்லூரியிலிருந்து தகவல் வந்தது. நாங்கள் விரைந்து பிலானிக்குச் சென்று எங்கள் மகனைப் பார்த்தோம். அவன் தன் நினைவற்ற நிலையில் இருந்தான். டில்லியில் அவனுக்கு முதலுதவி சிகிச்சை செய்யப்பட்டது. பின் சென்னையில் இருக்கும் அப்பல்லோ மருத்துவமனைக்கு அவன் கொண்டு வரப்பட்டான். இந்த மன அழுத்தத்தைத் தாங்க முடியாமல் என்னுடைய மனைவி ஒருநாள், "ஸத்குரு இதற்கு ஏதாவது செய்து வழிகாட்டமாட்டாரா?" என்று குருஜி. சர்மாவைப் பார்க்கச் சென்றாள். குருஜி. சர்மா அவர்கள் அப்பொழுது அங்கு இல்லை. திருமதி. இராதா சர்மா எனது மனைவிக்கு ஆறுதல் சொல்லியபின் என் மனைவி, அந்தத் தங்கப் பாதுகைகளின்மீது காணிக்கை வைத்துவிட்டு, ஸ்ரீசேஷாத்ரி

ஸ்வாமிகளிடம் தீவிரமாகப் பிரார்த்தனை செய்து மகனுக்கு உயிர் கொடுக்க வேண்டினாள். தன் சுமை எல்லாம் ஸத்குருவின் தங்கப் பாதுகைகளில் இறக்கி வைத்துவிட்டு நிம்மதியான மனதுடன் மருத்துவமனையை அடைந்தாள். குருஜி. சர்மா அவர்களிடம் இந்த விபத்தைப் பற்றிச் சொன்னவுடன், "ஸத்குருவின் கருணையினால் உங்கள் மகன் பூரண குணம் அடைவான் என்றும் அவன் தன் படிப்பையும் முடிப்பான்" என்றும் சொன்னார். மூன்று வார சிகிச்சைக்குப் பிறகு என் மகன் பூரணகுணம் அடைந்தான். இதற்கான செலவைக் கணக்கிட்டுப் பார்த்தால், ஒரு லட்சத்திற்கும் மேல் செலவழிந்து விட்டது!

மேற்கூறிய இந்நிகழ்ச்சி எதைக் குறிக்கிறது என்றால் ஸத்குரு கூறியவாறு நடந்தன. அவருடைய சொற்கள் உண்மையாயின. பிறகு ஆபத்தான நிலையிலிருந்து ஸத்குருவின் தங்கப் பாதுகைகள் தான் காப்பாற்றின.

ஸத்குருவின் பல பக்தர்களுக்குப் பாதுகைகளைப் பூஜிப்பது ஒரு பிரார்த்தனை ஆகிவிட்டது. அதில் அவர்கள் விவரிக்க முடியாத மன அமைதியையும் ஆத்ம திருப்தியையும் அடைகின்றனர். பௌர்ணமி நாட்களிலே, விசேடமாகத் தங்கப்பாதுகை பூஜை நடைபெற்று வருகிறது. அந்தநேரத்தில் பலரும் கலந்துகொண்டு, பாதுகை பூஜையில் பங்கேற்று, சேஷாத்ரி ஸ்வாமிகளின் அருளாசியைப் பெறுகின்றனர். ஒரு சிறிய அளவில் பிரார்த்தனை செய்தாலும் போதும், நினைத்த மாத்திரத்திலேயே மகான் ஓடோடி வந்து பக்தர்களுக்கு நல்லாசிகளை வழங்குவார். மகானின் உண்மையான சீடர்களுக்கு, அந்தத் தங்கப்பாதுகைகள் ஒப்புயர்வற்ற ஒரு அபூர்வமான அற்புதப் பொக்கிஷமாகும். கலியுகக் காமதேனு என்றுகூடக் குறிப்பிடலாம். அந்தப் பாதுகைகளில் சரணாகதி அடைந்துவிட்டால், எப்படிப்பட்ட சிக்கலாக இருந்தாலும் தீர்ந்து நல்வாழ்வு கிடைக்கும் என்பது உறுதி!

அத்தியாயம்-16

# ஸத்குருவின் ஆராதனை ஜெயந்தி விழா

தமது வாழ்விற்கு வழிகாட்டியாக குருவாக, ஆசானாக, கலங்கரை விளக்கமாக, எல்லாமாக விளங்கும் ஸத்குருவிற்கு ஒன்றும் செய்ய முடியவில்லையே என்ற ஏக்கம் குருஜி சர்மாவின் மனதை மிகவும் வாட்டியது. பலவித நூல்களை ஆராய்ந்து பார்த்ததில் குருவிற்கு ஆராதனை ஒன்று மட்டும்தான் செய்ய முடியும் என்பதை உணர்ந்து தன் குருவிடமே பிரார்த்தனை செய்தார். சூட்சுமத்தில் வந்த மகான் முதலில் மறுத்து குருஜி சர்மா அவர்கள் பலவிதமாக வேண்டி பிரார்த்தனை செய்தபின் ஒப்புக் கொண்டார்.

அன்று சிறிய அளவில் குருஜி சர்மா அவர்களின் இல்லத்தில் தொடங்கிய ஆராதனையும், ஜெயந்தியும், இன்று பெரிய, பெரிய மண்டபங்களில் நடைபெற்று வருகிறது. ஆயிரக்கணக்கான பக்தர்கள் இந்த விழாவில் கலந்து கொள்கிறார்கள். பூஜைகளையும், ஹோமங்களையும் அறநிலையத்தினர் உலக நன்மைக்காகவும், மக்கள் நலனை மனதில் கொண்டும் நடத்தி வருகின்றனர். அன்னதானமும், சமுதாய நலப்பணிகளும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. அது மட்டுமின்றி வாழ்வில் நலிந்த பெண்களுக்கு, தையல் இயந்திரங்களும், முதியவர்களுக்கு மருத்துவ சேவையும் செய்து வருகின்றனர்.

மனச்சுமைகளை இறக்கி, ஆராதனை விழாவிலும், ஜெயந்தி விழாவிலும் பக்தர்கள் பங்கேற்று எல்லையில்லா மகிழ்ச்சியை அடைகின்றனர். இந்த சித்தர் பீடத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகள் அனைத்திலும் எல்லா மதத்தவரும், எல்லா இனத்தவரும் மொழி

வேறுபாடின்றி கலந்து கொள்ளலாம். சித்தர் தத்துவம் இதன் மூலம் நிலைநாட்டப்படுகிறது.

1991-ம் ஆண்டு நடைபெற்ற ஆராதனை விழாவின் போது, மகானின் மரப்பாதுகைகள், அன்பர்கள் பலர் கொடுத்த பொன்னாலும் பொருளாலும் தங்கப் பாதுகைகளாக மாறின. 1993-ம் ஆண்டு நடந்த ஆராதனை விழாவின் போது இந்த தங்கப் பாதுகைகளை தாங்கி நிற்க அழகான தங்கத் தாமரை மலர்ந்தது. அந்த தங்கப் பாதுகைகளை புகைப்படம் எடுத்து, அதனை அச்சடித்து எல்லோரும் வழிபடும் வண்ணம், அறநிலையம் வழங்கி வருகிறது. பாத தரிசனம் பாப விமோசனம். பல அன்பர்கள் வழங்கிய தங்கம், வெள்ளி மற்றும் ஐம்பொன்கள் மூலம் ஸத்குரு நாதருக்கு 1995-ம் ஆண்டு ஆராதனை விழாவின் போது அழகிய திருஉருவச் சிலையை அமைத்தனர். ஒவ்வொரு மாதமும் மகானின் ஜென்ம நட்சத்திரமான ஹஸ்தம் அன்று அறநிலைய புரவலர்கள் புடைசூழ அபிஷேகமும் பூஜையும் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

ஒவ்வொரு வருட ஆராதனை, ஜெயந்தி விழாக்களின் போது மக்கள் நலனை மனதில் கொண்டு உலக க்ஷேமத்திற்காக பல தரப்பட்ட ஹோமங்கள் நடைபெற்று வருகின்றன. 1994-ம் ஆண்டு நடந்த ஆராதனை, ஜெயந்தி விழாக்களின் போது தொடங்கிய ஹோமங்கள் இன்றுவரை நடைபெற்று வருகிறது. அதனுடைய பட்டியல் பின்வருமாறு :

1. கஜ பூஜை 2. அஸ்வ பூஜை 3. சண்டி ஹோமம், 4. ஸ்ரீ சந்தான கோபால கிருஷ்ண ஹோமம் 5. ஸ்ரீ லக்ஷ்மி குபேர தனாகர்ஷண ஹோமம் 6. மகா சுதர்சன ஹோமம் 7. ஸ்ரீ ராஜ மாதங்கி ஹோமம் 8. ஸ்ரீ நவக்கிரஹ ஹோமம் (குரு) 9. ஸ்ரீ மஹா மிருத்யுஞ்ச ஹோமம் 10. ஸ்ரீ சண்முக காயத்ரி ஹோமம் 11. ஸ்ரீ துர்கா சாந்தி ஹோமம் 12. ஸ்ரீ சொர்ணா கர்ஷண பைரவ ஹோமம் 13. ஸ்ரீ ருத்ர ஹோமம் 14. ஸ்ரீ லக்ஷ்மி பூஜை 15. ஸ்ரீ கார்த்த வீர்யார் ஜுன ஹோமம் 16. ஸ்ரீ சரபேஸ்வர ஹோமம் 17. ஸ்ரீ ஷோடச மஹா கணபதி ஹோமம் 18. ஸ்ரீ புருஷ சுத்த ஹோமம் 19. ஸ்ரீ வெங்கடாசலபதி ஹோமம் 20. ஸ்ரீ சபரி மலை ஐயப்பன் (தர்மசாஸ்தா) பூஜை 21. ஸ்ரீ சூரிய ஹோமம் 22. ஸ்ரீ த்ரை லோக்ய மோகன கௌரி ஹோமம் 23. ஸ்ரீ குபேர சௌபாக்யலக்ஷ்மி பூஜை 24. ஸ்ரீ தன்வந்திரி ஹோமம் 25. ஸ்ரீ வாஞ்சா கல்ப கணபதி ஹோமம் 26. ஸ்ரீ நகுல சரஸ்வதி ஹோமம்



ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளின் ஆராதனை விழா



ஆராதனை விழாவில் நடந்த ஹோமம்





ஆராதனை விழாவில் நடந்த ஹோமம்





ஆராதனை விழாவில் நடந்த ஹோமம் - பூர்ணாஹூதி

27. ஸ்ரீ சனீஸ்வர பீரித்தி ஹோமம் 28. ஸ்ரீ ருணஹர கணபதி ஹோமம் 29. ஸ்ரீ உச்சிஷ்ட கணபதி ஹோமம் 30. ஸ்ரீ அன்னபூரணி ஹோமம் 31. ஸ்ரீ சாகம்பரி ஹோமம் 32. ஸ்ரீ வித்யா ஹோமம் 33. ஸ்ரீ க்ஷிப்ர பிரசாத கணபதி ஹோமம் 34. ஸ்ரீ குரு பகவான் ஹோமம் 35. சனீஸ்வர சாந்தி ஹோமம் 36. ஸ்ரீ கனகதார ஹோமம் 37. ஸ்ரீ அஷ்ட பைரவர் ஹோமம் 38. சர்வாரிஷ்ட ஹர துர்கா சாந்தி ஹோமம் 39. ஸ்ரீ மோகன கணபதி ஹோமம் 40. ஸ்ரீ ராகு, கேது ஹோமம் 41. ஸ்ரீ குரு பெயர்ச்சி ஹோமம் ஆகிய ஹோமங்கள் நடந்த சென்ற ஆராதனை, ஜெயந்தி விழாக்களில் நடைபெற்றன.

"மாடம்பாக்கம் கிராமத்தில், பதினென் சித்தர் சக்தி பீடம் அமைய, மகான் அடையாளம் காட்டி நிலத்தில் அவரது ஆணைப்படி, குருஜி சர்மா அவர்களின் தலைமையில் ஆராதனை விழாவை அறநிலையத்தினர் நடத்தினர். குண்டும், குழியுமாக இருந்த அந்த நிலத்தை சீராக்கி, அதில் விழாவை கொண்டாடினார்கள்.

இயல், இசை, நாடகம் ஆகியவற்றில் தேர்ச்சி பெற்ற இளம் திறமைசாலிகளை, அறநிலையத்தினர் ஊக்குவிக்கின்றனர். ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் வாழ்க்கை வரலாற்றை உணர்த்தும் ("ஸ்ரீ குருவே சரணம்") என்ற தலைப்பில், சேஷாஞ்சலி கலைக் குழுவினர் நாட்டிய நாடகமாக, பாரம்பரிய மிக்க நடையில் அரங்கேற்றம் செய்தனர். அதுபோல் ஸ்ரீ வித்யா முறையில் அம்பிகையின் பத்து அவதாரங்களை உணர்த்தும், "தச மஹா வித்யா" என்ற நாட்டிய நாடகத்தையும் அரங்கேற்றம் செய்தனர். இந்த நாட்டிய நாடகம் இங்கு மட்டுமன்றி, சிங்கப்பூரிலும் அரங்கேறி அமோக வெற்றியை பெற்றது.

பல புத்தகங்களை (ஆங்கிலத்திலும், தமிழிலும்) அறநிலையத் தினர் வெளியிட்டுள்ளனர். அதில் குறிப்பிடத்தக்கது. ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் மகாத்மியம் (ஆங்கிலம், தமிழ் இரு மொழிகளிலும்) அருள் மணி மாலை, பதினெட்டு சித்தர்கள் பூஜை முறைகள் ஆகியவை ஆகும். 2002-ம் ஆண்டு நடந்த ஆராதனை விழாவின் போது பதினென் சித்தர் சக்தி பீட மலர் ஒன்றையும் வெளியிட்டனர்.

ஸ்ரீ சக்தி பீட மகா கணபதி, ஸ்ரீ மஹா மேரு, ஸ்ரீ கிரஹலக்ஷ்மி, ஸத்குருவின் பலதரப்பட்ட வரைப்படங்கள் ஆகியவற்றை அற

நிலையத்தினர் வெளியிட்டுள்ளனர். ஸத்குருவின் சூட்சும ஆணைப்படி வரைய ப்பட்ட கிரஹலட்சுமியின் படம், எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தது போல் உள்ளது. சோதனையான கால கட்டத்தில் இப்படத்தை வைத்து பூஜித்த அன்பர்கள் அடைத்த அனுபவம் ஒவ்வொன்றும் புதுமையானது, அற்புதமானது புனிதமாக கருதப்பட்டு பலதரப்பட்ட மக்கள் இதை வாங்கி பயன் அடைத்துள்ளனர். இதை பற்றிய விவரங்களை "ஸ்ரீ கிரஹலக்ஷ்மி" என்ற தனி அத்தியாயத்தில் காணலாம்.

மகான் சூட்சுமத்தில் எந்த இடத்தில் பதினெண் சித்தர் சக்தி பீடம் அமைய வேண்டும் என்று கூறினாரோ எந்த நிலத்தில் 1995ம் வருட ஆராதனை விழா இனிதாக நடந்தேறியதோ அந்த நிலத்தை சொந்தமாக்க தமிழக அரசிடமிருந்து வாங்குவதற்கு குருஜி சர்மா அவர்கள் தலைமையில் அறங்காவலர்கள் அயராது பாடுபட்டனர். அருள்மிகு தேனுபுரீஸ்வரர் ஆலயத்திற்கு சொந்தமான அந்த நிலத்தை அரசு நிர்ணயித்த விலையைக் கொடுத்து வாங்குவதற்கு அறங்காவலர்கள் அனுபவித்த வேதனைகள், பட்ட பாடுகள் வார்த்தைகளால் வர்ணிக்க இயலாது. சக்தி பீடத்தின் முக்கியத்துவத்தை அரசு ஊழியர்கள் சரியாக உணராத காலத்தில் அவர்கள் ஆவணங்களை தயார்படுத்தி அவர்களுக்கு கொடுப்பதற்கு ஏறத்தாழ ஒன்றரை வருட காலம் ஆகியது. அதற்குள் அரசு மாற்றம் ஏற்பட்டது, புதிய அரசுக்கும் புரிய வைத்தது. அரசு அலுவலகத்திற்கு பல தடவை சென்று தகுந்த ஆவணங்களை தயார் செய்து கொடுத்து, அவர்கள் ஒப்புதல் தருவதற்கு ஏறத்தாழ ஆறு வருடங்கள் ஆகியது. மகான் சூட்சுமத்தில் கூறியபடி பகீரத பிரயத்தனம் தான் நடந்தது. இறுதியில் ஸத்குருவின் ஆசியோடும், குருஜி சர்மா அவர்கள் தலைமையில் அறங்காவலர்கள் எடுத்த கடுமையான முயற்சினாலும் தான் வெற்றிக் கனியாக நிலம், கிடைத்து அது அம்பிகையின் இதயக் கனியாக மாறியது. இதில் செயலாளர்களான திரு. நாகராஜன், திரு. இராமசுப்ரமணியன் அவர்களின் பணி மிகவும் மகத்தானது. எடுத்த காரியத்தில் தளராத தன்மையும், குருஜி சர்மா அவர்கள் மூலம் ஸத்குரு சூட்சுமத்தில் கூறியப்படி சிறிதும் பிறழாமல் எடுத்து கொண்ட முயற்சியும் நிலம் கிடைக்க உதவியது. அரசு நிர்ணயித்த விலையை கொடுத்து அறக் கட்டளை வாங்கி முறைப்படி பதிவு செய்தது. அதற்காக அவர்கள் சந்தித்த இன்னல்கள், தடைகள் எத்தனை? அப்பப்பா! எத்தனை? எத்தனை? **தடைக்கல் எல்லாவற்றையும் படிகல்லாக்கி, கருங்கல் திருப்பணியாக மாற, ஸத்குருநாதர்**

வழிகாட்டினார். இந்த சமயத்தில் ஒன்று சொல்லியே ஆக வேண்டும். அரசு ஆவணங்கள் அனைத்தையும் ஒன்று விடாமல் நேர்மையான முறையில் நிறைவேற்ற வேண்டும் என்பதில் குருஜி சர்மா அவர்கள் மிகவும் உறுதியாக இருந்தார். அரசு நிர்ணயித்த விலையை கட்டி வாங்குவதற்கு பணம் பற்றாகுறை ஏற்பட்டது. எல்லா மத இனத்தவரின் இரத்தமும் ஒன்றாக கலந்து சக்தியை கொடுத்து சித்தர் சக்திபீடமாக, பராசக்தி பீடமாக, ஒரே சக்தி பீடமாக இன்று நமக்கு காட்சியளித்து கொண்டு இருக்கிறது. இந்த கால கட்டத்தில் தான் குருஜி சர்மா அவர்கள், மகானின் உபதேசங்களை உலக முழுவதும் பரப்புவதற்காக தன் உடல் நலத்தையும் பொருட்படுத்தாமல் உலக முழுவதும் சுற்றி வந்தார். எத்தனை இன்னல்கள் வந்தாலும், அவருடைய சோர்வு அடையாத தன்மையும், கடினமான உழைப்பும், எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தது போல், தன் குருவின் கட்டளைகளை சிறிதும் வழுவாமல், ஏன் எதற்கு என்று கேள்விகள் கேட்காமலும் செய்ததால்தான் இந்த மாபெரும் திருப்பணி நிறைவேறியது.

இறுதியாக அரசு ஆணையில் ஒரே தவணையில் தான் இந்த பணத்தை கட்ட வேண்டும் என்ற நிலை இருந்த பொழுது, என்ன செய்வது, பணம் பற்றா குறையை எப்படி ஈடு செய்வது என்று அறங்காவலர்கள் பரிதவித்த சமயம், துபாயில் வசிக்கும் புரவலர்கள் செய்த பேருதவியை வாழ்வில் மறக்க முடியாத சம்பவமாக அமைந்து விட்டது. அவர்கள் தங்கள் இரத்தத்தையே தானமாக கொடுத்து பண பற்றாகுறையை ஈடுசெய்து நிலத்தை வாங்குவதற்கு உதவி செய்தனர். ஆறு வருட போராட்டத்திற்கு பிறகு ஸத்குரு சூட்சுமத்தில், சக்தி பீட பிருந்தாவனம் அமைப்பதற்கு உரிய நிலம் அறநிலையத்திற்கு கிடைத்தது.

அம்பிகையின் அருளாலும், மகானின் வழிகாட்டுதலாலும் நிலம் கிடைத்தது. நிலம் கிடைத்தால் மட்டும் போதுமா? அதில் மகான் சூட்சுமத்தில் கூறியபடி, சக்தி பீட பிருந்தாவனம் அமைய வேண்டாமா? அடுத்த கட்டமாக அந்த வேலையை தொடங்குவதில் அறநிலையத்தினர் மும்முரமாக ஈடுபட்டனர்.

அத்தியாயம்-17

# ஸ்ரீ வித்யா - ஒரு அபூர்வ வழிபாட்டு முறை

மெய்ப்பொருள் ஒன்றுதான். அதிலிருந்து உற்பத்தியானது தான் இந்த இரண்டு பிரிவுகள். ஆண், பெண், அசுர சக்தி, தேவசக்தி, நாஸ்திகம், ஆஸ்திகம் முதலியவைகளை உதாரணமாக கூறலாம். இங்கு ஆண் என்பதற்கு சிவபெருமானையும், பெண்ணிற்கு சக்தியையும் குறிப்பிடுகிறது. வேதகாலம் தொட்டு, சக்தி வழிபாடு என்பது இருந்து கொண்டுதான் இருக்கிறது. சக்தியையும், சிவனையும் இணைத்து அரூபமாகவும், யந்திர மூலமாகவும் அல்லது உருவம் கொடுத்து சிலைகளாகவும் சக்தியை வழிபட்டு வருகின்றனர். சிவன்-சக்தி இணைந்த வடிவமாக வழிபடுவது ஒரு முறை.

இந்த முறையிலிருந்து வந்ததுதான். ஸ்ரீ ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ வித்யா முறை. ஸ்ரீ ஆதிசங்கரர் ஒரு தத்துவ ஞானியாவார். ஸ்ரீ வித்யா என்பது ஸ்ரீ என்ற அம்பிகையின் ஆதிமெய்பொருளை உணர்ந்து கொள்ளுதல். அது நமது ஆன்மாவிற்கு விடுதலை கொடுக்க கூடிய, மோட்ச கதியை கொடுக்க கூடிய ஒரு பாதையாகும். அன்னையிலிருந்து உற்பத்தி ஆனதுதான் இந்த உலகம் என்பதை கருத்தில் கொண்டு பார்க்கும் பொழுது எந்த தேவதையை வழிபட்டாலும் இறுதியில் வந்து சேர்வது அம்பிகையிடம் தான். அம்பிகையையே ஸ்ரீ லலிதா மகாதிரிபுரசுந்தரியை இயந்திர வழிபாடு செய்வதுதான் ஸ்ரீ சக்ரம் என்று சொல்லக்கூடிய ஸ்ரீ சக்ர மகாமேரு. ஸ்ரீ சக்ரத்தின் வடிவமைப்பு யாராலும், எளிதில் புரிந்து கொள்ள இயலாத ஒரு அமைப்பாகும். ஸ்ரீ சக்ரம் ஒன்பது முக்கோணங்களை உடையது. நடுப்பாகம் தான் பிந்துவாகும். சக்ரத்தின் வட்டம், முக்கோணம்,

சதுரம் தளங்கள் ஆகியவைகள் உள்ளன. முக்கோணம், சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், சாத்வீகம், ரஜஸ் தமஸ் போன்று மூன்றாக உள்ள சக்தியை குறிக்கிறது. முக்கோணம் மேல் நோக்கியிருப்பது சாதகனின் உயர்ந்த லட்சியத்தை குறிக்கிறது. முக்கோணம் கீழ்நோக்கியிருப்பது பராசக்தியின் அம்சமாகும். ஒரு முக்கோணம் மேல் நோக்கியும் ஒன்று கீழ் நோக்கியும் ஷட்கோணமாக இருப்பது சாதகனின் உயர்ந்த லட்சியத்தையும், இறையருள் அவனை நோக்கி வருவது குறிக்கிறது. மேல் நோக்கி இருப்பது சிவபெருமானையும், கீழ்நோக்கி யிருப்பது சக்தியையும் உணர்த்துகிறது. முக்கோண வடிவம். அரூபமாக சிவனும், சக்தியும் இணைந்து சிவசக்தி ஐக்கியமாக காட்சி தருகிறது. சிவனும், சக்தியும் இணைந்து எல்லா சக்திகளையும் ஆட்டி படைத்து ஒரே சக்தியாக பராசக்தியாக காட்சி அளிப்பது, முக்கோண வடிவத்தின் தத்துவமாகும். பிரதோஷ காலத்தில் ஸ்ரீ நந்திகேசுவரரின் இரு கொம்புகளுக்கு இடையே பஞ்ச சக்திகளும் ஒரே சக்தியாக இணைத்து ரிஷபவாகனத்தில் காட்சியளித்து கொண்டு அரும்பெரும் நாட்டியமாக உலகத்தையே ஆட்டுவித்துக் கொண்டும், நம்மை அரவணைத்து அருள்பாலித்து கொண்டிருக்கும் நாட்டியம்தான் வெட்டவெளி நாட்டியமாகும். அதையே ஆங்கிலத்தில் (Cosmic Dance) என்று சொல்லுவார்கள். முக்கோணத்தின் ஒவ்வொரு வடிவம், நமக்கு கோடானு கோடி தத்துவங்களை உணர்த்துகிறது. ஸ்ரீ சக்கரத்தை சுற்றி பதினாறு தலங்களைக் கொண்டு கவிழ்ந்த தாமரைப்பூ ஒன்று விரிந்துள்ளது. ஒவ்வொரு இதழிலும் காமா கர்ஷினி முதல் பதினாறு ஆகர்ஷிணி தேவதைகள் வாழ்கின்றார்கள். இவர்கள் பக்தியுடன், தியானத்துடன் ஸ்ரீ லலிதா மகாதிரிபுர சுந்தரியை பூஜித்துக் கொண்டு வாழ்கிறார்கள். ஒவ்வொரு கோணத்திலும் ஒவ்வொரு தேவி அமர்ந்து அருள் பாலிக்கின்றாள்.

முக்கோணத்தின் மத்தியில் இருப்பது பிந்துவாகும். ஒவ்வொரு அடியாக வைத்து பிந்து ஸ்தானத்தை அடைவது என்பது ஸ்ரீ லலிதா பரமேஸ்வரியை தரிசிப்பதாகும். ஸ்ரீ லலிதா பரமேஸ்வரியை நவாவர்ண பூஜை மூலமாக தான் வழிபாடு செய்ய வேண்டும். ஆவரணம் என்பது நம் உடல், பொருள், ஆவி எல்லாவற்றையும் அம்பிகையின் பாதத்தில் சமர்ப்பணம் செய்து நம் அறியாமை என்ற இருளை நாம் அகற்றுதல் வேண்டும். நம்மை முழுமையாக அர்ப்பணித்தால் தான் அந்த நிலையை அடைய முடியும்.

ஒவ்வொரு ஆவரணத்திலும் ஒரு தேவி அமர்ந்து நமக்கு அருள்பாலித்து கொண்டிருக்கிறாள். ஸ்ரீ சக்ரத்தின் ஒவ்வொரு

கோணத்திலும் ஒரு முத்திரை இருக்கிறது. முதல் சக்ரத்தின பெயர் பூபுரம். ஸ்ரீ மகாமேருவில் இச்சக்ரம் அமைய பெற்றால், கீழிருந்து ஆரம்பிக்க வேண்டும். இது மூன்று பகுதிகளாக பிரிகிறது. பூபுரம் வழியாகதான் ஸ்ரீ சக்ரத்திற்குள் நுழைய முடியும். இந்த சக்கரத்திற்கு பெயர் த்ரை லோக்ய மோஹன சக்ரம். இச்சக்ரத்தின் வெளிபுறத்தில் சித்திகள் வாழ்கிறார்கள். இவர்கள் முறை அணிமா, லகிமா, மஹிமா, ஈசித்வம், வசித்வம், ப்ரகாம்யம், புத்தி, இச்சா, ப்ராப்தி, ஸர்வாகாம சித்தி முதலியவர்கள் ஆவார்கள். கண்ணுக்கு புலப்படாத புள்ளியாக இருப்பது அனிமா என்பது. ஒளிமயமாக இருப்பதுதான் லகிமா. உயர்ந்த தன்மையை உடையது-மகிமா. ஈசித்வம் என்பது கடவுள் தன்மையை உடையது. ஐம்புலன்களை அடக்குவது தான் வசித்வம், ப்ரகாம்யம் என்பது விரும்புவது கிடைப்பது. ஆனந்தத்தை அளிப்பது புத்தி; இச்சை என்பது விரும்புவது. ப்ராப்தி என்பது அடைவது. இறுதியாக நாம் விரும்பும் பொருள் அனைத்தையும் அடைவது ஸர்வாகமசித்தியாகும். நடுகோட்டில் இருப்பவர்கள், ப்ராஹ்மி, மாகேச்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹி, மாஹேந்திரி, சாமுண்டி, மகாலக்ஷ்மி கடைசியில் இருப்பவர்கள்தான் 10 முத்திரை தேவதைகள். இவைகள் ஸர்வ ஸம்க்ஷோபிணி, ஸர்வ வித்ராவிணி, ஸர்வா கர்ஷிணி, ஸர்வ வசங்கரி, ஸர்வோன்மாதினி, ஸர்வ மஹாங்குசா, ஸர்வ கேசரீ, ஸர்வ பீஜா, ஸர்வ யோநி, சர்வ திரிகண்டா ஆகும், பத்தாவது முத்திரை தான் ஸர்வதிரிகண்டா. ஸ்ரீ சக்ரம் முழுவதற்கும் இந்த முத்திரை பொருந்தும்.

ஸ்ரீ சக்கரத்தில் இரண்டாவது ஆவரணத்தின் பெயர் ஸர்வாஸா பரிபூரகம். பதினாறு இதழ் கமலத்தை கொண்டுள்ளது. ஜீவனின் ஸ்வப்னாவஸ்தையையும், ஸுக்ஷ்ம சரீரத்தில் இது அடையப்படும் அனுபவத்தையும் இவ்வாரணம் குறிப்பிடப்படுகிறது. பதினாறு இதழ் கமலத்திலுள்ள சக்திகளை குப்தயோகிநிகள் எனப்படுவார்கள். அவர்கள் 1. காமாகர்ஷிணி 2. புத்யா கர்ஷிணி 3. அஹங்கார கர்ஷிணி 4. சப்தா கர்ஷிணி 5. ஸ்பர்சா கர்ஷிணி 6. ரூபா கர்ஷிணி 7. ரஸா கர்ஷிணி 8. கந்தா கர்ஷிணி 9. சித்தா கர்ஷிணி 10. தைர்யா கர்ஷிணி 11. ஸ்ம்ருத்யா கர்ஷிணி 12. நாமா கர்ஷிணி 13. பீஜா கர்ஷிணி 14. ஆத்மா கர்ஷிணி 15. அம்ருதா கர்ஷிணி 16. சரீரா கர்ஷிணி.

ஸ்ரீ சக்ரத்தின் மூன்றாவது ஆவரணம் ஸர்வ ஸம்க்ஷோபனம். எட்டு இதழ் கமலத்தை கொண்டது. ஜீவனின் தூக்கம் அவஸ்தை, சரீரத்தில் அடையும் ஆனந்தம் குறிப்பிடப்படுகிறது.

அஹங்காரத்தையும், இந்திரியங்களையும் அடக்கினால்தான் செய்யும் தொழில் நன்றாக இருக்கும் என்ற தத்துவத்தை விளக்குகிறது. எட்டு இதழில் உள்ள குப்தயோகினிகள் முறையே 1. அனங்க குசுமா 2. அனங்க மேகலா 3. அனங்க மதனாதூர 4. அனங்க மதனாதுரா 5. அனங்க ரேகா 6. அனங்க வேகினி 7. அனங்காங்குசா 8. அனங்க மாலினி ஆவார்கள்.

நாலாவது ஆவரணம் ஸர்வஸௌபாக்யதாயகம் ஆகும். ஞானம், ஞேயம், ஞாதா என்னும் சித்சக்தியை உணர்வதே பிந்துவின் தர்ப்பணம், பதினான்கு சம்பிரதாய யோகினிகள் முறையே 1. ஸர்வ ஸம்க்ஷோபிணி 2. ஸர்வ வித்ராவிணி 3. ஸர்வா கர்ஷிணி 4. ஸர்வா ஹ்லாதினி 5. ஸர்வ ஸம்மோஹினி 6. ஸர்வ ஸ்தம்பினி 7. ஸர்வ ஜ்ரும்பிணி 8. ஸர்வ வசங்கரி 9. ஸர்வ ரஞ்ஜினி 10. ஸர்வோன்மாதினி 11. ஸர்வார்த்தஸாதினி 12. ஸர்வ ஸம்பத்தி பூரணி 13. ஸர்வ மந்த்ரமயீ 14. ஸர்வ த்வந்த்வ க்ஷயங்கரி ஆவார்கள். ஆதி குருவும், ஜகத் காரணரும் ஆகிய பரமேஸ்வரர் பதினாலு புவனங்களிலும் விளங்குவதை இவ்ஆவரணம் குறிப்பிடுகிறது. இதை காண்பதே சிறந்த ஸௌபாக்யமானதலால், இது ஸர்வ ஸௌபாக்யதாயகம் என்ற பெயர் பெற்றது.

ஐந்தாவது ஆவரணம் ஸர்வார்த்த ஸாதகம். இந்த சக்கரம் 10 முக்கோணங்களை உடையது. எல்லா புனித தன்மையையும், ஐஸ்வர்யங்களையும், நிறைந்த, வறுமையை நீக்கி, சகலவித சௌபாக்யங்களையும் செல்வத்தையும், வாரி வழங்கக் கூடிய பத்து கோணங்கள் இதில் இருக்கின்றன. பத்து கோணங்களுக்கு பத்து யோகினிகள் முறையே 1. ஸர்வ ஸித்திந்ரதா 2. ஸர்வ ஸம்பத்ப்ரதா 3. ஸர்வ ப்ரியங்கரி 4. ஸர்வ மங்கள காரிணி 5. ஸர்வ காமப்ரதா 6. ஸர்வ துக்க விமோசினி 7. ஸர்வ மிருத்யுப்ரசமனீ 8. ஸர்வ விக்னநிவாரணி 9. ஸர்வாங்க சுந்தரி 10. ஸர்வ ஸௌபாக்யதாயினி ஆகியவர்கள் ஆவார்கள்.

ஆறாவது ஆவரணம் : ஸர்வ ரக்ஷாகரம் உட்புறமாக உள்ள 10 முக்கோணங்களை உடையது. இதில் வீற்றிருக்கும் யோகினிகள் தீய சக்தியிலிருந்து நம்மை காப்பாற்றி அரவணைப்பதால் ஸர்வ ரக்ஷாகரம் என்ற பெயர் பெற்றது. இச்சக்திகளை நிகர்ப்ப யோகினிகள் என்று அழைப்பர். இவர்கள் முறையே 1. ஸர்வக்ஞா 2. ஸர்வ சக்தி 3. ஸர்வைஸ்வர்ய ப்ரதா 4. ஸர்வ ஞானமயீ 5. ஸர்வ வியாதி விநாசினி 6. ஸர்வாதார ஸ்வரூபா 7. ஸர்வபாபஹரா

8. ஸர்வானந்தமயீ 9. ஸர்வரக்ஷா ஸ்வரூபிணி 9. ஸர்வேப்ஸித பலப்ரதா ஆகியவர்கள் ஆவார்.

ஏழாவது ஆவாரணம் : ஸர்வ ரோகஹரம் இச்சக்கரம் எட்டு கோணங்களை உடையது. அஞ்ஞானம் என்ற ரோகம் நமக்கு விலகும்போது ஞானம் என்ற பேரொளி கிடைக்கிறது. அந்த ஞானத்தை கொடுக்க கூடியது, நோய்களை போக்க கூடியது. அதனால்தான் இது ஸர்வரோகஹர சக்கரம் என்ற பெயர் பெற்றது. ஸ்ரீ லலிதா ஸகஸ்ர நாமத்தை இயற்றிய வஸின்யாதி தேவதைகள் இங்கு வசிக்கின்றனர். இவர்கள் ஸ்ரீ லலிதா மஹாதிரிபுரசுந்தரியின் மிக அருகாமையில் உள்ள தேவியர்கள் ஆவார்கள். இவர்கள் எல்லோரும் அம்பிகையின் வாக்கில் வசிக்கக்கூடிய தேவியர்கள், வாக்தேவியர்கள் முறையே 1. வசினீ 2. காமேச்வரி 3. மோதினி 4. விமலா 5. அருணா 6. ஜயிநீ 7. ஸர்வேச்வரி 8. கௌலினீ ஆவார்கள்.

எட்டாவது ஆவரணம் : ஸர்வ ஸித்திப்ரதம் என்று கூறப்படும். ஜீவாதமாவும், பரமாத்மாவும் ஐக்கியப்படுவதால் ஸர்வஸித்திபிரதம் என்று கூறப்படுகிறது. இந்த ஸர்வரோகஹர சக்கரத்திற்கும் ஸர்வ சித்தி ப்ரத சக்கரத்திற்கும் இடையே உள்ள ஆயுத மண்டலம் ஆகும். இங்கே ஆயுத தேவதைகள் வசிக்கின்றனர். அவர்கள் அம்பிகையின் ஆயுதத்தை பாதுகாக்கின்றனர். இங்கு ஆயுதங்களான, பாசம், அங்குசம், கரும்பு, வில், பாணம் இவைகளின் தேவதைகள் இங்கு உள்ளனர்.

ஏழாவதிற்கும் எட்டாவதிற்கும் இடையில் மத்திய முக்கோணத்திற்கு மேற்கு. வடக்கு, கிழக்கு, தெற்கு திசைகளில் முறையே பாணம். வில், பாசம், அங்குசம் என்று அம்பிகையை ஆயுதங்களால் பூஜிக்க வேண்டும். இச்சக்ரம் முக்கோண வடிவத்தை உடையது. காமேஸ்வரி. வஜ்ரேஸ்வரி, பகமாலினி ஆகிய மூன்று கோணங்களும் முத்தேவதைகளைத் குறிக்கிறது. உள்ளே இருக்கும் முக்கோணம் வாக்பவா என்று அழைக்கப்படுகிறது. முக்கோணம் வாமா, ஜேஷ்டா, ரௌத்ரியை முறையாக ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரனைக் குறிக்கிறது. இந்த முக்கோணம், இச்சா, ஞானம், கிரியாசக்திகளைக் குறிக்கிறது. ஒரு வேலையை செய்ய வேண்டும் என்ற ஊந்துதல் தான் இச்சாசக்தியாகும். அந்த வேலையைப்பற்றிய அறிவை கொடுப்பது தான் ஞானம். இது இரண்டும் இருந்தால் தான் அந்த வேலையை செய்யமுடியும். அதுதான் கிரியா சக்தி.

ஸ்ரீ சக்ரத்தின் நடுவிலுள்ள புள்ளியே பிந்து அது தான் சர்வானந்தமயம். உலகநாயகியான ஸ்ரீ லலிதா மகா திரிபுர சுந்தரியும், ஸ்ரீ காமேஸ்வரனும் இணைந்து கணவன், மனைவியாக இங்கிருந்து தான் உலகையே ஆட்டி படைத்து கொண்டிருக்கின்றனர். பிந்து என்கிற ஒரு சிறிய வட்டம் இங்கு சிவசக்தி ஐக்கிய ரூபத்தை குறிக்கிறது.

இறுதியில் சிவன் ஜடப்பொருளாக இருந்து சக்தி இயங்கும் பொருளாக இருந்து அந்த சக்தியை வெட்ட வெளியிலிருந்து வெளி உலகத்திற்கு வெளிப்பாடு செய்வதாக இந்த பிந்து ஸ்தானம் அமைந்துள்ளது. ஸ்ரீவித்யாவின் உச்சகட்ட நிலையை அடைவது தான் பிந்துவை அடைவதாக குறிப்பிடப்படுகிறது, பிரகாசம், விமர்சம், பராஅகந்தை மூன்றும் சேர்ந்தது தான் பிந்து இருக்கும் முக்கோணம் ஆகிறது. உலகையே ஆட்டிவைக்கும் இந்த சக்திக்கு தான் ஸ்ரீ மகேஸ்வரி சக்தி என்று பெயர்.

வெளி கோபுரத்திலிருந்து மையமாக நடு நாயகமாக இருக்கும் பிந்துவை அடைவதற்கு,. மனிதன் தனது சக்தியை யெல்லாம் திரட்டி மூலாதாரமான குண்டலினி யோகத்தில் சகஸ்ரதள பத்மத்தில் வீற்றிருக்கும் ப்ரம்மனை நினைத்து தவம் செய்தல் வேண்டும். ஸ்ரீ வித்யா முறையில் ஸ்ரீ சக்ரத்தை அல்லது மஹா மேருவை நவாவர்ண பூஜை மூலம் வழிபடுபவர்கள் தன்னுடைய உடலையே (அம்பிகையின்) வாஸஸ்தலமாக ஸ்ரீ புரமாக்கி ஆத்ம விசாரணை செய்து தன்னையே உணர வேண்டும். அம்பிகையை வழிபடும் போது ஸ்ரீ வித்யா உபாசகர் தன்னுடைய உடலையே வருத்தி அந்த வேள்வித்தீயில் தியாகம் செய்து பின் சிவசக்தி அருளால் புதிய உடலை எடுத்து கொள்கிறார். உபாசகன் அம்பிகையின் முன் தன்னையே பெண்ரூபமாக உருவகப்படுத்தி பூஜை செய்கிறார். தன்னுடைய சக்தியெல்லாம் திரட்டி மூலாதாரத்தை அடைய நினைப்பது சிவசக்தி ஐக்கிய சொரூபமாக உள்ள பிந்துவையும், வெளியே உள்ள எட்டு சக்ரமான ஸ்ரீ சக்ரத்தையும் அடைவதற்கு ஒப்பாகும்.

மத சடங்குகள் மூலமாகவும், தத்துவ சாஸ்திரமூலமாகவும், எந்த முறையில் வழிபட்டாலும், ஸ்ரீ வித்யா உபாசகர், விதி முறைகளுக்கு உட்பட்டு, காம, குரோத, லோப குணங்களை வெல்லுதல் வேண்டும். மந்திரங்களை உச்சாடணம் செய்யும் போது, மின் அலைகளை செலுத்தி பார்க்கும் போது, ஸ்ரீ சக்கரம் உற்பத்தியாவதை ஆராய்ச்சி பூர்வமாக, மேற்கத்திய ஆராய்ச்சியாளர்கள் நிருபித்து

உள்ளார்கள். இந்த நிகழ்ச்சியை புகைப்படமாக எடுத்தும் வெளியீட்டு உள்ளார்கள்.

உண்மையான பக்தியும், நேர்மையான முறையில், விதிமுறைகளுக்கு கட்டுப்பட்டு செய்தால் இவ்வகையான வழிபாட்டை யார் வேண்டுமானாலும் செய்யலாம், இதற்கு ஜாதி, மத, இன, மொழி வேறுபாடு ஒன்றும் கிடையாது, இதில் முக்கியமானது என்னவென்றால், உபாசகர்கள் முழுநம்பிக்கை வைத்து, தன்குருவின் சொல்படி நடத்தல் வேண்டும். இது ஒரு சாதாரண காரியமல்ல. சாதகனுக்கு பலவிதமான சோதனைகள் இருக்கும். அனைத்தையும் அவன் தன் குருவின் கருணையினால் மட்டுமே கடக்க முடியும். இதில் குருவின் கடாட்சம் முக்கியமாக தேவை. குரு காட்டிய பாதையில் சிறிதும் பிறழாமல் நடந்தால் இதை அடையமுடியும். இப்படிப்பட்ட கடுமையான பாதையில் நெறி தவறாமல் வாழ்ந்து, தன்னையே அர்பணித்துக்கொண்ட ஸ்ரீ வித்யா பரம்பரையை சேர்ந்தவர் தாம் ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரிஸ்வாமிகள். ஸ்ரீ வித்யாதத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு மகான் சூட்சுமத்தில் கூறியபடி உருவாக்க போகும் பீடம் தான் இந்த சக்திபீடம். ஸ்ரீ வித்யா பரம்பரையை சார்ந்த ஸ்ரீ காமகோடி சாஸ்திரிகள் ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமி களிடம், ஒப்படைத்தார், ஸத்குரு, பராபாகுரு, அவரிடமிருந்து பூக்கடை சுந்தரேச ஸ்வாமிகளிடம் சென்றது, அவர் பரமேஷ்டி குரு. அவருடைய சிஷ்யர் ஸ்ரீ நாக சுப்ரமணிய சாஸதிரிகளிடம் (பரமகுரு) ஒப்படைத்தார். அவர்தன் சிஷ்யை ஸ்ரீமதி விசாலாட்சிசுவாமிநாதனிடம் (குரு) ஒப்படைத்தார். அவரிடமிருந்து குருஜி சர்மா அவர்கள் ஏற்றுக் கொண்டார்.

குருபரம்பரை பயணம் இன்னும் தொடர்கிறது. பராபர குருவாக ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் இருக்க அவருடைய பிரதான சீடருடன் அந்த சங்கலிதொடர் பிணைக்கப்பட்டு, நகமும் சதையும் போல் இணைந்து செயல்பட்டு கொண்டு இருக்கிறது.

ஆகையால் தான் இப்படிப்பட்ட ஒரு பேரருள் கிடைத்த காரணத்தினால், எட்டுவிதமான சித்துகளையும் தன்னுள்ளே அடக்கியுள்ள உலகத்திலேயே முதன்மையான பச்சைக்கல் ஸ்ரீ சக்கர மகா மேருவிற்கும், சித்தர்களுக்கும் ஆலயம் கட்டி ஸ்ரீகுடமுழக்கு செய்து உலகத்திற்கே ஒரு பேரொளியாக பிரகாசிக்க கூடிய ஒரு பாக்கியம் கிடைக்கபோகிறது. சடங்குகளுக்கு அப்பாற்பட்ட ஒரு முறையாக இளையவருக்கும், வறியவருக்கும் அருளை வாரி வழங்க கூடிய ஒரு ஆலயமாக திருத்தலமாக இந்த சக்தி பீடம் விளங்கப்போகிறது என்பது உறுதி.

## அத்தியாயம்-18

# சித்த புருஷர்கள்

அஷ்டமாசித்திகள் என்று சொல்லக்கூடிய, எட்டுவிதமான மகிமைகள் பொருந்திய மாபெரும் சக்திகளைத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு வாழ்பவர்களே சித்தர்கள் ஆவர். எந்த உடலிலே தெய்வ சக்தியைக் கலந்து கூடுகிற தவயோகம் இருக்கிறதோ அந்த யோகமே சித்தர்களுடைய தவநெறியாகும். மூச்சினை அடக்கி யோக ஆற்றலினால் உடலில்உள்ள உறுப்புகளின் ஆறு இடங்களிலும் மனதை முறையாக நிறுத்தி முன்அத்தியாயத்தில் குறிப்பிட்டதுபோல் ஸ்ரீவித்யாமுறையை எளிமையாகக் கையாண்டு குண்டலினி சக்தியை எழுப்பி பற்பல அனுபவமும், வெற்றியும் கண்டவர்கள், மெய்ப்பொருளைக் கண்டவர்கள் தாம் உண்மையா்ன சித்தர்கள் ஆவர்.

சித்தர்கள் தன் உடலை கோவிலாகவும், ஆன்மாவைக் கடவுளாகவும் நினைப்பவர்கள். சாதாரண மனிதன் ஐம்புலன்களை போக பாக்கியத்திற்காகப் பயன்படுத்துகிறான். ஆனால், உண்மையான சித்தர்கள் இந்திரியங்களை வென்று, இறைநிலையை அடைவதற்கு அதைப் பயன்படுத்தி மெய்ப்பொருளைக் காண்கிறார்கள். தங்களது உள்ளொளியைக் கிளப்பி ஒளியூட்டி, மெருகேற்றி அஷ்டமா சித்தியை அடைகிறார்கள். யாரும் எளிதில் அடையமுடியாத நிலைக்குச் சென்று பொதுநலனுக்காக, உலக நன்மைக்காகப் பாடுபடுபவர்களே சித்த புருஷர்கள்.

சாமான்ய மனிதன் எப்படி தத்துவ ஞானியாக மாறமுடியும்? தனிமனிதனால் அடைய முடியாத பாதையை (பரம்பொருளை அடைதல்) சித்த மகாபுருஷர்கள் தன் யோக நிஷ்டையின் மூலம் அடைவதற்கு முயற்சி செய்து, வெற்றியும் காண்பார்கள். அப்பாதையை

அடைவது என்பது கடினமான முயற்சி ஆகும். தனது குரு காட்டிய பாதையைப் புரிந்துகொண்டு பயிற்சிபெற்று, யோக ஆற்றலினாலும், தியானத்தினாலும், தன் உடலையே வருத்தி உள்ளொளியைக் கிளப்பி உவப்பிலா ஆனந்தத்தை அடைபவர்களே சித்த மகா புருஷர்கள்.

போலிகளே நிறைந்த இந்த சமுதாயத்தில் உண்மையான சித்தர்களை எப்படி அடையாளம் கண்டுகொள்வது? போலி சித்தர்கள் இந்திரஜாலங்களை, மாயாஜாலங்களைக் காட்டி மக்களை வசியப்படுத்தி, மயக்கத்தை உண்டுபண்ணி சீடர்களை அருகில் வைத்துக்கொண்டு சுயலாபத்தைத் தேடுபவர்கள். மனித நேயத்திற்காக, உலக நன்மைக்காக மட்டுமே பாடுபடுபவர்கள்தான் இந்த உண்மையான சித்தர்கள் அனாதைகளாக விடப்பட்ட ஆன்மாக்களுக்கு அடைக்கலம் தந்து அரவணைத்து புனர்வாழ்வு அளித்து வழிகாட்டுபவர்தான் உண்மையான சித்தர். **"உள்ளம் ஒரு கோயில், ஊண், உடம்பு ஒரு ஆலயம்"** என்று ஆன்மாக்களுக்குப் புரிய வைத்து, மனதில் தெளிவு ஏற்படுத்தி, புனிதமான பாதையைக் காண்பித்து பேணி காப்பதே அவர்களுடைய நோக்கமாகும். அதனால், சாதாரண மனிதர் களுக்கு வரக்கூடிய நோய், மூப்பு, மனஅழுத்தம் ஆகியவைகள் அவர்களுக்கு வராது. ஆனால், அந்த நிலைகளைக் கடந்து வென்ற காரணத்தினால் சாமான்ய மனிதர்கள் படும் அவஸ்தைகளை அவர்களால் எளிதில் புரிந்துகொள்ள இயலும். இன்னும் சில சித்த மகாபுருஷர்கள் இந்த பூத உடலை ஒளியாக மாற்றி அதன்மூலம் தன்னை நாடும் பக்தர்களுக்கு நல்வழி காட்டினார்கள். உதாரணமாக ஸ்ரீ வள்ளலார் அவர்கள் சமாதி நிலையை அடைந்த நேரத்திலே, ஒளிமயமாகக் கிளம்பிச் சென்றது போல் ஒளிமயமாக இருந்து கொண்டு வழிகாட்டு பவர்களும் சித்த மண்டலத்தில் இருக்கிறார்கள். ஆன்மாவினுள் புதைந்து கிடக்கும் உண்மைகளையும், முக்காலத்தையும் உணர்ந்து அவர்களுக்கு விடுதலைக் கொடுப்பவர்கள் சித்தர்கள் ஆவர்.

மகிமைகள், மகத்துவம் பொருந்திய உண்மையான சித்தர்களை நாம் உணராமல், தன்னை சித்தன் என்று சொல்லி நடமாடும் போலி சித்தர்களிடம் எப்படி ஒப்படைக்க முடியும்? விபூதிகொடுப்பதும், குங்குமம் கொடுப்பதும், விக்கிரகங்களைக் கொடுப்பதும் தான் உண்மையான சித்தர்களின் வேலையா? சித்த புருஷர்களின் ஆன்மீக ஒளியும். அளவிட முடியாத அவர்களின் அறிவுத்திறன் நிறைந்த ஏடுகளை வைத்துத்தான் போலி சித்தர்களிடமிருந்து மக்களைக் காப்பாற்ற முடியும்.

மகான் சூட்சுமத்தில் கூறியுள்ளபடி, பதினெட்டு சித்தர்களும் புனர் அவதாரம் எடுத்துவந்து, மாடம்பாக்கம் சக்திபீட பிருந்தா வனத்தில் அமர உள்ளனர். சித்தர்களுக்கெல்லாம் சித்தராக, மகானுக் கெல்லாம் மகானாக விளங்கும் ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளின் வழிகாட்டுதலின்படி இந்த பதினெட்டு சித்தர்களும், சக்திபீடபிருந்தா வனத்தில் வீற்றிருந்து அருள் பாலிக்கப் போகின்றனர். பதினெட்டு மகா சித்தர்களின் வாழ்க்கை வரலாறு சுருக்கமாக, மிக எளிய முறையில் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

(1) ஸ்ரீ சிவவாக்கிய சித்தர் :

ஸ்ரீ சிவவாக்கிய சித்தர், தான் பிறக்கும்போதே "சிவ சிவ" என்ற நாமத்தின் உச்சரிப்புடன் பிறந்தார். ஒரு சமயம் அவர் தன் குருவின் உத்தரவுப்படி, காசுகளை கங்கையில் எறிந்தவுடன், கங்காதேவியே அதைத் தன் கரங்களால் பெற்றுக்கொண்டு, அதை அவரிடமே திருப்பிக் கொடுத்தாள் என்று கூறப்படுகிறது. குறவப் பெண்ணை அவருக்கு, அவருடைய குரு திருமணம் செய்து வைத்தார். அவருடைய பூரண சரணாகதிக்கு, நம்பிக்கைக்கு, பக்திக்கு ஒரு உதாரணம் சொல்லலாம். ஒருநாள் அவர் ஒரு மரத்திற்கு தண்ணீர் ஊற்றும்பொழுது கடவுளின் பெயரை உச்சரித்துக் கொண்டே தண்ணீர் விட்டார். மரத்தின் வேரிலிருந்து தங்கக் காசுகளாகக் கொட்டியது.

ஒருசமயம் சிவவாக்கிய சித்தர், அவருடையத் தோட்டத்தில் இருந்த சமயம், கொங்கண சித்தர் அவ்வழியாகச் சென்று கொண்டு இருந்தார். சிவவாக்கிய சித்தருக்கு ஏதாவது நல்லது செய்ய வேண்டும் என்று கருதி, அவரின் வீட்டு இரும்புத் தூண்களை தங்கத் தூண்களாக மாற்றினார். எதிலும் ஆசை வைக்காத பற்றற்ற நிலையை உடைய அவர் அவருடைய மனைவியைக் கூப்பிட்டு, தங்கத் தூண்களைக் கிணற்றில் போடுமாறு கூற, அவருடைய மனைவியும் ஏன், எதற்கு என்று கேட்காமல் அதை நிறைவேற்றினார். அவருடைய சிஷ்யர்கள் அவரிடமிருந்து ரசவாத வித்தையை (இரும்பைத் தங்கமாக்குதல்) கற்றுக்கொள்ள வேண்டும் என்று எவ்வளவோ முயற்சி செய்தார்கள். அவர்களிடம் எல்லாம் ஸ்ரீ சிவவாக்கிய சித்தர் ஒன்றே ஒன்றுதான் கூறினார். **"இறைவனின் நாமத்தை இடை விடாமல் கூறுங்கள், அந்த நாமமே உங்களுடைய உடலைத் தங்கமாக மாற்றும்"** என்று கூறினார்.



ஸ்ரீ சிவ வாக்கிய சித்தர்



ஸ்ரீ கைலாய கம்பளி
சட்டைமுனி சித்தர்



ஸ்ரீ மகா போகர் சித்தர்



ஸ்ரீ காக புஜண்ட சித்தர்



ஸ்ரீ புலிப்பாணி சித்தர்



ஸ்ரீ சட்டைமுனி சித்தர்



ஸ்ரீ அகப்பேய் சித்தர்



ஸ்ரீ அழுகுணி சித்தர்



ஸ்ரீ குதம்பை சித்தர்


ஸ்ரீ வள்ளலார் சித்தர்


ஸ்ரீ இடைக்காடர் சித்தர்


ஸ்ரீ பட்டினத்தார் சித்தர்


ஸ்ரீ கடுவெளி சித்தர்


ஸ்ரீ கஞ்சமலை சித்தர்


ஸ்ரீ சென்னிமலை சித்தர்


ஸ்ரீ கபிலர் சித்தர்


ஸ்ரீ கருவூரார் சித்தர்


ஸ்ரீ பாம்பாட்டி சித்தர்

இத்தகைய சிறப்பு வாய்ந்த, இந்த சித்தர் நாலாயிரத்து எழுநூறு ஆண்டுகள் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. இவர் எழுதிய நூல்களில் ''நாடிப் பரீட்சை'', ''சிவவாக்கியம் 1000'' மிகவும் முக்கியமாகக் கருதப்படுகிறது.

**(2) ஸ்ரீ கயிலாய கம்பளி சட்டை முனிசித்தர் :**

ஸ்ரீ கயிலாய கம்பளி சட்டை முனிசித்தர் அல்லது ரோமரிஷி என்று அழைக்கப்படுவார். இவர் ரோம் நாட்டிலிருந்து வந்ததாகக் கூறப்படுகிறது. அஷ்டமாசித்திகளிலும் வல்லமை பெற்றவர். ஒருசமயம் இவர் கும்பகோணத்திற்கு அருகில் உள்ள ஒரு இடத்தில் தியானம் செய்துகொண்டிருக்கும் பொழுது, அவருடைய தாடியிலிருந்து தங்கமாகக் கொட்ட ஆரம்பித்தது., அவரைப் பார்க்க வந்த பக்தர் களுக்கு இந்தத் தங்கத்தைக் கொடுத்து ஆசீர்வதித்தார். அவருடைய தாடியிலிருந்து தங்கம் வருவது நின்றவுடன் தாடியை எடுத்துவிட்டு, குளிக்காமல் நேராக சிவபெருமானை தரிசிக்கக் கோவிலை நோக்கிச் சென்றார். ஸ்ரீகணேசரும், ஸ்ரீமுருகப்பெருமானும் அவரை தடுத்து நிறுத்தினார்கள். அதனால் மன வருத்தமடைந்த அவர், சிவபெருமானை நினைத்து மனமுருகி பிரார்த்திக்க, சிவபெருமானே ஒளியாக இவருக்குக் காட்சி கொடுத்தார்.

ரோமரிஷி சிலேடையாக எழுதுவதில் வல்லவர். ஒரு சமயம் இவர் தான் எழுதிய நூல்களை காகபுஜண்டர் சித்தரிடம் ஒப்படைக்க, அதை அவர் அகஸ்தியரிடம் கொடுத்தார். அவருடைய நூல்களில் முக்கியமானவை ரோமரிஷி வைத்தியம் 1000, நாகரூடம் ஆகும்.

**(3) ஸ்ரீ மகாபோகர் சித்தர் :**

சீனாவில் துணிகளை வெளுக்கும் வண்ணான் பரம்பரை யிலிருந்து வந்தவர் தாம் மகாபோகர் ஸ்வாமிகள். சீன மக்கள் இன்றும் போயாஸ் என்று அழைத்து வழிபடுகிறார்கள். மேருமலையில் வசிக்கும் தவநாடி சித்தர்கள் மூலமாக மரணத்தை வெல்வது எப்படி என்பதை கற்றுக் கொண்டார்.

பார்வதி தேவிக்கு தட்சிணாமூர்த்தி அருளிய ஞானவிளக்கங் களை, ஏழு ஞான காண்டங்களாக்கி, ஞான ரகசியங்களை உலகிற்குத் தந்தவர். பழநியில் மகாபோகர் ஸ்வாமிகள், ஸ்ரீ முருகனை நினைத்து மந்திர உச்சாடனம் செய்யும்பொழுது, முருகவேளே அவருக்குக் காட்சி கொடுத்து, தன் உருவத்தை நவபாஷாணத்தில்

செய்யுமாறு உத்தரவிட்டார். ஸ்ரீ முருகனின் ஆணையை நிறை வேற்றி, அச்சிலையை இரவும் பகலும் தொழுதார். ஒருசமயம் அவர் மூலிகைகளை தேடிச் சென்றபொழுது, ரொம்ப நாட்களாகியும் திரும்பவில்லை. அவருடைய சீடர்களில் முக்கியமான சித்தர் புலிப்பாணி சித்தர். ஸ்ரீ புலிப்பாணி சித்தர், தன் குரு சீனாவில் இருப்பதாக அறிந்து அவரை திரும்பவும் பழநிக்கு அழைத்து வந்தார். மகாபோகரின் முக்கியமான நூல்களில் சிறந்தது. **போகர் வைத்தியம் 1000, போகர் 1200 முதலியவை ஆகும்.** பழநிக் கோவிலின் தென்மேற்கு மூலையில் மகாபோகரின் சமாதியை இன்றும் காணலாம்.

## (4) ஸ்ரீ காக புஜண்டர் சித்தர் :

ஸ்ரீ காக புஜண்டர் சித்தர், தமிழ் நாட்டில் உள்ள திருச்சியில் பிறந்தார். உடல் கருமையாக இருந்தாலும் இவருடைய உள்ளமானது, தன்னைச் சுற்றியுள்ள எல்லாவற்றிலும் உண்மையைப் பார்க்கும் தன்மையை உடையது. உண்மையான உள்ளம் தான் இறைவன் குடி கொண்டிருக்கும் வாசஸ்தலமாகும் என்று அவர் அடிக்கடி கூறுவார். பல யுகங்கள் அழிவதையும், பிறகு சிருஷ்டி உருவானதையும், இவர் பார்த்ததாக புராணங்கள் கூறுகின்றன. ஈரேழு உலகமும் பிரளய காலத்தில் ஸ்தம்பித்த சமயத்திலும், காக்கை ரூபமாக காகபுஜண்ட ஸ்வாமி மட்டும் உயிரோடு இருந்தாராம். இவருடைய நூல்களில் குறிப்பிடத்தக்கவை **காக புஜண்ட ஞானம், காக்க காப்பியம் 33,** இவர் முக்தியடைந்த ஸ்தலம், தமிழ்நாட்டில் உள்ள திருச்சிக்கு அருகில் இருக்கும் உறையூர் ஆகும்.

## (5) ஸ்ரீ புலிப்பாணி சித்தர் :

இவர் சீனாவில் பிறந்தார். மகா போகர் ஸ்வாமிகளின் பிரதான சீடர் ஆவார். ஒரு சமயம் போகர் ஸ்வாமிகள் காட்டு வழியே சென்றபொழுது அவருக்கு மிகவும் தாகமாக இருந்தது. உடனே ஸ்ரீ புலிப்பாணி சித்தர் புலிமேல் அமர்ந்து கொண்டு நீரை தன் கையில் ஏந்தி குருவின் தாகத்தைத் தணித்தார். மகா போகர் ஸ்ரீமுருகனை நவபாஷாண மூலிகை மூலம் உருவாக்கின சமயம், புலிப்பாணி சித்தர்தான் தேவையான மூலிகைகளைக் கொண்டு வந்து கொடுத்தார். அதுமட்டுமின்றி தன் குரு சீனாவில் இருப்பதை யறிந்து, அவரை திரும்பவும் பழநிக்குக் கொண்டு சேர்த்தார். இவர் நூல்களில் குறிப்பிடத்தக்கவை, **புலிப்பாணி ஜாலம் 325, புலிப்பாணி வைத்தியம் 500.**

## (6) ஸ்ரீ சட்டை முனி சித்தர் :

இவர் சிங்கள நாட்டில் பிறந்தவர். பிழைப்பைத் தேடி, தன் பெற்றோர்களுடன் தமிழ்நாட்டிற்கு வந்தவர். விவசாயக் கூலியாக இருந்த சித்தர், வேலையில்லாத நாட்களில், கோவில்களில் தட்டு ஏந்தி யாசகம் பெற்று, தாய் தந்தையர்கட்கு உதவினார். திருமணம் முடிந்ததும் மனம் அதில் லயிக்காமல், கோயில் வாசலில் நின்ற சமயம், அங்கு ஒரு சித்தரைக் கண்டார். அவரின் அபூர்வ சக்தி இவரை ஆட்கொள்ள வீட்டில் கூட சொல்லாமல் அவருடன் கிளம்பி விட்டார். தன் குருவின் ஞானோபதேசம் பெற்ற சட்டைமுனி ஸ்வாமி போகரின் சீடராகி சித்தர் மார்க்கத்தில் இணைந்தார்.

சித்தர்கள் எழுதும் பரிபாஷையில் எழுதாமல் எல்லோரும் புரிந்துகொள்ளும் வண்ணம் எளிமையாக எழுதினார். கால்நடை யாக அரங்கனைத் தரிசிக்க விரும்பிய இந்த சித்தர் கோயிலை அடைவதற்குள் நடைசாற்றப்பட்டுவிட்டதால் ஏமாற்றம் தாங்காமல் ''அரங்கா, அரங்கா, அரங்கா'' என்று மூன்று முறை கதற கதவுகள் தாமாகத் திறந்துகொண்டது. மேள தாளங்கள் ஒலிக்க, கோயில் மணி முழங்க, அரங்கன் காட்சி தந்தார். இவருடைய நூல்களில் குறிப்பிடத்தக்கது ஸ்ரீ சட்டை முனி கர்ப்பம் 100, ஸ்ரீ சட்டை முனி நிகண்டு 1200.

## (7) ஸ்ரீ அகப்பேய் சித்தர் :

இவர் திருவள்ளுவர் பரம்பரையில் பிறந்தவர். இச்சித்தரின் இயற்பெயர் நாயனார். இந்த மகான், தன் பிழைப்பிற்காக நெசவுத் தொழிலை நடத்திக் கொண்டு வந்தாலும், ஈசனுடன் ஆன்மநேசம் உடையவராக இருந்தார். இவருடைய எல்லையில்லாத நேர்மை, நெசவுத்தொழிலில் நல்ல வருமானத்தை இவருக்கு வாரி வழங்கியது. எனினும் நம் பெருமான் பொருளின்மீது இருக்கும் ஆசையை விட்டு அருளைத் தேடி அலைந்தார்.

ஆன்மாவின் உயர்வினை உணராத மக்களை மாயை யிலிருந்து மீட்பதற்காக முதலில் தனக்கு ஒரு குருவைத் தேடி காடுகளில் எல்லாம் திரிந்தார். அந்தச் சமயத்தில் ஜோதி மரம் ஒன்று இவர் கண்களுக்குத் தெரிந்தது. உடனே அந்த மரப்பொந்துக்குள் புகுந்துகொண்டு வியாசர் பெருமானை தன் குருவாக தியானித்து, தவம் இருக்கத் துவங்கினார். இவரின் தவத்தின் வலிமையைத் தாங்கமுடியாது, எங்கோ தவத்திலிருந்த வியாச முனிவரின் விழிகளைத் திறக்கவைத்தது.

ஓடோடி வந்த வியாச முனிவர் உலகிலேயே. விலை மதிக்க முடியாத தவப்பேற்றை, அகப்பேய் சித்தருக்குக் கொடுத்தார். பொதுவாக ஏராளமான பிரச்சனைகளை மக்கள் சந்தித்தாலும் ஒருவரை ஒருவர் ஏமாற்றுவது போன்ற தீய செயல்களையெல்லாம் செய்துகொண்டு தான் இருக்கிறார்கள்.

அத்தகைய தீய எண்ணங்களை நீக்குவதற்காக இவர் அகப்பேய் சித்தர் பாடல்கள் 90 என்ற நூலை எழுதினார். அங்கும் இங்கும் ஓடும் மன அலையை மட்டுப்படுத்தினால் நஞ்சுண்ணவும் வேண்டாம். நாதியற்று திரியவும் வேண்டாம். அந்த இறைநாதன் உன்முன் தோன்றுவான் என்பது இவரின் வாக்கு. இவர் மனதை பேயாக உருவகப்படுத்திப் பாடியதால் அகப்பேய் சித்தர் என்ற பெயர் பெற்றார். நாளடைவில் இவருடைய திருநாமம் அகப்பை சித்தர் என்றாகிவிட்டது. இவர் இயற்றிய நூல்களில் குறிப்பிடத் தக்கவை,

*அகப்பேய் சித்தர் பாடல் - 90*
*அகப்பேய் பூரண ஞானம் - 15*

திருவையாறு என்ற ஊரில் இவர் முக்தி அடைந்ததாக சொல்லப்படுகிறது.

## (8) அழுகணி சித்தர் :

இந்த சித்தர் விவசாய குலத்தில் தோன்றியவர். இவர் ஸ்ரீகருவூரார் சித்தர் காலத்துக்கு முன்னொத்தவராகப் பேசப் படுகிறார். அரிய கல்ப மூலிகைகளான அழுகண்ணி தொழுகண்ணி ஆகியவற்றைப் பயன்படுத்தி காரியசித்தி கைவரப்பெற்றமையாலும், அழகிய வார்த்தைகளை அணிகலன்களாகக் கொண்டு தமிழ்ப் பாடல்கள் புனைந்ததாலும் இவருக்கு இந்தப் பெயர் உருவாயிற்று. அழுகணி சித்தரின் பாடல்கள் வாழ்க்கையை வெறுத்து ஞான மார்க்கத்தையே வற்புறுத்தி போதிக்கின்றது. சித்தி முறையில் கூடுவிட்டு கூடுபாயும் வித்தை மூலமாக தமிழ்நாட்டில் பல இடங்களில் பல உருவங்களில் அழுகணி சித்தர் சுற்றித் திரிந்து இருக்கிறார். இவர் இயற்றிய நூல்களில் குறிப்பிடத்தக்கவை.

*அழுகணி வைத்தியம்*
*அழுகண் போகம்*

இவர் சித்தி அடைந்த திருத்தலம் நாகப்பட்டினத்தில் உள்ள சிவபெருமான் கோயில் வளாகம்.

## (9) ஸ்ரீ குதம்பை சித்தர் :

இந்தப் பெருமான் யாதவ குலத்தில் அவதரித்தவர். ஆண் குழந்தையாகப் பிறப்பினும், பெண் குழந்தை போன்று மிகவும் அழகாக இருப்பாராம். நம் சித்தரின் தாய் இவரின் பேரழகைக் கண்டு இவருடைய காதுகளில் குதம்பை என்ற காதணியை இட்டு நித்தமும், அது சித்தரின் காதுகளில் அசைந்தாடும் அழகைக் கண்டு அசந்து போவார்களாம். சித்தருக்கு 16 வயதாகும் தருவாயில் திடீரென்று ஒரு மகான் குதம்பை பெருமான் முன் வந்து நின்றார். நம் பெருமானும் வணக்கத்துடன் வாய் பொத்தி நின்றார்.

பெறர்கரிய உபதேசங்களை மகானிடமிருந்து பெற்ற சித்தர் என்ன கைம்மாறு செய்வேன் என்று உருகி இருக்கிறார். அதற்கு மகான் "முற்பிறவியில் உன் தவம் கைகூடுவதற்கு முன்பு காலதேவனிடம் நீ சென்றுவிட்டாய். அந்தத் தவத்திற்கு உண்டான பலனைத்தான் இப்பொழுது நீ பெறுகிறாய்," என்று கூறினார். தான் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறவேண்டும், என்று மனதில் எண்ணி ஒருநாள் யாருக்கும் தெரியாமல் நடுநிசியில் காட்டுக்கு புறப்பட்டுச் சென்றார். ஒரு அத்திமரப் பொந்திலே அமர்ந்து, தன் அனுபவங்களை எல்லாம் அமரத்துவம் பெற்ற பாடல்களாகப் புனைந்தார். அவருடைய இறை சித்தி பெற்ற பாடல்கள் இன்றும் மங்காப் புகழோடு மணக்கிறது. பாமரர்களாலும் எளிதில் புரிந்து கொள்ளும் தன்மையை உடையது இவரது பாடல்கள். இவர் இயற்றிய நூல்களில் குறிப்பிடத்தக்கவை.

1. *குதம்பை ஞான சூஸ்திரம் - 18*
2. *குதம்பை சித்தர் பாடல்கள்*

இவர் சித்தி அடைந்த திருத்தலம் - மயிலாடுதுறையாகும்.

## (10) ஸ்ரீ வள்ளலார் சித்தர் :

இராமையாப் பிள்ளை பெருமானுக்கும், சின்னக் காவனம் அம்மைக்கும் மகனாகப் பிறந்தவர் நம் மகான். தன் தந்தையின் மரணத்திற்குப் பிறகு, தன் தமையனார் சபாபதிப் பிள்ளையோடும், அன்னையோடும் வள்ளலார் சென்னை வந்தடைந்தார். கல்வியில்

சிறிதும் அக்கறையில்லாமல் கந்தன் ஆலயமே கதி என்று கிடந்தார். காஞ்சி வித்வான் சபாபதி தன்னால் பாட முடியாத பாடல்களை மிகச் சுலபமாக பாடும் அருட்குழந்தைக்குத் தான் பாடம் கற்பிப்பதா என்று எண்ணி அவருக்கு கல்வி கற்பதை நிறுத்தினார்.

இதனால் கோபமடைந்த தமையனார் தன் மனைவியிடம் தம்பிக்கு உணவு கொடுக்க வேண்டாம் என்று கூறினார். கணவர் இல்லாத சமயம் அண்ணியார் வள்ளலாரை வீட்டின் பின்புறத்தில் அழைத்து உணவளித்தார்.

தந்தையார் திதி அன்று யாரும் இல்லாத சமயத்தில் நேரம் தாழ்த்தி வள்ளளார் சில்லிட்ட உணவை உண்ணும்போது கலங்கிய அண்ணியாருக்காக வள்ளலார் கல்விபயில இசைந்தார். ஒரு அறையில் திருவிளக்கேற்றி, கண்ணாடியை சுவரில் மாட்டி, அதற்கு மாலை சூட்டி, பழம் படைத்து கற்பூரம் காட்டினார். பின்பு கண்ணாடியில் தெரியும் தன் பிம்பத்தையே உற்று நோக்கினார். அப்பொழுது கண்ணாடியில் கந்தனின் உருவம் தெரியலாயிற்று. அன்று முதல் தணிகையான் திருவருளால் அவருக்கு சகல கலைகளும், தாமாகவே விளங்கலாயிற்று. ஒருசமயம், இவர் தமையனார் செய்வதாக இருந்த சொற்பொழிவு, அவரால் செய்ய இயலாது போயிற்று. அதை வள்ளலார் செய்யவேண்டிய சூழ்நிலை உருவாகியது. 9 மணிக்கு முடிவுறும் சொற்பொழிவு நள்ளிரவு 12 மணி வரை சென்றது. கேட்டவரெல்லாம் வாயடைத்து சிலையாக ஸ்தம்பித்தனர். சொற்பொழிவை கேட்ட அவையோர் அனைவரும் ஆனந்தத்தில் மூழ்கினார். இந்த ஆனந்தம் அவர் சென்ற இடமெல்லாம் தொடர்ந்தது. தன்னுடைய தம்பியை முருகனின் அவதாரம் என்பதையறிந்த அவருடைய தமையனார் தன் மனைவியிடம் ஸ்ரீ வள்ளலாரை மரியாதையுடன் நடத்துமாறு கூறினார். தன் அன்னையை ஒத்த அண்ணியார் தன்னை மரியாதையுடன் நடத்துவதை பொறுக்காத ஸ்ரீ வள்ளலார் வீட்டை விட்டு வெளியேறினார். வடிவுடை அம்மனே ஒரு முறை அண்ணியின் திருஉருவில் இவருக்கு அமுது படைத்திருக்கிறார். திருமுல்லைவாயல் கோவிலில் இறைவன் மேல் பல பாடல்கள் புனைந்தார்.

ஒரு சமயம் திருவொற்றியூர் பட்டினத்தடிகள் ஆலயத்தில் ஒரு பிடி மண்ணை மூதாட்டியிடம் கொடுத்து திறந்து பார்க்கச் சொல்ல மணலெல்லாம் சிறு சிறு சிவலிங்கங்களாக தோன்றச்

செய்தார். வடலூரில் தருமச்சாலை ஒன்றை நிறுவினார். அங்குள்ள அடுப்பு இன்னும் புகைந்து கொண்டே இருக்கிறது. வடலூருக்கு 4 கிலோ மீட்டர் தொலைவில் மேட்டுக் குப்பம் என்னுமிடத்தில் குடிசையை கட்டுவித்து சித்தி வளாகம் என்ற பெயர் சூட்டினார். அங்கு இவர் உள்ளொளியில் நீரில் விளக்கு எரிந்தது. ஒரு நாள் பக்தர்களை நோக்கி "கடை விரித்தோம் கொள்வார் இல்லை" இனி தீபத்தினையே கடவுளாகக் கொண்டு ஜீவகாருண்ய நெறியில் உய்யுங்கள்" என்று கூறினார். இவர் இயற்றிய நூல்களில் குறிப்பிடத் தக்கவை மகாதேவ மாலை, தெய்வ மணி மாலை, சித்தி அடைந்த திருத்தலம் வடலூர், அங்குதான், தன் பூத உடலை நீத்து ஜோதியில் கலந்தார்.

## (11) ஸ்ரீ இடைக்காடர் சித்தர் :

இவர் திருமாலின் அவதாரமாக பேசப்படுகிறார். இடையர் குலத்தில் இடைக்காடு என்ற ஊரில் இந்த மகா புருஷர் பிறந்தார். ஆடுகளை மேய்த்துக் கொண்டே மெய்மறந்த நிலையில் நின்று கொண்டிருந்த இவர், வான் வழியே சென்று கொண்டிருந்த நவநாத சித்தர் கீழே இறங்கி தம்மருகே அமர்த்தி, பால் கொடுத்து, வைத்தியம், ஞானம், ஜோதிடம், யோகம் முதலியவற்றை உபதேசித்தார். அன்று முதல் இவர் தெய்வத்தன்மையை பெற்றவராக திகழ்ந்தார். தன் ஜோதிட திறமையால், பின்காலத்தில் வரும் பஞ்சத்தை முன்னாலேயே உணர்ந்தார். தன் ஆடுகளுக்கு எக்காலத்திலும் கிடைக்கும் எருக்க இலையை கொடுத்து பழக்கினார். குருவாகு என்ற தானியத்தை சேற்றோடு கலக்கி, சுவர் எழுப்பி குடிசை ஒன்று கட்டினார். எதிர் பார்த்தபடியே பஞ்சம் வந்து, புல், பூண்டோடு எல்லா உயிர்களும் அழிந்தன. ஆனால் இடைக்காடார் பெருமானின் ஆடுகளோ இலைகளைத் தின்று காலத்தை கழித்தன. தினவு எடுக்கும் பொழுது சுவரில் தன் உடலை தேய்த்தது. அதிலிருந்து உதிரும் வாகைத் தட்டியும், ஆட்டுப்பால் குடித்தும், நம் பெருமான் உயிர் வாழ்ந்தார். வியப்படைந்த நவக்கிரகங்கள் இதனைக் காண அவர் வீடு தேடி வந்தார்கள். சமைத்த வரகு சாதத்தையும், ஆட்டின் பாலையும், இடைக்காடர் பெருமான் அவர்களுக்கு கொடுத்தார். அதைச் சாப்பிட்ட அவர்கள் மயங்கி உறக்கத்தில் ஆழ்ந்தனர். ஒன்றுடன் ஒன்று மாறுபட்டு உலகை வருத்திய கோள்களை, மழை பெய்வதற்காக தாம் வேண்டியபடி, நம் பெருமான், மாற்றி மாற்றி, படுக்க வைத்து விட்டார். உடனே வானம் இருண்டு, மழை

மும்மாறி பெய்தது. பூமி குளிர்ந்து, ஏரிகளும் ஆறுகளும் நிரம்பி வழிந்தன. நிலையை உணர்ந்த நவக்கிரகங்கள், சித்தர் பெருமானின் அறிவுத் திறனை வியந்து பாராட்டி, வேண்டிய வரங்களைக் கொடுத்து மறைந்தார்கள். இவர் எழுதிய நூல்களில் குறிப்பிடத் தக்கவை.

*இடைக்காடர் ஞான சூத்திரம் - 70*

*இடைக்காடர் கணித நூல்.*

இப்பெருமான் சித்தியடைந்த திருத்தலம் திருவண்ணாமலை.

## (12) ஸ்ரீ பட்டினத்தடிகளார் சித்தர் :

வணிகக் குலத்தில் பெரும் செல்வந்தர் பரம்பரையில் உதித்தவர் பட்டி ஸ்வாமிகள். பிள்ளை இல்லா பட்டினத்து அடிகளுக்கு இறையனார் சிவபெருமானே மகனாகக் கிடைத்தார். வாலிப வயதில் பொருள் ஈட்டி வரச் சென்ற மகன் திரும்பி வந்து ஒரு சிறிய பெட்டியை தாயிடம் கொடுத்து விட்டு மறைந்தார். தந்தை பட்டினத்தார் அப்பெட்டியின் உள்ளே காது அறுந்து போன ஊசியும், ஒரு ஓலையில் "காது அறுந்த ஊசியும், வாராது காணும் கடை வழிக்கே" என்று எழுதி இருப்பதைக் கண்டார். உண்மை நிலை உணர்ந்து தம்முடைய பொருட்களை எல்லாம் ஏழை எளியவர்களுக்கு தானமாகக் கொடுத்து, துறவு வாழ்க்கையை மேற்கொண்டார். ஒரு சமயம் இவர் மேல் திருட்டுப் பட்டம் விழுந்தது. அரசன் இவரை கழுமரத்தில் ஏற்றுமாறு சொன்னான். உடனே பட்டினத்தார் "அந்த மரம் இந்த மரத்தை ஏற்றப் போகிறதோ என்று சொல்லி சிரித்து ஒரு பாடலைப் பாடினார். உடனே அக்கழுமரம் தீப்பற்றி எரித்தது. அரசன் தன் தவறை உணர்ந்து, அவர் பாதம் பற்றி மன்னிக்குமாறு கூறினான். அன்று முதல் பெருமானின் சீடனானான். அரசவை குருவாக இருக்க மறுத்த பட்டினத்தடிகளை அரசன் தினமும் அவர் தங்கிருக்கும் கோவில் வாயிலில் சென்று வழிபட்டான். "இப்படி எல்லாவற்றையும் துறந்து இருப்பதில் என்ன பெருமை" என்று அரசன் சித்தர் பொருமானை கேட்க, அதற்கு அவர், "நீ நிற்க நான் இருக்க அதுதான் பெருமை" என்று - கூறினார். துறவியின் மேன்மையை உணர்ந்த மன்னன் அக்கணமே ஞானியாகிவிட்டான். அந்த ஞானிதான் பத்ரகிரியார். ஆதிசங்கரர் எப்படி தன் தாயின் இறப்பை ஞான திருஷ்டியில் அறிந்தாரோ, அதுபோல் அடிகளாரும் அறிந்து தாயின் ஈமக்கிரிகளை

செய்தார். ஒரு நாள் தன் கண்முன் தோன்றிய ஜோதியை நோக்கி, தனக்கு எப்பொழுது முக்தி கிடைக்கும் என்று இறைவனைப் பார்த்து கேட்க, அப்பொழுது கசக்கும் பேய் கரும்பு ஒன்றைக் கொடுத்த இறைவன் அசரீரியாக "இந்தக் கரும்பு உனக்கு எந்த தலத்தில் இனிக்கிறதோ அங்கு தான் உனக்கு முக்தி" என்றார். பல தலங்களுக்கு சென்று பட்டினத்தடிகள் அலைந்தார். எல்லா இடத்திலும் கசந்த அந்த கரும்பு திருவொற்றியூர் தலத்தில் அலைந்த பொழுது இனித்தது. உடனே திருவொற்றியூர் தியாகராஜ பெருமாளை தொழுது பாடி பரவசமடைந்தார். சிவன் சன்னதி எதிரேயுள்ள கடற்கரையில் விளையாடி கொண்டிருந்த சிறுவர்களிடம் மணலை சர்க்கரையாக்கியும், சிறு கற்களை பொரிகடலையாக்கியும் வேடிக்கைக் காட்டி மனம் மகிழ்ந்தார். பின்னர் சிறுவர்களிடம் தன்னை மண்ணுக்குள் மூடி விடும்படி கேட்டார். அவர்கள் தயங்கியதைப் பார்த்து, மூடினாலும் தான் வெளியில் வந்து விடுவதாக கூறினார். தயக்கத்துடன் மணலுக்குள் பட்டினத்தடிகளாரை மூடிய சிறுவர்கள், மற்றொரு இடத்திலிருந்து அவர் வெளி வருவதைப் பார்த்து ஆராவாரத்துடன் ஆர்ப்பரித்தார்கள். பின்பு அங்கேயே தன்னை அடிகள் மீண்டும் மூடச் சொன்னார். சிறுவர்கள் மூடினார்கள். ஆனால் அவர் திரும்பி வெளி வரவேயில்லை. சுயம்புலிங்கமே வெளிவந்தது. அந்த ஆலயமே பட்டினத்தார் ஆலயமாக திருவெற்றியூர் கடற்கரையில் இன்றும் இருக்கிறது. இயற்றிய நூல்களில் குறிப்பிடத்தக்கவை.

1. *திருவிடை மருதூர் மும்மணிக்கோவை*
2. *திரு ஏகம்பமுடையார் திருவந்தாதி*

சித்தி அடைந்த திருத்தலம் சென்னையை அடுத்த திருவொற்றியூர்

## (13) ஸ்ரீ கடுவெளி சித்தர் :

இப்பெருமான் சோழநாட்டில் உள்ள கடுவெளி என்ற ஊரில் பிறந்தார். அதனால் அவருக்கு அது காரணப் பெயராயிற்று. இவரை கழுவெளிச் சித்தர் என்று சொல்வதும் உண்டு. இவர் சீர்பெற்ற பிரபஞ்சமே சுத்தவெளி என்று கண்டார். இவருடைய பாடல்கள் பிரபலமான அளவிற்கு இவருடைய வரலாறு யாருக்கும் கிடைக்காத பொக்கிஷமாகி விட்டது. இவர் இயற்றிய நூல்களில் குறிப்பிடத்தக்கவை. **கடுவெளி சித்தர் பாடல்.** இவர் சித்தியடைந்த திருத்தலம் காஞ்சிபுரம்.

## (14) ஸ்ரீ கஞ்சமலை சித்தர் :

மலைகளிலே பிறந்து மலைக் குகைகளிலே வாழ்ந்தவராக இந்த பெருமான் பேசப்படுகிறார். இந்த பூவுலகத்தை ஆகாய மார்க்கமாக வலம் வந்தவர். மூலிகைகளையே ஆடைகளாய் அணிந்த மருத்துவர் இவர். மிருகங்களிடமும் பறவைகளிடமும் பாசமாய் பழகியவர். இவருடைய பாடல்கள் அனைத்தையும் சித்தர் தத்துவங்களின் சிறப்பை உணர்த்துகின்றது. இவருடைய வரலாறும் மறைந்த பொக்கிஷமாக இருக்கிறது. இவருடைய நூல்களில் குறிப்பிடத்தக்கவை. **கஞ்சமலை சித்தர்கலைத் தியானம்,** கஞ்சமலை சித்தர் பாடல்கள்.

## (14) ஸ்ரீ சென்னிமலை சித்தர் :

இடையர் குலத்தில் பிறந்த இந்த அருட்செம்மல் பிளவுபட்ட இரட்டை நாக்கு உடையவர். ஆதலால் பிண்ணாக்கீசர் என்ற காரணப் பெயரை பெற்றவர். அத்திமரபொந்து ஒன்றில் தவம் இருந்த பிண்ணாக்கீசர் முன்னிலையில் பாம்பாட்டி சித்தர் ஒருமுறை தோன்றி அவருக்கு ஞானமார்க்கத்தை உபதேசித்தார். அன்றிலிருந்து அவரிடம் சித்துக்கள் விளையாட துவங்கின. நோய் தீர்க்கும் தன்வந்திரியாக இவர் விளங்கியிருக்கிறார். தீராத வியாதியெல்லாம் தீர்த்து வைத்திருக்கிறார். அத்திமரத்தின் பொந்திலே சிவபெருமானை தரிசித்து, அதன் உள்ளேயே ஐக்கியமாகிவிட்டார். பட்டுக் கிடந்த அந்த மரம் இவர் சித்தியானதற்குப் பிறகு, பச்சை பசேலேன்று துளிர்த்தது. ஜீவசமாதியடைந்த அந்த மரத்தை மக்கள் வழிபட தொடங்கினர். இன்னும் நோய் வந்தவர்கள் அந்த மரத்திற்கு காப்புக் கட்டி பூஜைசெய்து, அதன்பின் மரத்தின் இலை சருகை கசாயமாக வைத்து குடிக்கிறார்கள். நோய் தீர்ந்து பலன் பெறுகிறார்கள். இவர் இயற்றிய நூல்களில் குறிப்பிடத்தக்கவை. **பிண்ணாக்கீசர் தத்துவப் பாடல்கள்** சித்தியடைந்த திருத்தலம். கேரளத்தில் உள்ள நாங்குனேரிசேரியாகும்.

## (15) ஸ்ரீ கபிலர் சித்தர் :

லிங்க வடிவமாக இருந்த இறைவன் சிவபெருமானை இடது கையினால் வைத்து பூஜித்ததால் சாபம் பெற்ற கபிலமகரிஷி மாடயம்பதியில் (மாடம்பாக்கம்) பசு மாடாக அவதரித்தார். உடம்பில் சுரக்கும் பால் முழுவதையும் தினசரி புற்றினுள்ளே வீற்றிருக்கும்

சிவபெருமான் மீது பசுவாக இருக்கும் கபிலர் பெருமான், பொழிந்து வரலானார். எல்லா பசு மாடுகளும் பால் கறக்கும் பொழுது, ஒரு மாடு மட்டும் கரவை இல்லாது இருப்பது எப்படி என்பதை கண்டுபிடிக்க, இடையன், அம்மாடு எங்கு செல்கிறது என்பதை கவனிக்க துவங்கினார். இந்த பசுமாடு, புற்றின் மேல் பால் பொழிவதைக் கண்ட இடையன் கம்பால் பசுமாட்டை ஓங்கி அடிக்கலானான். வலி பொறுக்காது பசு மாடு ஓடிவந்து புற்றிற்கு அருகில் மோதி மோதி அழுதது. உள்ளிருந்த சிவபெருமான் பதறி கொண்டு வெளிவந்து பசு மாட்டை கட்டியணைத்து கபிலராக மீண்டும் சாப விமோசனம் அளித்தார். அத்தகைய மேன்மை மாடயம்பதி திருத்தலத்தில் பின்பு தேனுபுரீஸ்வராக சிவபெருமான் காட்சி தந்தார். அத்தகைய ஆன்மீகத் தலத்தில் தான், நம் சித்தர் பீடமும் உலகின் ஆட்சிப் பீடமாக அரங்கேறி உள்ளது. இவர் இயற்றிய நூல்களில் குறிப்பிடத்தக்கவை. கடைச்சங்க இலக்கிய நூல்கள் சித்தயடைந்த திருத்தலம், தமிழ்நாடு.

## (16) ஸ்ரீ கருவூர் சித்தர் ஸ்வாமிகள் :

இந்த சித்தர் சோழநாட்டில் இருக்கும் கருவூரில் பிறந்தவர். கோயில்களுக்கு விக்ரகங்கள் செய்யும் விஸ்வகர்மா இனத்தை சேர்ந்தவர். சிறுவயதிலேயே ஞானியாக விளங்கினார். போகர் பெருமானின் அருளால் அம்பிகையின் கடாஷம் பெற்று இரசவாத வித்தையில் சிவலிங்கங்கள் செய்யலானார். காசி சென்று விஸ்வநாதர் ஆலயத்தில் தங்கமயமான லிங்கத்தை உருவாக்கினார். ஒரு முறை சோழ மன்னன் இரணியவர்மன் சிவகங்கை தீர்த்தத்தில் நீராடும் சமயம் தண்ணீருக்குள் நடராஜர் பெருமானின் நடனத்தையும் ஓங்கார ஒலியையும் கேட்டு வியந்து போனார். பின்னர் தான், கண்ட நடராஜர் வடிவத்தை ஓவியமாக வரைந்து, கைதேர்ந்த சிற்பிகளிடம் தங்கம் கொடுத்து சிலை வடிக்கச் சொன்னார். சிற்பக் கலை வல்லுனர்கள் பலரும் எவ்வளவோ முயற்சித்தும் விக்கிரகத்தை முடிக்க முடியவில்லை. உடனே போகர் பெருமான் கருவூரார் சித்தருக்கு செய்தி அனுப்பினார். விரைந்து வந்த கருவூரார் சித்தர் ஒரு மணி நேரத்தில் நடராஜரை ஒளிவீசும் வடிவழகு கொண்டவராய் உருவாக்கினார். அரசன் சிலையழகில் அகம் மகிழ்ந்தாலும் செப்பு உலோகத்தை சிலையில் கருவூர் பெருமான் சேர்த்தது அறிந்து கோபம் கொண்டு சிறையில் அடைத்தான். போகர் பெருமான் அரசனிடம், "அரசே சுத்தமான

தங்கத்தில் வடிவம் செய்தால், அதிலிருந்து கிளம்பும் ஒளி, நாளாக, நாளாக பார்ப்பவர்களின் கண்களைக் குருடாக்கியிடும். இந்த அறிவியல் உண்மை தெரியாத உனக்கு அந்த நடராஜர் சிலை வேண்டாம். நான் எடுத்துப் போகிறேன்'' என் கருவூராரை எனக்கு கொடு. உன்னுடைய தங்கத்தை நான் உனக்குத் தருகிறேன்'' என்று கூறினார். தன் தவறை உணர்ந்த மன்னன், கருவூராரை விடுதலை செய்து, நடராஜர் சிலையை கண்ணீருடன் பக்தியுடனும் போகர் ஸ்வாமியிடம் இருந்து பெற்றான். பின்னர் கருவூரார் பெருமான் நடராஜ பெருமானை பிரதிஷ்டை செய்யும் பூஜைமுறைகளை கூறி மறைந்தார். ஒரு முறை அபரஞ்சி என்னும் பெண்ணிற்கு கருவூரார் திருவரங்கத்தில் வீற்றிருக்கும் அரங்கன் பெருமானின் நவரத்தின மாலை கொடுத்தருளினார். இது எப்படி நடக்கும் என்று விசாரணை வைத்த போது, கோவில் முன்பு கூடிய ஊரார் காதுகளில் ''கருவூரார் சித்தர் மூலம் என் அடியவளாகிய அபரஞ்சிக்கு நான்தான் அந்த நவரத்தின மாலையைக் கொடுத்தேன்'' என்று அரங்கநாதரே அசரீரியாக ஒலித்தாராம். காளியே கருவூரார் கேட்டதையெல்லாம் வழங்கி இருக்கிறாள். இராஜராஜ சோழன் கட்டிய பெரிய கோவிலின் கருவரையிலிருந்த பிரம்மாண்டமான லிங்கம் அஷ்டபந்தன கட்டில் நில்லாமல் ஆடிக்கொண்டே இருந்தது. உடனே கருவரைக்குச் சென்ற கருவூரார், அஷ்டபந்தனம் செய்ய விடாமல் தடுத்து கொண்டிருந்த பிரம்மராட்சசியின் மேல் காறி உமிழ்ந்தார். பின்னர் அஷ்டபந்தனத்தில் தனது உமிழ் நீரைக் கலந்து குழைத்து எளிதாக அஷ்டபந்தனம் செய்து சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்தார். கும்பாபிஷேகத்தையும் சிறப்பாக செய்து முடித்தார். ஒருமுறை தன்னை கொல்ல வந்த வேதியர்களின் முன்பு சிவலிங்கத்தைக் கட்டித்தழுவி சிவனுடன் ஐக்கியமானார். இவர் இயற்றிய நூல் குறிப்பிடத்தக்கவை.

1. *கருவூரார் பாத காவியம் 750*
2. *கருவூரார் பலதிரட்டு. சித்தியடைந்த திருத்தலம்*

கருவூரில் அமைந்து இருக்கும் ஆனிலையப்பர் கோவில் ஆகும்.

## (18) ஸ்ரீ பாம்பாட்டி சித்தர் :

ஸ்ரீ பாம்பாட்டி சித்தர் ஜோதி என்ற பரம்பரையை சார்ந்தவர். இளம்வயதிலேயே பாம்பைப் படமெடுத்து ஆடச்செய்து, அவைகளின்

விஷத்தை சேமித்து விற்பது, விஷமுறிவு மூலிகைகளை காடுகளை கண்டெடுப்பதுமாய் இருந்தார். பாம்புக்கடிக்கு சிறந்த வைத்தியராகத் திகழ்ந்தார். மருதமலை விஷ வைத்திய ஆய்வுக் கூடம் ஒன்றும் துவங்கினார். அப்பொழுது வைத்தியர் சிலர், பாம்பாட்டி சித்தரிடம் மருதமலை காட்டில் நவரத்தின பாம்பு இருக்கிறது என்றும், அது இரவில் தான் இரை தேடி வரும் என்றும், அதனிடம் விலையுயர்ந்த மாணிக்கம் இருப்பதாகவும், அது நல்ல விலை போகும் என்றும் கூறினார்கள். இதனை கேள்விப்பட்டவுடன், அதனை எப்படியும் பிடித்து விடவேண்டும் என்று சித்தர் நினைத்தார். இரவும் வந்தது. பாம்பட்டி சித்தரும் காட்டிற்கு கிளம்பிச் சென்றார். சித்தரின் வாசனை அறிந்த பாம்புக் கூட்டம் வளைக்குள் பதுங்கிக் கொண்டன. தன்னைப் பார்த்து பாம்புக் கூட்டமே காட்டை விட்டு காலி செய்து விட்டதோ என்று எண்ணியிருந்த சித்தர் முன்பு கலகலவென்று சிரித்தவாரே சட்டை முனி சித்தர் நின்றார். தன் வாழ்நாளில் இப்படி ஒரு பேரொளி முகத்தை சந்தித்தே இல்லையே என்று வியந்து அவரைப் பார்த்த பாம்பாட்டி சித்தரிடம், சட்டை முனி சித்தர், "உனக்குள்ளேயே ஒரு நவரத்தின பாம்பு குடியிருக்கிறது. அந்த பாம்பை அடக்க வழிதேடு, வெட்ட வெளியில் இருக்கும் பாம்பை விட்டுவிடு". என்று கூறி மறுபடியும் சிரித்தார். உடனே பாம்பாட்டி சித்தர் சட்டை முனி சித்தரின் காலில் விழுந்து வணங்கினார். பின்பு சட்டை முனி சித்தர், "ஒவ்வொரு உடலுக்குள்ளும் இருக்கும் குண்டலினியை விழித்தெழுந்தால். இறைவன் நம் உடலுக்குள் இருப்பதைக் காணலாம்" என்றார். அதற்கு சித்தர் பெருமான் "குருவே ஒரு அரிய பெரிய தத்துவத்தை உங்கள் மூலம் அறிந்தேன். இனி மேலான சுத்தவழிவிட்டு ஒரு நாளும் விலக மாட்டேன்" என்றார். குருதேவரும் அவருக்கு ஆசிவழங்கி மறைந்தார். பல கால யோகம் செய்த பாம்பாட்டிச் சித்தருக்கு குண்டலினி என்ற பாம்பு விழித்தாடியது. அவருக்கு உலகம் முழுவதும் ஒளிமயமாகத் தெரிந்தது. இரசவாதம் கைக் கூடியது. பிறகு சித்தர் பெருமான் ஞான பயணத்தைத் தொடர்ந்தார். வழியில் அவர் கொடுமைகள் பல புரிந்த மன்னன் ஒருவன் இறந்து கிடப்பதைக் கண்டார். உடனே இறந்து போன பாம்பு ஒன்றை அரசரின் உடல் மேல் வீசினார். தன் உடலைப் பத்திரப்படுத்தினார். பின்பு இறந்து போன அரசன் உள் புகுந்து, எடுத்து மக்களுக்கு நல்ல அறிவுரைகளையும், அரசியிடம் நடத்த வேண்டிய ஆட்சிமுறைகளையும் பற்றி கூறிவிட்டு, அரசிக்கு உண்மையை உணர்த்தி, அரசன் உடல் விட்டு நீங்கினார். அரசன்

தலை சாய்ந்தான். பாம்பும் அங்கிருந்து மறைந்தது. மக்களுக்காக பொருள் கொடுத்தும், அவர்களின் வறுமையை தீர்த்தும், அறிவிலிகளாக அவர்கள் இருப்பது கண்டு வருத்தமுற்று பாம்பாட்டி சித்தர் யார் கண்ணிலும் படாமல் மருதமலையில் உள்ள ஒரு குகையில் தவம் செய்யலானார். இன்னும் மருதமலையில் அவர் தவம் செய்த குகை காணப்படுகிறது. அவர் இயற்றிய நூல்களில் குறிப்பிடத்தக்கவை.

*பாம்பாட்டிச் சித்தர் ஞான சூத்திரம் 16,*

*பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள்*

அவர் சித்தியடைந்த திருத்தலம் மருதமலை ஆகும்.

மேலே குறிப்பிட்டுள்ள 18 சித்தர்களும் ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளின் சூட்சும ஆணைப்படி, ஸ்ரீ சக்தி பீட பிருந்தாவனத்தில் பிரதிஷ்டை செய்ய உள்ளார்கள். புனிதமான இந்த சித்தர்களின் வாழ்க்கை வரலாறு முழுவதும் தெரியவில்லை. அவர்களுடைய நூல்களைப் பற்றியும், அவர்களின் வாழ்க்கை முறைகளைப் பற்றியும் ஆராய்ச்சிகள் தொடங்குகின்றன. 18 சித்தர்களைப் பற்றி இன்னும் விரிவாக, அறநிலையத்தினர் வெளியிட்டுள்ள 18 சித்தர்களின் பூஜைமுறை என்ற புத்தகத்தில் உள்ளது.

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் வழிகாட்டுதலின்படி புனர் அவதாரம் எடுத்த பதினெட்டு சித்தர்களும், சிலை வடிவமாக, பேசும் தெய்வங்களாக பதினெண் சித்தர் சக்திபீட பிருந்தாவனத்தில் பிரதிஷ்டை செய்ய உள்ளார்கள். சக்தி பீடத்தில் உள்ள இந்த பதினெட்டு சித்தர்கள், ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளால் அடையாளம் காட்டப்பட்டவர்கள். இவர்களைத் தவிர எண்ணிலடங்கா சித்த மகா புருஷர்கள் இன்னும் உலவிக் கொண்டு தான் இருக்கின்றனர். இவர்கள் தான் உண்மையான பதினெட்டு சித்தர்களா? வேறு பதினெட்டு சித்தர்கள் இருக்கிறார்களா என்ற சந்தேகத்தைக் கிளப்பு வோர்களுக்கு ஒரே விடை. இங்கே அமையப்போகும் சித்தர்கள் சன்னதிகளை ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் ஆணைப்படிதான் அமைக்க உள்ளார்கள் என்பதைத் தெளிவுபடுத்துகிறோம்.

அத்தியாயம்-19

# மாடம்பாக்கத்தின் மகிமை

ஒரு முறை கபில மகரிஷி சிவலிங்கத்தை இடது கையில் வைத்து பூஜித்ததால், சிவனின் நிந்தனைக்கு ஆளாகி, சாபம் பெற்று, விமோசனம் அடைந்த ஸ்தலம்தான் மாடம்பாக்கம். மாடம் பாக்கத்தில் பசுவாக பிறந்த கபில மகரிஷி, புல் மேய்வதற்காக, மற்ற பசுக்களுடன் சென்றார். எல்லா பசுக்களும் பால் கறக்கும்போது ஒரு மாடுமட்டும் கறக்கவில்லை என்பதை மாடு மேய்ப்பவன் கண்டு பிடித்தான். இது பல நாள் தொடர்ந்தது. அவனுக்கு காரணம் ஒன்றும் புரியவில்லை. ஒருநாள் அவன் அந்த மாட்டை பின் தொடர்ந்து சென்றான். அவன் பார்த்த காட்சி அவனுக்கு அதிர்ச்சியூட்டுவதாக இருந்தது. ஏரியின் நடுவே இருக்க கூடிய புற்றில் அந்த பசு பால் சொரிவதை பார்த்தான். முதலில் திகைத்து பின் அந்த இடையன் மிகுந்த கோபம் கொண்டு சாட்டையால் அந்த பசுவை அடித்தான், வலி பொறுக்க முடியாமல் அந்த பசு தன் கொம்புகளை அந்த புற்றின் மேல் முட்டியது. உடனே புற்றில் இருந்து ரத்தம் பீரிடத்தொடங்கியது. அந்த ஏரியே இரத்தவெள்ளமாக மாறிற்று. ஒன்றும் புரியாமல் திகைத்த அந்த இடையன் ஏதோ ஒரு அற்புத நிகழ்ச்சி நடக்கப்போவதை உணர்ந்தான். அன்று இரவே சிவபெருமான். அப்பொழுது அரசாட்சி செய்துகொண்டிருந்த மன்னன் குலோத்துங்க சோழன் கனவில் தோன்றி, அந்த இடத்திலேயே ஒரு கோவில் கட்டுமாறு ஆணை பிறப்பித்தார்.

அந்த கோவில்தான் ஸ்ரீ தேனுகாம்பாள் சமேதராக ஸ்ரீ தேனுபுரீஸ்வரர் அமர்ந்து அருள்பாலித்துகொண்டிருக்கும் மாடம் பாக்கத்தில் அமைந்துள்ள அருள்மிகு ஸ்ரீ தேனுபுரீஸ்வரர் ஆலயம் ஆகும். கபில மகரிஷிக்கு மோட்சம் கிடைத்த ஸ்தலமல்லவா இது! முற்காலத்தில் நான்கு வேதங்களும் கற்றுணர்ந்த அந்தணர்களுக்கு

இவ்வூர் தானமாக வழங்கப்பட்டதால் இந்த ஸ்தலம் சதுர்வேதி மங்கலம் என்று அழைக்கப்படுகிறது.

நகரேசு காஞ்சி என்ற புகழ்பெற்ற காஞ்சிமாநகரத்தில் ஸ்ரீ காமகோடி பீடாதிபதியான மறைந்த ஸ்ரீ சந்திரசேகர சரஸ்வதி ஸ்வாமிகள் ஸ்ரீ பரமாச்சார்யாள் மாடம்பாக்கத்தில் சித்தர்கள் பலர் வாழ்ந்ததாக கூறியுள்ளார். பக்கத்தில் இருக்கும் கிராமமான சித்தலபாக்கம், சித்தர்பாக்கம் என்று தான் இருந்தது. பெயர் மருவி சித்தலபாக்கம் என்று மாறியதாக கூறியுள்ளார். ஆகவே இந்த கிராமம் ஒரு புனிதமான கிராமமாக கருதப்படுவதில் ஆச்சர்யம் ஏதுமில்லை.

இத்தகைய பெருமை வாய்ந்த, வரலாற்றில் இடம் பிடித்த, புனிதமான இத்தலத்தை தான் ஸத்குரு ஸ்ரீ சக்திபீட பிருந்தாவனம் அமைவதற்கு தேர்ந்தெடுத்தார். ஸத்குரு சூட்சுமத்தில் கூறிய நிலம் அருள்மிகு தேனுபுரீஸ்வரருக்கு சொந்தமானது. 2-3 ஏக்கர் நிலப்பரப்பு அளவு உள்ளது. சக்தி பீட பிருந்தாவனம் இந்த நிலத்தில் அமைப்பதற்கு அறநிலையம் முதலில் இந்த நிலத்தை வாங்க வேண்டும். இந்த நிலத்தை வாங்கவேண்டிய ஆயத்தங்கள் தொடங்கின.

இந்த நிலத்தில் தான் பிருந்தாவனம் அமையவேண்டும் என்பது உறுதியானவுடன், மகான் சூட்சுமத்தில் கூறியுள்ளபடி, சித்த மகா புருஷர்களுக்கு முறையான பூஜைகள் நடைப்பெற்றன. புனித திருத்தலமான இராமேஸ்வரம், திருவண்ணாமலை, பழனி, மருதமலை, ஆகிய இடங்களிலிருந்து. குருஜி சர்மா அவர்கள் பிடிமண்ணை அறங்காவலர்களுடன் சென்று எடுத்துக்கொண்டு வந்தார். திருவண்ணாமலையில் பிடிமண்ணை ஸத்குரு சமாதியில் இருந்தும், அருணாசலேஸ்வரர் கோயிலிலிருந்து எடுப்பதற்கு முன்பு குருஜி சர்மா அவர்கள் யோகி ராம்சுரத்குமார் அவர்களை தரிசித்தார். திருவண்ணாமலைக்கு போகும் சமயமெல்லாம் குருஜி. சர்மா அவர்கள் யோகியை தரிசிக்காமல் வரமாட்டார். அப்படி ஒரு சமயம் குருஜி சர்மா அவர்கள் யோகியை தரிசிக்கும் பொழுது. அவரிடம் தான் ஸத்குருவின் சமாதிக்கு பூஜைகள் செய்வதற்காக திருவண்ணாமலை வந்ததாகக் கூறினார்.

"மகானின் சமாதிக்கு செல்ல வேண்டுமே தவிர, பிச்சைகாரனை (தன்னை) தேடி வராதே" என்று யோகி கூறினார்.

மற்றொரு சமயம் குருஜி. சர்மா அவர்கள் யோகியை தரிசிக்கும்பொழுது. "ஒரு சொறி பிடித்த நாய், ஒன்று அவருடைய தொடையின் மேல் வந்து அமர்ந்தது, யோகி ராம் சுரத்குமார் குருஜி சர்மாவை உன்னிப்பாக கவனித்தார், குருஜி சர்மாவும் எந்த வித சலனம் இல்லாமல் அமர்ந்திருந்தார் சிறிது நேரம் கழித்து அந்த நாய் எழுந்து சென்று விட்டது. அதனுடன் தன் கர்மாவும் சென்று விட்டதாக குருஜி சர்மா அவர்கள் உணர்ந்தார். உணர்ந்தது மட்டுமின்றி, பரிசுத்த நிலையில் சக்தி பீடம் வருவது உறுதியாகி விட்டது போல் அவருக்கு தோன்றியது. பிடி மண்ணை எடுப்பதற்கு திருவண்ணாமலை சென்ற பொழுது குருஜிசர்மா அவர்கள் யோகியை திரும்பவும் சென்றுதரிசித்தார், தான் வந்த நோக்கத்தை அவரிடம் எடுத்துரைத்த பொழுது யோகி மிகுந்த சந்தோஷத்து டனும், குதூகலத்துடனும் குருஜிசர்மா அவர்களுடன் கோவிலை நோக்கி சென்றார். பிடிமண்ணை வைத்திருந்த கலசத்தை ஸ்ரீ யோகி அவர்கள் குருஜி சர்மா அவர்கள் தலையில் வைத்து மந்திர உச்சாடனம் செய்தார். உலகிலேயே முதன்மையான சக்திபீடமாக அமைந்து அது உலக மக்களுக்கு நன்மையையும் நிம்மதியையும் தரக்கூடிய ஸ்தலமாக அமையட்டும் என்று ஆசிர்வாதம் செய்தார். குருஜி, சர்மாவிற்கு ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரிஸ்வாமிகளே நேரில் வந்து ஆசிர்வதித்தது போல் இருந்தது. பல புண்ணிய ஸ்தலங்களில் இருந்து எடுக்கப்பட்ட மண் பல சக்திகள் ஒன்று திரண்டு ஒரே சக்தியாக பராசக்தியாக உருவாவது போல் லிங்க வடிவில் பிடிக்கப்பட்டு 18 சித்தர்களாக மாறி ஒரு ஓலை பெட்டியில் வைத்து, காலையிலும், மாலையிலும், பூஜை நடைபெற்றது. ஒவ்வொரு சித்தருக்கு உகந்த புஷ்பம், நைவேத்தியம் முதலியவற்றை செய்து, ஓலைபெட்டியில் இருக்கும் 18 சித்தர்களுக்கும் பூஜை செய்தனர். அம்பிகை, பராசக்திக்கும், உலக மகா ஸத்குருவிற்கும் விரிவாக பூஜைகள் நடைபெற்றன. இந்த நேரத்தில் தான் 18 சித்தர்களும் புனர் அவதாரம் எடுத்து லிங்க வடிவில் தோன்றினார்கள்.

1994.ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 8 ம் தேதி, மாடம்பாக்கம் அருள்மிகு தேனுபுரீஸ்வரர் ஆலயத்திற்கு அருகில் ஸத்குரு சூட்சுமத்தில் தேர்ந்தெடுத்த இடத்தை அறநிலையத்தினர் விலை கொடுத்து வாங்கினர். மூலாயத்திற்கு முன்னோடியாக பாலாலயம் ஒன்று அந்த நிலத்தில் நிறுவப்பெற்றது. அதுவே ஆதியும், அந்தமுமாக இன்றைய தினம் காட்சியளித்து கொண்டிருக்கிறது. மூலாலயம் அமைக்க கடினமான முயற்சி தொடர்ந்து கொண்டே இருக்கிறது.

அத்தியாயம்-20

# மூலாலயத்தின் முன்னோடி - பாலாலயம்

பாலாலயம் இதற்கிடையே ஸத்குருவின் சீடர்களுக்கு மன நிம்மதியையும், மகிழ்ச்சியையும் தருகிற இடமாக அமைந்துள்ளது. காட்டாற்று வெள்ளம் போல் அதனுடைய வளர்ச்சி அபரிமிதமாக உள்ளது. 1997ம் ஆண்டு ஏப்ரல் மாதம், 13ம் தேதி ஸ்ரீ சக்தி பீட கணபதியை பாலாலயத்தில் அறநிலையத்தினர் குருதம்பதிகளான, ஸ்ரீமதி விசாலாட்சி சுவாமிநாதன், திரு. சுவாமிநாதன், குருஜி சர்மா தம்பதியினரின் முன்னிலையில் பிரதிஷ்டை செய்தனர். ஆந்திர மாநிலத்தில் உள்ள சித்தூருக்கு அருகில் காணிப்பாக்கம் என்ற கிராமத்தில் ஒரு கிணற்று நீரில் மிதக்கும் பிள்ளையாரை தரிசிக்க குருஜி சர்மா அவர்கள் அன்றைய அறநிலையப் பொருளாளராக இருந்து மறைந்த திரு. ஸ்ரீதர் அவர்களுடன் சென்றார்.

அங்கு சென்று தரிசிக்கும் சமயம், காணிப்பாக்கம் பிள்ளையார் போன்று மாடம்பாக்கத்தில் பிரதிஷ்டை செய்ய வேண்டும் என்று குருஜி சர்மாவிற்கு ஸத்குரு சூட்சுமத்தில் ஆணை பிறப்பித்தார். காணிப்பாக்கத்தில் பல கடைகளில் தேடியும் கிடைக்காமல், அலைந்து திரிந்து கொண்டிருக்கும் நேரத்தில் ஒரு குறிப்பிட்ட பிள்ளையார் ஒன்று குருஜி. சர்மா அவர்களின் கவனத்தை கவர்ந்தது. அதற்கு அந்த வியாபாரி இந்த பிள்ளையார் திருவண்ணாமலை யிலிருந்து வந்ததாக கூறினார். அந்த பிள்ளையாரை தான் மாடம்பாக்கத்தில் பிரதிஷ்டை செய்ய வேண்டும் என்று ஸத்குரு ஆசைப்படுவதை உணர்ந்து கொண்டார். குருஜி சர்மா அவர்கள் அந்த பிள்ளையாரை வெகு ஜாக்கிரதையாக பாலாலயத்திற்கு கொண்டு சென்று வைதீக முறைப்படி பிள்ளையாரை பிரதிஷ்டை செய்து அவருக்கு



ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் - பாலாலயம்



மாடம்பாக்கத்தில் சமுதாய பணிகள்
இலவச ஆடைகள் வழங்குதல்



இலவச மருத்துவ முகாம்



இலவச மருத்துவ முகாம்



அன்னதானம்




மனவளர்ச்சி குன்றிய மாணவனுக்கு உதவி வழங்குதல்





முதியோர்களுக்கு போர்வை வழங்குதல்



ஸ்ரீ சக்திபீட கணபதி - உற்சவமூர்த்தி



ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகள் - உற்சவமூர்த்தி

ஸ்ரீ சக்திபீட கணபதி என்ற திருநாமத்தையும் சூட்டினார். ஸ்ரீ சக்திபீட கணபதி இந்த புத்தகத்தின் முன்பக்க உள் அட்டையை அலங்கரிக்கிறார். வறுமையில் வாடியவருக்கு கிடைத்த புதையல் போல வினை அகன்று வழிகிடைத்தது. தடைகள் தகர்த்தெரியப்பட்டு தடகளம் நேர்த்தியானது. உருவத்தில் சிறியவராக இருந்தாலும் இவருடைய கீர்த்தி மிகப்பெரிது. ஆயிரக்கணக்கான மக்கள் இவரிடம் வந்து தங்கள் மனக்குறைகளை கூறி, அதை நீக்குவதற் குண்டான வழிகளை அறிந்து அதை போக்கி பலன் பெறுகிறார்கள். பக்தர்கள் தங்கள் மனக்குறைகளைப் போக்க வேண்டி, ஒரு முழு தேங்காயை ஸ்ரீ சக்தி பீட கணபதி பாதாரவிந்தங்களில் வைத்து மனதார வேண்டி செல்கிறார்கள். நியாயமான கோரிக்கைகளுக்கு பதில் உடனே கிடைக்கிறது. தீராத பிரச்சனைகள்யாவும், ஸ்ரீ சக்தி பீட கணபதியை வேண்டினால், ஆதவனை கண்ட பனிப் போல் விலகிச் செல்கிறது. திருமணத் தடை, வெளிநாட்டிற்கு செல்வதற்குண்டான தடை, கோர்ட் மூலமே தீராத பிரச்சனைகள்யாவும், விலகி மக்கள் நிம்மதியை அடைகின்றனர். ஸ்ரீ சக்தி பீட கணபதியை வெள்ளி கவசத்துடன் பார்க்க அன்பர்கள் விழைந்தனர். அதற்குரிய வெள்ளி யையும் கொடுத்தனர். ஸ்ரீ சக்தி பீட மகாகணபதி வெள்ளி கவசத்தில் அழகுடன் மிளிர்கிறார். பலரின் முயற்சியில் ஸ்ரீ சக்தி பீடகணபதியின் பஞ்சலோக உற்சவமூர்த்தி வடிவமைக்கப்பட்டது. ஸத்குருவின் ஆராதனை மற்றும் விநாயக சதுர்த்தி போன்ற விசேஷ நாட்களில் மாடம்பாக்கத்தில் ஸ்ரீ சக்தி பீட கணபதி திருவீதி உலா வருவது கண் கொள்ளா காட்சியாகும்.

மகானின் சூட்சும ஆணைப்படி, பராசக்தி வேல் ஒன்று பாலாலயத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. அறநிலையத்தின் உபதலைவர், திரு. மருதபரணி அவர்களும், செயலாளரான திரு. ராமசுப்ரமண்யமும், ஸ்ரீ சக்தி வேலை பஞ்சலோகத்தில் வடிக்கும் பொறுப்பை சுவாமிமலையில் இருக்கும் ஒரு ஸ்தபதியிடம் ஒப்படைப் பதற்காக சென்றனர். பஞ்ச லோகத்தில் வார்த்த அந்த சக்திவேல் கவசத்தை திறக்கும் பொழுது, கடுமையான அக்னி நட்சத்திரமாக இருந்த சமயத்தில் கூட மழை பெய்தது. வான்மழை பெய்து விண்ணுலக தேவதைகள் அருள் செய்வது போன்ற உணர்வு அறங் காவலர்களுக்கு ஏற்பட்டது.

ஸ்ரீ பராசக்தி வேலையும், ஸ்ரீ நாகராஜரையும் பிரதிஷ்டை செய்வதற்கு பீடம் கிடைக்கவில்லை. அதற்காக அறங்காவலர்களான

திரு. மருதபரணியும், திரு. இராமசுப்ரமண்யமும் பல இடங்களில் அலைந்து திரிந்தனர். ஸ்ரீ பராசக்தி வேலையும், ஸ்ரீ நாகராஜரையும் ஒன்றாக இணைத்து பிரதிஷ்டை செய்வதற்கு பீடம் வேண்டுமே? மகான் குறித்த நாட்களோ நெருங்கி கொண்டிருக்கிறது. பீடம் கிடைக்கவில்லையே? ஐயகோ? என்ன செய்வது என்று பரிதவித்தனர் மகான் சூட்சுமத்தில் விளக்கி அவர்களுடைய கவலையைப் போக்கினார். அத்தருணத்தில் தான் ஸத்குருவின் வழிகாட்டுதல்படி ஒரு முஸ்லீம் அன்பரின் தொழிற்சாலையில் அந்த பீடத்தை பார்த்தனர். இருள் அகன்று ஒளி கிடைத்தது போல் அறங்காவலர்கள் உணர்ந்தார்கள். இதன்மூலம் ஸத்குரு பிரதட்சயமாக வழிகாட்டுவதை அறிந்தார்கள். தான்ய வாசம் (நெல்) ஜலவாசம் (நீர்) 48 நாட்கள் நடைபெற்றன.

பிறகு நமது பிரதான குருமார்களான, ஸ்ரீமதி விசாலாட்சி சுவாமிநாதன், ஸ்ரீ சுவாமிநாதன், குருஜி. சர்மா அவர்களின் தலைமையில் ஸ்ரீ நாகராஜரையும், ஸ்ரீ பராசக்தி வேலையும், 9-6-1998 ஆம் ஆண்டு வைகாசி விசாகத்தன்று பிரதிஷ்டை செய்தனர். ஸ்ரீ பராசக்தி வேலையும், ஸ்ரீ நாகராஜரையும், வேண்டிக் கொண்டால், தீராத பகை, சர்பதோஷம், செவ்வாய் தோஷம் நீங்கும். நாக தோஷம் உள்ளவர்கள், நாகருக்கு அபிஷேகம் செய்து அந்த பாலை அருட்பிரசாதமாக உட்கொண்டால் நாக தோஷம் நீங்கும். ஜாதகத்தில் 1,4,7,8,12 இல் செவ்வாய் உள்ளவர்கள், செவ்வாய் கிழமைகளில் ஸ்ரீ பராசக்தி வேலுக்கு அர்ச்சனை செய்து பரிகாரத்தின் மூலம் பலன் அடைகிறார்கள்.

## சூட்சும மேடை

பக்தனுக்கும் குருவிற்கும் தெய்வீகப் பாலமாக அமைந்த சூட்சும மேடையை ஸத்குருவின் ஆணைப்படி 9-6-1998 ஆம் ஆண்டு குருஜி. சர்மா அவர்கள் பிரதிஷ்டை செய்தார். ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் மனதை ஒரு நிலைப்படுத்தி மானசீக பவித்திரமான தெய்வீக தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளும் பொழுது கர்ம வினை காரணமாக மனகுறைகளுக்கு சரியான தீர்வு கிடைக்கா விட்டாலும் மீண்டும் ஒரு முறை சரணடைந்து முயற்சிக்கும் பொழுது விடை, வழிகாட்டுதல் கிடைத்து மனநிம்மதியுடன் செல்லலாம்.

## அரூப மகாலஷ்மி

அரூப மகாலட்சுமியை மகானின் உத்தரவுப்படி அரூபமாக, இயந்திர வடிவில் குருஜி. சர்மா அவர்கள் 20-8-1999 ம் ஆண்டு பிரதிஷ்டை செய்தார். இது பெண்கள் மட்டுமே செய்யக் கூடிய பூஜை ஆகும். இப்பூஜையை செய்தால் சகல ஐஸ்வர்யங்களும் கிடைக்கும். நினைத்த காரியம் நிறைவேறும். அரூப மஹாலஷ்மி சன்னதியில் அறநிலையத்தில் மட்டுமே கிடைக்கும், ஸ்ரீ கிரஹலஷ்மி படத்தை வைத்து முறைப்படி பூஜை செய்து, வீட்டிற்கு எடுத்து வந்து பூஜையை தொடர்ந்து செய்து வந்தால், அஷ்ட ஐஸ்வர்யங்களும், சகலவித சௌபாக்கியங்களும் உண்டாகும். வாஸ்து தோஷம் நவக்கிரஹ தோஷம், கடன் தொல்லைகள் அகலும். ஸ்ரீ கிரஹ லஷ்மியை வைத்து பூஜித்தால் அடையும் நன்மைகளை யும், பெருமைகளையும், ஸ்ரீ கிரஹலஷ்மி என்ற பின்வரும் அத்தியாயத்தில் காணலாம்.

### பசு மடம்

பாலாலயத்தில் அறநிலையத்தினர் பசுமடம் ஒன்று நிறுவி பசுக்களை பராமரித்து பூஜைகள் செய்து வருகின்றனர். பழங்காலத்தில் லிருந்து இந்துக்கள் பசுக்களை தெய்வமாகப் போற்றி வருகின்றனர். இதை மனதில் வைத்து தான் அறநிலையத்தினர் கோசாலை நிறுவி பசுக்களை நன்றாக பார்த்து வருகின்றனர். கோமாதாவின் உடலில் சகல தேவதைகளும் உள்ளனர். அதை விளக்கும் உருவப்படம். இன்றைய தினம் பாலாலயத்தில் நீங்கள் காணலாம்.

## இலவச மருத்துவ முகாம்

பாலாலயம் சமூக நலமையமாக இருக்கின்றது. பல சமூக நல பணிகள் மாடம்பாக்கத்தில் நடைபெறுகின்றன. குறிப்பாக மாடம் பாக்கத்திலும் அதற்கு அருகில் இருக்கும் கிராமங்களில் வசிக்கும் மக்களுக்கும் மிகவும் உதவியாக இருக்கிறது. பிரதி ஞாயிறுதோறும் மருத்துவ முகாம் ஒன்று அமைக்கப் பெற்று பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் இலவச மருத்துவ வசதி அளிக்கப்படுகிறது. வசதியில்லாத ஆனால் நன்றாக படிக்கின்ற மாணவ மணிகளுக்கு இயன்ற அளவு நிதியுதவியும் செய்து வருகின்றனர்.

சிறிய அளவில் நிறுவப்பட்ட பாலாலயம் விதை விருட்சமாவதுப் போல் இன்றைய தினம் காட்சியளித்து கொண்டு

இருக்கிறது. அதற்கு ஆணிவேராக இருப்பவர் தாம் இந்த அறநிலையத்தின் நிறுவனரும், தெய்வீக ஜோதிடருமான குருஜி சர்மா அவர்கள். அவருடைய தன்னலமில்லா தொண்டும், தன் குருவிடம் உள்ள அசைக்க முடியாத நம்பிக்கையும், இந்த ஆலயத்தை எழுப்பி மக்களுக்கு நல்லது செய்ய வேண்டும் என்று ஒரே குறிக்கோளுடன் இருந்ததால் தான் இந்த பீடத்தை நல்ல முறையில் அமைக்க முடிந்தது. ஸத்குருவின் மந்திரத்தையே தாரக மந்திரமாகக் கொண்டு பல சோதனைகளையும், வேதனைகளையும், நெருப் பாற்றிலிலே நீந்துவது போல் கடந்து ஸத்குருவின் துணையோடு சாதனையை படைத்துள்ளார்.

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் பிருந்தாவனம் அற நிலையத்தின் கிளைகள் இந்தியாவில் மட்டுமின்றி வெளி நாட்டிலும் உள்ளது. மும்பாய், பெங்களூர் மற்றும் வெளிநாடான துபாய், சிங்கப்பூர், அமெரிக்கா போன்ற இடங்களில் அறநிலையத்தின் கிளைகள் உள்ளன. ஒவ்வொரு இடங்களில் பல்வேறு புரவலர்கள் இதன் வளர்ச்சிக்காக அயராது பாடுபடுகிறார்கள். ஒளி பொருந்திய ஸத்குருவின் பஞ்சலோக மூர்த்தி 1995-ஆம் ஆண்டு சுவாமி மலையில் உருவாக்கப்பட்டு சென்னைக்கு கொண்டு வரப்பட்டது. பரமகுருவான ஸ்ரீ நாக சுப்ரமண்ய சாஸ்திரிகளின் திருக்கரங்களால் அபிஷேகம் செய்து சக்தியை உயிரூட்டினர். அதிலிருந்து ஒவ்வொரு ஹஸ்தம் அன்று புரவலர்கள் புடைசூழ அபிஷேகமும், ஆராதனையும் சக்தி பீடத்தில் நடைபெற்று வருகிறது. தன் வாழ்க்கையே ஸத்குருவின் பாதாரவிந்தங்களில் சமர்பித்த ஆன்மாக்கள் இதனை விமரிசையாக செய்கின்றனர். ஹஸ்த பூஜையை குருஜி சர்மாவின் சீடர்கள் மேற்கண்ட, மும்பாய், பெங்களூர், சிங்கப்பூர், பாண்டிச்சேரி ஆகிய இடங்களில் விமர்சையாக நடத்தி வருகின்றனர்.

---

1. பசுக்களுக்கு தீவணமளித்து பரந்தாமன் அருள் பெறுங்கள்.
2. முதியோர் இல்லம் அமைய நன்கொடை தாராளமாக தாருங்கள்.
3. இலவச பால் விநியோகத்திற்கு நன்கொடையளித்து இறைவனின் அருளைப் பெறுங்கள்.

---

அத்தியாயம்-21

# சித்தர் சக்திபீடம் உருவாக்கம்

சித்தர்கள் என்பவர்கள் யார் என்பதையும், மகான் சூட்சுமத்தில் கூறியுள்ளபடி, சித்தர்களுக்கு பீடம் அமைய வேண்டிய நிலத்தை வாங்குவதற்கு அறங்காவலர்கள் எவ்வளவு சிரமப் பட்டார்கள் என்பதையும் மகானின் அருளால் எல்லாம் நல்ல படியாக முடிந்தது என்பதையும் முன் சென்ற அத்தியாயத்தில் பார்த்தோம். ஒரு சித்தர் இருந்தாலே போதும். 18 சித்தர்களும் ஒரே இடத்தில் அமர்ந்து அருள்பாலிக்கப் போகிறார்கள் என்பதை நினைத்துப் பார்க்கவே பரவசமாக இருக்கிறது. தெய்வங்களே வடிவமைத்து தேவலோகத்தைப் பூலோகத்தில் தரிசிக்கும் சிறந்த சக்திபீடம் எப்படி உருவாயிற்று என்பதைப் பார்ப்போம்.

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் அறக்கட்டளையின் முக்கிய குறிக்கோள், உலகிலேயே முதன்மையான சக்தி பீடமாக அமைக்கப்போவதுதான். அதுதான் ஸத்குருவின் விருப்பமும் கூட. துக்கக்கடலிலேயே மூழ்கும்பொழுது தனக்கு அதிலிருந்து விடுதலை கிடைக்காதா என்று ஏங்கித் தவிக்கும் அன்பர்களுக்கு அதிலிருந்து மீட்கும் திசைக்கருவியாக இந்த சக்தி பீடம் அமையும் என்பது உறுதி. இந்தக் கடினமான பணிக்கு தளராத மனமும், அயராத உழைப்பும் தேவை. அது குருஜி சர்மா அவர்களிடம் நிறையவே இருக்கிறது. ஸத்குருவின் கருணையினையும், அருளாசிகளையும் மட்டுமே மூலதனமாகக் கொண்டு அமைக்கப்பட்டதுதான் இந்த சக்தி பீட பிருந்தாவனம்.

உலக அமைதிக்காகவும், பொது வழிபாட்டுத் தலமாகவும், அமையவேண்டும் எனக் கருதி பல அன்பர்கள் பிரார்த்தித்து அளித்த நன்கொடைகளையும், காணிக்கைகளையும் நாம் நினைவு

கூற கடமைப்பட்டிருக்கிறோம். உலக மகா ஸத்குருவின் முதல் ஆராதனையில் தொடங்கி, கும்பாபிஷேகம் முடியும் வரை ஏறத்தாழ, இருபது வருட காலமாக ஜாதி, மத, இன, மொழி வேறுபாடின்றி பலதரப்பட்ட மக்கள் இந்த சக்தி பீடம் அமைவதற்கு பலவகையில் உதவி புரிந்து இருக்கின்றனர். சில அன்பர்கள் தங்கள் வீட்டு பூஜை யறையில் காசு சேர்த்து கூட கொடுத்திருக்கின்றனர். பல அன்பர்கள் ஸத்குருவிடம் பிரார்த்தித்து, காரியசித்தி அடைந்தவுடன் காணிக்கை களைக் கொண்டு கொடுத்திருக்கின்றனர்.

இப்படி பல அன்பர்கள் செய்த உதவியால் தான் சக்தி பீடம் அமைக்கப்பட்டது. இதற்கு எல்லாம் சிகரம் வைத்தது போல் துபாயில் வசிக்கும் புரவலர்கள் நிலம் வாங்குவதற்குரிய பணப்பற்றாக் குறையைத் தங்கள் இரத்தத்தையே தானமாகக் கொடுத்து ஈடுசெய்ததை உணர்ச்சி பூர்வமாக நினைவுகள் கூர்ந்து நன்றியை தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். சிறு துளி பெருவெள்ளம் போல், பல அன்பர்கள் சிறுகச் சிறுக கொடுத்ததுதான் பெரு வெள்ளமாகப் பெருகி சக்தி பீடமாக உருவாகியுள்ளது. ஒவ்வொரு அன்பர்கள் கொடுத்தது சிறியதாக இருந்தாலும் சரி, பெரியதாக இருந்தாலும், மிகவும் முக்கியமானதும், பாராட்டப்பட வேண்டியதும் ஆகும். வழிகாட்டியாக ஸத்குரு இருக்க அவர் மூலமாக குருஜி சர்மா அவர்கள், புரவலர்களையும், அறங்காவலர்களையும் வழிநடத்த இந்த ஆலயம் உருவாகியது. அன்று சில அன்பர்களையே மட்டுமே வைத்து ஆரம்பிக்கப்பட்ட இந்த அறக்கட்டளை இன்று ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரூன்றி உள்ளது. கருணைக் கடலான ஸத்குருவின் பாதத்தில் ஆயிரக்கணக்கான அன்பர்கள், வெவ்வேறு நாடுகளிலிருந்து வந்து சரணாகதியடைந்து அற்புதங்களை அனுபவித்துக்கொண்டு இருக்கிறார்கள். வர்ணிக்க இயலாத அற்புதங்கள் ஏராளம், ஏராளம். ஸத்குருவின் பார்வையில் அன்பர்கள் செல்வந்தர்களாக எளியவர்களாக இருந்தாலும் எல்லோரும் அவருடைய குழந்தைகள் தாம். அனைவருக்கும், பாரபட்சமின்றி, வித்தியாசமின்றி ஸத்குருவின் அருள்பொங்கும், வாழ்வு வளம் பெருகும்.

சிறிய அளவில் குருஜி. சர்மா அவர்களின் (குரு கம்ப்யூட்டர் ஜோதிட நிலையம்) அலுவலக அறையில் ஆரம்பிக்கப்பட்ட இந்த அறநிலையம் வளர்ந்து 1999-ம் வருடம் பிருந்தாவனம் கட்டுவதற்கு ஆயத்தமானது. இதனுடன் குருஜி.சர்மா அவர்களின், ஸ்ரீ குரு

கம்ப்யூட்டர் ஜோதிடமும், மகானின் அருளால் வளர்ந்தது. முன்பே குறிப்பிட்டதுபோல், எல்லாத் திருப்பணிகளும் குருஜி.சர்மாவின் மூலம், ஸத்குரு சூட்சும வழிகாட்டுதல்படி இனிதே நடைபெற்றது. பாரம்பரிய சிற்ப சாஸ்த்ர முறைப்படி, அனைத்து சிலைகளும் வடிவமைக்கப்பட்டுள்ளன. விமானத் திருப்பணிகள், சிமென்ட் கட்டிடமாகவும், விமானம் வரை கருங்கல் கட்டிடமாகவும், பாரம்பரிய முறைப்படி, சிற்ப சாஸ்த்ர முறைப்படி, சித்தர்களின் அரூப வழிகாட்டுதல்படி, சித்தர்பீடம் அமைக்கப் பட்டுள்ளது. ஸ்ரீ சக்ர மகாமேரு வடிவில் இருக்கும் ஸ்ரீ லலிதா மகா திரிபுர சுந்தரி, உலக மகா ஸத்குரு, ஸ்ரீ குருவாயூர் கிருஷ்ணன், ஸ்ரீ ராமர். ஸ்ரீ ஆஞ்சநேயர், ஸ்ரீ ஐயப்பன் ஆகிய சிலைகள், ஒரே கல்லில் வடிவமைக்கப்பட்டுள்ளன.

அரசிடமிருந்து இந்த நிலத்தை நிர்ணயித்த விலை கொடுத்து வாங்கிய பிறகு, நில சீர்திருத்தம் செய்யப்பட்டு, அஸ்திவாரம் தோண்டப்பட்டு பூமி பூஜை 26-1-1999-ம் ஆண்டு அடிக்கல் நாட்டப்பட்டது. அன்னையின் சன்னதிக்கு அஸ்திவாரம் தோண்டப் பட்டது. பூமி பூஜைக்கு முதல்நாள், இரவு 9.00 மணி வரை அஸ்திவார தோண்டுதல் வேலை நடைபெற்றது. எல்லாம் சரியான நேரத்தில் சரியாக நடந்துவிடும் என்று எதிர்பார்த்த தருணத்தில் திடீரென்று சோதனை ஏற்பட்டது. மறுநாள் அதிகாலை அறங் காவலர்கள் வந்து பார்த்தபொழுது, முதல்நாள் பெய்த மழையால், அஸ்திவாரப் பள்ளம் தோன்றிய இடத்தில், வெள்ளம் புகுந்ததுபோல் தண்ணீர் நிரம்பி இருந்தது. அது ஒரு சுபசகுனமாகத் தோன்றினாலும், அந்தத் தண்ணீரை நிறைத்து பூமிபூஜை செய்வதற்கு இடையூறு அல்லவா? மகான் சூட்சுமத்தில் குறிப்பிட்ட நேரத்தில் பூமிபூஜை நடத்த வேண்டுமே! என்ன செய்வது என்று அறங்காவலர்களும் புரவலர்களும் உள்ளம் பதைபதைத்து ஒன்றும் புரியாமல் குழம்பினர். பின் கிராமமக்களின் துணைகொண்டு தண்ணீரை ஒருவாறாக அவர்கள் வெளியேற்றி பூமிபூஜை செய்தனர். இந்த நிகழ்ச்சியின் மூலம், அம்பிகை தம்மை வழிநடத்தி, அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற உண்மையை அறங்காவலர்கள் உணர்ந்தனர்.

பூமி பூஜையும் பல இடையூறுகளுக்குப் பிறகு மகானின் அருளாலும், அம்பிகையின் அருளாலும், இனிதே நடந்து முடிந்தது. பிறகு கோவில் கட்டுமானப் பணிகள் தொடங்கின. ஏறத்தாழ







படிப்படியாக கோவில் உருவாகிறது



கோவில் உருவாகிறது



ஸ்ரீ பதினெண் சித்தர் சக்திபீட பிருந்தாவனம் - மாடம்பாக்கம்



பச்சைக்கல் எடுக்கும் காட்சி



ஸ்ரீ சக்ர மகாமேரு உருவாக்கம்





ஸ்ரீ சக்ர மகாமேரு வடிவில் அம்பிகையின் தோற்றம்

அறுபது சிற்பிகள் தொடர்ந்து வேலை செய்து கொண்டிருந்தனர். அவர்கள் தங்குவதற்கு வேண்டிய வசதிகள் அனைத்தையும் அறங்காவலர்கள் செய்தனர். சிற்பிகளும் நேரம் காலம் பார்க்காமல், குறித்த நேரத்தில் குறித்த காலத்தில் கட்டுமானப் பணிகளை முடிப்பதற்கு முனைப்பாக இருந்தனர்.

எல்லாவற்றிற்கும் மூலசக்தியாக, ஆதி சக்தியாக, பராசக்தி யாக அமையப்போகும் ஸ்ரீசக்ர மகாமேருவை வடிக்கக் கல் எங்கே? எங்கே? என்ற கேள்வி எழும்பியது. மகான் சூட்சுமத்தில் ஒரே பச்சைக்கல்லினால் ஸ்ரீ சக்ர மகாமேருவை வடிவமைக்க வேண்டும் என்று கூறினார். அந்த பச்சைக்கல் எங்கிருக்கிறது என்று தேடும் பணியில் அறங்காவலர்களும் அறநிலையப் புரவலர்களும் மும்முரமாக ஈடுபட்டனர். அறங்காவலரான திரு.மருதபரணியும், திரு.கந்தசாமியும் மகானின் சூட்சும ஆணைப்படி திரிஈங் கோவில் மலை முதல், சதுரகிரி மலைக்குப் பக்கத்தில் உள்ள சித்தர்கள் சபை கூடும் வத்தரா இருப்புவரைச்சென்று தேடி அலைந்தனர். அப்படி அலைந்தபொழுது பல, அற்புதங்களும், சமிக்ஞைகளும், பல சித்தர்களை தரிசிக்கும் பாக்கியமும், பல பெரியவர்களின் ஆசிகளும் அவர்களுக்கும், அமையப்போகும் சக்திபீட பிருந்தாவனத்திற்கும் கிடைத்தது.

ஆனால், மகான் சூட்சுமத்தில் கூறிய அந்தப் பச்சைக்கல் மட்டும் கிடைக்கவில்லை. ஏறத்தாழ இரண்டு வருடங்கள் குருஜி. சர்மா அவர்களின் தலைமையில் அறநிலைய புரவலர்கள் தமிழகம், கேரளம், ஆந்திரம், மும்பை முதலிய இடங்களில் தேடியும் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. குருஜி. சர்மா ஸத்குருவின் ஆணையை நிறைவேற்ற முடியவில்லையே, கல் எங்கு தேடியும் கிடைக்கவில்லையே என்று மிகுந்த வருத்தத்துடன் இருந்தார். ஒரு பௌர்ணமி நாளன்று அவர் பூஜையை முடித்து, உறங்கிக் கொண்டிருக்கும் தருணத்தில், ஸ்ரீ ஆஞ்சநேயர் அவர் கனவில் தோன்றி கர்நாடகாவில் பெங்களூருக்குப் பக்கத்தில் ஹாசன் என்ற இடத்தின் அருகில் பச்சைக்கல் இருப்பதாகவும், அதை எடுத்துக் கொள்ளுமாறு கூறி மறைந்தார். குருஜி. சர்மா அவர்களுக்கு "இருண்டவனுக்குக் கிடைத்த ஒளிபோல்", தனக்கு ஒருவழி கிடைத்ததை எண்ணி மகிழ்ந்து அதற்குரிய செயலில் இறங்கினார்.

பெங்களூர் கிளை அறநிலையத்தலைவி திருமதி. சரஸ்வதி அம்மாளிடம் குருஜி.சர்மா அவர்கள் கல் தேடும் பொறுப்பை

ஒப்படைத்தார். திருமதி.சரஸ்வதி அம்மாள் தலைமையில் பெங்களூர் அறநிலையப் புரவலர்களும், சென்னை அறநிலையக் கிளையைச் சேர்ந்த திரு.முரளி சுந்தரம், திருமதி லஷ்மி சுந்தரம், அவர்களும் அந்த இடத்தைத் தேடுவதில் முனைந்தனர். ஹாசன் பக்கத்தில் (கிரின் கிரானைட் குவாரி என்று ஆங்கிலத்தில் கூறிய) பச்சைக்கல் மலை இருப்பதைப் பார்த்தனர். மலை முழுவதும் பச்சைநிறத்தில் இருப்பதைப் பார்த்து திகைத்தனர், வியந்தனர். பிறகு அறநிலையத் தலைவரும், தெய்வீக ஜோதிடருமான குருஜி. சர்மா அவர்களுடன், அறநிலைய உபதலைவர், திரு. மருதபரணி, செயலாளர் திரு. இராமசுப்ரமண்யம் அவர்களும் பெங்களூர் சென்று பார்த்து அது பச்சைக்கல் தான் என்பதை ஊர்ஜிதம் செய்தனர். அப்படிப் போகும் பொழுது பச்சை மலையின் அடிவாரத்தில் காவல் தெய்வமாக ஆலூர் அம்மன் சுயம்பு வடிவத்தில் இருப்பதையும் பார்த்தனர். ஸ்ரீ பராசக்தியே தங்களுக்கு அனுக்கிரஹம் செய்ததை உணர்ந்து மலையிலிருந்து தேவையான அளவிற்கு கல்லை வெட்டி எடுத்து சென்னைக்கு அனுப்பும் பொறுப்பை பெங்களூர் அறநிலைய கிளைத்தலைவி திருமதி.சரஸ்வதி அம்மாள் தலைமையிலும் அவர்களின் குழுவினரிடம் ஒப்படைத்துவிட்டு சென்னை வந்தனர்.

கல் பரிசோதனை செய்யும் அரசாங்க அதிகாரி திரு. சீனிவாசன் அவர்கள் அக்கல்லை பரிசோதித்துத் தேர்வு செய்தார். அந்த மலையிலிருந்து வெட்டியெடுத்து சென்னைக்கு அனுப்புவதற்கு ஏறத்தாழ இரண்டு மாத காலமாகும் என்றும் கூறினார். அவரிடம் அறநிலைய புரவலர்களான திரு. முரளி சுந்தரமும், திரு. தர்மலிங்கமும் மாடம்பாக்கத்தில் கட்டப்படும் சக்தி பீடத்தையும், 18 சித்தர்களைப் பற்றியும், மகானைப் பற்றியும் எடுத்துரைத்தனர். அந்த அதிகாரிகளும் பெரும் ஒத்துழைப்புக் கொடுத்து செயல் பட்டனர். அந்த அதிகாரிகள் தலா 20 டன் எடையுள்ள இரண்டு கற்களை கடப்பாறையால் விரிசல் இல்லாமல் உடைத்து 20 நாட்களில் கொடுத்தனர். பிறகு மலையடிவாரத்தில் உள்ள காவல் தெய்வமான ஆலூர் அம்மனிற்கு அபிஷேகம் செய்யவேண்டும் என்று மகானின் சூட்சும ஆணைப்படி, அம்பிகைக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் குருஜி.சர்மாவின் முன்னிலையில் புரவலர்கள் புடை சூழ அபிஷேகம் செய்தனர். பெங்களூர் கிளை அறநிலையத் தலைவி திருமதி. சரஸ்வதி அம்மாள் அவர்களும், அவர்களின் குழுவினரும், இத்திருப்பணியை சிறப்பாக முடித்துக் கொடுத்தனர். இன்றைய தினம் ஸ்ரீ சக்ர மகாமேரு இவ்வளவு சிறப்பாக அமைவதற்கு

பெங்களூர் அறநிலையக் குழுவினர் ஆற்றிய பணி பெரும்பங்காகும். ஸ்ரீசக்ர மகாமேருவாக பச்சைக்கல் அமைவதற்கு முன்பாகவே, ஸ்ரீ வித்யா முறைப்படி, மகாமேருவை குருமார் களான, ஸ்ரீமதி.விசாலாட்சி சுவாமிநாதன், குருஜி.சர்மா அவர்கள் தரிசித்து, அந்தக் கற்களை எடுத்த இடத்திலேயே பூஜை செய்தது மிகவும் விசேடம்.

பலவித இடர்பாடுகளைக் கடந்து மகானின் துணையுடன், ஸ்ரீ சக்ர மகாமேருவை வடிவமைக்க தலா 20 டன் எடையுள்ள இரண்டு கற்கள் மாடம்பாக்கத்தில் கோலாகலமாக வந்து இறங்கி விட்டது. கிராமமக்களும், அறநிலையப் புரவலர்களும் ஸ்ரீ வித்யா குருமார்களின் உதவியுடன் அக்கல்லிற்கு மஞ்சள், சந்தனம், குங்குமம் பூசி, பூஜை செய்தனர். அந்தப் பச்சைக்கல்லிற்கு உயிரூட்ட, ஒளியூட்ட, வடிவமைக்க, ஒரு ஸ்தபதியால் தானே முடியும் மகானால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்தபதி திரு. குருமுருகன் தலைமையில் திரு.மணிகண்டன், திரு.வேதகிரி அவர்கள் இரவு, பகல் பாராமல் உழைத்து ஸ்ரீ சக்ர மகாமேருவை உருவாக்கும் செயலில் இறங்கினார். அச்சமயம் அறநிலைய செயலாளரான திரு.இராமசுப்ரமண்யம் குருஜி. சர்மா அவர்களிடம் ஆலோசனை பெற்று, ஸ்ரீஆதிசங்கரர் அருளிய செளந்தர்யலஹரியில் கூறிய முறைப்படி ஆராய்ச்சி செய்தார். அவர் கூறியபடி வடிவமைத்து, தெளிவாக்கப்பட்டு, ஒரு மி.மி. அளவு கூட குறையாமல் ஸ்ரீ ஆதிசங்கரர் கூறிய ஸ்ரீ வித்யா முறைப்படி அமைத்தார்.

இதில் அதிசயத்தக்க நிகழ்ச்சி ஒன்று நடந்தது. தினமும் மாலையில் வேலை முடித்து பணியாளர்கள் சென்றபிறகு நாகம் ஒன்று ஸ்ரீ சக்ர மகாமேருவைச் சுற்றி மண்டலம் போட்டு காவல் காத்துக் கொண்டிருக்கும். காலையில் பணியாளர்கள் வேலை செய்வதற்கு வந்தப்பிறகு, அந்த நாகம் அமைதியாக வெளியேறி விடும். ஸ்ரீ வித்யா தத்துவமும், குண்டலினி யோகமும் ஒன்றுதான் என்பதை நிரூபிக்கும் வகையில் நாகம் மண்டலம் போட்டுக் கொண்டதிலிருந்து நாம் உணர்ந்து கொள்ளலாம். ஸ்ரீ ஆதிசங்கரர் வகுத்துக் கொடுத்த ஸ்ரீ வித்யா முறைப்படி சிற்பிகள் சரியான முறையில் உருவாக்கிக் கொண்டிருந்தனர்.

இதேசமயம் 2002-ம் ஆண்டு மும்பையில் திதி நித்யா பூஜையை நடத்த வேண்டும் என்று மகானின் ஆணைப்படி ஸ்ரீ வித்யா உபாசகியும், குருஜி. சர்மா அவர்களின் குருவுமான

ஸ்ரீமதிவிசாலாட்சி தம்பதியினர் முன்னிலையிலும், குருஜி.சர்மா அவர்களின் தலைமையிலும் நடைபெற்றது. அதற்கு அறங்காவலர் களான திரு.மருதபரணி, திரு.இராமசுப்ரமணியன், திருமதி. வித்யா, திருமதி. பிரேமா, திருமதி. உஷா ஆகியோருடன் குருஜி. சர்மா அவர்கள் குடும்பத்தினரோடும் இப்பூஜையில் கலந்து கொண்டார்கள். மும்பையில் வசிக்கும் அறநிலைப் புரவலர்கள், திரு. இரவீந்த்ரநாத், திருமதி. மீரா இரவீந்த்ரநாத் அவர்களின் தலைமையில் மற்றும் உள்ள புரவலர்கள் சேர்ந்து, மிகவும் விமரிசையாக இப்பூஜைக்குரிய ஏற்பாடுகளை செய்தனர். இவ்வாறாக 4½ அடி உயரமுள்ள ஒரு பச்சைக்கற்களால் ஆன ஸ்ரீசக்ரமகாமேருவை நேர்த்தியாக, அழகாக உருவாக்க 1½ வருட காலம் ஆகியது. இத்தகைய சிறப்பு வாய்ந்த ஸ்ரீசக்ரமகாமேருவிற்கு 13.7.2003, அன்று ஜலவாசம் நடைபெற்றது. பிறகு தான்யவாசமும் நடைபெற்றது.

பலவித மூலிகை காப்பு, மஞ்சள் காப்பு, சந்தனக் காப்பு, குங்குமக்காப்பு, மருதாணிக் காப்பு, தைலக்காப்பு மற்றும் பலவகை சித்தர் மூலிகைகளை அரைத்து காப்புகள் மகானின் சூட்சும ஆணைப்படி அணிவித்து சக்தியுடன் மிளிரச் செய்து இருக்கிறார்கள். எல்லா மூலிகை சக்திகளையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு, சகல நோய்களையும் தீர்க்கும் அரும் பெரும் சக்தியாக, பராசக்தி யாக, பிரபஞ்ச சக்தியாக, ஒரேசக்தியாக, மூலிகை சக்தியாக, சித்தர் சக்தியாக, வாலை பரமேஸ்வரியாக, ஈடு இணையற்ற மாபெரும் சக்தியாக, ஸ்ரீ லலிதா மகா திரிபுர சுந்தரி ஸ்ரீ சக்ர மகாமேருவில் வீற்றிருந்து அருள்பாலித்துக் கொண்டிருக்கிறாள்.

மூலிகைகளை அரைப்பதற்கு மாடம்பாக்கத்தில் வசிக்கின்ற, திருமதி. ரேவதி, திருமதி.குமாரி ஆகியவர்கள் மிகவும் உதவியாக இருந்தார்கள். தினசரிப் பத்திரிக்கையில் மூலிகைக்காப்பு செய்வதற்கு, ஜாதி, மத, இன, மொழி வேறுபாடின்றி யார் வேண்டுமானாலும் கலந்து கொள்ளலாம் என்று பிரசுரித்தவுடன், மாடம்பாக்கம், பதவஞ்சேரி, நூத்தஞ்சேரியைச் சார்ந்த, இஸ்லாமிய மத அன்பர்களும், கிருத்துவமத அன்பர்களும், இந்துமதத்தைச் சார்ந்தவர்களும், இதில் கலந்துகொண்டனர். மூலிகையை அரைத்தவர்களே அவர்களது கரங்களால் ஸ்ரீமகாமேருவிற்கு சாத்தியது அம்பிகைக்கு எம்மதமும், சம்மதம் என்பது நிரூபணமாயிற்று. மூலிகை அரைக்கும் தினங்களில் அன்னதானம் மிகவும் விமரிசையாக நடந்தது. மும்பையிலும்,

பெங்களூரிலும் உள்ள அறநிலையப் புரவலர்கள் வந்து கலந்துக் கொண்டு, மூலிகைக் காப்புத் திருவிழாவை சிறப்பாக நடத்தினர்.

மகான் சூட்சுத்தில் கூறியுள்ளபடி பச்சைக்கல் ஸ்ரீசக்ரமகாமேரு தங்கக்கலச விமானத்தில் அமைந்துள்ள திதிநித்யா தேவிகள் ஆகிய மூன்றும் ஒரே நேர்க்கோட்டில் அமையும்படி உருவாக்கப்பட்டது. குருவாயூரில் அருள்பாலித்துக் கொண்டிருக்கும் ஸ்ரீகுருவாயூரப்பனைப் போல் மாடம்பாக்கம், பதினென்சித்தர்சக்திபீட பிருந்தாவனத்தில் அமைக்கவேண்டும் என்று மகான் சூட்சுமத்தில் பகவான் கிருஷ்ணனின் விருப்பத்தைத் தெரிவித்தார். அதுவே குருஜி.சர்மா அவர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணனிடமிருந்து உத்தரவும் கிடைத்தது. குருஜி அவர்கள் அறங்காவலர்களுடன் பலதடவை குருவாயூருக்குச் சென்று, அங்கிருக்கும் மேல்சாந்தியுடன் ஆலோசனை செய்து அவர் கூறியபடி சிற்ப வல்லுனரான காணிப்பையூர் கிருஷ்ணன் நம்பூத்ரி அவர்களுடன் அமர்ந்து கோவில் அமைப்புகளைப்பற்றியும், கட்டிட அமைப்பைப் பற்றியும், விவாதித்து கேரள சம்பிரதாய முறைகளை ஆராய்ந்தார். குருஜி சர்மா அவர்கள் குருவாயூருக்குச் சென்ற பொழுது, ஆலயத்தில் இருக்கும் அர்ச்சகர்கள் அவர் வருவது மேல் சாந்திக்கு முன்னமே தெரியும் என்றும், ஸ்ரீகுருவாயூரப்பனே சூட்சுமத்தில் உணர்த்தியதாகவும் சொன்னார்கள். உலக மகாஸத்குரு சூட்சமத்தில் கூறியபடி பதினென்சித்தர்சக்திபீட பிருந்தாவனத்தில் அமர்ந்து அருள்பாலித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீகுருவாயூர் கிருஷ்ணனின் கருவறை அஷ்டகோண வடிவில் அமையப்பெற்றிருக்கும்.

தெய்வங்களே தெய்வத்தைப் பூஜை செய்வது ஒரு விசேடமான அமைப்பு. தெய்வ சக்தி உடையவர்களும், தெய்வாம்சம் உள்ளவர்களும், தெய்வத்தைப் பூஜை செய்வதால், திருஷ்ட்வாக்கள் என்று அழைக்கப்படுவார்கள். அப்படிப்பட்ட திருஷ்ட்வாக்களான, ஸ்ரீஆதிசங்கரர், ஸ்ரீமனு, ஸ்ரீதுர்வாசர், ஸ்ரீஇந்திரன், ஸ்ரீஅகஸ்தியர், ஸ்ரீ பரமேஷ்வரர், ஸ்ரீயமன், ஸ்ரீமுருகன் ஆகியவர்கள் சிலைவடிவங் களாக மகான் ஸத்குருவின் விமானத்தில் அலங்கரிக்கப் பெற்று இருக்கிறார்கள். ஸ்ரீஐயப்பன், ஸ்ரீராமர், ஸ்ரீஆஞ்சநேயர், ஸ்ரீநாகராஜர் ஆகியோர்களும் ஒரே சமயத்தில் சிலைவடிவமாக உருவாகிக் கொண்டிருக்கிறார்கள்.

ஸ்ரீசக்ரமகாமேருவாக, ஸ்ரீலலிதாமகாதிரிபுரசுந்தரி, கோடி சூர்ய பிரகாசத்துடன், பிரதானமாக வீற்றிருக்கின்றாள். அம்பிகையின் பின்புறத்தில், சதாசிவன், மஞ்சபலகையாக காட்சியளித்துக் கொண்டு

இருக்கிறார். அம்பிகையின் கருவரையில் பஞ்சசக்திகளைக் குறிக்கும், நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், ஆகிய சக்திகள், யந்திர வடிவங்களாகவும், தென்மேற்கு மூலையில் மந்திரினியாக ராஜ மாதங்கியும், வடகிழக்கு மூலையில் சேனைத் தலைவியாக வாராகி யும், அம்பிகையின்முன் காமதேனுவும் இருந்து அருள் பாலித்துக் கொண்டிருக்கின்றனர். அம்பிகையின் கருவறையில், அர்த்த மண்டபத்தில், துவார சக்திகளாக சிம்ம சக்திகளை பிரதிஷ்டை செய்துள்ளனர். அம்பிகையின் உட்சுற்றில், தெற்குப்பகுதியில் ஸ்ரீ தட்சிணாமூர்த்தியும் மேற்குப்பகுதியில், ஸ்ரீ மகா விஷ்ணுவும், ஸ்ரீ ஐயப்பனும், நால்வரும் (அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், திருஞான சம்பந்தர்) வடக்கில் ஸ்ரீ ராஜகாளியம்மனும், (ஸ்ரீ ராஜகாளி அம்மனைப் பற்றிய விவரங்களைப் பின்வரும் தனி அத்தியாயத்தில் காணலாம்.) வடகிழக்குப்பகுதியில் ஸ்ரீ குருவாயூர்கிருஷ்ணனும், ஸ்ரீ பிருந்த துளசியும், அமைத்திருக்கின்றனர். அம்பிகைக்கு வலப் புறத்தில் (நமக்கு இடப்புறத்தில்) ஸ்ரீ சுந்தர கணபதியும், இடப்புறத்தில், ஸ்ரீவள்ளி, ஸ்ரீதெய்வயானை சமேதராக ஸ்ரீமுருகனும், துவார பாலகர்களாக வீற்றிருக்கின்றனர். இதைத்தவிர, அம்பிகைக்கு முன் ஸ்ரீ நந்திகேசுவரர் வீற்றிருந்து அருள்பாலித்துக் கொண்டிருக் கிறார். சக்தி பீடத்தின் இடப்பக்கத்தில், ஸ்ரீ சீதா, லட்சுமணன், ஸ்ரீ ஆஞ்சநேயர் சமேதராக ஸ்ரீ இராமரும், வடப்புறத்தில், ஸ்ரீ நாகவல்லி, ஸ்ரீ நாகலஷ்மி சமேதராக ஸ்ரீ நாகராஜரும் அமர்ந்திருக்கின்றனர். காவல் தெய்வங் களாக ஸ்ரீ சூலினி, துர்க்கை ஸ்ரீ ஜடா முனீஸ்வரர் வெளிப்புறத்தில் வீற்றிருக்கின்றனர்.

ஸ்ரீ சக்ர மகா மேருவின் அமைப்பு, சிவனும், சக்தியும், இணைந்து ஒரே சக்தியாக, பிரபஞ்சத்தை இயக்கும் மாபெரும் சக்தியாக, பராசக்தியாகக் காட்சியளிப்பது கண்கொள்ளாக் காட்சி யாகும். பிரதோஷகாலத்தில் ஸ்ரீ நந்திகேசுவரரின் இரு கொம்பு களுக்கு இடையே பஞ்சசக்திகளும், சிவசக்தியாக இணைந்து ரிஷப வாகனத்தில் காட்சியளித்துக் கொண்டும், அதேநேரத்தில் அனை வரையும் ஆட்டிப்படைத்து, ஆட்டுவித்துக் கொண்டும், அன்போடு நம்மை அரவணைத்துக் கொண்டும் அருள்பாலித்துக் கொண்டிருக் கும் நாட்டியம் தான் வெட்ட வெளி நாட்டியமாகும். அதைத்தான் (Cosmic Dance) என்று ஆங்கிலத்தில் கூறுவார்கள். அந்த வெட்ட வெளியில் கொட்டிக் கிடக்கும் சத்தான சித்த சக்திகள், அஷ்டமா சித்துகளாக உருவெடுத்து, இங்கே நமக்கு அருள்பாலித்துக் கொண்டு இருக்கிறார்கள்.

"ஜீவனை சிவனாக்கி, சிவனோடு இணைபவர்கள் சித்தர்கள்." பதினெட்டு சித்தர்கள் அருளாட்சி நடத்தி, மீண்டும் புனர் அவதாரம் எடுத்து நமது சக்திபீடத்தை தலைமைப்பீடமாகக் கொண்டு இயங்கி வருகிறார்கள். இப்படிப்பட்ட சித்தர்களுக்கு தற்போது பழங்கால முனிவர்கள் வாழும் பர்ணசாலை போல் அமைத்து இருக்கிறார்கள். பர்ணசாலையாக இருக்குமோ? அல்லது கருங்கல் திருப்பணியாக மாறுமோ? அது சித்த மகா புருஷர்களுக்கே வெளிச்சம். பர்ண சாலை அமைக்கும்பொழுதே சித்தர்களின் சிலைகளையும் சிற்பிகள் உருவாக்கினர். இது மிகவும் கடினமான பணியாகும். ஏனென்றால் சித்தர்களின் உருவஅமைப்பு எப்படி இருக்கும் என்று யாருக்கும் தெரியாது. மகான் சூட்சுமத்தில் குருஜி.சர்மா மூலமாக 18 சித்தர் களின் உருவ அமைப்பைப் பற்றி விளக்கமாகக் கூற, அதை அப்படியே வரைப்படமாக வரைந்து ஸத்குருவின் ஒப்புதல் பெற்று அதை சிற்பிகளுடன் கொடுத்து சிலை வடிக்கக் கூறினார். கல்லாக இருந்தது கவிபாடும் தெய்வங்களாக மாறியது. எல்லா சிலைகளும், தத்ரூபமாக பேசும் பொற்சித்திரங்களாக உள்ளது. சித்த மகா புருஷர்கள் தன்னுடன் பேசுவது போன்ற உணர்வை புரவலர்களும், பக்தர்களும் உணர்ந்துகொண்டு இருக்கிறார்கள்.

நம் வாழ்வை எல்லாம் உய்விக்க வந்த, உலக மகா ஸத்குருவின் சிலையை வடிவமைக்க கருங்கல் வேண்டுமே? பராசக்தியின் அருளால் அந்தக் கருங்கல் திருவண்ணாமலையில், அடி அண்ணாமலையில் உள்ளது என்று தெரிந்து அங்கிருந்து அந்தக் கல்லை மிகுந்த சிரமத்துடன் மாடம்பாக்கத்திற்குக் கொண்டு வந்தனர். இதற்கு அறநிலையத்தின் அலுவலகத்தில் உதவியாளராகப் பணிபுரியும் அந்த ஊரைச் சேர்ந்த திருமதி. ஜானகி, திரு. நடராஜன் தம்பதியினர் பேருதவி புரிந்தனர். சர்ப்பராஜனின் வாயிலிருந்து வரும் மாணிக்கக் கற்கள் போல், அபூர்வமாக, உருவாகி இருக்கும் இந்த புனிதமான சக்திபீடத்தைப் பூலோகத்தில் தரிசிக்கும் பாக்கியம் பெற்ற நாம் எவ்வளவு புண்ணியசாலிகள் என்பது இதிலிருந்து தெள்ளத் தெளிவாகத் தெரிகிறது.

பஞ்சசக்திகளான நீர், நிலம், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்து சக்திகளும் ஒன்றாகத் திரண்டு ஐம்பெரும் சக்திகளாக, ஐந்து ஸ்தலவிருட்சமாக இந்த ஆலயம் அமையப்பெற்றது. நான்கு புறம் வேம்பு, நடுவில் நாகலிங்கமரம். வேப்பமரங்கள் நீர், நிலம், நெருப்பு, காற்று என்ற நான்கு சக்திகளையும், நாகலிங்க மரம்

ஆகாய சக்தியாக, சிதம்பரத்தில் ஆனந்த கூத்தாடி நடனமாடும். சிவபெருமானைக் குறிக்கிறது. வேம்பு, சக்தியின் அம்சமாகவும், நாகலிங்கம் சிவஅம்சமாகவும் கருதப்படுகிறது. ஆகையால் சிவனும், சக்தியும் இணைந்து சதாசிவ மஞ்சப் பலகையாகவும், ஸ்ரீ சக்ர மகாமேருவாகவும் காட்சியளிக்கின்றனர். கருவறையில் காணும் காட்சிக்கு சாட்சியாக ஸ்தல விருட்சங்கள் இருக்கின்றன. இது இந்த பீடத்தின் சிறப்பம்சம்.

இந்த ஸ்தல விருட்சத்தை வலம் வந்தால், சகல தோஷங்களும் நீங்கும். புத்திரப்பேறு இல்லாதவர்களுக்கு புத்திர பாக்கியம் கிடைக்கும். தீராத கடன் தொல்லையால் அவதிப்படுபவர்கள், அதிலிருந்து விடுபடுவர். முன்வினை, கர்மவினை அகலும்.

முறைப்படி என்ன நடக்கவேண்டுமோ அது எல்லாம் நன்றாக நிறைவேறியது. இப்பொழுது குடமுழுக்கு விழா (பெரும் சாந்தி பெருவிழா) செய்வதுதான் அடுத்தநிலை. இந்த நாளும், வந்திடாதோ என்று ஏங்கியவர்களுக்கு அந்த நாளும் வந்தது. அது ஒரு பொன்னான நாளாக, கிடைத்தற்கரிய நாளாக, மறக்க முடியாத நாளாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. இந்த நாளுக்காக எத்தனை இடர்பாடுகள். எத்தனையோ போராட்டங்கள்! அத்தனையும் முறியடித்து ஸத்குரு நம்மை வழிகாட்டுகிறார், வழிகாட்டுவார் என்பது உறுதி.

அத்தியாயம்-22

# ஸ்ரீ ராஜகாளியம்மனின் மகிமை

ஸ்ரீ ராஜ காளியம்மன் என்பவள் யார்? இந்த கேள்விக்கு விடையை நாம் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். சோழ நாட்டை சேர்ந்த, கண்ணகி கோவலன் கதையை தமிழ்நாட்டில் அறியாதவர்கள் யாரும் இல்லை என்று கூறலாம். மதுரையில் தன் கணவருக்கு சரியான நீதி கிடைக்காமல், கொலையுண்டதை எண்ணி மதுரையை அழித்த கற்புக்கரசி கண்ணகியை யாராலும் மறக்க முடியாது. பாண்டிய நாட்டின் காவல் தெய்வமாக இருந்தவள் தாம் அருளாட்சி, அரசாட்சி நாயகியாக இன்று நாம் அழைக்கும் ஸ்ரீ ராஜ காளியம்மன். தான் காவல் தெய்வமாக இருந்தும் கண்ணகி மதுரையை அழித்ததை தடுத்து நிறுத்த முடியவில்லையே என்று மனம் வருந்தி தானே மண்ணில் மறைந்து கொண்டாள். பல வருடங்களுக்குப் பிறகு அருளாட்சி நாயகியாகி மக்கள் துயர் தீர்க்க வெளி வந்திருக்கிறாள்.

1977-ம் ஆண்டு மார்ச் மாதம், 31ம் தேதி அன்னை பராசக்திக்கு ஒரு ஆலயம் அமைக்குமாறு குருஜி சர்மாவிற்கு ஸத்குருவிடமிருந்து ஆணை பிறந்தது. மகானின் வழிகாட்டுதல்படி அன்னை பராசக்தியின் சிலை ஒன்று கிடைத்தது. திண்டுகல்லுக்கு அருகில் தெத்துப்பட்டி என்ற கிராமத்தில் தான் ஆலயம் அமைக்க வேண்டும் என்று அன்னையிடமிருந்து ஆணை பிறந்தது. அம்பிகைக்கு ஸ்ரீ இராஜகாளியம்மன் என்று திருநாமம் சூட்ட வேண்டும் என்று உத்தரவும் கிடைத்தது. குருஜி சர்மா அவர்கள் தீட்க்ஷை வைத்து கொண்டார். அம்பிகையை பிரதிஷ்டை செய்வதற்காக தீட்க்ஷை வைத்து கொண்டதை நீங்கள் வரைபடத்தில் காணலாம். பல முக்கியஸ்தர்களின் துணையோடு ஒரு அன்பரின் வீட்டில் அன்னையின் உத்தரவுப்படி அத்திக்கட்டையில் ஸ்ரீ இராஜ



தெத்துப்பட்டியில் ஸ்ரீ இராஜகாளியம்மன் வரவேண்டி
குருஜியின் பிரார்த்தனை தோற்றம்

காளியம்மனின் சிலை ஒன்று வடிவமைக்கப்பட்டது. தினமும் பூஜைகள் நடந்து கொண்டிருந்தன. பிறகு அம்பிகையை முறைப்படி தெத்துபட்டி கிராமத்தில் பிரதிஷ்டை செய்வதற்காக குருஜி சர்மா அவர்கள் ஊர்வலமாக எடுத்துச் சென்றார். அம்பிகையை கீழே இறக்கி வைக்கும் தருணத்தில் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. மூன்று வருடகாலம் மழையே இல்லாமல் வாடி தவித்து கொண்டிருந்த தெத்துபட்டி கிராமத்தில் அடைமழை பெய்தது. அம்பிகை வற்றாத கருணை உள்ளம் கொண்டவள் அல்லவா? அந்த கருணையே மழையாக பெய்தது. அம்பிகை அருளாட்சி நடத்த வந்துவிட்டாள் என்ற உண்மையை கிராம மக்கள் உணர்ந்து கொண்டனர். 1980-ம் ஆண்டு ஜூலை மாதம் 8-ம் தேதி பாலாலய கும்பாபிஷேகம் நடைபெற்றது. பல அன்பர்களின் உதவியோடு மூலாலய கும்பாபிஷேகம் நடைபெற்றது. முதல் கும்பாபிஷேகம் நடக்கும் பொழுது குருஜி சர்மா அவர்களின் தலைமையில் நடந்தது. பன்னிரண்டு வருடங் களுக்குப் பிறகு நடத்த கும்பாபிஷேகம் பொழுதும், குருஜி சர்மா அவர்களின் தலைமையில் நடந்தது. அம்பிகையை பிரதிஷ்டை செய்து, பாலாலயம் கும்பாபிஷேகம், (பெரும் சாந்தி பெருவிழா) காணும் பாக்கியம் எத்தனை பேருக்கு கிடைக்கும்? பிறகு இரண்டாவது கும்பாபிஷேகம் 29-5-2005 ஆம் தேதி குருஜி அவர்களின் தலைமையில் நடந்தேறியது.

தெத்துபட்டி ஸ்ரீ ராஜகாளியம்மனிற்கு மாடம்பாக்கத்தில் கொலு வீற்றிருக்கும் ஸ்ரீ ராஜ காளியம்மனுக்கும் என்ன ஒற்றுமை? என்ற கேள்வி எல்லோர் மனதிலும் எழலாம். குருஜி சர்மா அவர்களிடம் அம்பிகை அருள்வாக்கில் "பதினெட்டு சித்தர்களுக்கு பீடம் அமைக்கப் போகும் சமயம் நானும் கண்டிப்பாக வருவேன். எனக்கும் ஒரு சன்னதி வேண்டும்" என்று கூறினாள். குருஜி சர்மா அவர்களிடம் சூட்சுமத்தில் கூறியதை நியாயப்படுத்தும் வகையில், ஊர்ஜிதப்படுத்தும் வகையில், பறைசாற்றும் வகையில், மீனாட்சி அம்சமாக, சாந்த ஸ்வரூபமாக, ராஜமாதங்கியாக, ஸ்ரீ லலிதாமகா திரிபுர சுந்தரியின் மந்திரிணியாக மாடம்பாக்கம் பதினென் சித்தர் சக்திபீடபிருந்தாவனத்தில் அருள்பாலித்து வேண்டிய வரங்களை வாரி வாரி வழங்கி கொண்டிருக்கிறாள்.

ஸ்ரீ ராஜகாளியம்மனுக்கு ஆடிப்பூரம், நவராத்திரி, விசேஷ நாட்களில் சந்தன காப்பு சாற்றி அழகுபடுத்துகிறார்கள். பார்ப்பதற்குமே கண்கொள்ளா காட்சியாகும். பிரதி, செவ்வாய், வெள்ளி, ஞாயிற்று கிழமைகளில் ராகு காலத்தில் சிறப்பு பூஜை செய்கிறார்கள்.

எலுமிச்சம் பழம், நெய் விளக்குகளை மக்கள் ஏற்றி அம்பிகையிடம் முறையிட்டு, அதற்கான தீர்வும் காண்கிறார்கள். இச்சக்தி பீடத்தில் துர்க்கை அம்மனுக்கென்று தனி சன்னதி கிடையாது. ஸ்ரீ ராஜ காளியே துர்க்கை அம்மனாகவும் பிரதிபலிக்கிறாள்.

ஒவ்வொரு ஞாயிறன்றும் அறநிலையத்தை சேர்ந்த, குருஜி யிடம் உபதேசம் பெற்ற புரவலர்கள் அவர்களுக்குள்ளேயே ஒரு குழு அமைத்துக் கொண்டு முறைப் போட்டுக் கொண்டு, அம்பிகைக்கு சேவை செய்கிறார்கள். அந்த சன்னதியின் குடமுழுக்கை அம்பிகையின் திருவுளப்படியும், ஸத்குருவின் உத்தரவுபடியும் திருமதி. உஷா சுவாமிநாதன் அவர்கள் செய்தார்கள். திருமணம் ஆகாத பெண்களுக்கு திருமணம், வேலை கிடைக்காதவர்களுக்கு வேலை, தீராத நோயிலிருந்து விடுதலை போன்ற பல பிரச்சனைகளை அம்பிகை தீர்த்து வைக்கிறாள். அங்கு விளக்கேற்ற வரும் பெண்கள் தங்கள் வாழ்வில் அம்பிகை ஒளிகொடுத்த பல அற்புதங்களை கூறுகிறார்கள்.

மாடம்பாக்கத்தை சேர்ந்த பத்மாவதி நகர் extension-யில் வசிக்கும் ஸ்ரீமதி விஜயலஷ்மி தன் அனுபவத்தை கூறுகிறார். ''நான் நன்றாக படித்தும், எங்கும் வேலை கிடைக்கவில்லை. எத்தனையோ இடங்களில் application போட்டேன். சில இடங்களில் கிடைத்தது. நான் தேர்வுக்கு சென்றும் ஏதோ ஒரு காரணத்தினால் தடைபட்டு கொண்டே இருந்தது. வேலை கிடைக்கவில்லையே என்று மன உளைச்சலில் இருந்தேன். அப்பொழுது, தான் சக்தி பீட பிருந்தா வனத்திற்கு சென்றேன். அந்த பீடம் என்னை ஈர்த்தது. அப்பொழுது, அறநிலையத்தை சேர்ந்த ஒரு புரவலர் ஸ்ரீமதி பத்மஜா அவர்கள் ''ஸ்ரீ ராஜகாளியம்மனுக்கு எலுமிச்சம் பழம் அல்லது நெய் விளக்கேற்று உனக்கு நிச்சயம் வேலை கிடைக்கும்'' என்று கூறினார்கள். நான் விளக்கு ஏற்ற ஆரம்பித்த மூன்றாவது வாரத்திலேயே எனக்கு நல்ல சம்பளத்துடன் வேலை கிடைத்தது. ஸ்ரீ ராஜகாளியம்மன்தான் எனக்கு பேருதவி புரிந்தாள் என்பதை உணர்ந்து கொண்டேன். வேலை கிடைத்துவிட்டது என்று விளக்கு ஏற்றுவதை நிறுத்தவில்லை. இன்றும் ஞாயிறன்று ஏற்றி கொண்டுதான் இருக்கிறேன்''.

அதேபோல் மாடம்பாக்கம் மல்லீஸ்வரி நகர் குமாரி. ராஜலஷ்மிக்கும், வேலை கிடைத்தது. அவர்களும் தன் அனுபவத்தை கூறுகிறார்கள். ''என்னால் ஸ்ரீ ராஜகாளியம்மனை மறக்க முடியாது. விளக்கேற்றிய என் வாழ்விற்கு ஒளி கொடுத்தாள். எலுமிச்சம்பழம் விளக்கு ஏற்ற ஆரம்பித்தவுடன் எனக்கு நல்ல வேலை கிடைத்தது.

வேலையிலும் படிப்படியாக முன்னேறி இன்று நல்ல நிலைமையில் இருக்கிறேன். ஸ்ரீ ராஜ காளிக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக் கிறேன்'' என்று உணர்ச்சி வசப்பட்டு கூறுகிறார்கள்.

மல்லீஸ்வரி நகரை சேர்ந்த க்லின்சி, கிருத்துவ மதத்தை சேர்ந்தவர்கள். இருந்தும் நம் சக்தி பீடத்திற்கு வருகிறார்கள். இங்கு வந்தவுடன் எல்லையில்லா, மன அமைதி கிடைக்கிறது என்று கூறுகிறாள். அவர்கள் தன் அனுபவத்தை கூறுகிறார்கள் ''எனக்கு பல இடங்களில் இருந்தும் பெண் கேட்டு வந்தார்கள். ஆனால் எல்லாம் கூடிவரும் நேரத்தில் கல்யாணம் தடைபட்டுவிடும். என் பெற்றோர்கள் மிகவும் மனவருத்தத்தில் இருந்தார்கள். ஞாயிற்று கிழமை, ஸ்ரீ ராஜகாளியம்மனுக்கு விளக்கேற்றி எனக்கு ஒரு நல்ல வேலை கிடைத்தது. நினைத்ததை நடத்தி கொடுப்பாள் ஸ்ரீ ராஜகாளி என்று என் சிநேகிதி ஒருத்தி கூறினாள். நாமும் ஏன் விளக்கேற்ற கூடாது என்று எனக்கு தோன்றியது. நானும் விளக்கேற்ற ஆரம்பித்தேன். இரண்டாவது வாரத்திலேயே எனக்கு கல்யாணம் நிச்சயம் ஆயிற்று. எல்லாம் அம்மனின் அருள்தான்'' என்று திக்கு முக்காடி போனாள்.

ஸ்ரீ ராஜகாளியம்மனின் மகிமையை பற்றி எழுத போகிறேன் என்று சொன்னவுடன் பல மதத்தை சார்ந்த அன்பர்கள், தங்கள் அனுபவங்களை வந்து கூறினார்கள். எல்லாவற்றையும் எழுதுவது என்றால் இயலாத காரியம். ஆகவே ஓரிரண்டு சம்பவங்களை மட்டும் எழுதியிருக்கிறேன்.

நம் வாழ்வில் விளக்கேற்றிய, ஒளி கொடுத்த அம்பிகைக்கு வெள்ளி கவசம் செய்து அழகு பார்க்க, ஒரு அன்பரின் மனம் விழைந்தது. அம்பிகையும் அவள் கனவில் வெள்ளி கவசத்துடன் தோன்றி காட்சி அளித்தாள். வெள்ளி கவசம் செய்வதற்கு தங்களால் இயன்றதை பொருளாகவோ, வெள்ளியாகவோ, காசோலை களாகவோ கொடுக்கலாம்.

அண்டங்களுக்கு எல்லாம் அண்டமாக பிரபஞ்சங்களுக்கு எல்லாம் ஒரே சக்தியாக விளங்கும் ஸ்ரீ ராஜகாளியம்மனிற்கு விளக்கேற்றி, வாழ்வில் ஒளி பெறுங்கள். வளமான வாழ்வு பெருகட்டும்.

அத்தியாயம்-23

# ஸ்ரீ கிரஹலஷ்மி

கடந்து வந்த யுகங்களில் மட்டுமல்ல இந்த கலியுகத்திலும் இல்வாழ்க்கை என்பது மனிதனுக்கு இன்றியமையாததாகி அவனை பரம்பொருளுடன் பூரணத்துவம் பெறுவதற்கு பாதையை அமைத்து, கொடுக்கிறது.

*"அருளில்லாருக்கு அவ்வுலகம் இல்லை*
*பொருளில்லாருக்கு இவ்வுலகம் இல்லை"*

என்ற வள்ளுவர் பெருமானின் வாக்கின்படி, இந்த இல்வாழ்க்கையை, இனிமையாக்க, அழகாக்க, அமைதியாக்க, அன்பாக்க, ஆரோக்கிய மாக்க, ஐஸ்வர்யமாக்க, நம் இல்லங்களை ஆசீர்வதிக்க வருபவளே மகான் சூட்சுமத்தில் கூறிய ஸ்ரீகிரஹலஷ்மி. திருக்கோவிலிருந்து நீலவானம் பின் இருக்க, அதிகாலை வேளையில் பொற்கொலுசுகள் சிணுசிணுங்க பட்டுச்சேலை சரசரக்க, மலர் தரித்த அசைந்தாடும் கூந்தலுடன், நீண்ட மாலையணிந்து தாமரை தாங்கும் இரண்டு கரங்களுடன் அருளை வாரி வழங்கி கொண்டிருக்கிறாள். மஞ்சள் முகத்தில், பிறை நுதலோடு இரு புருவங்களோடு கனிவு ததும்பும் கண்களுடன், மெல்லிய புன்முறுவலோடு இந்த பொன்மகள், திருமகள் நம் இல்லத்தை அலங்கரிக்க இனிதே நுழைகிறாள்.

விடியற்காலை எழுந்து நீராடி, மஞ்சள் பலகையில் மெழுகி, விளக்கேற்றி, "ஸ்ரீ கிரஹலஷ்மி படத்திற்கு குங்குமம் இட்டு ஆசனத்தில் நேராக வைக்க வேண்டும். பின்பு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளின் குரு பூஜையை கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளபடி செய்த பிறகு **ஸ்ரீ கிரஹலக்ஷ்மி தியான செய்யுளை கூறி போற்றிகளை கூறவேண்டும்.**

## ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் குரு பூஜை முறை :

முதலில் தேக சுத்தியுடன் விபூதி குங்குமம் தரித்து அழகான சிறிய பலகையில் மஞ்சள் இட்டு, மெழுகி, முத்தாய் கோலமிட்டு குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் திருவுருவப் படத்தை அப்பலகையின் மேல் வைக்கவேண்டும். பின்பு குருவிற்கு சந்தனம் வைத்து குங்குமம் வைக்கவேண்டும். அலங்கரிக்கப்பட்ட குத்து விளக்கில் மணிச்சுடராய் விளக்கேற்றி பின்வரும் தியான செய்யுளைக் கூறி, கண்மூடி எண்ணிய எண்ணம் நிறைவேறப் பிரார்த்திக்க வேண்டும்.

### குருநாதரின் தியானச் செய்யுள்!

*''கருணாமூர்த்தி குரு சேஷநாதனே*
*அருணன் உதயம் போல் அவனியில் வந்தோய்*
*சாபம் நீக்கி பாபம் போக்கி எங்கள்*
*தாகம் தீர்க்க எழுந்தருள்வாய் போற்றி''*
*பின்பு கீழ்கண்ட போற்றிகளைக் கூறவேண்டும்.*
*ஓம் ஆதியே போற்றி;*
*அருணை ஒளியே போற்றி;*
*இமவான் மைந்தா போற்றி;*
*இதயத்தில் இருக்கும் இறைவா போற்றி;*
*உயிர் காக்கும் உத்தமா போற்றி;*
*உலக ரட்சகா போற்றி;*
*ஏகாந்த வாசா போற்றி;*
*எங்களின் ஈசா போற்றி;*
*ஏழைகளின் வாழ்வே போற்றி;*
*ஐம்பூதங்களை ஆள்பவரே போற்றி;*
*ஓங்காரத்தின் ரீங்காரமே போற்றி;*
*அகண்ட ஐஸ்வர்யா போற்றி;*
*அம்பிகை பாலா போற்றி;*
*அச்சம் அகற்றுவாய் போற்றி;*
*காஞ்சியில் அவதரித்த கருணாமூர்த்தியே போற்றி;*
*கிரிவலம் செய்த சுடரே போற்றி;*
*சிறியேனைக் காப்பாய் போற்றி;*
*கண்கண்ட தெய்வமே போற்றி;*
*கலியுகத்தைக் காப்பாய் போற்றி;*

காலத்தை வென்றாய் போற்றி;
கற்பக விருட்ஷமே போற்றி;
குழந்தை மனத்தாய் போற்றி;
கற்கண்டாய் கனிவாய் போற்றி;
ஸத்குருவே போற்றி;
ஸகலமும் நீயே போற்றி;
சௌபாக்கியம் தருவாய் போற்றி;
திருவண்ணாமலை ஜோதியே போற்றி;
தவத்திரு உருவே போற்றி;
திங்கள் முகத்தாய் போற்றி;
தாமரை விழியாய் போற்றி;
திசையெல்லாம் நிறைந்தாய் போற்றி;
இசையாக இனித்தாய் போற்றி;
எல்லாமாய் இருக்கின்றாய் போற்றி;
திருநீறு தேகம் போற்றி;
திருவிளையாடல் புரிந்தாய் போற்றி;
பவளப்பாதங்கள் போற்றி;
பாதுகை பற்றினோம் போற்றி;
பரம்பொருளே போற்றி;
பாசம்மிகு குருவே போற்றி;
பசியின்றி காப்பாய் போற்றி;
சாந்த ஸ்வரூபா போற்றி;
சந்தன மேனியாய் போற்றி;
ஸ்வாஸமெல்லாம் நிறைந்தாய் போற்றி;
தட்சிணாமூர்த்தியாய் வந்தோய் போற்றி;
தந்தையாய் எம்மை காப்பாய் போற்றி
தங்கமயமானவரே போற்றி;
பிருந்தாவன ப்ரியா போற்றி;
மாடம்பாக்கம் மலர்ந்தாய் போற்றி;
மனமெல்லாம் நீயே போற்றி;
வாழ்வளிக்கும் வள்ளலே போற்றி;
வழிகாட்டும் விளக்கே போற்றி;
வளமையின் வடிவே போற்றி;

வறுமையை அழித்தாய் போற்றி;
விந்தைகள் புரிந்தாய் போற்றி;
விதியை மாற்றும் வித்தகா போற்றி;
வினைகளை களையும் கடவுளே போற்றி;
வியக்கும் கருணாசாகரமே போற்றி;
எங்களை காக்கும் காவலரே போற்றி;
எளிமையின் இருப்பிடமே போற்றி;
எங்குமிருக்கும் என்தாயே போற்றி;
குலதெய்வமாய் இருந்து காப்பாய் போற்றி;
குங்குமத்தை காக்கும் குருவே போற்றி;
ஊன் உறக்கம் தவிர்த்தாய் போற்றி
உலகெங்கும் உன்புகழ் போற்றி;
உன் நாமமே உயர்வைத் தரும் போற்றி;
மண்ணில் உதித்த மகாபுருஷரே போற்றி;
மகிமைகள் புரியும் மகானே போற்றி;
மக்களை காக்கும் ரட்சகரே போற்றி;
வேதங்களின் வடிவே போற்றி;
வெற்றியின் உருவே போற்றி;
சத்தியத்தின் விளக்கமே போற்றி;
ஏற்றிய விளக்கே போற்றி;
எங்கள்மனை காப்பாய் போற்றி;
சித்துக்களின் வித்தே போற்றி;
சிலிர்க்கும் சிவமே போற்றி;
செய்தபிழை பொறுப்பாய் போற்றி;
சிந்தையில் சிரித்தாய் போற்றி;
சிறப்பெல்லாம் தந்தாய் போற்றி;
முக்தி அளிக்கும் மூலவரே போற்றி;
சக்தி தரும் மகாசித்தரே போற்றி;
சாத்திரங்கள் கடந்தாய் போற்றி;
மனசாந்தியை தருவாய் போற்றி;
சுகந்த மணம் வீசும் சுந்தரரே போற்றி;
சுப்ரபாதத்தில் பள்ளி எழுவாய் போற்றி;
சூட்சமத்தில் பேசும் ஸ்வாமியே போற்றி;

*அன்புருவான ஐயா போற்றி;*
*அவனியை ஆளும் அண்ணலே போற்றி;*
*அண்ணாமலையாரின் அடியவரே போற்றி;*
*அன்னதானத்தில் ஆனந்தம் அடைவாய் போற்றி;*
*சந்நிதானத்தில் சரணடைந்தோம் போற்றி;*
*அபிராமி பட்டரின் அவதாரமே போற்றி;*
*அற்புதம் நிகழ்த்தும் ஆன்மீக செல்வரே போற்றி;*
*அருளை அள்ளித் தரும் ஐயா போற்றி;*
*இருளை இல்லையென்றாக்கும் ஈசா போற்றி;*
*பொருளை பெற்று தரும் பரந்தாமா போற்றி;*
*தியானமயமான மந்திரமே போற்றி;*
*தெய்வங்களுடன் கலந்த தெய்வமே போற்றி;*
*அஷ்டோத்திரத்தில் அர்ச்சித்தோம் போற்றி;*
*அழைத்தால் ஓடி வருவாய் போற்றி;*
*அபயம் தந்து அருள்வாய் போற்றி;*
*அமைதியை என்றும் அளிப்பாய் போற்றி;*
*அல்லல் நீக்கும் அருமருந்தே போற்றி;*
*அனுதினம் உன்னை தொழுதோம் போற்றி;*
*ஆராதனைகள் செய்தோம் போற்றி;*
*அபிஷேக மூர்த்தியே போற்றி;*
*சுபிட்ஷத்தைத் தருவாய் போற்றி;*
*சேஷாஞ்சலியின் நாயகா போற்றி;*
*ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமியே போற்றி போற்றி;*

மேற்கூறிய போற்றிகளைக் கூறியவுடன் ஸத்குருவிற்கு உலர்ந்த திராட்சை, கல்கண்டு நைவேத்தியம் செய்து கற்பூர தீபாராதனை செய்து மனமுருகி வேண்டினால் எதிர்பாரா நல்வளங் களையும் உயர்வையும், மகான் கொடுப்பார் என்பதில் ஐயமில்லை.

## ஸ்ரீ கிரஹலஷ்மி பூஜை

மேற்கூறிய பூஜைகளில் குறிப்பிட்டபடியே, மஞ்சளில் பலகையில் மெழுகி, கோலமிட்டு, விளக்கேற்றி, "ஸ்ரீ கிரஹலஷ்மி படத்திற்கு" குங்குமம் இட்டு, ஆசனத்தில் நேராக வைத்து, லட்சுமியின் தியானச் செய்யுளைக் கூற வேண்டும்.

## தியானச் செய்யுள்

*"திருமாலின் திருமார்பில் கொலுவிருக்கும்*
*திருவளர் செல்வியே! திருமகளே!!*
*ஒருநாளும் குறைவில்லா மங்களங்களை*
*பெருவாழ்வாய் அளிப்பாய் ஸ்ரீ கிரஹலஷ்மியே"*

பின்பு இப்போற்றிகளைக் கூற வேண்டும்.

## ஸ்ரீ கிரஹலஷ்மி போற்றிகள்

1. *ஓம் அன்னையே போற்றி;*
2. *ஐஸ்வர்யம் தருவாய் போற்றி;*
3. *நல்வாழ்வு அருள்வாய் போற்றி;*
4. *நோயற்ற வாழ்வு அளிப்பாய் போற்றி;*
5. *வற்றாத செல்வம் வழங்குவாய் போற்றி;*
6. *எங்கள் வீட்டில் என்றும் இருப்பாய் போற்றி;*
7. *பிள்ளை வரம் அளிப்பாய் போற்றி;*
8. *மனச்சாந்தியைத் தருவாய் போற்றி;*
9. *மகிழ்ச்சியின் உருவமே போற்றி;*
10. *மங்கள நாயகியே போற்றி;*
11. *குங்குமத்தின் உருவே போற்றி;*
12. *குலமகளே போற்றி;*
13. *எல்லா வரத்தையும் அளிப்பாய் போற்றி;*
14. *வறுமையை நீக்குவாய் போற்றி;*
15. *தீர்க்க சுமங்கலி பாக்கியம் அளிப்பாய் போற்றி;*
16. *ஸ்ரீ கிரஹலக்ஷ்மியே போற்றி போற்றி;*

மேற்கூறிய போற்றிகளை கூறி ஸ்ரீ கிரஹலக்ஷ்மிக்கு சர்க்கரை பொங்கல் பானகம் நைவேத்தியம் செய்து, தீபாரதனை செய்து மனமுருகி நமஸ்கரிக்க வேண்டும்.

இவ்வாறு செய்தால், "ஸ்ரீ கிரஹலக்ஷ்மியின்" அருளைப் பெற்று, எல்லா வளங்களையும் அடைந்து, வற்றாத செல்வம் பெருகி, மனமகிழ்ச்சியுடன் வாழலாம்.

திருமகளை பூஜை அறையில் வைத்து பூஜித்தால் கீழ்கண்ட பலன்களை அடையலாம். கடன் தொல்லை நீங்கும். வியாபாரத்தில் லட்சுமி கடாட்சம் பொங்கும். திருமணம் நடக்கும். கணவன், மனைவி ஒற்றுமை பெருகும். குழந்தை பாக்கியம் கிடைக்கும். படிப்பில் மேன்மை ஏற்படும். வீட்டில் பணம் தங்கும். வாஸ்து தோஷங்கள், நவக்கிரக தோஷங்கள் நீங்கும். மன அமைதி கிடைக்கும். ஸ்ரீ கிரஹலஷ்மியின் அருளால் நினைத்த காரியம் நடக்கும். மாங்கல்ய பலம் பெருகும். மக்கள் மேன்மையுறுவர். மங்கலங்கள் என்றும் நிலைத்து நிற்கும். நம் இல்லங்களை பூலோக சொர்க்க மாக்கும். இந்த அலைமகளை பூஜித்தால், ஆனந்தமும், நிம்மதியும், மகிழ்ச்சியும் உங்கள் உறைவிடமாகும்.

வாஸ்து என்பது என்ன? இக்கேள்விக்கு முதலில் விடையை தெரிந்து கொள்வோம். நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு ஆகிய பஞ்சபூதங்களின் ஆதிக்கம் சமநிலையில் எப்படி இருக்க வேண்டுமோ, எந்தெந்த இடத்தில் இருக்க வேண்டுமோ, எந்த கிரகத்தில் இருந்தால் சுபிட்சமாக இருப்பார்களோ, அதற்கு தான் வாஸ்து என்று கூறுகிறோம்.

வாஸ்துவிற்கும், "ஸ்ரீ கிரஹலஷ்மிக்கும்" என்ன சம்பந்தம். இங்கு ஏன் இதை குறிப்பிட்டு இருக்கிறார்கள் என்ற சந்தேகம் உங்களுக்கு இந்நேரம் எழுந்திருக்கும். எப்படிப்பட்ட திசை யானாலும், எப்படிபட்ட தோஷமானாலும் எந்த பக்கம் வீடு பார்த்து இருந்தாலும் கவலைபட வேண்டாம். ஸ்ரீ கிரஹலஷ்மி திருமகளின் படத்தை வைத்து பூஜை செய்தாலே போதுமானது. மும்பையில் இந்த படத்தை வைத்து பலன் அடைந்த அன்பர்கள் ஏராளம். எல்லாவற்றையும் எழுதினால் அது நீண்ட புத்தகமாக சென்று கொண்டேயிருக்கும் என்ற காரணத்தினால் ஓரிரண்டு நிகழ்ச்சிகளை, அந்த மகிமைகள் உங்களுக்கு தெரிய வேண்டும் என்ற காரணத்தினால் கீழே குறிப்பிடுகிறோம்.

மும்பை மாட்டுங்காவில் வசிக்கும் திரு. வெங்கட் நாராயணன், அவர் வாழ்வில் நடந்த அனுபவத்தை நம்முடன் பகிர்ந்து கொள்கிறார். "ஸ்ரீ கிரஹலஷ்மி படத்தை, பூஜையறையில் வைத்து, புத்தகத்தில் கூறியபடி பூஜை செய்தேன். எல்லையில்லாத மன அமைதியும் நிம்மதியும் இந்த பூஜையில் எனக்கு கிடைத்தது. காசு கொடுத்தாலும் கிடைக்காத நிம்மதி எனக்கு இந்த படத்தின் மூலம் கிடைத்தது" என்று கூறுகிறார்.

அதேபோல், செம்பூரில் வசிக்கும், திரு. விவேக் காமத் என்பவர், "என் மறைந்த தந்தையின் நினைவாக அவருடைய காரை நான் வைத்து இருந்தேன். அந்த காரை எப்பொழுது வெளியே எடுத்துச் சென்றாலும் உடனே ரிப்பேர் ஆகிவிடும். என்ன செய்வது என்று எனக்கும் தெரியவில்லை. அந்த காரை விற்பதற்கும் எனக்கு மனமில்லை. அப்பொழுது தான் ஒரு அன்பர் சொல்லி, "ஸ்ரீ கிரஹலஷ்மி" படத்தை காரில் வைத்து ஓட்டினேன். அதற்கு பிறகு ஒரு தடவை கூட ரிப்பேர் ஆகவில்லை. ஒரு புது காரும் வாங்கினேன். எல்லாம் ஸ்ரீ கிரஹலஷ்மி என்ற திருமகளால் தான் கிடைத்தது என்பதை புரிந்து கொண்டேன்' என்று கூறினார்.

2003-ஆம் ஆண்டு மகானின் கருணையினால், மகான் சூட்சுமத்தில் கூறியபடி வரையப்பட்ட, கிரஹலஷ்மி படத்தை காணும் பாக்கியம் பெற்றேன். செல்வத்தையும், நல்ல பலன்களையும் அளிப்பவள் கிரஹலஷ்மி. அது மட்டுமின்றி வாஸ்து தோஷத்தையும், நவக்கிரக தோஷத்தையும் நீக்குவதில் வல்லவர் என்பதையும் அறிந்து கொண்டேன். எனக்கு வாழ்வில் பெரிய குறை ஒன்றும் இல்லாததால் இந்த படத்தை வாங்குவதற்கு முதலில் விரும்பவில்லை. படத்துடன் வரும் சிறிய ஸ்லோக புத்தகத்தை வாங்குவதற்குதான் பிரியப்பட்டேன். மகான் சூட்சுமத்தில், "அந்த புத்தகத்தில் வரும் 16 கிரஹலஷ்மி, ஸ்துதிகளை கூறிக்கொண்டு வந்தால் உனக்கு மனஅமைதி கிடைக்கும்" என்று கூறினார். மகான் கூறியபடி இந்த புத்தகத்தையும் படத்தையும் வாங்கினேன்.

எல்லோரும் ஆச்சரியப்படும் வகையில், எங்கள் குடும்பத்தில் இந்த படம் பல நல்ல அனுபவங்களை எங்கள் குடும்பத்திற்கு கொடுத்தது. அந்த படத்தை அழகிய ப்ரேம் போட்டு பூஜை அறையில் மாட்டி வைத்து பூஜை செய்தேன். அதை மாட்டியவுடன் பூஜை அறையே மிகவும் பிரகாசமாக இருந்தது. நல்ல எண்ணங்கள், வீட்டையே சூழ்ந்து கொண்டனர். வீட்டிற்கு வந்தவர்களும் அதை உணர்ந்து கொண்டனர். ஸ்ரீ கிரஹலஷ்மியின் அருள் எங்களுக்கு கிடைத்ததை நாங்கள் உணர்ந்து கொண்டோம். மொத்தத்தில் எங்கள் இல்லமே மன அமைதி தரும் இல்லமாக அமைந்தது.

நாள்தோறும், ஸத்குருவின் போற்றியும், ஸ்ரீ கிரஹலஷ்மி போற்றியும், செய்து கொண்டு வந்தோம். எங்கள் மனதில் உள்ள பழிவாங்கும் உணர்ச்சி, தான் உயர்ந்தவன், நீ தாழ்ந்தவன் என்று நினைக்கும் மனப்பான்மை குறைந்தது. மற்றவர்கள் தவறு

செய்தாலும் அதை மன்னிக்கும் தன்மையும் வந்தது. நான் என் பூஜையறையில் ஸ்ரீ கிரஹலஷ்மி படத்தை பார்க்கும்பொழுது எல்லாம் நான் அனுபவித்த இந்த அனுபவம் மற்றவர்களும் அனுபவிக்க வேண்டும் என்று எண்ணி என்னுடைய உறவுக்காரர் களிடமும், சிநேகிதர்களிடமும், ஸ்ரீ கிரஹலஷ்மி படத்தை பற்றி கூறினேன். அவர்களும் வாங்கி பலனை அனுபவித்தார்கள். என் கணவர் வேலை செய்யும் இடத்திலும் ஸ்ரீ கிரஹலஷ்மி படத்தை வைத்தேன். அவருடைய தொழில், பன்மடங்காக பெருகியது, செல்வ செழிப்பு மிகுந்தது என்று மும்பையில் வசிக்கும் திருமதி. மீரா இரவீந்திரநாத் அவர்கள் தங்கள் அனுபவத்தை கூறுகிறார்.

அதே மாதிரி சென்னையில் வசிக்கும் அன்பர்களுக்கு, ஸ்ரீ கிரஹலஷ்மியை வைத்து பூஜை செய்ததால் பற்பல அனுபவங்கள் கிடைத்திருக்கிறது.

சென்னை, கொரட்டூரில் வசிக்கும் திருமதி. செல்விக்கு வீடுகட்ட வேண்டும் என்ற எண்ணமே இல்லை. அவர்களே தங்கள் அனுபவத்தை கூறுகிறார். "என் சிநேகிதி ஒருத்தி கூறி, ஸ்ரீ கிரஹலஷ்மியின் படத்தை வைத்து பூஜை செய்ய ஆரம்பித்தேன். நான்கு வாரங் களுக்குள் வீடு வாங்கணும் என்ற எண்ணம் மனதில் தோன்றியதும் உடனே நல்ல வீடும் விலைக்கு வந்து, அதை வாங்கி கிரஹ பிரவேசமும் செய்து விட்டேன்". எல்லாம் ஸ்ரீ கிரஹலஷ்மியின் அருளால் தான் கிடைத்தது" என்று கூறினாள்.

சென்னையில் வசிக்கும் திருமதி. சந்திராவின் பெண் திருமதி. ப்ரியா அமெரிக்காவில் லாஸ் ஏஞ்சலில் வசிக்கிறாள் வீடு கிடைக்காமல் மிகவும் கஷ்டப்பட்டாள். திருமதி. சந்திரா போஸ்ட்-இல், இந்த படத்தையும், பூஜை முறைகள் புத்தகத்தையும் அனுப்பினாள். பூஜை செய்ய ஆரம்பித்தவுடன் வீடு கிடைத்தது. இப்பொழுது சொந்த வீடே வாங்கிவிட்டாள்.

படம் வாங்கும் அன்பர்களுக்கு இலவசமாக அற நிலையத்தினர் பூஜை செய்யும் முறை பற்றிய புத்தகம் ஒன்று வழங்குகிறார்கள். ஸ்ரீகிரகலக்ஷ்மியின் வண்ணப்படமும், புத்தகமும் அறநிலையத்திலும், சேஷாத்ரி ஸ்வாமிகள் பாலாயத்திலும், சக்தி பீடத்திலும் மட்டும்தான் கிடைக்கும். இது சட்டப்படி காப்புரிமை பெற்ற படமாகும்.

சகல ஐஸ்வர்யங்களையும் அளிக்கும், வாஸ்து தோஷத்தையும் நீக்கும் ஸ்ரீ கிரஹலஷ்மி படத்தை வைத்து பூஜித்து பலனை பெறுங்கள்.

அத்தியாயம்-24

# பூர்ணாபிஷேகம், கும்பாபிஷேகம்

பூர்ணாபிஷேகம் என்றால் என்ன? அதைப் பற்றி முதலில் பார்ப்போம். மாயை என்ற இருளில் இருக்கக்கூடிய ஒரு ஆன்மாவை, ஸ்ரீவித்யா முறை என்ற ஒரு ஒளியை காட்டிக் கொடுத்து ஒரு மாபொரும் பேரொளியாக இருக்கக்கூடிய அம்பிகையிடம், கொண்டு சேர்த்து இறுதியில் அம்பிகையின் பாதம் தான் அந்த ஆன்மாவிற்கு பூரணம். அது தான் சம்பூர்ணம் என்று காண்பிப்பது தான் பூர்ணாபிஷேகம். எல்லோருக்கும் ஸ்ரீ வித்யா முறையில் பூர்ணா பிஷேகம் நடந்துள்ளதா என்று பார்க்கும் பொழுது,ஒரு சிலருக்கு தான் அந்த பாக்கியம் கிடைத்திருக்கிறது என்று கூறலாம். எவ்வளவோ அன்பர்கள், ஸ்ரீ வித்யா முறையில் ஒரு பகுதி மந்திரங்களை மட்டும் கற்றுக் கொண்டு அதன் நெறிமுறைக்கு கட்டுபடமுடியாமல் விட்டு விட்டவர்கள் எராளம் எனக்கு பாலா மந்திரம் தெரியும், சண்டிதெரியும் மந்திர தந்திரங்கள் தெரியும் என்று சொல்லுவார்களே தவிர ஒரு தகுதி, யோக்கியதை உள்ள ஸ்ரீ வித்யா குரு கிடைத்திருக்கிறார்களா என்பது பெரிய கேள்விக்குறி. ஸ்ரீ வித்யா என்பதே பெரிய வேள்வி.

அப்படிபட்ட ஒரு மகத்தான ஸ்ரீ வித்யா தத்துவத்ததை கற்று கொள்வதற்கே பூர்வ புண்ணியம் இருந்தால் தான் கற்று கொள்ள முடியும். அதில் பூரணத்துவம் அடைவது என்றால் குருவின் வழிகாட்டுதலும் அம்பிகையின் அருளும் இல்லை என்றால் சாத்தியமாகாது. குருஜி சர்மா அவர்களின் குருவும் ஸ்ரீ வித்யா உபாசகியுமான, ஸ்ரீமதி விசாலாட்சி சுவாமிநாதன் அவர்கள் ஏறத்தாழ 40 வருடகாலம் ஸ்ரீ வித்யா பூஜை செய்தவர்கள். அவர்கள் அம்பிகையை பல ரூபங்களில் பார்த்திருப்பவர்கள். தன்னடக்கமும், நெறி தவறாமலும் பூஜை செய்பவர். அப்படிபட்ட குருவை தான்

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள், தேர்ந்தெடுத்து அவர்களிட மிருந்து குருஜி சர்மா அவர்களை, ஸ்ரீ வித்யை கற்று கொள்ள சொல்லி உத்தரவிட்டார். ஸ்ரீ வித்யா முறையை, தத்துவத்தை சரியான முறையில் கடைபிடித்து 40 வருடகாலம் பூஜை செய்த ஒரு குருவிடமிருந்து கற்று கொள்வது என்பது ஒரு பெரும் பாக்கிய மாகும். 19.2.2004 ஆம் ஆண்டு குருஜி சர்மா அவர்களுக்கும், திருமதி ராதா சர்மா அவர்களுக்கும், அவருடைய இல்லத்தில் பூர்ணாபிஷேகம் நடைபெற்றது. ஸ்ரீ வித்யா உபாசகியும் குருதம்பதி யுமான, ஸ்ரீமதிவிசாலாட்சிசுவாமிநாதன் திரு. சுவாமிநாதன் அவர்களின் தலைமையில் சண்டி ஹோமமும் ஸ்ரீ வித்யா ஹோமமும் நடை பெற்றன. ஹோமத்தில் வைத்த கடதீர்த்தத்தை குருஜி சர்மா தம்பதி யருக்கு அபிஷேகம் செய்து மேளதாளத்துடன் அவர்களை அழைத்து வந்தனர். குருஜி சர்மா அவர்களுக்கு ஸர்வானந்த நாதர் என்ற தீட்சை நாமமும் திருமதி. ராதாசர்மா அவர்களுக்கு சாம்பவிம்பா என்ற தீட்சை நாமமும் அவர்களது குருவினால் ஸ்ரீ வித்யா முறைப் படி வழங்கப்பட்டது. பூரண தீட்சையும் அவர்களுக்கு வழங்கப் பட்டது.

பூரணதீட்சை என்றால் என்ன? என்ற கேள்வி எழுகிறது. மாயை என்ற இருள் உலகத்திலிருந்து அருள் உலகத்திற்கு குருவின் வழிகாட்டுதலில் ஸ்ரீ வித்யா என்ற தனிகலையை பயிலுவித்து, அதில் முழுமையையும் கொடுத்து, அந்த வித்தையை நிறைவு செய்வது தான் பூரண தீட்சை. குருஜி சர்மாவின் கண்களை அவருடைய குருவான ஸ்ரீமதி. விசாலாட்சி சுவாமிநாதன் அவர்கள் கட்டி, அவரை பூஜையறைக்கு அழைத்து சென்று அம்பிகைக்கு முன் நிறுத்தினார். கண்ணை கட்டுவதன் மூலம் இருள் இருக்கிறது என்பதையும் பூரணத்துவம் முடிந்து அம்பிகையின் முன் நிறுத்தும் பொழுது இருள் அகன்றுவிட்டது என்பதையும் இந்த தீட்சையின் மூலம் மூன்றாம் கண்ணாகிய ஞானக்கண் திறக்கப்படுகிறது என்பதையும் உணர்த்துகிறது.

பல்வேறு இடங்களிலிருந்து புரவலர்கள் வந்திருந்து, விழாவை சிறப்பாக நடத்தி கொடுத்து குரு தம்பதியிடமிருந்து ஆசிகளையும் பெற்று சென்றனர். தங்கசுரங்கத்திலிருந்து தங்கத்தை தோண்டி யெடுத்து அதற்கு மெருகேற்றி, உருமாற்றி அணிகலன்களாக மாறும் பொழுது எப்படி ஒளி வீசுகிறதோ, கரிகட்டையிலிருந்து வைரத்தை தோண்டி எடுத்து அதை தங்கத்துடன் சேர்த்து பட்டை தீற்றும்



கும்பாபிஷேகம் முடிந்தபின் குருஜி சர்மா



கும்பாபிஷேகத்தன்று மக்கள் கூட்டம்

பொழுது எப்படி ஜொலிக்கிறதோ அப்படி ஸத்குருவின் வழிகாட்டுதலாலும், அம்பிகையின். அருளாலும் குருஜி. சா்மா அவர்கள் பல வருட தவத்திற்குப் பிறகு பூரண தீட்சைப் பெற்று பூர்ணாபிஷேகம் முடிந்து முழுமையடைந்து, கும்பாபிஷேகம் செய்வதற்கு தகுதி பெற்றவராக தயார் நிலையில் இருக்கிறார். நீண்ட நாள் ஆலயப்பணிகள் எல்லாம் நிறைவாகும் தருணத்தில், முடிவாகும் சமயத்தில் இந்த பூரணாபிஷேகம் சுப சகுனமாக அமைந்தது. கனவு நனவாகும் நாளும் நெருங்கியது. மகானால் சூட்சுமத்தில் கூறியப் படி, 30.5.2004ம் ஆண்டு கும்பாபிஷேக தேதியும் குறிக்கப்பட்டது.

குடமுழுக்கு விழா (பெரும்சாந்தி பெருவிழா) வாழ்வில் மறக்க முடியாத, மறக்க இயலாத, ஒரு நிகழ்ச்சி ஆகும். ஸத்குருவிடம் நம்பிக்கை வைத்து அவர் வழிகாட்டுதல்படி நடந்தால், எத்தனை கடினமான பணியையும் எளிதாக நடத்தி கொடுப்பார்.

பிம்பத்தில் இருக்கக்கூடிய சக்தியை கும்பத்தில் கலாகர்ஷணம் என்ற முறைப்படி ஆகர்ஷணம் செய்து, அந்த கும்பத்தில் இருக்க கூடிய சக்தியை யாகசாலைக்கு எடுத்துச் சென்று, வேள்விகளை சிறப்பாக ஒன்பது காலம் செய்து, மீண்டும் இருக்கக் கூடிய சக்தியை பெருக்கி மாபெரும் சக்தியாக உருவாக்கி, திரும்பி புதிதாக அமைக்கப்பட்டிருக்க கூடிய ஆலயத்தில் உள்ள சிலை வடிவில் உள்ள பிம்பங்களுக்கு அபிஷேகம் செய்து ஜீவசக்தியை கொடுத்து இயங்கச் செய்வதுதான் கும்பாபிஷேகம் அல்லது குடமுழுக்கு விழா அல்லது பெருசாந்தி பெருவிழா.

1994ம் ஆண்டு செப்டம்பர் மாதத்திலிருந்து மாடம்பாக்கம் பாலாலயம் பிரதான சக்தியாக விளங்குகிறது. கும்பாபிஷேகத்தின் மூலம் அந்த சக்தி எல்லாம் மூலாலயத்திற்கு கொண்டு செல்லப் படுகிறது. லிங்க வடிவில் சக்தியுடன் மிளிர்ந்து கொண்டிருந்த பதினெட்டு சித்தர் மகாபுருஷர்களும் அழகிய தெய்வங்களாக, சிலை வடிவில் பக்தர்களுக்கு அருள்பாலித்து கொண்டிருக்கின்றனர். இந்த பயணம் ஒரு நீண்ட தூர பயணம் ஆகும். 1993-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் சென்னையில் ஒரு அன்பரின் வீட்டில் முதன் முதலில் ஒரு சிறிய அறையில் ஸத்குருவின் வழிகாட்டுதல்படி சித்தர் பூஜை நடைபெற்றது. 1994-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் பாலாலயம் உருவானது. அங்கிருந்து இந்த சக்தி எல்லாம் பாலாலயத்திற்கு சென்று பின்பு இறுதியாக, அம்பிகையின் திருவுளப் படி பதிணென் சித்தர் சக்தி பீட பிருந்தாவனத்திற்கு சென்றது.



பூர்ணாபிஷேகத்திற்காக குருஜி சர்மாவை,
ஸ்ரீ விசாலாட்சி அம்மையார் அழைத்துச் செல்கிறார்



குரு தம்பதிகளிடம் அறங்காவலர்கள் ஆசீர்வாதம் பெறுகின்றனர்



யாகசாலையின் வெளிப்புறம்



குருஜி சர்மா யாகசாலையில் பூஜை செய்கிறார்



பாலாலயத்தில் சக்தியூட்டப்பட்ட கும்பத்துடன் குருஜி சர்மா



கும்பத்துடன் குருஜி சர்மா தம்பதிகள்



ஊர்வலம் – அருள்மிகு ஸ்ரீ தேனுபுரீஸ்வரர் ஆலயத்தைச் சுற்றிச் செல்கிறது·



ஊர்வலம் யாகசாலையை நோக்கிச் செல்கிறது



குரு தம்பதியினர் யாகசாலையில் பூஜை செய்கின்றனர்



பிரதிஷ்டை செய்யப்படும் விக்கிரகங்களுக்கு
குருஜி சர்மா அவர்கள் பூஜை செய்கிறார்



ஊர்வலத்திற்காக குருஜி சர்மா அவர்கள் தங்கக் கலசத்தை,
திரு. மனோஜ் கௌதமிடம் கொடுக்கிறார்



குரு தம்பதியர் தங்கக் கலசத்தை ஸ்தாபித்து
பூஜை செய்கிறார்கள்



யாகசாலையில் பூஜை நடக்கிறது



குருஜி சர்மா ஸ்தலவிருட்சத்திற்கு பூஜை செய்கிறார்



கும்பாபிஷேகத்திற்காக புனித நீரை கோபுரத்தின் உச்சிக்கு
குருஜி சர்மா எடுத்துச் செல்கிறார்



குருஜி சர்மா தங்கக் கலசத்திற்கு கும்பாபிஷேகம் செய்கிறார்

ஆலயம் முடிவதற்குள் அப்பப்பா! எவ்வளவு இடர்பாடுகள், எவ்வளவு தடைகள்! எவ்வளவு வேதனைகள்! எவ்வளவு சிரமங்கள். எத்தனை பேரின் கடின உழைப்புகள். கும்பாபிஷேகத்திற்குரிய ஏற்பாடுகள் செய்வதற்கு பல மாதங்கள் பிடித்தன. இதற்காக புரவலர்களுக்கிடையே திருப்பணி குழு ஒன்று அமைக்கப்பட்டு புரவலர்களிடம் தனித்தனி பொறுப்புகள் ஒப்படைக்கப்பட்டன. அன்றாடம் நடக்கும், நடந்த பணிகளை அறநிலையத் தலைவரான குருஜி சர்மா அவர்களிடம் எடுத்து கூறுவார்கள். இந்த சமயத்தில் இதற்காக பாடுபட்ட சில அன்பர்களின் பெயர்களை நினைவு கூர்வது அவசியமாகும். அவர்கள் ஸத்குருவிடம் ஏன், எதற்கு என்று கேள்வி கேட்காமல் முழு சரணாகதி அடைந்தவர்கள். தங்கள் குருஜி சர்மா அவர்கள் காட்டிய பாதையில் நடந்து அவருடைய சிறு அசைவையும் புரிந்து நடப்பவர்கள்.

திரு. நாகராஜன், திருமதி. அருணா நாகராஜன், பதினைந்து வருட காலம் அறநிலையத்தில் இருப்பவர்கள். திரு. நாகராஜன் அறநிலையத்தின் முதல் செயலாளராய் இருப்பவர். ஸத்குருவிடம் முழு சரணாகதியடைந்தவர்கள். திரு. இராமசுப்ரமணியம், திருமதி. வித்யா சுப்ரமணியம் அவர்களும் ஸத்குருவிடம் முழு ஈடுபாடு கொண்டவர்கள். இவர் அறநிலையத்தின் செயலாளராக இருப்பவர். ஸத்குருவின் சூட்சும கட்டளையை காலம், நேரம் பார்க்காமல், அதை நிறைவேற்றுவதில் அயராது பாடுபடுவர். அதை ஒன்றையே தலை சிறந்த கடமையாகக் கொண்டு செயல்படுபவர். அறநிலைய உபதலைவர் திரு. மருதபரணி, திருமதி. உமா மருதபரணி, முன்னாள் அறநிலைய பொருளாளராக இருந்த மறைந்த திரு. ஸ்ரீதர், திரு. சுவாமிநாதன், திருமதி. கீதா சுவாமிநாதன் இவர்கள் எல்லோரும் அறநிலையத்தின் தூண்களாக இருக்கின்றனர். துபாயில் வசிக்கும் திரு. இராமமூர்த்தி அவருடைய சேவை மகத்தானது. இந்த சமயத்தில் திரு. இராமசாமி, திருமதி. இராமசாமி அவர்களைப் பற்றி கண்டிப்பாக நினைவு கூர்தல் வேண்டும். திரு. இராமசாமி அவர்கள், இரயில்வேயில் இன்ஜினியராக இருந்து ஓய்வு பெற்றவர். ஓய்வு பெற்றதும், வீட்டில் சும்மா இல்லாமல் தன்னுடைய சேவை பயனுள்ளதாக இருக்க வேண்டும். மற்றவர்களுக்கு உபயோகமாக இருக்க வேண்டும் என்பதையே குறிக்கோளாகக் கொண்டவர். பாலாலயம் ஆரம்ப தினத்திலிருந்து, இன்று வரை தன் சேவையை தொடருபவர். தன் சேவையை பற்றி பிறர் பாராட்டுவதையே விரும்பாதவர். தன்னலமற்ற தொண்டு செய்பவர். தன் முதுமையையும்

பாராட்டாமல் உழைப்பவர். அவருடைய சேவை தொடரட்டும். அவருக்கு நீண்ட ஆயுளை தர வேண்டும் என்று ஸத்குருநாதரையும், பராசக்தியையும், பதினெட்டு சித்தர்களையும் வேண்டுகிறோம்.

திருமதி. ராதா சர்மா, குருஜி. சர்மா அவர்களின் மனைவியார், பலவித சோதனைகளையும், தாங்கிக் கொண்டு பக்கபலமாகவும், உதவியாகவும் குருஜி. சர்மா அவர்களுடன் கூட இருந்ததால்தான், முழு குடும்ப பொறுப்பையும் ஏற்றுக் கொண்டதால்தான் கடுமையான காலக் கட்டத்தையும், எளிதாகக் குருஜியால் கடக்க முடிந்தது. அவர்களுடைய குழந்தைகளான குமாரி. புவனேசுவரி, குமாரன் வாசுதேவன், பெற்றோர்களுக்கு பக்கபலமாக இருந்து உதவி புரிந்தார்கள். திருமதி. ராதா சர்மா இந்த சக்தி பீடத்தின் ஆதார சக்தி என்பதில் ஐயமில்லை.

நம் வாழ்வில் வழித்துணையாக, வழிகாட்டியாக இருந்து நம்மை வழி நடத்திய ஸத்குரு, சூட்சுமத்தில் கூறிய அந்த சக்தி பீடம் அமைய வேண்டும். ஆலயத் திருப்பணிகள் முடியும் தருவாயில் இருக்கும் இந்த நேரத்தில் எல்லாம் நன்றாக நடக்க வேண்டுமே என்று உள்ளம் பதைபதைத்த அந்த தருணத்தில்தான், இந்த கனவு நனவாகுமோ, அந்த நாளும் வந்திடாதா என்று நினைத்த அந்த நேரத்தில்தான் கும்பாபிஷேக நாளும் நெருங்கியது. புரவலர்களும், அறங்காவலர்களும் சந்தோஷத்தில் மிதந்தனர். 1.5.2004 அன்று மாலை சுமார் 6 மணியளவில் ஸத்குருநாதரும், பதினெட்டு சித்தர்களும் நம் கனவுகள் நிறைவேறுவதற்காக அவர்களே தேர்ந்தெடுத்த இடத்தில் அவர்கள் கோலாகலமாக வந்து இறங்கினர். அற்புதமான சக்தி பீடத்திற்கு ஆதாரசக்தி அளித்த அருள்மிகு தேனுபுரீஸ்வரருக்கு நன்றி செலுத்தும் வகையில் இந்த மூர்த்திகள் வரும் சமயத்தில் அருள்மிகு தேனுபுரீஸ்வரருக்கு சிறப்பு வழிபாடு பூஜைகள் நடத்தினர். ஸத்குருநாதரையும், பதினெட்டு சித்தர்களையும், சிலை ரூபமாக அவ்வளவு அழகுடனும் நேர்த்தியுடனும் அமைத்திருந்தனர். இவைகள் என்ன பதுமைகளா? பேசும் தெய்வங்கள்.

2.5.2004 அன்று யாகசாலை அமைக்க பந்தக்கால் பூஜை நடைபெற்றது. அன்று காலை சுமார் 8 மணியளவில் ஸ்ரீ கணபதி ஹோமம், ஸ்ரீ வாஸ்து பூஜை ஆகிய பூஜைகள் நடைபெற்றன. சுமங்கலிகளால் சுமந்து வரப்பட்ட பந்தக்கால் நடப்பட்டு, வேத முறைப்படி பூஜை, ஆராதனைகள் நடைபெற்ற பிறகு, சுமங்கலிகள்,

மங்கல நீரை விட்டனர். ஒருபுறம் பந்தக்கால் பூஜை நடக்க மறுபுறம் ஸத்குரு நாதருக்கும், பதினெட்டு சித்தர்களுக்கும் ஜலவாசம் நடை பெற்றது. யாகசாலை அமைப்பதற்குரிய பந்தக்கால் விழா இனிதே நிறைவேறியது.

யாக சாலையில் நடந்த ஒன்பது கால பூஜையை பற்றி பார்ப்போம். கரிக்கோலம் என்றால் என்ன?

கரிக்கோலம் என்றால் கும்பாபிஷேகத்திற்காக பிரதிஷ்டைக்கு தயாராக இருக்கும் தெய்வச் சிலைகளை மக்கள் பார்க்கும் வகையில் ஊர்வலமாக எடுத்து செல்வதுதான் கரிக்கோலம். 25.5.2004 அன்று காலை சுமார் 8.30 மணி அளவில், எல்லா தெய்வங்களையும் ஊர்வலமாக (கரிக்கோலம்) எடுத்து சென்றனர். கலாகர்ஷணம் என்றால் என்ன? அந்த மூர்த்தியை எந்த கலசத்தில் ஆவாஹனம் செய்கிறோமோ அந்த மூர்த்தி அந்த கலசத்தில் எழுந்தருளும்படி வேண்டி அக்கலசத்தை ஆசாரியன் சிரசில் எழுந்தருள செய்து, சகல உபசாரங்களுடன் ஆலயத்தை வலம் வந்து யாகசாலைக்கு கொண்டு வருவதுதான் கலாகர்ஷணம். 26.5.2004 அன்று காலை சுமார் 5 மணியளவில் பாலாலயத்திலிருந்து, மூலாலயமான பதினெண் சித்தர் சக்தி பீட பிருந்தாவனத்தில், ஸத்குருநாதரின் சூட்சும வழிகாட்டுதல் படி, அறங்காவலர்களும் புலவரல்களும் கும்பத்தை சிரசில் வைத்து, மேளதாளத்துடன் எடுத்து வந்து யாகசாலை பிரவேசம் செய்தனர். காலை 9.15 மணிக்கு, குரு தம்பதியினர் குத்து விளக்கேற்றி முதல் கால பூஜையை தொடங்கி வைத்தனர். அன்றைய தினம் மாலை 4.30 மணிக்கு யாகசாலை, பிரதிஷ்டை மற்றும் பூஜைகளை முறைப்படி ஆரம்பித்து செய்தனர். 27.5.2004 அன்று காலை 7.30 மணி முதல், 11.30 மணி வரை இரண்டாம் கால யாகசாலை பூஜை நடைபெற்றது. அன்றைய தினம் மாலை 4.30 மணி முதல் 8 மணி வரை மூன்றாம், நான்காம் கால யாகசாலை நடைபெற்றது.

28.5.2004 அன்று காலை, 7.30 மணியளவில் ஸ்ரீசக்ர மகாமேருவின் சொர்ண கலசத்தை, திரு. மனோஜ் கௌதம் தலைமையில், அறங்காவலர்கள், புலவலர்கள், அன்பர்கள் புடைசூழ திருவீதி உலாவாக எடுத்து சென்றனர். அதை காண்பதற்கு ஆயிரம் கண்கள் இருந்தாலும் போதுமா! இது ஒருபுறம் நடந்து கொண்டிருக்க ஐந்தாம் கால யாகசாலை பூஜை மற்றும், யந்திர பிரதிஷ்டை, சிலை பிரதிஷ்டை, ரத்தின பிரதிஷ்டை பூஜைகள் நடைபெற்றன. அன்று மாலை ஆறாம் கால யாகசாலை பூஜை நடந்து கொண்டிருக்க,

காலையில் பூஜை செய்த யந்திர பிரதிஷ்டை, சிலை பிரதிஷ்டை மற்றும் ரத்தின பிரதிஷ்டைக்கு, அஷ்ட பந்தன மருந்து சாற்றப் பட்டது.

முறைப்படி எது நடக்க வேண்டுமோ அது நடந்தது. அதுமட்டு மின்றி, எல்லா புரவலர்களும், ஜாதி, மத, இன வேறுபாடின்றி எல்லா அன்பர்களும் சிறப்பு மூலிகைகளால் சேர்க்கப்பட்ட, சித்தர் மூலிகை களால் செய்யப்பட்ட அஷ்டபந்தன மருத்தை இடித்து சாற்றினர்.

29.5.2004 அன்று காலை 7.30 மணிக்கு ஏழாம் கால யாகசாலை பூஜை நடைபெற்றது. ஸ்ரீ சக்ர மகா மேரு கர்ப்பகிரக பூஜை ஆரம்பிக்கப்பட்டது. ஒருமித்த மனதோடு எல்லா சுமங்கலி களும் ஸ்ரீ லலிதா சகஸ்ரநாமத்தை பாராயணம் செய்து கொண்டு இருந்தனர். ஏறத்தாழ 3 டன் எடையுள்ள ஸ்ரீ சக்ர மகா மேருவை எப்படிதான் சென்று பிரதிஷ்டை செய்தார்களோ தெரியவில்லை. அம்பிகை அப்படியே இலேசாக தன் உடலை வளைத்து சென்றாளோ தெரியவில்லை. இதிலிருந்து அஷ்டமா சித்தி இருக்கிறது என்பதற்கு இது ஒரு முன்னோடியாக தெரிந்தது. இது ஒரு சுப சகுனமாக தெரிந்தது. இது ஒரு அறிகுறியாக தெரிந்தது.

30.5.2004 காலை 4.30 மணியளவில், ஒன்பது கால யாகசாலை பூஜை நடைபெற்றது. மற்றும் நாடி சந்தானம் நடை பெற்றது. நாடி சந்தானம் என்றால் என்ன? யாகங்கள் நடத்தப்பட்ட இடத்தில் முறைப்படி பூஜிக்கப்பட்ட தெய்வ சக்திகளை பட்டுகயிறு, தர்ப்பைகளின் வழியாக மூலஸ்தான சிலைக்கு கொண்டு செல்லு தலையே உயிர் தருதல் (நாடி சந்தானம்) என்பர். இந்த முறைப்படி கர்ப்ப கிரஹத்தில் உள்ள தெய்வ சிலைகளுக்கு உயிரூட்டப்பட்டது. அன்று காலை 11.15 மணி முதல் 12 மணிக்குள் சிம்ம லக்னத்தில் அபிஜித் முகூர்த்தத்தில், கலச பூஜை செய்து முடித்ததும் பூரண ஆகுதி (யாக நிறைவு) செய்யப்பட்டு, கலசங்கள் புறப்படுவதற்கான யாத்திரை, தானம் என்ற ப்ரீதி பூஜை செய்தபின் யாக பூஜைகள் மந்திர உச்சாடனங்கள், குரு தம்பதியினரால் சிரத்தையுடன் செய்யப் பட்டு, பவித்தரமான, பரிசுத்தமான, ரம்யமான, நாமெல்லாம் காலம் காலமாக பார்த்து ரசிக்கும் வகையில், விமான கலசத்திற்கு அர்ச்சனை செய்து பூஜை நடத்தியபிறகு கலச நீரை கோபுரக் கலசத்தின் மீது மூல மந்தரங்கள் கூறியபடி அபிஷேகம் செய்தனர். பின்னர் கலசத்திற்கு தர்ப்பை, கொடி, வஸ்திரம், மாலை சாற்றித் திலகமிட்டு, நிவேதனம் செய்து ஆரத்தி எடுத்தனர். புனித கலச நீர் ஊற்றுவதைக்




ஸ்ரீ சக்திபீடத்தில் குரு தம்பதிகள்

கண்களால் காண்பவர்களுக்கு பன்னிரண்டு ஆண்டுகள் தவ யாத்திரை, ஆலய தரிசனம் செய்த புண்ணியத்தை பெறுவதாக ஆகம சாஸ்திரம் கூறுகிறது. கும்பாபிஷேகம் முடித்த அதே தருணத்தில் கருவறையில் உள்ள அத்தனை தெய்வங்களுக்கும் முதல் அபிஷேகம், மகான் சூட்சுமத்தில் சுட்டி காட்டிய புரவலர்களின், அறங்காவலர்களின் கரங்களாக செய்யப்பட்டன. இதை தொடர்ந்து, 48 நாட்கள் மண்டலாபிஷேகம் நடைபெற்றன. கும்பாபிஷேகத்தில் கலந்து கொள்ள இயலாத அன்பர்கள், மண்டலாபிஷேகத்தை பார்த்தால், கும்பாபிஷேகம் பார்த்த பலனை அடையலாம்.

உலக க்ஷேமத்திற்காக, நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான பக்தர்களின் மன அமைதிக்காக பதினெண் சித்தர் சக்தி பீடம் உருவாக்கப்பட்டது. சிலைகளாக இருந்த, ஸ்ரீ சக்ர மகா மேரு, பதினெட்டு சித்தர்களும் உயிர் பெற்று, பல்லாயிரக்கணக்கான பக்தர் களின் கோரிக்கைகளைக் கேட்டு பேசும் தெய்வங்களாக அருள் பாலித்து கொண்டிருக்கின்றனர்.

பல வருட இடர்பாடுகளுக்கு இடையில் புனிதமான வேள்வி முடிவடைந்தது. தன் நலன் பார்க்காமல் பொது நலனைக் கருதி தன் உடல், பொருள், ஆவி அனைத்தையும் அதில் ஈடுபடுத்தி இந்த ஆலயம் எழும்புவதற்கு குருஜி. சர்மாவும் மற்றும் அறங்காவலர் களும், புரவலர்களும் பட்ட பாடு கொஞ்சம் நஞ்சமல்ல. செய்ய முடியாது என்று நினைத்த செயலை, குருவின் துணையோடு குருஜி. சர்மா அவர்கள் நிறைவேற்றினார். இருப்பேன் என்று குரு சொன்னார். இருந்தார், நடத்திக் கொடுத்தார். வழிகாட்டினார். வழி நடத்தினார். இன்றும் இருக்கிறார்.

108 திருப்பதிகளையும், 108 சைவத் திருத்தலங்களையும் தரிசிக்கும் பலன் இங்கே உள்ள சர்வ வல்லமை பொருந்திய சர்வ சக்தி படைத்த ஸ்ரீ சக்ர மகா மேருவான ஸ்ரீ லலிதா மகா திரிபுர சுந்தரியை தரிசித்தாலே கிடைக்கும். இங்கு சித்த சக்திகளுடன், சித்த சுத்தி அடைய அருள் சக்தியான பராசக்தி அருளை வாரி வழங்கி கொண்டு இருக்கிறாள். இந்த புண்ணிய ஸ்தலத்திற்கு வந்தால், வருணிக்க இயலாத, உணர்ந்து பார்க்கும் வகையில் மறக்க முடியாத, மீண்டும், மீண்டும் வர பார்க்க தூண்டும் வகையில் எல்லையில்லாத மன அமைதி கிடைக்கும் என்பது உறுதி.

அத்தியாயம்-25

# கோமாதாவின் பராமரிப்பும், அன்னதானமும்

கோதரிசனம், கோடி பாப "விமோசனம்" என்று சொல்லு வார்கள். நமது இந்து தலைசிறந்த கறைகண்ட பூஜையாக கோமாதா பூஜை கருதப்படுகிறது. கோமாதா என்று அழைக்கப்படும் காமதேனு வின் அவதாரமான பசு எல்லா தெய்வங்களின் ஒட்டுமொத்த வடிவாக விளங்குகிறது. இதனால் நாம் காலையில் எழுந்தவுடன் பசுவை பார்ப்பது, தொட்டு கண்களில் ஒற்றி கொள்வது கழுவி குளிப்பாட்டுவது, கொம்புகளை சீவி அலங்கரிப்பது, உடல் எல்லாம் மஞ்சள் பூசுவது, அகத்தி கீரை, நறுக்கிய காய்கறிகள் சர்க்கரைப் பொங்கல், கழுநீர் போன்ற பொருட்களை உணவாக அளிப்பது, கற்பூரம் காட்டி பூஜிப்பது, வலம் வந்து நமஸ்கரிப்பது ஆகியவை பசுவை பூஜிப்பதற்கு மிகமிக ஏற்ற நெறிமுறையாகும்.

நம்முடைய முன்னோர்கள் பசுவை திருமகளாகவே நினைத்துத் தங்கள் வீடுகளில் கொட்டில்களை அமைத்து பசுக்களை பராமரித்து வந்தார்கள். பஞ்ச கவ்யம் என்பது ஒரே பசு மாட்டிலிருந்து எடுக்கப் பட்ட பால், வெண்ணெயிலிருந்து எடுத்த நெய், தயிர், பசுவின் மூத்திரம் மற்றும் சாணம் இவற்றை உன்னத முறையில் மந்திர பூர்வமாக கலந்து உள்ளுக்கு சாப்பிட்டு வந்தால் சகலவிதமான நோய்களும் நீங்கும் என்பது ஆன்றோர் கருத்து. பசுவின் பஞ்ச கவ்யம் மனிதனுடைய புறத்தையும், அகத்தையும் அதைச் சேர்ந்த பாபங்களை நீக்கும் வல்லமை உடையது.

பசு பற்றிய புராணம் மிகச் சிறப்பானது. இந்திர சபைக்கு காமதேனு கம்பீர நடை போட்டு தாமதமாக வந்ததைக் கண்ட இந்திரன், காமதேனுவை சாதாரண பசுவாக பூவுலகில் பிறக்குமாறு

சபிக்க, பின்னர் காமதேனு, கபில முனிவரின் ஆஸ்ரமமான கபில வனத்தை அடைந்து வாழ்ந்து வந்தது. கபில முனிவரின் உபதேசம் பெற்ற காமதேனு, தனது காதுகளின் மூலம் கங்கை நீரை சேமித்து, மலையைக் கீறி அதில் ஊற்றி வைத்தது. அது இன்று சுனையாக உள்ளது. கங்காதீர்த்தமாக மக்களால் போற்றப்படுகிறது.

காமதேனுவிற்கு ஒரு நாள் சோதனை ஏற்பட்டது. அது வரும் வழியில் புலி ஒன்று பசுவைக் கொல்ல முயன்றது. தினமும் தான் சிவபூஜை செய்து வருவதாகவும், இன்றும் அப்பூஜையை செய்துவிட்டு, தனது கன்றுக் குட்டிக்கு பால்கொடுத்து விட்டு திரும்பி வருவதாகவும் பின்னர் தன்னை உணவாக்கி கொள்ளலாம் என்று புலியிடத்தில் சத்தியம் செய்தது. பின்னர் தன் கடமைகளை செவ்வனே முடித்து விட்டு திரும்பிய பசுவை பார்த்து பசுவின் பக்தியையும், கடமை உணர்வையும், தாயன்பையும் பாராட்டிய புலி வடிவத்தில் இருக்கும் சிவபெருமான், ரிஷப வாகனத்தில் ஸ்ரீ பார்வதி தேவியுடன் வந்து பசுவிற்கு முக்தியை ஈந்து சென்றனர். அத்தகைய பெருமை வாய்ந்த ஸ்தலம்தான் சிக்கல். சகல பாபங்களையும் போக்கும் தானத்தில் சிறந்தது கோதானம்தான். அதற்கு நிகரானது வேறு எந்த தானம் இல்லை. காலையில் எழுந்து எவருடனும் பேசாமல் ஒரு பிடி புல் பசுவுக்குக் கொடுத்தால் மலடி கூட குழந்தையை பெறுவாள்'' என்பது சான்றோர் வாக்கு. முன்னொரு சமயம், முனிவர் ஒருவர் ஜலத்தில் தவம் செய்து கொண்டிருந்தபொழுது, மீன் பிடிக்க வந்த செம்படவர்கள் முனிவரை மீனென நினைத்து வலையில் இழுத்து கரையில் கொண்டு போட்டனர். முனிவரை பார்த்ததும் செயலிழந்து அவரிடம் மனம் வருந்தி மன்னிப்பு கேட்டனர். முனிவரும் அவர்களை மன்னித்து அதற்கு பிரயாச்சித்தம் செய்யும் வகையில், அவ்வூர் அரசனிடம் சென்று, நடந்ததை கூறி அவர்களின் கஷ்டத்திற்கு தானமாக ஏதேனும் பெற்றுக் கொண்டு வருமாறு கூறினார். அவர்களும் சென்று பொன்னும், பொருளும், பெற்றுக் கொண்டு வந்தும் போறாது என்று கூறி திரும்ப திரும்ப அனுப்பினார். அரசனும் முழு ராஜ்யத்தை தானமாக கொடுத்தும், முனிவர் தான் ''இவ்வளவுதானா பெறுவேன்'' என்று கேட்டதும், அரசனும், செம் படவர்களும் என்ன செய்வது என்று தெரியாமல் தவித்த சமயம், ''கவிதாசர்'' என்ற முனிவர் அங்கு தோன்றி, அரசனிடம், கன்றுடன் கூடிய ஒரு பசுவை தானமாக அளிக்குமாறு கூறினார். பசுவை கண்ட முனிவர், ''இந்த பசுவின் பதினாறில் ஒரு அம்சத்திற்குக் கூட

நான் சமமல்ல'' என்று கூறினார். இதிலிருந்து ஒரு கோவானது, சமஸ்த இராஜ்யத்தையும் விட சிறந்தது என்பது தெளிவாகத் தெரிகிறது. பசு மிகவும் புனிதமானது. பசுவின் உடலில் அனைத்து, தெய்வங்களும் குடிகொண்டிருக்கின்றனர். பசுவின் ஒரு கண்ணில் சூரியனும், மறுகண்ணில் சந்திரனும் உள்ளனர். முகத்தில் பிரதானமாக சிவபெருமானும், மூக்கில் ஆறுமுகனும் பிள்ளையாரும், காதுகளில் அசுவினி குமாரர்கள் ஆகியோர் உள்ளனர். முன்பக்க குளம்புகளில் ஆஞ்சநேயரும், பைரவரும், பின் பக்க குளம்புகளில் மந்தராசல பர்வதங்கள் உள்ளன. கொண்டை பகுதியில் பிரம்மா, விஷ்ணு, சரஸ்வதி, பூமாதேவி, அக்னி, குபேரன், வருணன், பிரம்ம ரிஷிகளான, வசிஷ்டர், விசுவாமித்ரர், நாரதர், பரத்வாஜர் முனிவர்களும், வால் பகுதியில் மஹாலஷ்மி, கங்காதேவியும், வாலில் நாகராஜரும் வீற்றிருக்கின்றனர். அனைத்து தேவதைகளும், தெய்வங்களும், கொலு வீற்றிருக்க, அதை தவிர, கழுத்து பகுதியிலிருந்து நவக்கிரஹங்களின் ஒருவரான ராகு, கேது ஆகியோர் அமர்ந்திருக்கின்றனர். காமதேனு வின் பெருமையை பற்றி கூறவும் வேண்டுமோ?

அனைத்து தெய்வங்களும் இருந்து அருள்பாலித்து கொண்டு இருக்கும், காமதேனுவின் வரைப்படத்தை மகானின் சூட்சும ஆணைப்படி பாலாலயத்தில் வைத்துள்ளனர். இன்று சென்றாலும் நீங்கள் கண்டு தரிசிக்கலாம்.

ஸ்ரீ லஷ்மி தேவி, தான் வசிக்க, சிறிது இடம் தரும்படி கூறினாள். கோதேவியும், நீ சஞ்சல குணம் உள்ளவள், மேலும் இங்கு இடம் நிறைந்து விட்டபடியால் நீ தங்குவதற்கு இடமில்லை என்று கூறினாள். அதற்கு ஸ்ரீ லஷ்மி தேவியும், யாருக்கும் பயன் படாத இடமாக இருந்தாலும் பரவாயில்லை, நான் தங்கிக் கொள்கிறேன்'' என்று கெஞ்சினாள். கோதேவியும் மலம் ஜலம் வரும் இடம் தான் இருக்கிறது. நீ அங்கு தங்கி கொள்ளலாம் என்று பதில் உரைத்தார். அங்கு இடமே போதும் என்று ஸ்ரீதேவியும் அங்கு தங்கிக் கொண்டாள். அதனால்தான் கோபூஜை செய்யும் பொழுது வாலிற்கும் பூஜை செய்கின்றனர்.

இத்தனை நேரம், பசுவின் பெருமைகளைப் பார்த்தோம். ஆமாம்! பசுவிற்கும் மாடம்பாக்கம் பதினென் சித்தர் சக்தி பீட பிருந்தாவனத்திற்கும் அப்படி என்ன சம்பந்தம் இருக்கமுடியும்? இருக்கிறது, அதை பார்க்கலாமா! பதினெட்டு சித்தர்களில் ஒருவரான ஸ்ரீ கபில மகரிஷி மாடயம்பதியில் (தழுவி · இப்பொழுது மாடம்பாக்கம் ஆனது) சாபம் காரணமாக பசுவாக பிறந்து

விமோசனம் பெற்றார். கபில மகரிஷி காமதேனுவாக பிறந்ததால் காமதேனுபுரி என்று அழைக்கப்பட்டது. அறநிலையத்தினர் ஸத்குருவின் ஆணைப்படி பசுவின் பராமரிப்பிற்கு முக்கியத்துவம் கொடுக்கின்றார். ஸ்ரீ கிருஷ்ணனிடமிருந்தும் இதற்கு உத்தரவு கிடைத்துள்ளது. **கோகுலத்தின் நாயகன் கிருஷ்ணன் அல்லவா!** பாலாலயத்தில் பசு மடம் ஒன்று நிறுவ பெற்று பசுவை மிகவும் சுத்தமாக பராமரிக்கின்றனர். ஒவ்வொரு ஞாயிறு அன்றும் மாடம்பாக்கத்தின் பாலாலயத்தில் பசுகள் கொடுக்கும் பாலை இலவசமாக குழந்தைகளுக்கு அறநிலையத்தினர் வழங்குகின்றார். ஆராதனை ஜெயந்தி விழாக்களிலும், கோ பூஜையை மிக விமரிசையாக கொண்டாடுகின்றனர். ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் பிருந்தாவன அறநிலையத்தினர் காமதேனு நிரந்தர வைப்பு நிதி என்ற திட்டத்தினை அமுல்படுத்தி இருக்கின்றனர். நிரந்தர வைப்பு நிதியின் மூலம் வரும் வட்டியை பசுக்களை பராமரிக்க பயன்படுத்துகின்றனர். பசுக்களை பேணி பாதுகாக்க ஏராளமான நிதியுதவி தேவைப்படுகிறது. இத்திட்டத்தில் கலந்து கொண்டு பொருளுதவி செய்து மகாலஷ்மியின் அருளையும் ஸ்ரீ கிருஷ்ணனின் அனுக்ரஹத்தையும் பரிபூர்ணமாக நீங்கள் பெறலாம். நன்றி கெட்ட வாயுள்ள ஜென்மங்களுக்கு கொடுப்பதை விட நன்றி யுள்ள வாயில்லாத ஜீவன்களுக்கு கொடுத்தால் எவ்வளவு புண்ணியம் என்பதை நீங்களே சிந்தித்துப் பாருங்கள்.

அன்னபூரணி என்பவள் யார்? என்ற கேள்விக்கு விடை காண்போம்

தமது படைப்புக்களான ஜீவராசிகள் ஊணுண்டு உயிர் வாழ்வதற்காக, லோக மாதா, உலகத்தார் அனைவருக்கும் உண்பதற்கு போதுமான அன்னத்தை அக்ஷய பாத்திரம் போன்ற தங்கக் கிண்ணத்தில் பூர்ணமாக தமது திருக்கரத்தில் தாங்கி தம் மக்களுக்கு ஊட்டும் பாவனையில் தரிசனம் தருவதால் 'அன்னபூரணி' என்ற திருநாமம் பெற்றாள்.

அன்னம் பராசக்தி ஸ்வரூபம். இறையை உணர உதவும் உடல் செழிக்க உணவு அவசியம். கருவில் இருக்கும் பிள்ளையின் அடிவயிற்றில் அன்னை இட்ட தீதான் பசி. அதை அணைப்பவளும் அன்னையே. முக்காலத்திலும் உலகில் சகல உயிர்களையும் அன்னமெனும் அமுதமளித்து பேணி காப்பவள் அன்னை. அந்த அன்னைதான் காசி மாநகரில் அன்னபூரணியாக அமர்ந்து அருள் பாலிக்கிறாள். காசி நகரையே தன் கருணையால் வழிநடத்திச்

செல்லும் தலைமைத் தாயாகக் கொண்டாடப்படுகிறாள். ஆதி, சக்தி, அன்னபூரணியாக வடிவெடுத்தாள்.

அன்னம் சாம்ராஜ்யம் ஆகும். அன்னதானத்தினால் வரும் பலன்கள் ஏராளம். உணவளித்தவன் உயிர் அளித்தவன் ஆவான். அன்னதானம் செய்தால் மற்ற எல்லா தானங்களும் செய்த பலன் ஏற்படும். பஞ்சமாபாதக தோஷம் நீங்கும். பூர்வஜென்ம தோஷம் நீங்கும். அன்னதானத்தினால் சொர்க்கலோகம் கிடைக்கும். லட்சுமி கடாஷம் பெருகும். பூரணத்துவம் கிடைக்கும். அன்னதானத்திற்கு காலம், நியதி எதுவுமில்லை. ஸத்குருவிற்கும் அன்னதானம் மிகவும் பிடித்தமானதாகும். ஜாதி வித்தியாசமின்றி அன்னம் அளிக்கப்பட வேண்டும் என்பதில் குறிப்பாக உள்ளவர்.

இத்தகைய பெருமை வாய்ந்த ஸ்ரீ அன்னபூரணிதான், மாடம் பாக்கத்தில் சக்தி பீட பிருந்தாவனத்தில் ஸ்ரீ லலிதா மகா திரிபுர சுந்தரியாக அருள்பாலித்து கொண்டிருக்கிறார். அன்னதானம் கலியுகம் முடியும்வரை தொடரும். சக்தியிழந்த ஜீவன்களுக்கு சக்திபீடத்தில் பராசக்தியின் அருளால் பிரமாதமான சக்தியை இந்த அன்னதான பிரசாதத்தின் மூலம் நமக்கு கிடைத்து சகல நோய்களையும் நீக்கும்.

அன்னதானம் மண்டபம் ஒன்று அமைக்க வேண்டும் என்று ஸத்குருவின் ஆணைப்படி அறநிலையத்தினர் 30-4-2006 அன்று அன்னதான மண்டபம் ஒன்று கட்டி அதற்கு மகானின் திருவுளப்படி சேஷ சரஸ்வதி என்ற பெயரையும் சூட்டினார். "ஸ்ரீ சேஷ சரஸ்வதி" அன்னதான மண்டபத்தில் ஸ்ரீ அன்னபூரணியின் திருவுருடப்படம் ஒன்று அறநிலையத்தினர் வைத்திருக்கின்றனர். காலையிலும், மாலையிலும் ஸ்ரீ அன்னபூரணியை வழிபாடு செய்த பிறகு தான் அங்கு அடுப்பையே மூட்டுகின்றனர். நித்ய அன்னதானம் இங்கு நடைபெற்று வருகிறது. தினமும் அங்கு வேலைச் செய்பவர்களையும் சேர்த்து ஏறத்தாழ 100 பேருக்கு அன்னதானம் நடைபெறுகிறது. ஒருநாள் செலவு 100 பேருக்கு 1500 ரூபாய், வடை, பாயசயத்துடன் 2000 ரூபாய்.

ஒரு பக்கம் அன்னலஷ்மியின் அனுக்கிரகமும், ஒரு பக்கம், காமதேனு ரூபத்தில் உள்ள மகாலஷ்மியின் அனுக்கிரகமும் இரண்டும் இணைத்து கிடைப்பது ஒரு பெரும் பாக்கியமாகும்.

அன்னதானம் செய்வோம்!

அன்னையின் அருளைப் பெறுவோம்!!

## அத்தியாயம்-26

# சரணாகதி

திரு. N. இராமகிருஷ்ணன், சென்னைக்கு அருகில் இருக்கும் பல்லாவரத்தில் தன் குடும்பத்தினருடன் வசித்து வருகிறார். இவர் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் தூரத்து உறவினர் ஆவார். இவர் சேஷாத்ரி ஸ்வாமிகளின் இளைய சகோதரனான திரு. நரசிம்ம ஜோஸ்யரின் பேரன் ஆவார். இவருடைய வீட்டில் சிறிய தொட்டிலில் கிருஷ்ணவிக்கிரகம் இருக்கிறது. இந்த விக்கிரகம் 'தவழும் கிருஷ்ணன்' ஆவார். இந்த விக்கிரகத்தைப் பார்த்துதான் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் நான்குவயதுக் குழந்தையாக இருந்தபொழுது ஆசைப் பட்டுக் கேட்டார். இதைப்பற்றி விவரமாக அத்தியாயம்-2இல் குறிப்பிட்டு உள்ளோம். ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் சிறுவனாக இருந்த பொழுது தவழ்ந்துவரும் நவநீதகிருஷ்ணராகிய, ஒரு கையில் வெண்ணெய் வைத்து இருக்கும் இந்த விக்கிரகத்தைத்தான் மிகுந்த பக்தியுடன் பூஜித்து வந்தார். பக்தர்களுக்கு இது ஒரு விலைமதிக்க முடியாத ஒரு பொக்கிஷமாகும். மனிதருள் மாணிக்கமாக, நடமாடும் தெய்வமாக இருந்த காஞ்சி பீடாதிபதி பரமாச்சார்யாள் இந்தக் கிருஷ்ண விக்கிரகத்தை தன்னுடைய ஆத்ம பூஜையில் பதினைந்து நாட்களுக்கு வைத்திருந்து, மிகுந்த மரியாதையுடனும் மதிப்புடனும் பூஜித்துவந்தார். அப்படிப்பட்ட கொஞ்சும் கிருஷ்ணனுக்கு, கச்சிதமான, அழகான நெக்லசைப் பரமாச்சாரியார் செய்து அணிவித்துள்ளதை இன்றும் நாம் தரிசிக்கலாம்.

திரு. இராமகிருஷ்ணன் அவர்கள் அந்த விக்கிரகத்தின் மகிமையைப்பற்றிக் கூறுகிறார். 1968-ஆம் வருடம் திருமதி. இராம கிருஷ்ணனுக்கு குழந்தை பிறப்பதில் சிக்கல்கள் காரணமாக மருத்துவமனையில் சேர்க்கப்பட்டாள். அவள் உடல்நிலை மிகவும் மோசமாக இருந்தது. அவள் பிழைப்பது அரிது என்றுகூறி,

டாக்டர்கள் "கெடு" வைத்து விட்டார்கள். அன்று இரவு திரு. இராம கிருஷ்ணன் அவருடைய பெண் இந்துவின் பக்கத்தில் படுத்து இருந்தார். அவர் தூங்க முயலும்போது அவரை யாரோ அடிப்பதைப் போல் உணர்ந்தார். அவருக்கு சேஷாத்ரி ஸ்வாமிகளின் தோற்றம் தெரிந்தது. கிருஷ்ணவிக்கிரகம் அரிசிப்பானைக்குள் இருக்கிறது என்றும், அதை உரிய மரியாதையுடன் தகுந்த இடத்தில் வைக்குமாறும் பிறகு எல்லாம் நல்லபடியாக நடக்கும் என்றும் கூறுவதாக உணர்ந்தார். திரு. இராமகிருஷ்ணன், உடனே கிளம்பிக் கும்பகோணத்தில் இருக்கும் அவர் வீட்டை அடைந்தார். அவருடைய தாய் ஜாகை மாற்றும்பொழுது வீட்டிற்கு வேண்டிய சாமான்களைக் கட்டும் பொழுது விக்கிரகம் பத்திரமாக இருக்க வேண்டும் என்பதற்காக விக்கிரகத்தை அரிசிப்பானைக்குள் வைத்து சரியான இடம் கிடைத்த பிறகு எடுத்துக் கொள்ளலாம் என்று இருந்துவிட்டாள். ஸத்குருவின் உத்தரவுப்படி அந்தக் கிருஷ்ண விக்கிரகத்தை எடுத்து வந்து சென்னையில் இருக்கும் தன் பூஜை அறையில் வைத்து விட்டார். எல்லோரும் ஆச்சரியப்படும்படியாக மருத்துவர்களின் சொல்லுக்கு மாறாக திருமதி. இராமகிருஷ்ணனின் உடல்நிலை சரியாகி அழகான ஆண்குழந்தை ஈன்று எடுத்தாள். இன்றையதினம் அக்குழந்தை பெரிய பொறியியல் வல்லுநராகத் திகழ்கிறார்!

திரு. இராமகிருஷ்ணன் குடும்பமே, ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் முழுச் சரணாகதி செய்து இருந்தனர். ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் வாக்குப்படியே மலைக்கு அருகிலேயே இடம் கிடைத்து வீடுகட்டிக்கொண்டு வசிக்கின்றனர். திரு. இராம கிருஷ்ணன் தன்னுடைய மகன் திரு. ஸ்ரீநிவாசன் சிறுவயதில் பேச முடியாமல் இருந்ததை நினைவு கூர்ந்தார். "ஐந்து வயது ஆகியும் என் மகனுக்கு ஒழுங்காகப் பேச்சு வரவில்லை". ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளின் படத்திற்குமுன் உட்கார்ந்து திரு. இராமகிருஷ்ணன் அவர்கள் தன் துக்கத்தையும் வருத்தத்தையும் மானஸீகமாக ஆத்மார்த்த பாவனையில் மகானிடம் வெளிப் படுத்தினார். ஒரு வாரத்திலேயே அச்சிறுவன் எல்லாரையும்போல் சாதாரணமாகப் பேசத் தொடங்கினான். அவர் மேலும் ஒரு நிகழ்ச்சியையும் கூறினார். ஸத்குரு உடல்நலம் சரியில்லாமல் திருவண்ணாமலையில் படுத்து இருந்தபோது ஸ்வாமி களின் இளைய சகோதரர் திரு. நரசிம்மர், சென்னையிலிருந்து விரைவாகக் கிளம்பி ஸத்குருவைப் பார்க்கச் சென்றார். "அண்ணா" என்று கத்திக்கொண்டும், அழுது கொண்டும், ஸ்வாமிகளின் அருகில்

சென்றார். அதற்கு ஸத்குரு பக்கத்தில் இருக்கும் கழியை எடுத்து நரசிம்மரின் தலையில் அடித்தார். ''அண்ணா'' என்று கூப்பிட்டுப் பாச உறவை திரு. நரசிம்மர் வெளிப்படுத்தியதால் பந்தபாசங்களுக்கு எல்லாம் அப்பாற்பட்டு முற்றும் துறந்த சந்நியாசி என்பதை மகான் வெளிப்படுத்தினார். மகான்கள் சொந்த பந்தங்களுக்கும் அப்பாற் பட்டவர்கள். அவர் அனைவருக்கும் சொந்தம்.

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளைப்பற்றியும் அவரது லீலைகளைப்பற்றியும் அவர் வருணிக்கும்பொழுது அவரது கண்களில் நீர் மல்கியது. ஸ்வாமிகளின் உன்னத நிலையையும், கருணையை அவர் தன் பக்தர்களின்மீது பொழியும் தன்மையைப் பற்றிப் பேசிக் கொண்டு இருந்தார். முன்காலத்தில் ஸத்குருவிற்கு ஆராதனை விழா நன்றாக நடத்தப்படவில்லையே என்று தான் மிகவும் மனவருத்தம் அடைந்ததைப் பற்றி அவர் நினைவு கூர்ந்தார். அந்த நேரத்தில்தான் சேஷாத்ரி ஸ்வாமிகள், **"இவ்விழாவைக் கோலாகலமாகக் கொண்டாடும் நாள் வரும்''** அதை தலைமை யேற்று நடத்த ஒருவன் வருவான் என்று ஸ்வாமிகள் முன்பே கூறியிருந்தாராம், என்று அவரைத் தேற்றினார். அந்த மாதிரி, கோலாகலமான ஆராதனை விழா நமது அறநிலையத்தின் சார்பில் நடைபெறுவதைக் கண்டு அவர் மகிழ்ச்சி அடைந்தார். அவருடைய மனைவி கிருஷ்ணபக்தை ஆனாள். அவள் தன் பிள்ளைகளைக்கூடப் பிரிந்து வாழ்வாள். ஆனால், அந்தக் கிருஷ்ணரைவிட்டுப் பிரிய மாட்டாள். மகான் அவரது குடும்பத்திற்கு ஒளிவிளக்காக இருக்கிறார்.

பக்தர்கள் தங்களது வாழ்க்கையில் பல்வேறு வழிகளில் மகான் தங்களோடு இருப்பதை உணர்ந்தனர். அதோடு மட்டுமின்றி அவர்களது வாழ்க்கையில் மகான் செய்த அற்புதங்கள் ஏராளம். அது போன்ற ஒருவர் அற்புதத்தை அனுபவித்த நிகழ்ச்சியைக் கீழே கொடுத்துள்ளோம்:-

## குழந்தை பிறந்தது

திரு. நாகராஜன் என்பவர் வங்கியில் பணிபுரிகிறவர். அவர்களுக்குத் திருமணமாகிப் பத்து வருடங்கள் கழிந்த பிறகும் குழந்தை இல்லை. மருத்துவர்களின் ஆலோசனைகள் பயனற்றுப் போயின. ஈடுபாட்டுடன் செய்த பூஜைக்கும் பலன் இல்லாது போயின. இத்தருணத்தில்தான் அவருடைய மனைவி, அவளுடைய சகோதரியின் தூண்டுதலின்பேரில் குரு கம்ப்யூட்டர் ஜோதிடத்திற்கு

வந்தார். திரு. நாகராஜன் மிகவும் வெறுத்துப்போய், குழந்தை விஷயமாக யாரையும் பார்க்கவோ, அவர்களின் ஆலோசனையைக் கேட்கவோ விருப்பமற்று இருந்தார். ஆராதனை விழாவிற்கு அவரை வலுக்கட்டாயமாக அவருடைய மனைவி அழைத்துச் சென்றாள். அங்குதான் முதன்முதலில் திரு. சர்மாவை அவர் சந்தித்தார். ஸத்குருவின் பிரசாதமாக உலர்ந்த திராட்சையைத் திரு. நாகராஜன் பெற்றுக்கொண்டார். பிறகு திரு. சர்மாவிடம் ஜாதகத்தை எடுத்துச் சென்று ஆலோசனை கேட்டார். திரு. நாகராஜனை ஆச்சரியப்படத் தக்க வகையில் அந்த இடம் இழுத்தது. அத்தம்பதிகளுக்குக் குழந்தை கண்டிப்பாகப் பிறக்கும் என்ற மனநிறைவளிக்கிற புனிதமான சொல்லும் வந்தது. திரு. நாகராஜன் அச்சமயம் சென்னையில் இருந்தார். 1989-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் அவர் உடனடியாகச் சென்னையைவிட்டு வேறு ஊருக்கு மாற்றல் வாங்கிகொள்ள வேண்டும் என்று ஸத்குருவிடமிருந்து உத்தரவு வந்தது. அவர் முயற்சி மட்டும் செய்தால் போதும். அவர் அந்த ஊரைவிட்டுப் போவதற்கு எவ்விதத் தடையும் இருக்காது என்றும் கூறினார். திரு. நாகராஜன் பயந்துகொண்டே இவ்விஷயமாகப் பேசத் தன் மேலதிகாரியை அணுகினார். அடுத்தநாளே அவருக்குக் கோயம் புத்தூருக்கு மாற்றல் ஆகியது. தாங்கள் தங்குவதற்கான இடத்தைப் பற்றிய கவலையுடன் திரு. நாகராஜனும், அவருடைய மனைவியும் தங்களுடைய சாமான்களுடன் கோயம்புத்தூருக்குப் பயணமானார்கள். அவர்கள் அதற்குக் கவலைப்பட்டிருக்க வேண்டாம். ஸத்குருவின் கருணையினால் அவர்களுக்கு உடனடியாக வசதியான பாது காப்பான இடத்தில் வீடு கிடைத்தது. அவ்வீட்டில் 1989-ஆம் ஆண்டு ஜூலை மாதம் பூஜை ஒன்று நடந்தது. அவ்வாண்டு ஆகஸ்ட் மாதம் திருமதி. நாகராஜன் கர்ப்பம் தரித்தாள். ஸத்குருவிடமிருந்து திருமதி. நாகராஜன் ஓய்வாக இருக்குமாறு உத்தரவு வந்தது. புனிதமான ஸத்குருவின் விபூதியைக் காலையிலும், இரவிலும் பூசிக்கொள்ளுமாறும் சொன்னார். ஐந்து மாதம் கடந்த பிறகு ஒருநாள் நள்ளிரவு திருமதி. அருணா நாகராஜனுக்கு இடுப்புவலி ஆரம்பம் ஆகியது. இக்குழந்தையையும் இழந்து விடுவோமோ என்று அவள் அஞ்சினாள். அவள் விபூதியைப் பூசுவதற்கு அன்று இரவு மறந்து போனாள். அந்த நேரத்தில் மகான் எங்கிருந்தோ வந்து அவள் அருகில் அமர்ந்து விபூதி பூசிக்கொள்ள மறந்ததை நினைவூட்டித் தலையைத் தடவிக் கொடுத்து, பூசிக்கொள்ளுமாறு சொன்னார். 1990-ஆம் ஆண்டு ஜுன் மாதம் திருமதி. நாகராஜன்

அழகான ஒரு பெண் குழந்தையை மருத்துவர்களே ஆச்சரியப்படும் வகையில் ஈன்றெடுத்தாள். ஆச்சரியம் என்னவென்றால், குழந்தையின் வளர்ச்சியோடு ஒரு பெரிய கட்டியும் வளர்ந்தது. அது இருந்தால் கர்ப்பம் தரிப்பதே இயலாத செயல் ஆகும். ஸத்குருவின் உத்தரவுப்படி அக்குழந்தைக்குப் "பாக்யலக்ஷ்மி தீபிகா" என்று பெயரீட்டனர். அவள் இப்பொழுது பதினைந்து வயது மங்கை ஆவாள்.

ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் பாதாரவிந்தங்களைப் பற்றிக் கொண்ட இத்தம்பதிகளுக்கு அவருடைய சீடரால் உபதேசம் கிடைத்தது. ஸ்வாமிகளின் கருணை அவர்களுடைய வாழ்க்கையில் மாற்றத்தை ஏற்படுத்தியுள்ளது.

## விபத்திலிருந்து காப்பாற்றியது

திரு. நாகராஜன் 1990-ஆம் ஆண்டு ஒருநாள் போளூருக்குப் பஸ்ஸில் பயணம் செய்துகொண்டு இருந்தார். முன்சீட்டில் அவர் அமர்ந்திருந்தார். பஸ் போளூர் நோக்கிச் சென்றுகொண்டு இருந்தது. திடீரென்று ஒரு குரல் அவர் உட்கார்ந்த இடத்திலிருந்து எழுந்திருக்கச் சொல்லிக் கட்டாயப்படுத்தியது. அவ்வளவு அவசரமாக அந்தக்குரல் வந்ததால் அதை ஸத்குருவின் ஆணையாக எடுத்துக் கொண்டு அவர் எழுந்து பின்சீட்டில் அமர்ந்தார். அவருடைய இடத்தில் வேறு ஒருவர் வந்து அமர்ந்தார். அத்தருணத்தில்தான் பேருந்து எதிரில் வந்த வண்டியுடன் மோதி விபத்து ஏற்பட்டது. திரு. நாகராஜனின் ஆடை எல்லாம் இரத்தக்கறை ஆகியது. ஆனால், அவருக்கு ஒரு காயமும் இல்லை. தான் அமர்ந்த இடத்தில் இருந்த பயணிக்கு நேர்ந்த அந்தப் பலமான அடியைப்பார்த்து, திரு. நாகராஜன் திடுக்கிட்டார். அவர் மட்டும் அந்த இடத்தில் உட்கார்ந்திருந்தால் அவர்தான் அந்த மோசமான நிலையில் இருந்து இருப்பார்! திரு. நாகராஜனின் ஜீவனுக்கு ஜீவன் கொடுத்துக் காப்பாற்றிய அவருடைய குருவிற்குக் காட்டும் நன்றியுணர்ச்சியாக அவருடைய உள்ளம் விம்மியது. இந்த விபத்திலிருந்து தன்னை மயிரிழையில் காப்பாற்றிய தன் குருவை அவர் பிரார்த்தித்தார். பல பேரைக் காயப்படுத்திய அந்த விபத்தில் தன்னை மட்டும் காத்தமைக்காகக் குருநாதருக்கு நன்றி தெரிவித்தார். அவருடைய ஆடை முழுவதும் மற்றவர்களின் இரத்தம் தோய்ந்து இருந்தது. ஆனால், அவர் மட்டும் எவ்வித அடியும் இன்றித் தப்பினார். ஸத்குருவிடம் தன்னை முழுமையாக அர்ப்பணித்த அந்த நிகழ்ச்சியைச் சொல்லும் பொழுது

இன்றும் அவருடைய உதடுகள் மிகுந்த உணர்ச்சியுடன் துடிக்கின்றன. இன்று திரு. நாகராஜன் தம்பதியினர் அவர்களது வாழ்க்கையையே ஸத்குருவின் பாதங்களில் ஒப்படைத்து அவர் எப்படி எல்லாம் ஆணை கொடுக்கிறாரோ அப்படியே ஏன்? எதற்கு? என்று கேட்காமல் முழுச்சரணாகதியுடன் செய்து வருகின்றனர்.

## வீடு கிடைத்தது

திரு. C.R. சுப்பிரமண்யம் என்பவர் ஒரு வீட்டை வாங்குவதற்குள் பலவித சிக்கல்களில் சிக்கித்தவித்தார். 1988-ஆம் ஆண்டு அவர் சிறிது பணத்தை முன்பணமாகக் கொடுத்துவிட்டார். 1992-ஆம் ஆண்டு வரை ஒரு வீடும் அவருக்கு உறுதிப்படுத்தப்படவில்லை. அவருக்கு வீடும் கிடைக்கவில்லை. கொடுத்த பணமும் வரவில்லை. இந்தக் குழப்பத்தில் மனம் ஒடிந்துபோனார். திரு. சுப்பிரமணியம் உண்மையான பக்தியுடன் ஸத்குருவைப் பிரார்த்தனை செய்து, திரு. சர்மாவை இது விஷயமாக அணுகினார். 1992-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் அவருக்கு வீடு கிடைத்து விடும் என்று ஸத்குருவிடம் இருந்து அவருக்கு உத்தரவு வந்தது. கிரகப்பிரவேசத்திற்கு நாள் குறித்துத் தரச்சொல்லி திரு. சர்மாவை அவர் அணுகினார். அடுத்தநாள் காலையே அந்த விழாவைக் கொண்டாட வேண்டும் என்று ஸத்குருவிடம் இருந்து உத்தரவு வந்தது. தன்னுடைய குருவின் உத்தரவை சிரமேற்கொண்டு அவரும் அடுத்தநாள் செய்வதற்குத் தயார் செய்து எந்த விக்கினமும் இன்றி அதைச் செய்தும் முடித்தார். நான்கு மாதங்களுக்குப் பிறகு ஒரு மிகப்பெரிய சோதனை ஒன்று வந்தது. அந்த வீடு C.M.D.A. அனுமதி பெறாமல் கட்டிடம் கட்டப்பட்டுள்ளது என்றும் அதை இடிக்க வேண்டும், என்றும் ஆணை வந்தது. திரு. சுப்பிரமணியனின் பக்கத்து வீட்டை இடிப்பதற்கு, C.M.D.A. அனுமதி பெறாமல் கட்டிடம் கட்டப்பட்டு உள்ளது என்றும் அதை இடிக்கவேண்டும், என்றும் ஆணை வந்தது. திரு. சுப்ரமணியனின் பக்கத்து வீட்டை இடிப்பதற்கு, C.M.D.A. ஆட்கள் வந்து இறங்கினார்கள். அவர்கள் பிறகு திரு. சுப்ரமணியம் வீட்டை இடிப்பதற்கு வரப்போவதாகவும், முக்கியமான பொருட்களை வெளியில் வைக்குமாறும் கூறினார்கள். அக்குடும்பத்தினரின் துக்கத்தைக் கற்பனைகூடச் செய்துபார்க்க முடியாது. அந்தச் சோதனையான நேரத்தில் அந்தக் குடும்பம் முழுவதும் சேஷாத்ரி ஸ்வாமிகளை உண்மையான பக்தியுடன் ஸத்குருவின் உதவியைக் கோரிப் பிரார்த்தனை செய்தனர். என்ன நடந்தது என்பதைச்

சொல்வதென்றால் அது ஒரு விவரிக்க முடியாத, ஆச்சரியமான அனுபவம் ஆகும். வீட்டை இடிப்பதற்காக வந்த அந்த ஆட்களே அந்த வீட்டை இடிக்கப் போவதில்லை என்று கூறிவிட்டு, அமைதி யாக வெளியேறினர். அந்த மனிதர்களின் மனதை மாற்றியது நம் ஸத்குருவைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்? அந்த வீடு அவர்களுக்குக் கிடைத்து, இன்றும் அக் குடும்பத்தினர் அந்த வீட்டில் வாழ்வதைப் பார்க்கலாம். கருணாமூர்த்தியான சேஷாத்ரி ஸ்வாமி களின் அன்பினால் தங்களுக்குக் கிடைத்த அந்தப் பொக்கிஷத்தை எண்ணி மிகுந்த நன்றியுணர்ச்சியுடன் அக்குடும்பத்தினர் இருக்கின்றனர்.

## வீடு வாங்கியது

திரு. ஸ்ரீதர் (லேட்) வங்கியில் மேலதிகாரியாகப் பணி புரிந்தார். இவர் திரு. சர்மா மூலம் மந்திரோபதேசம் பெற்றவர். சேஷாத்ரி ஸ்வாமிகள் பிருந்தாவன அறநிலையத்தின் அன்றைய பொருளாளர் ஆவார். சிறுவயதிலேயே சேஷாத்ரி ஸ்வாமிகளைப் பற்றி, தன்னுடைய தாத்தாவிடம் இருந்து கேட்டு அறிந்தவர். திரு. சர்மாவிடம் பரிச்சயமாகி குரு கம்ப்யூட்டர் ஜோதிடத்திற்கு வர ஆரம்பித்த பிறகு அவருக்கு ஸ்வாமிகளிடம் உள்ள நெருக்கம் அதிகமாயிற்று. அவருடைய வார்த்தையிலேயே கூறவேண்டுமென்றால், "திரு. சர்மாவின் அலுவலகத்தில் முதன்முதலாக ஸத்குருவின் படத்தைப் பார்த்தபோது, குருநாதரின் கண்களிலிருந்து பொழியும் தாய்மை உணர்ச்சியால் நான் மிகவும் கவரப்பட்டேன்." தன்னுடைய ஜோதிடக் கலையை வாழ்க்கைத் தொழிலாக மாற்றித் தனக்கு வழிகாட்டியாக இருந்தவர் ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகள் என்றும், அவர் தன் வாழ்க்கையை ஆன்மீக தத்துவ முறைப்படி அமைக்க உதவிபுரிந்தவர் என்றும் திரு. சர்மா அவர்கள் கூறினார்கள். உண்மையான, நேர்மையான பக்தியுடன் அவருடைய தாமரைமலர் போன்ற பாதங்களில் சரணாகதி அடைந்தால் நம் வாழ்க்கைநெறியை வகுத்துக் கொடுப்பார் என்றும் கூறினார். அவர் என்னை புனிதமான திருவண்ணாமலைக்குச் செல்லுமாறும், அங்கு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் அதிஷ்டானத்திற்குச் சென்று பிரார்த்தனை செய்யுமாறும், கிரிப்பிரதட்சனம் செய்து ஸத்குருவிற்குக் குரு பூஜையைச் செய்யுமாறு கூறினார். குருஜி. சர்மா கூறியபடியே 1990-ஆம் ஆண்டு எல்லாப் பிரார்த்தனைகளையும் நிறை வேற்றினேன். அதன்பிறகு என் வாழ்க்கையில் பலவித மாற்றங்கள் நிகழ்ந்தன. அது எனக்கு மன மகிழ்ச்சியைக் கொடுத்தது.

எல்லோருக்கும் தெரியவேண்டும் என்பதற்காக என்னுடைய வாழ்க்கையில் நடந்த அனுபவங்களை உங்களுடன் பகிர்ந்து கொள்ளுகிறேன்.

ஒரு வீடு வாங்குவதற்காகக் கடனுதவிபெற மனுவைத் தயார் செய்து அலுவலகத்தில் ஆணையிடும் மேலதிகாரியிடம் கொடுக்கிற சமயம் என் நண்பர்களில் ஒருவர், வீட்டு வரைபடத்தில் ஒரு தவறு இருக்கிறது என்றும் அந்த மேலதிகாரி அதை ஒப்புக்கொள்ள மாட்டார் என்றும் கூறினார். வீடுகட்டும் நபர்தான், அந்த வரை படத்தை வைத்திருக்கிறார். அவரிடம் சென்று அதில் இருந்த தவற்றை சுட்டிக்காட்டி அதைத் திருத்துமாறு கேட்டுக் கொண்டேன். அதைத் திருத்துவது கடினம் என்றும் விதிமுறைகளால் அது நிறைய நாள் பிடிக்கும் என்றும் அந்த வீடுகட்டுபவர் கூறினார். எப்படி யானாலும் அவர் பொறியாளரிடம் ஆலோசனை செய்து செய்ய வேண்டியதைச் செய்யலாம் என்று கூறினார். நான் உடனே திரு. சர்மாவைச் சந்தித்து அவருடைய ஆலோசனையைக் கேட்டேன். "அன்னை புவனேஸ்வரியை"ப் பிரார்த்தனையை செய்யுமாறு குருநாதர் உத்தரவிட்டதாக குருஜி. சர்மா என்னிடம் கூறினார். ஸத்குருவின் உத்தரவுப்படி புவனேஸ்வரி மந்திரத்தைச் சொல்ல ஆரம்பித்தேன். இந்தப் பிரச்சினையின் முடிவை குருநாதரின் கையில் விட்டுவிட்டேன். எதிர்பாராதவிதமாக வீடுகட்டுபவர் என் இல்லத்திற்கு வந்து வரைபடம் மாற்றப்பட்டதாகத் தெரிவித்தார். இவ்வளவு சுலபமாக அக்காரியம் முடிந்ததை எண்ணி அவர் ஆச்சரியப்பட்டார். ஸத்குருவின் அருளால் என் அலுவலகத்திலிருந்து வீட்டை வாங்குவதற்குக் கடன் வாங்கமுடிந்தது!

## தொலைந்த பெட்டி கிடைத்தது

"அன்று ஞாயிற்றுக்கிழமை. காலை நேரம். நான் மந்தைவெளி யில் இருக்கும் எனது வங்கிக்குப் பணத்தை எடுத்துவரச் சென்றேன். இரண்டாயிரம் ரூபாயை என்னுடைய கைப்பெட்டியில் மற்ற தஸ்தா வேஜுகளுடன் வைத்திருந்தேன். நடுவில் சில இடங்களில் நிறுத்தி என் வேலையை முடித்துக் கொண்டு வீடு போய்ச் சேர்ந்தேன். அப்பொழுதுதான் என் கைப்பெட்டி என்னிடம் இல்லாதது அறிந்து மிகவும் அதிர்ச்சி அடைந்தேன். ஏனெனில், என் ஜாதகத்தை ஆராய்ந்த குருஜி. சர்மா அவர்கள் என் உடமைகளைப் பாதுகாப் பாக வைத்திருக்குமாறு கூறியிருந்தார். கனத்த மனத்துடன் நான் ஸத்குருநாதர் கருணையை வேண்டி நின்றேன். மனவேதனையுடன்

மைலாப்பூர் அடைந்து, நான் சென்ற இடங்களில் சென்று விசாரித்தேன். இறுதியாக நான் காபி அருந்திய அந்தச் சிற்றுண்டிச் சாலையை அடைந்தேன். மனதில் நம்பிக்கையின்மையுடன் அந்தச் சிற்றுண்டிச் சாலை உரிமையாளரிடம் என் பெட்டியைப்பற்றி விசாரித்தேன். அவர் என் பெட்டியின் அடையாளங்களைக் கேட்டார். நான் கூறிய பதிலில் முழுமையான திருப்தி அடைந்த அவர் என்னுடைய பெட்டியை என்னிடம் ஒப்படைத்தார். அந்தச் சிற்றுண்டிச் சாலைக்கு வந்த ஒருவரால் அப்பெட்டி அவரிடம் ஒப்படைக்கப் பட்டதாகக் கூறினார். அப்பெட்டியைக் கண்ட என் மனம் மிகவும் சந்தோஷப் பட்டது. அந்த பெட்டி திருட்டுப் போவதிலிருந்து மகானின் அருள் என்னைக் காப்பாற்றியது. கிரகங்களின் அசாதாரண நிலையினால் ஏற்படும் சிக்கல்களைக்கூட மகான் நினைத்தால் எளிதில் மாற்றி அமைத்து விடுவார் என்பதற்கு இது ஒரு சான்றாகும்."

## உயிர் காத்தது

"அன்று ஒரு சனிக்கிழமை. சூரியன் மறைந்த நேரம். இரவு ஏழுமணி. நான் என் மனைவியுடன் மேற்கு மாம்பலத்தில் இருந்து மடிப்பாக்கத்திற்கு ஸ்கூட்டரில் சென்றுகொண்டு இருந்தேன். பயணத்தை ஆரம்பிப்பதற்குமுன் என்னைக் காப்பாற்றும்படி ஸத்குருவிடம் பிரார்த்தனை செய்வது வழக்கம். மாம்பலம் பாலத்தைக் கடக்கும் தறுவாயில் என்னுடைய ஸ்கூட்டரின் பின் சக்கரம் எதிர்பாராத விதமாகச் சுழன்று முன் சக்கரத்தின் துணையுடன் மட்டும் வண்டி ஓடிக்கொண்டிருந்தது. வேகத்தடையானது (ப்ரேக்) பின் சக்கரத்தில் இணைக்கப்பட்டு இருப்பதால் வண்டியை உடனடியாக நிறுத்த முடியவில்லை. சிறிது தடுமாறிய பிறகு வண்டியை நிறுத்தி விட்டேன். இதில் ஆச்சரியம் என்னவென்றால் நானும், எனது மனைவியும் ஒரு சிறு கீறலோ, காயமோ இன்றித் தப்பினோம். என் மனைவி அதிக சிரமம் இன்றிக் கீழே இறங்கினாள். எங்கிருந்தோ வந்த நால்வர், அந்த வண்டியை அருகில் உள்ள கடைக்கு எடுத்துச் சென்று, சரிசெய்து, ஒரு சில நிமிடங்களில் வண்டியை எங்களிடம் ஒப்படைத்தனர். அவர்கள் செய்த உதவிக்குப் பணம் வாங்கிக் கொள்ளவும் மறுத்துவிட்டனர். எதையும் எதிர்பார்க்காமல் இந்த வேலையைச் செய்த அவர்களைப் பார்த்த என் கண்களை என்னாலேயே நம்பமுடியவில்லை. இந்த விபத்திலிருந்து நாங்கள் தப்பியது மகானின் அருளால் அன்றி வேறு எப்படி இருக்க முடியும்?"

## குருவின் உபதேசம்

திரு. இராமமூர்த்தி, திருமதி. உமா ராமமூர்த்தி அவர்களும் மிகுந்த தெய்வபக்தி உடையவர்கள். அவர்கள் சேஷாத்ரி ஸ்வாமி களைக் குருவாக ஏற்றுக்கொண்டு திரு. சர்மா மூலம் உபதேசம் பெற்றவர்கள். திரு. சர்மா அவர்களின் மூலமாகக் குருநாதரைப் பற்றிக் கேள்விப்பட்டு, தங்கள் வாழ்க்கையுடன் குருநாதர் ஒன்றி இருப்பதை அனுபவபூர்வமாக உணர்ந்தவர்கள். தாங்கள் சரணாகதி அடைவதற்கு முன்பு தங்கள் வாழ்க்கைக்கு ஒரு குரு அவசியமா? தேவையா? என்ற சர்ச்சை அவர்கள் மனதை மிகவும் பாடுபடுத்தியது. அவர்களுடைய மனப்போராட்டத்திற்குப் பதில் ''தெய்வத்தின் குரல்'' புத்தகத்திலே வெளியிடப்பட்ட காஞ்சி பரமாச்சார்யாள் அவர்களின் உபந்யாச உரையிலிருந்து கிடைத்தது. உரையைப்பற்றி விரிவாக இருபத்தொன்றாவது அத்தியாயத்தில் குறிப்பிட்டு உள்ளோம். அன்றிலிருந்து சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டு, பக்தி செலுத்தி வருகின்றனர். ''நம்மை அழிவிலிருந்து காப்பாற்றிக் கொள்ள, நமக்கு ஒரு நல்ல பாதை உண்டு என்பதை உணர்ந்தோம். அவருடைய தாமரை மலர் போன்ற பாதாரவிந்தங் களில் சரண் அடைந்து, நமக்கு வழிகாட்டும்படி பிரார்த்திக்கிறோம். நம் குருநாதர் நம்முடனே இருந்து நம்மை நல்வழிப்படுத்தி வாழ்க்கைப் பாதையை நடத்திச் செல்கிறார் என்பதை அறியும் பொழுது நமக்கு ஒரு புத்துணர்ச்சியும் மன அமைதியும் ஏற்படுகிறது'' இது அத்தம்பதியினர், அவர்களே சொன்ன வாக்காகும்!

''எங்கள் வாழ்க்கையில் நடந்த இன்னொரு நிகழ்ச்சியை விவரிக்க விரும்புகிறோம்'' என்று திரு. இராமமூர்த்தி அவர்கள் கூறினார்கள். ''நான் பார்த்த வேலையிலே திடீரென்று ஒரு நிலை யில்லாத தன்மையை உணர்ந்தேன். அதனால் அந்த வேலையை இராஜினாமா செய்துவிட்டு, மற்றொரு வேலையைத் தேடிச் சென்னையை விட்டுச் செல்ல நினைத்தேன். இதனால் மிகுந்த மன வேதனையும், குழப்பத்தையும் அடைந்தநான் குருநாதர் பாதார விந்தத்தில் சரணடைந்து எனக்கு நல்வழி காட்டும்படி வேண்டினேன். அவரிடமிருந்து பதில் வரும் வரை என்னுடைய பிரார்த்தனையைத் தொடர்ந்தேன். ஒரு சில நாட்களில் வேலையி லிருந்த குழப்பங்கள் தானாக நீங்கி இப்பொழுது இருக்கும் வேலையிலேயே மனநிறைவுடன் தொடர்ந்து செயல்படுகிறேன். இந்தச் சில நாட்களில் என் மனைவி மிக மன வருத்தத்துடன் என்னைவிட அதிக

வேதனையுடனும் இருந்தாள். இப்படிப்பட்ட இக்கட்டான சூழ்நிலை யில் குருநாதரன்றி எங்களுக்கு வழிகாட்ட யார் இருக்கின்றனர்? ஒரு நாள் இரவு தன்னை நோக்கி ஒரு ஒளி வருவதை என் மனைவி உணர்ந்தாள். அந்த ஒளியின் நடுவில் குருநாதர் அமர்ந்து இருக்கும் தோற்றத்தைக் கண்டாள். இதைக்கண்ட ஒருவாரத்திற்குள், திருவண்ணா மலையில் உள்ள குருநாதரின் அதிஷ்டானத்தைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றாள்.

## கடன் தொல்லையிலிருந்து விடுதலை

சென்னையை சேர்ந்த அறநிலையத்தின் புரவலர் திருமதி. சகுந்தலா சடகோபன் அவர்கள் தன் அனுபவத்தை கூறுகிறார்.

"சேஷாத்ரி ஸ்வாமிகள் என்று சொன்னாலே என் மனதில் ஒரு இனம்புரியாத மகிழ்ச்சி தோன்றும், எனக்கு 20 வருடங்களுக்கு முன்பு வரை சேஷாாத்ரி ஸ்ணவாமிகள் யார் என்றே தெரியாது. என் அண்ணி ஒரு சமயம் அறுவை சிகிச்சை செய்து கொண்டு ஆஸ்பத்திரியில் இருந்தபோது சேஷாத்ரி ஸ்வாமிகளை பற்றிய ஒரு புத்தகம் வாங்கி வந்தாள். அதனை படித்த பின்பே எனக்கு சேஷாத்ரி ஸ்வாமிகளை பற்றியும் குருஜி. சர்மாஜி அவர்களையும் தெரிய வந்தது. அப்பொழுது என் கணவருக்கு வியாபாரத்தில் பல சோதனைகள் மலையின் உச்சியிலிருந்து அதள பாதாளத்திற்கு தள்ளப் பட்டார். அதுவும் தன் கீழே வேலை செய்த அலுவலர்கள் மூலமாக கடன் காரர்கள் வீடு தேடி வரத்தொடங்கினார்கள். இரவு ஏன் வருகிறது என்று இருக்கும். அழைப்பு மணியை அடித்தாலே எனக்கு ரொம்ப பயம் வந்துவிடும். என் கணவர் தூங்கிக் கொண்டிருப்பார். நான் தான் பதில் சொல்ல வேண்டிவரும். அதனால் வாசல் கதவு மேல் சேஷாத்ரி ஸ்வாமிகளின் படத்தை மாட்டி வைத்திருப்பேன். குருநாதர் நீ என்னை என்ன செய்ய வேண்டும் என்று நினைக்கிறாயோ அதை செய் அதை நான் ஏற்றுக் கொள்கிறேன் என்று வேண்டிக்கொண்டு கதவைத் திறப்பேன் என்ன ஆச்சரியம்! கன்னாபின்னா என்று கத்த வேண்டும் என்று நினைத்து வந்தவர்கள் சாந்தமாக பேசிவிட்டு செல்வார்கள். சிலர் என்னை ஆச்சரியமாக கேட்பார்கள் மேடம் நான் உங்களை திட்டவேண்டும் என்று நினைத்தேன் இங்கு வந்தவுடன் என் மனநிலையே மாறிவிட்டது அதற்கு காரணம் என்ன என்று கேட்பார்கள் அப்பொழுது நான் அந்த படத்தை காண்பித்து அவர்தான் காரணம் என்று கூறுவேன்.

என் வாழ்க்கையில் பல அற்புதங்கள் ஒன்றா, இரண்டா எடுத்துச் சொல்ல, ஆயிரம் ஆயிரம். ஒரு உதாரணம் மட்டும் கூறிவிட்டு முடித்துக் கொள்கிறேன். 1983-ல் என் கணவர் எல்.ஐ.சி. பாலிசி எடுத்திருக்கிறார். அது தொலைந்து எங்கு இருக்கிறது என்றே தெரியவில்லை நாங்கள் பல வீடுகள் மாறியதால் என் விலாசத்தை கண்டுபிடிப்பது மிக அரிது. என் தொலைபேசியும் மாறிக் கொண்டே இருந்தது. 2006-ல் பாலிசி முடிவடைகிறது. எல்.ஐ.சி. ஏஜெண்ட் ஏதோ ஒரு இடத்தில் எங்கள் விலாசத்தை விசாரிக்க ஒருவர் அவருக்கு விலாசம் தர நாங்கள் இப்பொழுது தங்கும் இடத்திற்கு வந்து முறைப்படி செய்ய வேண்டியதை செய்ய சொல்லி காசோலையை அனுப்புவதாக கூறி இருக்கிறார். இது மகானால் மட்டுமே முடியும். எல்.ஐ.சி. ஏஜெண்டிற்கு ஒரே ஆச்சரியம். அவர் உடனே 18 சித்தர்கள் கோயிலை விசாரித்து அன்றே கோயிலுக்கு சென்று, சேஷாத்ரி ஸ்வாமிகளை தரிசித்து விட்டு இந்த மாதிரி கோயில் நான் எங்குமே பார்த்ததில்லை. உங்களுக்கு நடந்த அதிசயம் எங்கும் நடக்கவில்லை என்று கூறினார். இதுவே மகானின் சக்தி, மகானின் அருள், மகானை முழுமையாக சரணாகதி அடைந்தால் நம் கஷ்டங்கள் பனிபோல் விலகிவிடும்.

நன்றி உணர்வுடன் மகானின் சீடர்களால் அவரவர்கள் வாழ்க்கையில் அனுபவித்த அற்புதங்கள் நமக்குப் புரிகிறது. முழு நம்பிக்கையோடு முழு சரணாகதி செய்த எந்த ஆன்மாவையும் மகான் காப்பாற்றத் தவறுவதில்லை. ஸ்வாமிகளின் வாக்கின்படி இலௌகீக வாழ்க்கையிலே சீடர்கள் ஆன்மிக வளர்ச்சியையும் பெற வேண்டும் என்பது மகானின் விருப்பம். எங்கெல்லாம் அவரது நாமாவளிகள் உண்மைப் பக்தியோடும், முழு நம்பிக்கையோடும் உச்சரிக்கப்படுகிறதோ அங்கெல்லாம் மகான் அருணை ஒளியாக வழிகாட்டி வருகிறார். அருட்பெருஞ் ஜோதி தனிப்பெருங் கருணை.

அத்தியாயம்-27

# புதைந்து கிடக்கும் உண்மைகள்

திரு. முத்துவீரு என்பவர் நெடுஞ்சாலைப் பொதுப்பணித் துறையில் தலைமைப் பொறியாளராக இருந்து ஓய்வு பெற்றவர். அவர் தன் வாழ்க்கையில் நடந்த நெஞ்சத்தைத்தொடும் ஒரு நிகழ்ச்சியைக் கீழே விவரிக்கிறார்.

## திருமணம் நிச்சயிக்கப்பட்டது

"சுமார் ஐந்நூறு ஜாதகங்களைப் பார்த்தும் பலவிதமாக முயற்சிகள் செய்தும், என் மகனுக்கான திருமணத்தை நிச்சயிக்க முடியவில்லை. இந்த தருணத்திலே உடைந்த மனதோடு என் மகனுக்கும் திருமணம் என்று ஒன்று நடைபெறுமா? என்ற கேள்விக்குறியுடன் தெய்வீக ஜோதிடர் திரு. சர்மா அவர்களை அணுகினேன். 1992-ஆம் ஆண்டு ஸத்குருநாதரின் ஆராதனையில் நடந்த திருக்கல்யாண உற்சவத்திலே என்னைப் பங்கேற்குமாறு என்னிடம் திரு. சர்மா அவர்கள் கூறினார். நானும் என் மனைவியும் இதைப்பற்றிப் பேசி ஒரு முடிவுக்கு வந்தவர்களாக அவர் அறிவுரைப்படி நடக்கத் தீர்மானித்தோம். மறுநாள் குருநாதரைப் பிரார்த்தனை செய்துகொண்டு திருக்கல்யாணத்திற்காகத் தொகையைச் செலுத்தியபிறகு வீடு வந்து சேர்ந்தோம். நாங்கள் வீட்டை வந்து அடைந்த போது அதிசயிக்கத்தக்க வகையில் தொலைபேசியில் ஒரு செய்தி வந்தது. அதாவது பெண் வீட்டவர்கள் என் மகனின் ஜாதகத்தையும், தங்கள் பெண்ணின் ஜாதகத்ததையும் சரிபார்த்து விட்டுத் தாங்கள் மிகவும் திருப்தி அடைந்ததாகக் கூறினார்கள். எங்களுடன் சம்பந்தம் வைத்துக்கொள்ள தங்கள் விருப்பத்தைத் தெரிவித்தனர். தங்கள் பெண்ணின் ஜாதகத்தைத் தபால் மூலம் அனுப்புவதாகவும், நாங்கள் சம்மதம் தெரிவித்தால் திருமணத்திற்

கான நிச்சய ஏற்பாடுகளைச் செய்யலாம் என்றும் தெரிவித்தனர். இதையறிந்த எங்கள் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. குருநாதர் எங்களுக்குக் காட்டிய கருணைக்கு நாங்கள் நன்றி தெரிவித்தோம்.

ஜாதகத்தைச் சரிபார்த்த திரு. சர்மா அவர்கள், "திருமண ஏற்பாடுகளைச் செய்யலாம்" என்று கூறினார். திருமணத்திற்கான பேச்சு வார்த்தைகள் நடைபெற்ற இத்தருணத்திலே சில குழப்பங்கள் ஏற்பட்டு இத்திருமணம் நின்றுவிடும் என்ற நிலை ஏற்பட்டது. ஆனால், திரு. சர்மா அவர்கள் குருநாதரின் வாக்குப்படி இந்த வரன் தான் நடக்கும் என்று கூறினார். அன்று இரவே பெண்வீட்டவர்கள் எங்களைத் தொலைபேசியில் தொடர்பு கொண்டனர். பிரச்சினைகள் சுலபமாகத் தீர்க்கப்பட்டுத் திருமணம் நிச்சயிக்கப்பட்டது. குருநாதரின் அருளால் என் மகனின் திருமணம் இனிதே நடந்தேறியது!

## ஆபத்து விலகியது

திரு. முத்துவீறு தன் வாழ்வில் நடந்த மற்றும் ஒரு மறக்க முடியாத நிகழ்ச்சியைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அவருடைய வார்த்தையிலேயே கூறவேண்டுமென்றால் "நான் எனது காரை சுமார் நாற்பது கி.மீ. வேகத்தில் செலுத்திக் கொண்டிருக்கும்போது திடீரென்று ப்ரேக் பிடிக்கமுடியாமல் தடுமாறினேன். நான் காரை நிறுத்தமுடியாமல் கஷ்டப்பட்டபொழுது, ஜாக்கிரதையாக என்னைச் செலுத்த வைத்து, மைலாப்பூரில் இருக்கும் என் வீட்டின் அருகிலேயே வண்டி நின்றுபோனது விந்தையிலும் விந்தையான நிகழ்ச்சியாகும். அப்படி நடந்திராவிட்டால் என் கதி என்ன? என்று யோசித்துப் பார்த்தேன். நினைக்கக்கூட அச்சமாக இருக்கிறது, அதேபோல் நான் கடற்கரைச் சாலையில் காரில் சென்று கொண்டிருக்கும் பொழுது அதிவேகமாக வந்த மோட்டார் சைக்கிளிடம் இருந்து மயிரிழையில் என்னைக் குருநாதர் காப்பாற்றினார். அவர் இன்றி இதை யார் செய்து இருக்க முடியும்? எல்லாச் சமயங்களிலும், எனக்கு உறுதுணையாக இருந்து என்னை ஸ்வாமிகள் நடத்திச்செல்வது எனக்கு "உள்ளங்கை நெல்லிக்கனிபோல்" தெளிவாகத் தெரிகிறது. அதை உணரவும் முடிகிறது" என்று கூறினார். விதியையும் மாற்றும் சர்வ வல்லமை படைத்தவர் நம் மகான்.

## நோயிலிருந்து காப்பாற்றியது

திரு. இராகவன் என்பவர் சென்னையில் இருக்கும் தொலைபேசி அலுவலகத்தில் பணிபுரிந்து தற்போது ஓய்வு பெற்றுள்ளார். இவர்

மனித நேயம் உடையவர். மனிதகுல நலனுக்காக இறுதிச் சடங்குகளை நடத்துவதற்காகக் குரோம்பேட்டையில் ஒரு கட்டிடம் கட்டி ஏற்பாடு செய்துள்ளார். 1990 ஆம் ஆண்டு ஐம்பது வயது நிறைந்த திரு. இராகவன் திடீரென்று நோய்வாய்ப்பட்டார். முதுகெலும்பைச் சார்ந்த பகுதியில் அவருக்கு ஏதோ சிக்கல் ஏற்பட்டது. அதனால் அவருக்கு நிற்கவோ, உட்காரவோ முடியவில்லை. இந்த வலியை மருத்துவர்களால் குணப்படுத்த முடியவில்லை. அறுவைச் சிகிச்சையின் மூலம் தான் குணப்படுத்த முடியும் என்று கூறி விட்டார்கள். திரு. இலட்சுமிகாந்தன், திரு. இராகவனின் ஜாதகத்தைத் துல்லியமாக ஆராய்வதற்கு திரு. சர்மாவிடம் எடுத்துச் சென்றார். அவர் ஆலோசனைப்படி அதன்படியே அக்டோபர் மாதம் 1993-இல் கணபதி ஹோமமும், சனீஸ்வரப்ரீதியும் பூஜைக்குப் பிறகு மறுபடியும் மருத்துவரின் ஆலோசனை கேட்கப்பட்டது. முதலில் வந்த மருத்துவர் அறுவை சிகிச்சைக்கு அவசியமில்லை என்றார். மற்ற மருத்துவர்களும் அதை உறுதிப்படுத்தினர். திரு. இராகவன் இப்பொழுது எவ்விதச் சிரமமுமின்றி அவருடைய வேலைகளைச் செய்துகொள்கிறார். அவர் இப்பொழுது வாகனத்தைக்கூட ஓட்டுகிறார். ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் ஆபத்துக்கால உதவிக்காக அவர் ஸ்வாமிகளிடம் ஆயுள் வரைக்கும் கடமைப் பட்டவராக நினைக்கிறார். ஸத்குருவிடம் முழுச் சரணாகதி அடைந்த எந்தப் பக்தரையும் அவர் கைவிட்டதில்லை. பக்தர்களைத் தடுத்தாட் கொண்டு அவர்களுடைய குறைகளை உடனடியாகத் தீர்த்து வைப்பார்.

## சிக்கல் தீர்ந்தது

அண்ணாநகரில் வசிக்கும் திரு. நாராயணன் தன் வாழ்க்கையில் இருக்கும் சிக்கல்களுக்காக திரு. சர்மாவை அணுகினார். அங்கு ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளைப்பற்றிக் கேள்விப்பட்டு முழுமையான நம்பிக்கையுடன் அவரைப் பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார். சிக்கல் தீருவதற்கான வழிமுறைகள் அவருக்குச் சொல்லப்பட்டன. அவரும் அதைப் பின்தொடர்ந்தார். அவருடைய அலுவலகத்தில் அவருடைய மேலதிகாரியின் தொல்லை தாங்க முடியாமல் வேலையை இராஜினாமா செய்து கட்டாய ஓய்வு பெற்றுக்கொள்ளலாம் என்றுகூட எண்ணினார். ஸத்குருவை வழிபடத் தொடங்கியபின் அவருடைய வாழ்க்கையில் இருக்கும் சிக்கல்கள் குறைந்தன. தானே வேலையில் இருந்து கட்டாய ஓய்வு பெறும் எண்ணமும் போனது. அவருக்குக் கிடைக்காது என்று நினைத்த

உதவிகள் எல்லாம் அவருக்கு எதிர்பாராமல் கிடைத்தன. அதனால் அவர் மிகவும் மகிழ்ச்சியுடன் இருந்தார். அவருடைய பெண் திருமணத்தின் போது நேர்ந்த பணக்கஷ்டம் ஸத்குருவின் கருணையினால் விலகித் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. ஸத்குருவின் பாதார விந்தங்களில் முழு சரணாகதி செய்ததால்தான் சிக்கல் விலகி வழி பிறந்தது. நம் ஸத்குருவிடம் சரணாகதி அடைந்தால் சிக்கல்கள் நீங்கும், வழி பிறக்கும்.

## பார்வை கிடைத்தது

திரு. வெங்கட்ராமன் பாம்பேயில் முலுந்த் (Muland) என்னும் இடத்தில் வசிக்கிறார். 1992 ஆம் ஆண்டு திரு. சர்மாவை பம்பாயில் சந்தித்தார். பம்பாயில் அவருடைய இரண்டாவது மகனுக்குக் கண்களில் கோளாறு ஏற்பட்டுப் பார்வையே போய்விடும்படியாக இருந்தது. அவர் அப்பொழுதுதான் வெளிநாட்டிலிருந்து திரும்பி இருந்தார். அமெரிக்காவில் உள்ள மருத்துவர்களிடம் காண்பித்ததில் அவருக்குக் குணமாவது கடினம் என்று கூறிவிட்டனர். ஸத்குருவின் உத்தரவின் பேரில் ஹோமம் ஒன்று நடந்தது. அதற்குப்பிறகு சென்னையிலேயே மருத்துவமனையில் அறுவைசிகிச்சை நடந்து குறைபாடுகள் எல்லாம் நீங்கப்பெற்றன. மகானின் பரிபூர்ண ஆசியால் திரும்பப் பார்வை கிடைத்தது. அக்குடும்பத்தினருக்கு மிகுந்த மன நிறைவைக் கொடுத்தது. அவர்கள் யாவரும் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் கடமைப் பட்டவர்களாக இருக்கின்றனர்.

## வழி காட்டினார் மகான்

திரு. G. அருணாசலம் என்பவர் கோயம்புத்தூரில் வசிக்கிறார். ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் தான் கஷ்டப்படும் நேரத்தில் எவ்வாறு தன் உதவிக்கு வந்தார் என்பதை அவர் தெளிவாகக் கூறினார். தற்செயலாக ஒருநாள் அவருடைய மகன் விளையாடும் பொழுது புதிதாகக் கட்டப்பட்ட வீட்டின் ஒரு பாகத்தை உடைத்து விட்டான். அந்த வீட்டின் சொந்தக்காரர் மிகுந்த கோபத்தை அடைந்து உடனே அவர்களை வீட்டைக் காலிசெய்யச் சொல்லிக் கட்டளை யிட்டார். எவ்வளவோ கெஞ்சியும் அவர்கள் எதற்கும் ஒத்து வரவில்லை. திரு. அருணாசலம் மிகுந்த கவலையுடன் படுத்துக் கொண்டிருக்கும் பொழுது அன்று இரவு அவருடைய தலையை யாரோ தொடுவது போன்ற உணர்வு ஏற்பட்டது. "நீ என்னுடைய பக்தன், நீ என்னிடத்தில் வருகிறாய் கவலைப்படாதே! உனக்குக்

கூடிய சீக்கிரத்தில் கிழக்குப் பார்த்த வீடு கிடைக்கும்'' என்று ஸத்குரு கூறினார். திரு. அருணாசலத்திற்குப் பெரிய மனச்சுமை குறைந்து ஆச்சரியமடைந்தார். அவர் வீடு தேடும் முயற்சியில் இறங்கினார். ஒரு வாரத்திற்குள் அவருக்கு வீடு கிடைத்தது. அவர் கதவைத் திறந்து பார்த்தவுடன் ஸத்குருவின் படம் அந்தக் காலியான வீட்டில் பெரிய அளவில் மாட்டப்பட்டு இருந்தது. அந்த வீட்டின் சொந்தக்காரர் ஸத்குருவின் தீவிரமான பக்தர் ஆவார். திரு. அருணாசலம் கூர்ந்து கவனித்துப் பார்த்ததில் அந்த வீடு கிழக்குப் பார்த்த வீடுதான் என்று புரிந்தது. தான் பிறந்த திருவண்ணாமலை ஊர் மகானான ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் தன்னை இக்கட்டான கால கட்டத்தில் காப்பாற்றியதற்காக அவரது நெஞ்சத்தின் அடித்தளத்திலிருந்து உணர்ச்சி பொங்கியது.

## வெளிநாடு சென்றது

திரு. T.R. நாகராஜன் என்பவர் கெமிக்கல் இன்ஜினியர் ஆக இருக்கிறார். அவர் 1991-ஆம் ஆண்டு கீழ்திசை நாட்டிலிருந்து தன் வீட்டிற்கு வந்தார், பலவித காரணங்களினால் அவரால் இந்தியாவிலேயே இருக்க முடியவில்லை. அதேசமயத்தில் அவரால் வெளிநாட்டிற்கும் போகமுடியவில்லை. அந்தநேரத்தில் அவர் திரு. சர்மாவை சந்தித்தார். அதிலிருந்து அவருக்கு சேஷாத்ரி ஸ்வாமிகளின் மீது முழுமையான நம்பிக்கை ஏற்பட ஆரம்பித்தது. சில மாதங்களிலேயே அவருடைய சிக்கல் எல்லாம் தீர்ந்து மலேசியாவில் நல்ல வேலை கிடைத்தது. அவர் எல்லையற்ற மகிழ்ச்சியையும், மன நிம்மதியையும் அடைந்தார். இன்று அவர் சேஷாத்ரி ஸ்வாமிகளின் தீவிர பக்தர் ஆகிவிட்டார். அந்தக் கருணாமூர்த்தி அவர் கஷ்டப்படும் நேரத்தில் அவருக்கு வழிகாட்டி யாக இருந்து நடத்திச் சென்றார். முழுமையான, உண்மையான பக்தியுடன் ஸத்குருவைப் பிரார்த்தனை செய்த பல பக்தர்களுக்கு அவர் தங்களுடன் இருப்பதைப் பல வழிகளில் உணர்த்துவார். இது பக்தர்கள் அனுபவபூர்வமாக உணர்ந்த உண்மை ஆகும்.

## தரிசனம் கொடுத்தது

1991 ஆம் ஆண்டு மார்ச் பதினெட்டாம் தேதி உமாபரணி என்பவர் திரு. சர்மா அவர்களைச் சந்தித்து உபதேசம் பெற்று ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் தீவிர பக்தை ஆகிவிட்டார். ஒரு மாதம் கழித்து அவள் குடும்பத்தினருடன் திருவண்ணா மலைக்குச் சென்று வந்தாள். அவளுடைய வார்த்தையில் சொல்ல

வேண்டும் என்றால், "அந்தநாள் ஒரு பௌர்ணமி நாளாகும். நாங்கள் காலை மூன்று மணிக்குக் கிரிவலம் கிளம்பினோம். நாங்கள் நகர எல்லையைத் தாண்டியவுடன் அழகான வாசனை மிகுந்த ரோஜாவின் மணமும், ஊதுவர்த்தியின் நறுமணமும் விவரிக்க இயலாத நறுமணங்களும் வீசின. ஸத்குருவின் ஆஸ்ரமத்தின் வாசலில் நான் கற்பூரம் ஏற்றும்போது விபூதியின் வாசனை என்னைச் சூழ்ந்து கொண்டது. மிகுந்த ஆனந்த அதிர்ச்சியின் விளைவாக ஒரு அடி கூட என்னால் போக முடியவில்லை. திருவண்ணாமலையில் இருந்து திரும்பியவுடன் ஒருநாள் இரவுப் பிரார்த்தனை நேரத்தில் அதே நறுமணமான விபூதியின் வாசனையை நானும் என் கணவரும் உணர்ந்தோம். அந்நாளிலிருந்து ஆழ்நிலைத் தியானத்தில் ஈடுபட்டேன். இரண்டு மாதம் கழித்து நான் பூஜை அறையில் சமய சார்பான நூல்களைப் படித்துக்கொண்டு இருந்தேன். என் குழந்தை என் பக்கத்தில் உறங்கிக்கொண்டு இருந்தான். திடீரென்று நான் பார்த்தபொழுது ஜன்னலிருந்து என்னை யாரோ பார்த்துக்கொண்டு இருந்தார். அவர் தோற்றத்தில் சேஷாத்ரி ஸ்வாமிகள் போல் இருந்தார். அவர் அங்கேயே நின்றுகொண்டிருந்தார். என் குருதான் அவர் என்று மனது சொன்னாலும் நான் பயத்தில் ஜன்னலை மூடிவிட்டேன். என் கணவர் வீட்டிற்கு வந்தபிறகு என் அனுபவத்தைச் சொன்னேன். ஜன்னலை மூடியதற்காக என்னைத் திட்டிவிட்டு அதை உடனே திறந்து வைத்தார். அரைமணிநேரம் கழித்துத் தூங்கிக் கொண்டு இருந்த என் குழந்தை, திடீரென்று எழுந்து உட்கார்ந்து, பார் அம்மா, "சேஷாத்ரி ஸ்வாமிகள், சேஷாத்ரி ஸ்வாமிகள்!" என்று கூறினான். அந்த நிகழ்ச்சி என்னுடைய வாழ்க்கையில் மறக்க முடியாத நிகழ்ச்சியாக அமைந்து விட்டது. என்னுடைய இதயத்தையும், ஆன்மாவையும் சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு அர்ப்பணிக்க நான் தீர்மானித்தேன். உண்மையான பக்தியுடன், மகானை நினைத்தாலே போதும். நம்மைத் தடுத்தாட்கொள்ள ஓடி வருவார்.

## நோய் நீங்கியது

திரு. ராமவர்மா என்பவர் வியாபார ஆலோசகராக இருக்கிறார். அவர் திரு. சர்மாவிடம் உபதேசம் பெற்ற குருநாதரின் தீவிர பக்தர் ஆவார். 1993 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் அவருக்கு உடல் கோளாறு ஏற்பட்டது. இந்த உடல் கோளாறு ஏற்படும் என்பது குருஜி. சர்மா முன்னமே சொல்லிவிட்ட செய்தியாகும். மூத்திரப் பாதையில் வீக்கம் ஏற்பட்டுக் கோளாறு ஏற்பட்டது. அக்டோபர்

மாதம் பதினைந்தாம் தேதி 1993 ஆம் ஆண்டு அவருக்கு அவசர சிகிச்சை செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டது. நெடுநேரக் கார்பயணத்தினால் அவருக்குச் சிறுநீரகப்பாதை முழுவதுமாக அடைத்து விட்டது. உடனடியாக அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் என்று மருத்துவர்கள் கூறிவிட்டார்கள். ஆனால் ஸத்குரு விடம் இருந்து அறுவை சிகிச்சை அவசியம் இல்லை என்று உத்தரவு வந்தது. எளிய சிகிச்சையிலேயே சரியாகி விடும் என்றும் கூறினார். அந்த எளிய சிகிச்சையையும் செய்வதற்கான சரியான நேரம் காலை 7.15 மணியிலிருந்து 9 மணி வரை என்று குருஜி. சர்மா ஆலோசித்துக் கூறினார். மருத்துவர்கள் அந்தநேரம் ஏற்ற நேரம் இல்லை என்று கூறி விட்டார்கள். அடுத்த நேரம் 9 மணிக்கு மேலே முடிவாகியது. அந்தக் காலை நேரத்தில், அறுவை சிகிச்சை நடைபெறும் இடத்திலிருந்து சரியாக 7.15 மணிக்கு திரு. ராம வர்மாவை அறுவைச் சிகிச்சை நடைபெறும் அறைக்கு அழைத்து வருமாறு அவசர அழைப்பு வந்தது. ஒருவருக்கும் ஒன்றும் புரியவில்லை. ஆனாலும் நோயாளியை அவசரமாகத் தயார் செய்து அழைத்துச் சென்றனர். ஸத்குரு குறிப்பிட்ட நேரத்தில் அறுவைச் சிகிச்சை அறையில் திரு. ராம வர்மா இருந்தார். ''அவ்வளவு சீக்கிரம் நோயாளியை ஏன் அழைத்து வந்தார்கள்?'' என்று அறுவை சிகிச்சை செய்யப்போகும் மருத்துவர்களுக்கே ஒன்றுமே புரியவில்லை. திரு. ராமவர்மாவின் வார்த்தை களில் கூறவேண்டும் என்றால், ''என்னை அறுவை சிகிச்சை அறைக்கு அழைத்துச் செல்வதற்கு முன், அதற்கு முன் இருந்த வராண்டாவில் நான் தனித்து விடப் பட்டேன். நெடுநேரம் அங்கேயே இருந்தேன். சேஷாத்ரி ஸ்வாமி களின் ஸ்லோகத்தை நான் ஜபித்துக்கொண்டே இருந்தேன். அதனால் நான் தனியாக இருக்கும் உணர்வு எனக்கு ஏற்படவில்லை. ஏனென்றால், என் பக்கத்தில் ஸத்குரு இருப்பதை நான் உணர்ந்தேன். அந்த சிகிச்சை வெற்றிகரமாக நடந்தேறியது. நான் ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறும் நாளின் முன்தினம் சாயங்காலம் இரத்தப் பரிசோதனையின் முடிவில் எதிர்பாராத குழப்பம் ஏற்பட்டது. திரும்பவும் இரத்தப் பரிசோதனை செய்யவேண்டும் என்று கூறினார்கள். எனது குடும்பத்தில் மனக்குழப்பம் அடைந்த அச்சமயத்தில்தான் குருஜி. சர்மாவிடம் இருந்து பாண்டிச் சேரியில் இருந்து தொலைபேசியில் அழைப்பு வந்தது. இரத்தம் ஏற்றியதால் தற்காலிகமாகச் சிக்கல் ஏற்படும் என்றும், அதனால்

கவலைப்பட வேண்டாம் என்றும் கூறினார். எல்லாம் சரியாக இருக்கிறது என்று மருத்துவர்கள் தெளிவுபடுத்தினார்கள்''. திரு. ராமவர்மாவின் உடல்நிலை பூரண குணமாகி மருத்துவமனை யிலிருந்து வீட்டிற்கு வந்தார். அவர் பிரார்த்தித்துக் கொண்டபடி அடுத்தநாளே திருவண்ணாமலைக்குச் சென்று ஸத்குருவிற்கு அபிஷேகம் செய்தார். மனக்கிலேசமும், பயமும் நிறைந்த உள்ளத்தில் இருந்து அதைப் போக்கும் சக்தியாக மகானைத் தவிர வேறு யார் இருக்க முடியும்?

## ஸத்குருவின் ஆசி

திரு. காளிதாஸ் என்பவர் கும்பகோணத்தில் வசிக்கிறார். அவருடைய வார்த்தையில் கூறவேண்டும் என்றால் நான் 1975 இல் திருவண்ணாமலைக்குச் சென்றபோது ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் எனக்கு ஆசிகூறினார். திருக்கோவிலூரில் இருக்கும் ஸ்ரீ பாலமுருகன் ஸ்வாமிகளின் அருளால் ஸத்குரு என்னுடன் இருப்பதை நான் உணர ஆரம்பித்தேன். அதிலிருந்து என்னுடைய வாழ்க்கையின் எல்லா காலகட்டத்திலும் ஸத்குரு எனக்கு வழிகாட்டி யாக இருக்கிறார். அவருடைய துணையை எல்லா நேரத்திலும் அறிந்தேன். எல்லாப் பொருள்களிலும் ஒன்றாகக் கலந்துவிட்டார் அவர். நான் நாள்தோறும் அடைந்த அனுபவங்கள் மனிதனின் அறிவுத்திறனால் புரிந்துகொள்ள முடியாத இயல்புநிலைக்கு அப்பாற் பட்டது. அந்தத் தேவன் காட்டிய பாதையில் எனது வாழ்க்கைப் பயணம் தொடர்கிறது.

குருஜி. சர்மாவின் வாழ்க்கையில் நடந்த ஒரு நிகழ்ச்சியோடு இந்த அத்தியாயத்தை முடிக்கப் போகிறேன். 1983-ஆம் ஆண்டு குருஜி. சர்மாவிற்குத் திருமணம் நடந்தது. 1984-ஆம் ஆண்டு குருநாதரின் அருளால் புவனேஸ்வரி என்னும் பெண் குழந்தை பிறந்தது. பல வருடங்களுக்குப் பிறகு திருமதி. சர்மா மீண்டும் கர்ப்பம் தரித்தார். அந்தக் குழந்தை பிறந்தால் குருஜி. சர்மாவின் வாழ்க்கைக்கு அபாயமாகும் என்று ஸத்குரு கூறினார். அவருடைய குருவின் கட்டளைப்படி குருஜி. சர்மா கோவில்களுக்குச் சென்று ஸத்குரு செய்யச் சொன்ன பரிகாரங்களை எல்லாம் செய்தார். அவர் கோவிலுக்குச் சென்று பிரார்த்தனையை நிறைவேற்றும் தருணம் அவருடைய மனைவிக்குக் கருச்சிதைவு ஏற்பட்டது. அதனால் அவருக்கு இருந்த அபாயம் நீங்கியது.

## ஸத்குருவால் காப்பாற்றப்பட்ட குழந்தை

மற்றொரு முறை திருமதி. சர்மா கருத்தரித்தாள். குழந்தை பிறப்பதற்கு ஒரு வாரத்திற்கு முன்பு குழந்தையின் கழுத்தில் கொடி சுற்றிக்கொண்டு இருக்கிறது என்று குருநாதரிடமிருந்து ஒரு தகவல் வந்தது. சில தெய்வீகப் பரிகாரங்கள் சொல்லப்பட்டு அவை உடனடியாக நிறைவேற்றப்பட்டன. கருவைப் படம் பிடித்துப் பார்க்கும் பொழுது அத்தகைய சிக்கல் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. அறுவை சிகிச்சையின் மூலம் குழந்தையை எடுப்பதற்கான ஆயத்தங்கள் செய்யப்பட்டன. அறுவை சிகிச்சையை மேற்கொண்ட மருத்துவர் உடனடியாக அறுவை சிகிச்சை அறையில் இருந்து வெளியில் வந்து குழந்தையின் கழுத்தைச்சுற்றி ஒரு கொடி இருப்பதாக குருஜி. சர்மாவிடம் சொல்லி "உங்களுக்கு இது எப்படித் தெரியும்?" என்று கேட்டார். குழந்தையைக் கருவிலிருந்து எடுப்பதற்கு ஒரு கணம் தாமதித்து இருந்தாலும் குழந்தையை இழக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டு இருக்கும். குருநாதருடைய லீலைகள் மனித சக்திக்கு அப்பாற்பட்டவை. திருமதி. சர்மா ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். வாசுதேவன் என்னும் அக்குழந்தைக்கு இப்பொழுது 16 வயது.

"குருநாதர் ஒரு வழிகாட்டியாக இருக்கிறார் என்பதை நம்பிக்கையற்றவர்களுக்கும், சந்தேகிப்பவர்களுக்கும் எப்படி விளங்க வைப்பது?" என்று குருஜி. சர்மா அவர்கள் ஆழ்நிலைத் தியானத்தில் இருக்கும்போது குருநாதரிடம் வினவினார். "தான் செய்யும் ஒவ்வொரு செயல்களும் குருநாதரின் ஆணைப்படிதான் நடக்கின்றன என்பதை எப்படி விளக்குவது?" என்று கேட்டார். அங்கிருந்த கடிகாரத்தைப் பார்க்கச் சொன்னார் ஸத்குருநாதர். அப்பொழுது மணி ஒன்பது ஐம்பது. சிறிய முள்ளும், பெரிய முள்ளும் ஒன்றினுள் ஒன்று மறைந்து ஒரே முள்ளாகத் தோற்றமளித்தது. "கடிகார முள்ளினுள் மற்றொரு முள் மறைந்து இருப்பதுபோல் சூட்சும சக்தியாக உன்னுள் மறைந்து வழி காட்டுகிறேன்" என்பதை ஸத்குரு தெளிவுபடுத்தினார். ஆனால் இரண்டு முள் இருப்பதை யாரால் மறுக்கமுடியும்? உண்மை நிலையைத் தீர ஆராய்ந்தபிறகே அறிய முடியும். ஆரம்பகாலத்தில் உள்ள குழப்பங்கள் குருநாதரை நன்றாக உணர்ந்தபிறகு தானாகவே மறையும், தெளிவு பிறக்கும், ஆனந்தம் பொங்கும்!

அத்தியாயம்-28

# கருணை பொங்குகிறது

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் அளவுகடந்த கருணை உள்ளவர். அவர் தன்னுடைய சீடர்களின் பிரார்த்தனைக்கு ஓடோடி வந்து செய்த அற்புதங்கள் கணக்கிலடங்கா. அவை எல்லா வற்றையும் விவரித்துக்கொண்டே போகலாம். ஆனால் சுருங்கச் சொல்லி விளங்கவைக்க வேண்டும் என்பதால் ஓரிரு நிகழ்ச்சிகளை மட்டும் சுருக்கமாகக் கீழே எழுதி உள்ளேன்.

## உயிர் காத்தது

திரு. P. கணேஷ் என்பவரும் அவருடைய குடும்பத்தினரும் ஸத்குருவின் கருணையினால், பல சிக்கல்களில் சிக்கினாலும் அதிலிருந்து மீண்டு விட்டனர். திரு. கணேஷ் கிரிக்கெட் விளையாடும் பொழுது வலது காலின் முட்டியில் பந்து பட்டு விட்டது. தன் நினைவே இன்றி இருந்த அவரை வீட்டிற்குக் கொண்டு வந்து பின் மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றனர். ஒருவித முன்னேற்றமும் இல்லாமல் இருந்ததால், அவரை அனைத்து வைத்திய வசதிகளும் நிரம்பப்பெற்ற சென்னையில் உள்ள மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றனர். அங்கேயும் மருத்துவர்களால் எதனால் அப்படி இருக்கிறார் என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அந்தப் பையன் மிகவும் மோசமான நிலையில் இருக்கிறான் என்பதை மட்டும் எல்லா மருத்துவர்களும் ஒரே முகமாகக் கூறினார்கள். திரும்பவும் அவரை வேறு ஒரு மருத்துவமனைக்கு மாற்றினார்கள். இருபத்து ஐந்து நாட்கள் தன் நினைவு இன்றி அவரை உயிர்காக்கும் அறையில் வேறு ஒரு மருத்துவமனையில் மாற்றினார்கள். ஸத்குருவின் உதவி அவசியம் என்று அக்குடும்பத்தினர் மிகுந்த மனக்கிலேசத்துடன் குருஜி. சர்மாவை சந்தித்தனர். குருஜி. சர்மா அக்குடும்பத்தினருக்கு

மகானின் படத்தைக் கொடுத்து படுக்கைக்கு அருகில் வைக்கச் சொல்லி ஸ்வாமிகள் கொடுத்த விபூதியையும் கொடுத்துப் பூசச் சொன்னார். திரு. கணேஷ் பரிபூரண குணமடைவார் என்பதையும் அவரைச் சீக்கிரமே வீட்டிற்கு அழைத்துச் செல்லலாம் என்றும் கூறினார். சில பரிகாரங்களைச் செய்யச்சொல்லியும், சில பூஜைகளையும் செய்யச் சொன்னார். முழுமையான நம்பிக்கையுடன் அக்குடும்பத்தினர் எல்லாவற்றையும் செய்தனர். திரு. கணேஷ் முப்பத்தாறாவது நாள் பரிபூரண குணமடைந்து வீட்டிற்குக் கொண்டு வரப்பட்டார். அக்குடும்பத்தினர் மனநிம்மதியும் சாந்தியையும் அடைந்தனர். ''ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு நாங்கள் என்றென்றும் கடமைப்பட்டவர்கள்'' என்று அக்குடும்பத்தினர்களே கூறினார்கள். உயிர்காக்க வேண்டும் என்று மகான் திருவுளம் கொண்டால் கருணை பொங்கி, கஷ்டங்கள் தீரும். கலியுகக் கற்பக விருட்சம் நம் மகான்.

## தம்பதி இணைந்தனர்

ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பற்றியும் அவளுடைய வாழ்க்கையில் அவள் சந்தித்த பல சிக்கல்களைப் பற்றியும், ஸத்குருவின் கருணையால் எவ்வாறு நீங்கிற்று என்பது பற்றியும் தன் பெயரை வெளியிட விரும்பாத ஒரு பெண் குறிப்பிட்டுள்ளார்.

''எனக்குத் தகுந்த கணவரை என்னுடைய பெற்றோர்கள் பலகாலம் தேடினார்கள். பல வருடங்களுக்குப் பிறகு எனக்குக் கடைசியாக ஏப்ரல் மாதம் 1991-ஆம் வருடம் திருமணம் பெரிய இடத்தில் நடந்தது. முதல் மாதம் எங்கள் திருமண வாழ்க்கை சந்தோஷமாகச் சென்றது. அதற்குப்பிறகு எங்களுக்குள் நிறையக் கருத்து வேறுபாடுகள் உண்டாயின. நான் கர்ப்பமாக இருந்தேன். எனக்கு மட்டும் இது சந்தோஷம் தரும் செய்தியாக இருந்தது. ஆனால் என்னுடைய மாமனார், மாமியாருக்கு இது மகிழ்ச்சி அளிக்கவில்லை. சில நல்லவர்களின் துணையோடு குழந்தையைக் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணத்தில் நெடுந்தூரத்திலிருந்து வீட்டைவிட்டுக் கிளம்பி, என்னுடைய தாய் தந்தையர் இருப்பிடத்திற்கு வந்தேன். தவித்துக்கொண்டு இருந்த என் மனம் 'ஒரு வழிபிறக்காதா?' என்று ஏங்கியது. என்னுடைய குருவான குருஜி. சர்மாவை சந்தித்தேன். அவர் எனக்கு வழிகாட்டினார். ஒரு வருடம் நான் கட்டாய ஓய்விற்கு ஆளானேன். மருத்துவர்கள்,

'எனது கர்ப்பம் நிலைக்குமா?' என்று சந்தேகித்தனர். ஆனால் எனக்கு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் முழுமையான நம்பிக்கை இருந்தது. கடைசியாக என்னுடைய ஆசை நிறைவேறியது. எனக்கு அழகான ஒரு மகன் பிறந்தான். நான் அவர்மேல் வைத்த முழுமை யான நம்பிக்கையினால் இது நடந்தேறியது''. இந்த நிகழ்ச்சியை எழுதிக்கொடுத்த அந்தப் பெண்மணி மறுமணம் நடந்து மிகவும் சந்தோஷமாக இருக்கிறாள். எப்படிக் கோழியானது தனது குஞ்சுகளை அடைகாத்து ஆபத்திலிருந்து காப்பாற்றுகிறதோ அது போன்று மகானின் கருணை அவளைப் பேராபத்திலிருந்து காப்பாற்றி, கருவைக் காத்து, கருக்காத்த கருணை தெய்வம் நம் மகான்.

## குரு மருந்து கிடைத்தது

சித்த மருத்துவத்தில் நிபுணரான திரு. டாக்டர் S. ஜெயராமன் அவர்கள் இவ்வாறு கூறுகிறார். ''குரு தட்சிணாமூர்த்தியால் விளக்கப் பட்டுள்ள ஔஷதா, கல்பம் ஆகியவற்றில் கூறியுள்ளபடி சில இரகசியமான மருந்துகளை சித்தர்களின் அனுக்கிரஹம் இன்றித் தயாரிப்பது மிகவும் கடினம். அவை அமுதத்தைப் போன்று சிரஞ்சீவித் தன்மையோடு உடலை என்றென்றும் காப்பாற்றும் அரிய பெரிய மருந்தாகும். முப்பு என்ற மருந்து பொக்கிஷம் நிறைந்த பல மருந்துகளுக்குத் திறவுகோல் போன்றது. ஒவ்வொரு சித்த மருத்துவரும் இம்மகா மருந்தைத் தயாரிக்க பெரும் முயற்சி செய்து தோல்வியுறுவர். நானும் கடந்த ஏழு ஆண்டுகளாகப் பலவாறு முயற்சி செய்தும் ஏதாவது தடங்கல் ஏற்பட்டு முடிக்கமுடியாமல் போயிற்று. ஆனால் ஒரு அதிசயிக்கத்தக்க உண்மை என்னவென்றால் குருஜி. சர்மா அவர்கள் மூலமாக ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமி களின் அனுக்கிரகம் கிடைக்கப்பெற்று ஒரு மூல மருந்தினை வெற்றி கரமாகத் தயாரித்து முடித்தேன். இந்த மருந்தின் மூலமாகவும் வேறு சில மருந்துகளைக் கூட்டியும் சாதாரண மருந்தின் வீரியத்தைப் பல நூறுமடங்காகப் பெருகச்செய்து, தீராத நோய் பாதித்தவர்களைக் குணப்படுத்தமுடியும். மகானின் கருணையால் என்னுடைய வருவாயும் அதிகரித்து, மேலும் பல ஆராய்ச்சிகளைச் செய்யும் அளவுக்கு என் வசதிகள் பெருகி உள்ளன. இறுதியாக, ஆனால் முக்கியமாக, நான் ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். என்னுடைய மருத்துவ நிலையம் தொடர்ந்து செயல்படச் சரியான ஒரு இடம் கிடைக்காமல் ஓராண்டு காலம் தத்தளித்துக்கொண்டு இருந்தேன். நமது அறநிலைய அலுவலகத்திற்குக் கீழே ஒரு அருமையான இடம் கிடைத்து

அங்கே எனது மருத்துவப்பயணம் தொடர்கிறது. இது மகானின் கருணையினால் தான் கிடைத்ததாக நான் நம்புகிறேன். என்றென்றும் மகான் எனக்கு அருளாசி வழங்குவார் என்ற முழுநம்பிக்கை பிறந்தது. மருந்திற்கு எல்லாம் அருமருந்தாக அமிர்தமழையாகக் கருணையைப் பொழிந்து மருத்துவர்களுக்கே வழிகாட்டுகிறார் நம் மகான்.

## கார் காப்பாற்றப்பட்டது

திரு. வேதப்பிரகாஷ் கிருஷ்ணானி தன் அனுபவத்தை இவ்வாறு கூறுகிறார். ''ஒரு வியாபாரியான எனக்குத் திரு. சர்மா அவர்களுடன் நெருங்கிய தொடர்பு உண்டு. சென்ற ஆண்டுக்கு முந்தைய ஆண்டு ஸத்குருநாதரின் ஆராதனையில் முக்கியப் பங்கு பெற்று ஸத்குருநாதரின் கருணைக்குப் பாத்திரமாகும் பாக்கியம் பெற்றேன். ''டாடா சியாரா'' என்னும் புதிய காரைத் திருவண்ணாமலையில் நமது மகானின் சமாதியில் வைத்து நல்லாசிகளுடன் முதன் முதலில் ஓட்ட, உறுதி அளித்திருந்தேன். வேலைப்பளுவின் காரணமாகச் சென்னையிலேயே காரை எடுத்துக்கொண்டதால் திருவண்ணாமலைக்குச் செல்ல இயலாமல் போயிற்று. வாங்கிய முதல் மாதமே காரானது ஒரு அபாயகரமான விபத்துக்குள்ளானது. அதற்கு அடுத்த மாதமும் மேன்மேலும் சில விபத்துக்களைச் சந்திக்க நேர்ந்தது. ஒரு குறுகிய காலத்தில் மூன்று விபத்துகள் ஏற்பட்ட பொழுதுதான் திரு. சர்மா அவர்களை அணுகி இதன் காரணத்தை வினவிய போது, ''மகானிடம் வாக்குறுதி அளித்தபடி திருவண்ணாமலையில் வைத்து அந்தக் காரைப் பூஜை செய்து எடுத்துக்கொள்ள வில்லை. உடனே திருவண்ணாமலைக்குச் சென்று மகானிற்கு அபிஷேகம் செய்து பூஜித்து எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று சொன்னார். அதன் பிறகு ஓர் இரவு அவர் அதிஷ்டானத்திலே தங்கி குருநாதருக்கு அபிஷேகமும், விசேஷ பூஜையும் செய்து சென்னை திரும்பினோம். பின்பு வண்டியில் ஒரு சிறு கீறல்கூட விழவில்லை! ஸத்குருநாதர் நம்முடன் இருந்து கருணை பொழிகிறார். அவர் நினைவு என் மனதிலே ஒவ்வொரு வினாடியும் இருக்க வேண்டும் என்று உணர வைத்தார். இவர்தான் நமது அறநிலையத்தின் சார்பில் தயாரித்த ''ஒரு ஆத்மாவின் தாகம்'' என்ற கேசட்டைத் தயாரிக்கப் பேருதவி புரிந்தார். தற்சமயம் அறநிலையத்தின் தர்மகர்த்தாவாக மகானால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். அன்னதானத்தில் இவருக்கு பெரும் ஈடுபாடு உண்டு. திரு. வேதப்பிரகாஷ் கிருஷ்ணானியின் ஆத்மாவின் தாகத்தைத் தணித்து ஆத்மாவோடு ஆத்மாவாக மகான் இணைத்துக் கொண்டு உள்ளார்.

## மரணத்தை வென்றவர்

திரு. இலட்சுமிகாந்தன் (லேட்) இவ்வாறு விளக்குகிறார். "ஸத்குரு நாதர் எனக்குத் தெய்வீக அருள் பாலித்ததை வார்த்தை களால் வர்ணிக்க இயலாது. ஒவ்வொருவரும் தங்களுக்குக் கிடைத்த அனுபவங்களிலிருந்துதான் இதை உணர முடியும். அவருடைய அனுக்கிரஹத்தால் அவர் காட்டிய பாதையில் அவர் கருணையினால் எனக்கு ஏற்பட்ட அனுபவத்தை விவரிக்க முயற்சிக்கிறேன்.

1959-60ஆம் ஆண்டு என் நண்பர்கள் சிலருடன் திருவண்ணா மலையில் உள்ள அவருடைய அதிஷ்டானத்திற்குச் சென்று வழிபட்ட போது மகானுடன் ஒரு தொடர்பு ஏற்பட்டதை உணர்ந்தேன். அதன் பிறகு எப்பொழுது திருவண்ணாமலை சென்றாலும் அதிஷ்டானத் திற்குச் சென்று வழிபட்டு வருவது எனது வழக்கம். நான் முதன் முறை சென்றபோதிருந்தே குருநாதர் என்னைத் தன்னிடத்தே ஆட் கொண்டார் என்பதை உணர்ந்தேன். எனக்கு ஒரு நல்ல வழியை காட்டக் கூடியவர் அவர்தான் என்ற எண்ணம் ஏற்பட்டது. ஆனால் 1989 ஆம் ஆண்டுதான் அவர் கருணைக்குப் பாத்திரமானேன். என்னுடைய நண்பர் ஒருவர் மூலமாக ஸத்குருநாதரின் ஆராதனையில் கலந்து கொண்டு குருஜி. சர்மா அவர்களைச் சந்திக்கும் வாய்ப்பைப் பெற்றேன். அதன் பிறகு அவருடன் நெருங்கிப் பழகும் பாக்கியம் அடைந்தேன். ஒவ்வொரு ஆண்டும் குருஜி. சர்மா அவர்களுடன் மகானின் ஆராதனை வைபவத்தை நடத்துவதில் பெரும் பங்கு பெற்றேன். குருநாதரின் அருகில் சென்று வழிபட வழிபட, நான் சில சோதனைகளுக்கு உள்ளானேன். நல்ல திடகாத்திரத்துடன் இருந்த என் தந்தையார் திடீரென்று மஞ்சள் காமாலையில் படுத்த படுக்கையானார். எனது சகோதரியின் பெண்ணின் திருமண வைபத்தில் கலந்துகொள்ள இயலாமையினால் வருத்தம் அடைந்த என் தந்தை மீண்டும் நோய்வாய்ப்பட்டார். திருமணத் திற்கு முதல்நாள் அன்று என் தந்தையை ஆஸ்பத்திரியில் உயிர் காக்கும் அறையில் வைக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆனால், அடுத்தநாள் திருமணம் நன்றாக நடந்தேறியது. மணப் பெண்ணை அவள் கணவர் வீட்டிற்கு அனுப்பிவைத்த நாளன்று என் தந்தை ஆபத்தான நிலையில் சுயநினைவின்றி இருந்தார். எவ்விதச் சிகிச்சையும் பலனற்றுப் போகவே, மருத்துவர்கள் நம்பிக்கை இழந்து, அவரை வீட்டிற்கு அழைத்துச் செல்லுவதே உத்தமம் என்று கூறினார்கள். ஒரு சில மணி நேரங்களே அவர் இவ்வுலகில்

இருப்பார் என்பதை அறிந்து நான் அவரை சுமார் மதியம் மூன்று மணி அளவிலே வீட்டிற்கு அழைத்து வந்தேன். எவ்வித அசைவும் இன்றி இருந்த அவருடைய உடல் இறுதி மூச்சுக்காற்றை மட்டும் சுவாசித்துக் கொண்டு இருந்தது. இத்தகைய இக்கட்டான தருணத்திலே குருநாதர் எனக்கு மன வலிமையும், மன உறுதியும் அளித்தார். இந்தச் சூழ்நிலையிலிருந்து எப்படி விடுபடுவது? என்பதை வழி காட்டும்படி குருஜி. சர்மா அவர்களை நான் கேட்டேன். குருநாதர் ஆக்ஞைப்படி என்னை அமைதியாக இருக்கும்படி கூறினார். அது மட்டுமின்றி ஸத்குரு நாதரின் திருவடித் தாமரைகளைச் சிக்கெனப் பிடித்து அமைதியாகப் பிரார்த்தனை செய்யுமாறு கூறினார். அப்பொழுது இருக்கும் சூழ்நிலையை மறந்து அவர்களிடம் பிரார்த்தனை செய்தால் நான் படும் வேதனைக்கு வழி பிறக்கும் என்று கூறிய அவர் ஸத்குரு நாதரிடம் தீவிரமாகப் பிரார்த்தனை செய்யும் படி கூறி விபூதி கொடுத்துச் சென்றார். மாலை நான்கு மணிக்குக் கைகால்களை அலம்பிக்கொண்டு பூஜையறையில் அமர்ந்த நான் மறுநாட்காலை ஆறுமணிக்கு வெளியே வந்தேன். சலனமற்றுக் கிடந்த என் தந்தையின் உடல் மெதுவாக அசைந்தது. கண்ணைத் திறந்து மெதுவாக என்னைப் பார்த்த அவர் தன் கைகால்களை அசைத்தார். மரணத்தின் விளிம்பில் சென்ற அவரை மீட்டு வந்த குருநாதருக்கு என் தந்தை நன்றி தெரிவிப்பதாக அமைந்திருந்தது அச்செயல். இதைவிட அதிசயத்தக்க நிகழ்ச்சி வேறு என்ன இருக்க முடியும்? இதைக்கண்ட என் உறவினர்கள் மிக்க மகிழ்ச்சி அடைந்தார்கள். மருத்துவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். குருநாதரின் கருணை மருத்துவ விஞ்ஞானிகளை அதிசயத்தில் ஆழ்த்தியது; விதி மாற்றப்பட்டது. குருஜி. சர்மா அவர்கள் குருநாதரை வணங்கு வதற்கு எனக்கு மனஉறுதியை அளித்தது மட்டுமின்றி, அவருடைய அருளைப் பெறும் வழியையும் காட்டினார். நமக்கு அருள்காட்டும் வழியைக் காண்பிப்பதற்காகவே குருஜி. சர்மா அவர்களைக் குருநாதர் நமக்குக் கொடுத்து உள்ளார்.

என் பெற்றோர்களுக்குச் சதாபிஷேகத்தை நடத்த விழைந்தேன். என் தந்தையும் இதற்கு விருப்பம் தெரிவித்தார். ஏனென்றால் எங்கள் குடும்பத்தில் எண்பது வயது வரை எவரும் உயிர் வாழ்ந்ததில்லை! என் தந்தையின் ஆசையைக் குருநாதரின் கருணை யினால் நிறைவேற்ற முடிந்தது. என் தந்தையின் எண்பதாவது பிறந்தநாளை மிக விமரிசையாக நடத்தி முடித்தோம். பின்பு ஏழு

மாதங்களுக்குப் பிறகு அவர் ஸத்குருவின் திருவடிகளை அடைந்தார். என் வாழ்வில் எல்லாமே ஸத்குருநாதர்தான். திரு. இலட்சுமிகாந்தன் போன்ற உண்மையான தீவிர பக்தி உள்ள சீடனுக்காகக் குருநாதர் விதியையே மாற்றினார். ஸத்குருநாதரே கதியென்று இருந்தால் விதியே மாறும், விளக்கம் கிடைக்கும்.

## தடுத்தாட்கொள்ளுதல்

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் தடுத்தாட்கொண்டு திருமதி. வசந்தாசேஷாத்ரி என்ற அம்மையாருக்கு அருள் புரிந்தார். திருமதி. வசந்தா சேஷாத்ரியின் தாத்தா குருநாதரின் தீவிர பக்தர் ஆவார். "அது 1974-ஆம் ஆண்டு எனக்குத் திருமணம் ஆகி இருக்கவில்லை. ஒரு வெள்ளிக்கிழமை அதிகாலை ஸத்குருநாதர் எனக்குக் காட்சி கொடுத்தார். இராமகிருஷ்ண பரமஹம்சரிடமும், இரமண மகரிஷியிடமும் நான் மிகுந்த ஈடுபாடுகொண்டிருந்தேன். குருநாதரிடம் எனக்குச் சிறிது அச்சம் உண்டு. இருப்பினும் என்னுடைய கனவில் தோன்றிய அவர் என்னைக் காப்பாற்றுவதாகக் கூறி ஒரு மந்திரத்தையும் கூறினார். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ஸத்குருநாதரின் பேரை உடைய ஒருவரைக் கணவராக அடைந்தேன். அதன் பிறகு பல சிக்கலான நேரங்களில் இருந்து சேஷாத்ரி ஸ்வாமிகள் என்னைக் காப்பாற்றி உள்ளார். தாத்தா செய்த புண்ணியம், பேத்திக்கு மகானின் கருணை கிடைத்தது!

## இசையில் மகான்

"ஒரு ஆத்மாவின் தாகம்" என்னும் கேசட்டிற்கு இசையமைக்க திரு. கிருஷ்ணதேஜா, திரு. மருதபரணியோடு, குருஜி. சர்மாவைச் சந்திப்பதாக வாக்களித்திருந்தார், எனினும் மூன்று முறை தடங்கல் ஏற்பட்டும், இதை நிறைவேற்ற முடியாமல் இருந்தது. நான்காவது முறை இசை பதிவு செய்யும் நிகழ்ச்சிக்கு அவர் கிளம்பிக்கொண்டு இருக்கும்போது குருஜி. சர்மா அவர்களைச் சந்திக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அந்த இசைப்பதிவில் சில புகழ்பெற்ற கலைஞர்கள் பாடுவதாக இருந்தும் அதைபற்றிச் சிறிதும் கவலைப் படாமல் திரு. சர்மா அவர்களைச் சந்தித்து அந்த நிகழ்ச்சிக்கு உடனே திரும்பிவிடலாம் என்று திரு. தேஜா எண்ணினார். ஆனால் எதிர்பாராதவிதமாகவே சில தடங்கல்கள் ஏற்பட்டன. முதலில் மழை பெய்தது, பின்பு வேறு ஒரு இடத்தில் பேச்சுவார்த்தை நடத்து

வதற்காகச் சென்றபொழுது காலதாமதம் ஏற்பட்டது. இந்நிகழ்ச்சிகள் திரு. தேஜாவை வருத்தத்தில் ஆழ்த்தின. பாடல் பதிவு செய்யும் இடத்தில் தான் இல்லாமல் இருந்ததை இயக்குநர்களுக்கும், கலைஞர் களுக்கும் என்ன சொல்லிச் சமாதானம் செய்வது? என்று மனம் கலங்கினார். அவர்களைத் தொடர்பு செய்த முயற்சிகள் எல்லாம் பயனற்றுப் போயின. அவர் மிகுந்த வேதனைக்கு உள்ளானார். அவரைக் கவலைப்படவேண்டாம் என்றுகூறிய குருஜி. சர்மா, திரு. தேஜாவின் பணியை வேறு ஒருவர் சென்று முடிப்பார் என்று சமாதானம் கூறினார். இதைக்கேட்டும் திரு. தேஜாவின் மனம் சமாதானமடையவில்லை. இறுதியாக பாடல் பதிவுசெய்ய வேண்டிய இடத்திற்குச் சென்றடைந்தார். அவ்விடத்திலே தயாரிப்பாளர்களும் மற்றவர்களும் வெளியில் நின்றுகொண்டிருந்தனர். திரு. கிருஷ்ண தேஜா அவர்கள் தன் நிலையை எடுத்துரைக்க விழைந்தார். ஆனால், தயாரிப்பாளர் தேஜா, அவர்கள் செய்துமுடித்த அருமையான வேலைக்குப் பாராட்டுத் தெரிவித்தார். அவர் சொல்வதைத் தேஜாவால் நம்பமுடியவில்லை. ஆனால் தயாரிப்பாளர் சொன்னதை மீண்டும் கூறியபொழுது அங்குக் குழுமியிருந்த மற்றவர்களும் தேஜாவைப் பாராட்டினார்கள். என்ன நடந்திருக்க முடியும்? தேஜாவுடன் பணியாற்றிய சக ஊழியர் ஒருவர், திடீரென்று எதிர்பாராமல் அங்கு வந்து திரு. தேஜா அவர்களின் பணியை மிக நேர்த்தியாகச் செய்து முடித்திருந்தார். இதை அறிந்த தேஜா மிகவும் ஆச்சரியப்பட்டார். ஸத்குருநாதர் உண்மையிலேயே தேஜா அவர்களைத் தர்மசங்கடத்தி லிருந்து காப்பாற்றினார். குருஜி. சர்மா அவர்களாலும், திரு. மருதபரணி அவர்களாலும் இயற்றப்பட்ட குருநாதரின் பிருந்தா வனத்தின் மகிமை நிறைந்த பாடல்களுக்கு இசை அமைக்கும் பணியிலே தன் முழு முயற்சியையும் சிரத்தையாக ஈடுபடுத்தி மிக நேர்த்தியாக இசை அமைத்துக் கொடுத்து உள்ளார். அது "ஒரு ஆத்மாவின் தாகம்" என்ற பெயரில் அருமையான கேசட்டாக வெளிவந்துள்ளது. "சேஷார்ப்பணம்" என்றுவிட்டார் தேஜா. கடைக்கண் பார்வை கிடைத்தது. கருணை பொங்கியது!

இந்தப் புத்தகத்தை எழுத ஆரம்பிப்பதற்குமுன் குருஜி. சர்மா அவர்கள் திரு. வேது பிரகாஷ் கிருஷ்ணானி அவர்களுடன் காஞ்சிபுரத்திற்குச் சென்றிருந்தபொழுது மகான் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் அவதாரம் செய்த வீட்டைத் தரிசிக்கச் சென்றார். அப்பொழுது இந்த வீட்டில்தான் மகான் அவதாரம் செய்து இருப்பாரா? என்ற சந்தேகம் அவருக்கு எழுந்தது. காஞ்சிபுரத்தி

லிருந்து சென்னைக்குத் திரும்பியவுடன் டில்லியில் இருந்து வந்த அன்பர் திரு. சுந்தரேசர், தொண்ணூற்று மூன்று வயதான மண்டகுளத்தூர் வாதூல திரு. கிருஷ்ணசாமி வீரராகவன் அவர்கள் ''அடியேன் கண்ட சேஷாத்ரி'' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையைக் கொடுத்தார். அக்கட்டுரை அடங்கிய புத்தகத்தைப் புரட்டியபொழுது முதலில் கண்ணுக்குத் தென்பட்டது ''காஞ்சியில் ஸ்ரீ காமகோடி சேஷாத்ரி நிவாசம்'' என்ற தலைப்பு. மகான் ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகள் இளம்வயதில் சின்னக் காஞ்சிபுரம் வரதராஜர் கோயில் தென்மாடவீதியில் ஒரு வீட்டில் வசித்ததாகவும், அந்த வீட்டில் அவர் ஒரு அறையில் அடைக்கப்பட்டிருக்கும் பொழுதுதான் ஞானோதயம் பெற்று, திரு. காமாட்சியின் அருளால் அந்த அறையிலிருந்து மறைந்தார் என்ற வாசகம் அதில் இருந்தது. மகான் சேஷாத்ரி ஸ்வாமிகள் ஞானோதயம் பெற்ற வீடு அதுதான் என்று தஸ்தாவேஜுகள் மூலமாகவும் நிருபிக்கப்பட்டன. மேலும் இது உண்மை என்று கூறுவதற்கு இன்னொரு சான்றும் இருக்கிறது. காஞ்சிபீடாதிபதி பரமாச்சார்யாள் அவர்கள் சுமார் இருபது வருடங்களுக்குமுன் சின்னக் காஞ்சிபுரத்திற்கு வந்து தங்கி இருந்தார்கள். ஸ்ரீ வரதராஜர் கோயிலுக்குத் தரிசனத்திற்காகப் பரமாச்சார்யாள் தன் சீடர்களுடன் சென்றார். தெற்குமாட வீதியை அவர்கள் கடக்கும் பொழுது தன்னை ஒரு ஆன்மீக சக்தி இழுப்பதை உணர்ந்தார். அங்கு ஒரு மகான் வாழ்ந்திருக்க வேண்டும் என்று நினைத்து ஆராய்ந்து பார்த்ததில் அது ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் வாழ்ந்த இடம் என்று ஊர்ஜிதமாகியது.

இப்பொழுது ''ஸ்ரீ காமகோடி மஹான் சேஷாத்ரி நிவாசம்'' என்ற பெயருடன், மஹான் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமியின் திருவுருவப் படம் ஒன்றை ஸ்தாபித்து பூஜைகள் நடைபெற்று வருகின்றன. திரு. சர்மாவின் சந்தேகத்திற்கு இப்பொழுது பதில் கிடைத்தது. தன் சந்தேகத்திற்கு விளக்கம் கொடுப்பதுபோல், மண்டகுளத்தூர் திரு. கிருஷ்ணசாமி வீரராகவன் அவர்கள் எழுதிய அந்தக் கட்டுரையை, மகானே ஒரு அன்பர் மூலம் அனுப்பினாரோ என்று எண்ணினார் சர்மா!

## ஸத்குருவும், ஸ்ரீ ரமணரும்

டில்லியில் வசிக்கும் திரு. சுந்தரேசன் என்பவர் ஆனைக் குப்பம் சாமா என்பவரைப் பற்றியும், அவருக்கு ஸ்வாமிகளிடம் உள்ள பக்தியைப் பற்றியும் கூறுகிறார். சாமா என்பவர் காவல்

நிலையத்தில் இன்ஸ்பெக்டராகப் பணிபுரிந்தவர். அவர் நல்லவர், தயாளகுணம் படைத்தவர். அவருக்கு இரமண மகரிஷியிடமும், சேஷாத்ரி ஸ்வாமிகளிடமும் மிகுந்த பக்தி உண்டு. ஒருநாள் திரு. சாமா அய்யர் இரமண மகரிஷியைத் தரிசிப்பதற்காகச் சென்றார். அந்த மகானிடம் திரு. சாமா அய்யர். "நான் சந்நியாசி ஆவதற்கு அருள்புரியுங்கள்" என்று கேட்டார். அதற்கு இரமண மகரிஷி உரக்கச் சிரித்துவிட்டு, பக்கத்தில் இருந்தவர்களைப் பார்த்து, "பெரிய சம்சாரியாகிறவருக்குச் சந்நியாசமாம்!" என்று கூறிவிட்டு மௌன மானார். அவர் மிகவும் ஆச்சரியம் அடைந்து மகானை நமஸ்கரித்து விட்டுச் சென்றார். அவர் ஆச்சரியம் அடைந்ததற்கு ஒரு காரணம் இருக்கிறது. ஐம்பது வயதாகியும் அவருக்குக் குழந்தை பிறக்க வில்லை. அவர் பெற்றோர்களுக்கு அவர் ஒரே குழந்தை ஆவார். ஆகையால் அவருடைய பெற்றோர்கள் வம்சவிருத்திக்காக மறுமணம் புரிந்து கொள்ளுமாறு வேண்டினர். அவர்களுடைய ஆசையைப் பூர்த்தி செய்வதற்காக ஆறு பெண்களை உடைய ஏழைக்குடும்பத்தின் கடைசிப் பெண்ணை மணமுடிக்க எண்ணினார். அப்பெண் அவரைத் திருமணம் செய்வதற்கு முதலில் மறுத்து, பிறகு மகானின் அருளால் சம்மதித்தாள். அத்தம்பதியினர் இரமண மகரிஷியிடம் ஆசி பெறுவதற்காக அவரிடம் சென்றனர். அந்த மகான் அவர்களைப் பார்த்து, "சாமா, அதோ புதிதாக ஊற்று எடுக்கிறார்கள். ஒரு டம்ளர் தண்ணீர் கொண்டு வா," என்று கூறினார். அதைச் சிறிது அருந்தி விட்டு, அவர்களை அருந்துமாறு கூறினார்.

அடுத்த இரண்டு வருடங்களில் அவர்களுக்கு ஒரு மகன் பிறந்தான். அவனுக்கு ஒரு வயதாகும்போது, இரமண மகரிஷியைத் தரிசிக்கச் சென்றனர். அவர் அக்குழந்தையைத் தன் தொடையின் மேல் வைத்து, உச்சி முகர்ந்து, கொடுத்தார். அவர்கள் இரமணமகரிஷி யிடம் விடைபெற்று மலையடிவாரத்திற்கு வந்தபொழுது, அங்கே மகான் சேஷாத்ரி ஸ்வாமிகளின் வருகைக்காகப் பக்தர்கள் காத்துக் கொண்டு இருந்தனர். அங்கு சாமா அய்யரும், வெள்ளித் தொன்னையில் மகானிற்கு மிகவும் பிடித்தமான தயிர்சாதத்துடன், குடும்பத்தினருடன் காத்துக்கொண்டு இருந்தார். அங்கு வந்த ஸ்வாமிகள், சாமா அய்யரின் கையில் இருந்த தொன்னையிலிருந்து தயிர்சாதத்தை வாயில்போட்டு அத்தொன்னையிலேயே உமிழ்ந்தார் அவர் காதில் "ராம, ராம" என்று கூறிவிட்டு, அவர் மனைவியின் கையில் இருந்த அந்த ஒரு வயதுக்குழந்தையைத் தூக்கி வீசி எறிந்தார். அங்குக்

குழுமியிருந்த பக்தர்கள் எல்லோரும் அக்குழந்தை விழுந்த இடத்தைச் சென்று பார்த்தனர். அது மலர்ப் படுக்கையில் விழுந்தது போல் சிரித்தது. கரடுமுரடான பாதையைக்கூட மலர்ப்பாதையாக மாற்ற மகானைத் தவிர வேறு யாரால் முடியும்?

## திருமணம் செய்துகொள்

Dr. E.K. ஆதிசேஷன் இவ்வாறு கூறியுள்ளார். "என் தந்தை மறைந்த E.S. கிருஷ்ணய்யர், 1920 முதல் 1927 வரை ஸ்வாமி இரமண மகிரிஷியிடம் சீடராக இருந்தார். அவர் இரமணாஸ்ரமத்தில் தங்கியிருந்த ஏழு ஆண்டுகளில் சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் மிகுந்த நெருக்கம் ஏற்பட்டது. வெகு சீக்கிரத்திலேயே என் தந்தை ஸ்வாமிகளின் பிரதான சீடரானார். கடவுள் சித்தாந்தம், சமயம், தெய்வீகம், தர்மம், பக்தி, நம்பிக்கை, வழிபாடு மந்திரங்களைக் கூறுவதால் ஏற்படும் நற்பலன்கள் ஆகியவற்றைச் சேஷாத்ரி ஸ்வாமிகள் என் தந்தைக்கு உணர்த்தினர். அவருடன் ஏழு ஆண்டுகள் பணியாற்றிய பின்பும் சந்நியாசத்தை மேற்கொள்ள ஸ்வாமிகளிடம் இருந்து அவருக்கு அனுமதி கிடைக்கவில்லை. சந்நியாசம் பெறுவதற்காக என் தந்தை ஏழு ஆண்டுகளாக முயற்சி செய்தார். ஸ்வாமிகள் என் தந்தையை நோக்கி, "உன் தாயார் உனக்காகக் காத்துக்கொண்டு இருக்கிறாள். நீ கிரகஸ்தனாவதற்கே விதி உள்ளது. சந்நியாசம் பெறுதவற்காக அல்ல" என்று கூறினார். இறுதியாக ஆஸ்ரமத்தை விட்டுத் தன் தாயிடம் செல்லுமாறு கட்டளையிட்டார். பின்பு முதலில் பெண் ஜாதகம் யாரிடமிருந்து வருகிறதோ, அப்பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளுமாறு உத்தரவிட்டார். அதன்படியே ஆஸ்ரமத்தை விட்டு விலகி, தாய் இருக்குமிடத்தை அடைந்து குருநாதரின் விருப்பப்படியே திருமணம் செய்துகொண்டார். சூரிய பகவானிடம் மிகுந்த பக்திகொண்ட காரணத்தினால் எனக்கு ஆதிசேஷன், அதாவது சூரியபகவானின் பெயரான ஆதித்யாவையும் அவருடைய குருவின் பெயரையும் இணைத்துப் பெயரிட்டார். தன் வாழ்நாள் முழுவதும் என் தந்தை தத்துவ அறிஞராகத் திகழ்ந்தார். 1956-ஆம் வருடம் ஸத்குருவின் அருளாசியுடன் அமைதியாக இயற்கை எய்தினார்.

திரு. ஆதிசேஷனுடைய இந்தச் செய்தி முக்காலத்தையும் உணர்ந்தவர் சேஷாத்ரி ஸ்வாமிகள் என்பதை விளக்குகிறது. தன்

சீடர்களுக்கு ஒரு தலைசிறந்த வழிகாட்டியாகவும், ஆசிரியராகவும் விளங்கினார் என்பது இதனால் தெள்ளத் தெளிவாகிறது. ஒரு ஆன்மாவை குருநாதர் நெருக்கமாக வைத்துக்கொள்ள நினைத்தால் அந்த ஆன்மாவின் வாழ்க்கையில் அற்புத மாற்றங்கள் கண்டிப்பாக இருக்கும். தன்னுடைய சீடர்களின் வாழ்க்கையை ஒழுங்குபடுத்தி அளவற்ற மன அமைதியையும் ஆன்மீக அறிவுத் திறனையும் கொடுப்பார். அவர்களுடைய எண்ணங்களைத் தூய்மையாக்கி, நல்லொழுக்கங்களோடு வாழச்செய்வார். முழு மனதுடன் அமைதியாக அவரைப் பிரார்த்தனை செய்வோருக்கு அவர்களுடன் அவர் இருப்பது திண்ணம்.

---

*''மாடம்பாக்கத்திற்கு வருகை தந்து மன அமைதி பெறுங்கள், சித்தர்கள் அருளை பெறுங்கள்''*

அத்தியாயம்-29

# மும்பையில் மகானின் லீலைகள்

உலக மகா ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகள் தங்கள் வாழ்வில் காட்டிய அற்புதங்களை சில அன்பர்கள் நம்முடன் பகிர்ந்து கொள்கிறார்கள்.

மும்பாயிலிருந்து திருமதி. மது பாலசுப்ரமணியம் அவர்கள் கூறுகிறார். "மகான் என் வாழ்வில் நடத்திய மறக்க முடியாத நிகழ்ச்சியை உங்களுடன் பகிர்ந்து கொள்ள ஆசைப்படுகிறேன். இந்த நிகழ்ச்சி ஜனவரி மாதம் 2004 ஆம் வருடம் நடைபெற்றது. என்னுடைய சிநேகிதி தன்னுடைய குடும்பத்தாருடன் நாக்பூரில் வசிக்கிறாள். அவளுடைய மகள் அமெரிக்காவில் டாக்டராக பணி புரிகிறாள். அவளுக்கு திருமணம் நிச்சயிக்கப்பட்டது. அவர் தன்னுடைய மகளுக்காக என் சிநேகிதி வைரத் தோடு வாங்கு வதற்காக என் உதவியை நாடினாள். நானும் அவர்களை, நான் வாங்கும் வைர வியாபாரியிடம் அழைத்து சென்றேன். அவர்களும் 2 ஜோடி வைரத்தோடு வாங்கி, 11 மாதம் வீட்டில் வைத்து பார்த்து விட்டு, பிறகு பணம் கொடுப்பதாக கூறி சென்றனர். ஒரு மாதம் கழித்து அவர்கள் மும்பைக்கு வந்து, ஒரு ஜோடி வைரத் தோடு எடுத்துக் கொள்வதாகவும், அதற்குண்டான தொகையையும் கொண்டு வந்ததாக கூறினாள். அது மட்டுமின்றி, அவர்கள் தங்கள் வருங்கால மாப்பிள்ளைக்கு வைர மோதிரம் வாங்குவதற்கு உரிய தொகையையும் கொண்டு வந்ததாக கூறினர். 2 ஜோடி, வைரத்தோடு, 2 லட்சம் பணம் ஆகியவற்றை எடுத்து வந்து என் வீட்டிற்குள் வந்தனர். வந்த பிறகுதான் தெரிந்தது அந்த பணம், வைரதோடு வைத்த பையை டாக்ஸியில் விட்டுவிட்டு வந்தனர் என்று. எங்கள் எல்லோருக்கும் மிகவும் அதிர்ச்சியாக இருந்தது. உடனே என் கணவர் என் சிநேகிதி கணவருடன் சென்று, அந்த

டாக்ஸி டிரைவரை தேடி பார்த்து எங்கும் கிடைக்கவில்லை என்று வந்தார். எங்களுக்கு எல்லாம் என்ன செய்வது என்று தெரியவில்லை. நான் உடனே, மகானின் திருவுருவ படத்திற்கு முன் அமர்ந்து அவருடைய மூலமந்திரத்தை ஜபிக்க ஆரம்பித்தேன். மகான், நம்மை இந்த சூழ்நிலையிலிருந்து விடுவிப்பார் என்று எனக்கு மகானின் மீது அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. நாம் துக்கப்படும் பொழுது, நமக்கு உறுதுணையாக மகான் இருப்பார் என்ற நம்பிக்கை எனக்கிருந்தது. இந்த சோகமான சூழ்நிலை 2, 3 மணிநேரம் நீடித்தது. என் சிநேகிதியும், அவளுடைய கணவரும் மிகவும் உடைத்து போய்விட்டார்கள். அவர்களுடைய மகள் அன்று இரவே அமெரிக்கா செல்வதாக இருந்தாள். அவளை வழியனுப்ப அவர்கள் சென்றனர். அவர்களை டாக்ஸியில் ஏற்றுவதற்காக நானும் என் கணவரும் கீழ் இறங்கி சென்றோம். அந்த கட்டத்திலும், மகான் எந்த ரூபத்திலாவது வந்து இந்த துக்கத்திலிருந்து விடுபட வைப்பார் என்று எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. அந்த சமயம், காலையில் இவர்கள் வந்து இறங்கிய டாக்ஸி டிரைவர் வந்து, அந்த பையை கொடுத்து விட்டு சென்றான். எங்கள் சந்தோஷத்திற்கு அளவே இல்லை. இது மகானின் கருணை இல்லாமல் வேறு என்ன மகானிற்கு நன்றி சொல்ல நான் உள்ளே சென்றேன். என் சிநேகிதியை பதினென் சித்தர் சக்தி பீட பிருந்தா வனத்திற்கு சென்று தரிசிக்குமாறு கூறினேன். இது என் வாழ்வில் ஒரு மறக்க முடியாத நிகழ்ச்சி ஆகும்'' என்று கூறினாள்.

## அறுவை சிகிச்சையிலிருந்து விடுதலை

அவளுடைய கணவர் திரு. பாலசுப்ரமணியம் அவர்கள் எழுதுகிறார். ''மகானின் கருணையால் என் வாழ்வில் நடந்த ஒரு மறக்க முடியாத நிகழ்ச்சியை உங்களுடன் பகிர்ந்து கொள்ள ஆசைப்படுகிறேன். 2001-ம் வருடம் என் முதுகின் தண்டுவடத்தில் ஒரு பாகம் கீழ் இறங்கி இருப்பதாக டாக்டர்கள் கூறி அதை ஆபரேஷன் மூலமாக தான் குணப்படுத்த முடியும் என்று கூறினார்கள். ஆபரேஷன் ஆவதற்குமுன் எடுக்க வேண்டிய எல்லா டெஸ்டும் எடுத்து கொள்வதற்காக ஒரு ஆஸ்பத்திரியில் அட்மிட் ஆனேன். இத்தருணத்தில்தான் ஸ்ரீ சர்மா அவர்கள் மும்பாய் வந்து இருந்தார். மகானின் உத்தரவு படி ஆபரேஷன் தேவை இல்லை என்று அவர் கூறினார். எங்கள் வீட்டில் சில ஹோமங்கள் செய்து, விபூதியை கொடுத்து, காலையில் எதுவும் சாப்பிடுவதற்கு முன்

அந்த விபூதியை தண்ணீரில் கலந்து குடிக்குமாறு கூறினார். நானும் முழு நம்பிக்கையுடன் அவ்வாறே செய்து வந்தேன். கொஞ்சம் கொஞ்சமாக குணம் தெரிந்து, இப்பொழுது நான் நார்மலாக இருக்கிறேன். இப்பொழுதும் நாங்கள் மகானிடம் அமர்ந்து ஜபம் செய்யும் பொழுது, விபூதி வாசனையும், சந்தனத்தின் வாசமும் உணருவோம். தமக்கு எந்த கஷ்டம் வந்தாலும் தோள் கொடுத்து உறுதுணையாக மகான் எங்கள் பக்கத்தில் இருப்பார் என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது."

## வேலை கிடைத்தது

திருமதி. பாரியா அவர்கள் கூறுகிறார். "நான் திருமதி. பாரியா நான். குஜராத்தி குடும்பத்தை சேர்ந்தவர். நான் மகானைப் பற்றி எப்படி அறிந்து கொண்டேன். எப்படி இந்த சேஷ குடும்பத்தில் நுழைந்தேன் என்பதை உங்களிடம் பகிர்ந்து கொள்கிறேன்.

ஜாதி, மத, இன, மொழி வேறுபாடியின்றி, யார் வேண்டு மானாலும் சென்று அவருடைய பாதாரவிந்தங்களில் சரணாகதி அடைந்தால், தம்மை நல்வழிப்படுத்தி நம்மை இரட்சிப்பார் என்பது உறுதி. நல்ல நேர்மையான தன்னலம் இல்லாத உள்ளம் தான் மகானிற்கு தேவை. அப்படிப்பட்ட ஆன்மாக்களை, மன அமைதி யாகவும் உடல் ஆரோக்கியத்துடன் வைத்திருப்பார். நாள்தோறும் நாம் அனுபவிக்கும் நிகழ்ச்சிகளே இதற்கு உதாரணமாகும். இருண்டு போன எங்கள் வாழ்க்கையில் மகான் புகுந்து ஒளி வீசினார்.

2000 வருடம் பொழுது, நாங்கள் மிகவும் கஷ்டமான கால கட்டத்தில் இருந்தோம். எங்கள் இருவருக்குமே வேலை கிடைக்க வில்லை. வேலை இல்லாமல் நாங்கள் இருவரும் 11/2 வருட காலம் மிகவும் கஷ்டப்பட்டோம். அந்த சமயத்தில் தான் எங்களுக்கு குழந்தையும் பிறந்தது. ஒரு அறநிலைய புரவலரின் மூலம் குருஜி சர்மாவை பற்றி அறிந்து கொண்டோம். எங்கு சென்றாலும் எங்களுக்கு ஏமாற்றமாக இருந்ததால் முதலில் குருஜி சர்மாஜியிடம் செல்வதற்கே யோசித்தோம். பிறகு ஒரு தடவை தான் சென்று பார்ப்போமே என்று தோன்றியது. ஆனால் அதுதான், நாங்கள் வாழ்க்கையில் முதன்முதலாக எடுத்த நல்ல முடிவாகும்.

எங்கள் ஜாதகத்தை பார்த்த குருஜி சர்மா, உங்கள் எல்லா துக்கங்களையும் மகானிடம் விட்டு விடுங்கள். அவர் உங்களை

நல்வழிபடுத்துவார். உங்களுக்கு வேண்டியதை செய்வார் என்று கூறினார். நாட்கள் தான் கடந்தன. எங்கள் வாழ்க்யையில் எந்த மாற்றமும் இல்லை. எங்கள் சகிப்புத் தன்மையும் குறைந்தது. ஒரு நாள் இரவு, நான் மிகவும் துக்கத்தில் இருந்தேன். எதிர்மறையான உணர்ச்சிகள் குருஜி சர்மா கூறிய ஜோதிடத்தின் பேரிலும், மகானின் பேரிலும் நம்பிக்கை குறைய ஆரம்பித்தது. ஆனால், மகானின் பேரில் இருக்கும் நம்பிக்கை எனக்கு குறைவதை நாங்கள் விரும்ப வில்லை. கண்களில் கண்ணீருடன் அவர் படத்திற்க முன்பு அமர்த்து எனக்கு ஏதாவது நல்ல பாதையை காட்டுமாறு வேண்டி நின்றேன். அன்று இரவே என்னுடைய பிரார்த்தனை நிறைவேறியது. ஏப்ரல் மாதம் 4 ஆம் தேதி 2000 ஆம் ஆண்டு, 9-30 மணி அளவில் ஐ.டி. கம்பெனியிலிருந்து ஒரு வேலை காலி இருப்பதாக, தொலைபேசி மூலம் என்னை தொடர்பு கொண்டார்கள். இன்று வரை, அந்த பணியில் முழு ஈடுபாட்டுடன் தொடர்ந்து வேலை பார்த்து கொண்டிருக்கிறேன். அதுமட்டுமின்றி இன்னொரு சந்தோஷமான செய்தி என்னவென்றால் என்னுடைய கணவருக்கும் அன்றைய தினமே, மதியம் 12.00 மணியளவில் மும்பையில் முன்னணியில் இருக்கும், படம் எடுக்கும் ஒரு ஸ்டுடியோவில் வேலை கிடைத்து விட்டது. அவரும் இன்றளவும் தொடர்ந்து பணி ஆற்றி கொண்டு இருக்கிறார்.

அன்றைய தினத்தில் இருந்து, மகானிடம், முழு நம்பிக்கை யுடனும், ஈடுபாட்டுடன் இருக்கிறோம். அது எங்கள் வாழ்நாள் முழுவதும் தொடரும்'' என்று கூ;றினார்.

## மனப்பொருத்தம்

திருமதி. மீராவும், திரு. இரவீந்திரநாத் அவர்களும் மும்பையில் வசிக்கிறார்கள் அவர்கள் கூறுகின்றனர். "எங்களுடைய குடும்பம், சிறிய, மகிழ்ச்சியான குடும்பம். 2000 ஆம் ஆண்டு ஜனவரி, பிப்ரவரி மாதத்தில், குருஜி ஶ்ரீ சர்மாஜி அவர்களை சந்தித்து, அவரிடம், எங்கள் ஜாதகத்தை காண்பித்தோம். எங்கள் வாழ்வில் பெரியதாக கஷ்டம் ஒன்றும் இல்லை என்றாலும், எங்கள் வாழ்க்கையைப் பற்றி தெரிந்து கொள்வதற்காக அவர் இருந்த என் சிநேகிதியின் வீட்டிற்கு சென்றோம். குருஜி, எங்களுடைய ஜாதகத்தைப் பார்த்து, 15 நிமிடத்தில் எங்களுடைய மன பொருத்தத்தைப் பற்றி கூறிவிட்டார். அது எங்களுடைய அகக் கண்களை திறந்தது. அந்த நிலை, உடல் காயத்தை விட மனத்தில் பட்ட காயம் மிகவும்



6

அதிகமாகி விட்டது. இந்த சூழ்நிலையிலிருந்து வெளிவருவதற்கு முயன்றேன். அதற்கு முடிவு, ஸத்குருவிடம் முழு சரணாகதி அடைவதுதான் என்பதை உணர்ந்து கொண்டேன். ஆனால் எப்படி சரணாகதி அடைவது?

மகானின் வாழ்க்கை வரலாற்றை படிக்க ஆரம்பித்தேன். ஒவ்வொரு மாதமும் மகானின் ஜன்ம நட்சத்திரமான ஹஸ்தம் அன்று நடக்கும் பூஜையில் கலந்து கொண்டு, லலிதா சகஸ்ர நாமத்தை பாராயணம் செய்தேன். ஏழை எளியவர்களுக்கு அன்னதானம் செய்தேன். வருடா வருடம் கோலாகலமாக நடக்கும் மகானின் ஆராதனை, ஜெயந்தி விழாக்களில் கலந்து கொண்டேன். அதிலெல்லாம் பங்கு கொண்ட அந்த நிமிடத்தில் தான் எனக்கு மனஅமைதி கிடைத்தது. அதிலிருந்து வெளியில் வந்தவுடன் மனகுழப்பம் அதிகரித்து ஆரம்ப நிலைக்கே சென்று விட்டேன்.

இதற்கெல்லாம் மகானின் கருணை தான் காரணம் என்பதை உணர்ந்து கொண்டோம். மகான் எங்களுடன் எப்பொழுதும் இருக்க வேண்டும். எங்கள் வாழ்க்கையை வழி நடத்தி செல்ல வேண்டும். இப்பொழுது தான் உங்களுடன் பகிர்ந்து கொண்டது அனைத்தும் உண்மையுடன் மிகவும் சந்தோஷத்துடனும் கூறுகிறேன். எங்களுடைய சேஷ குடும்பம் மிகவும் அன்பான, பெரிய, சந்தோஷமான குடும்பம் ஆகும்."

## நம்பிக்கையால் அடைந்த பலன்

திருமதி. வைதேகி அனந்தகிருஷ்ணன் மும்பாயிலிருந்து எழுதுகிறார். "என் வாழ்வில் மகான் நடத்திய அற்புதங்களை பகிர்ந்து கொள்ள ஆசைப்படுகிறேன். மகானிடம் முழு நம்பிக்கை யுடன் சரணாகதி அடைந்தால், அவர் கண்டிப்பாக வழிகாட்டி நடத்தி செல்வார். எங்கள் வாழ்வில் மகான் நடத்திய அற்புதங்களை உங்களுடன் பகிர்ந்து கொள்வதற்கு சந்தர்ப்பம் அளித்த குருஜி சர்மா அவர்களுக்கு நாங்கள் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

ஒரு அறநிலைய புரவலர் கூறியப்படி நானும் என் மகனும், காலையில் 3 மணிக்கு எழுந்து, ஸத்குருவை நினைத்து தியானம் செய்ய ஆரம்பித்தோம். அதிலிருந்து நாங்கள் தியானம் செய்ய ஆரம்பத்திலிருந்து, எங்களுக்கு, யாரோ நடப்பது போல் காலடி ஓசை கேட்க ஆரம்பித்தது. அந்த வருடம் மகானின் ஆராதனை விழாவிற்கு சென்று, மகானின் பாதுகைகளை, பிரசாதமாக பெற்று

கொண்டு வந்து, பூஜையறையில் வைத்து தினமும் பூஜை செய்து கொண்டு இருக்கிறோம்.

என்னுடைய மகன் பத்தாவது வகுப்பு முடித்து, பதினோராம் வகுப்பில் சேர்ந்தான். ஆனால் அவனுக்கு அந்த பாடத்தை படிக்கவே பிடிக்கவில்லை. அவன் 12 ஆம் வகுப்பு முடித்தவுடன், நாங்கள் மகானிடம் சென்று கேட்ட பொழுது, அவனுக்கு பிடித்தமான பாடமே கிடைக்கும் என்று ஆசீர்வாதம் செய்து அனுப்பினார். அதன்படி அவனுக்கு கிடைத்து, அவன் நன்றாகப் படித்தான்.

ஒரு சமயம் என் கணவருக்கு உடல் நலம் சரியாக இல்லை. அறநிலையத்தினர் சுதர்சன ஹோமத்தை நடத்தினர். அதற்கு நாங்கள் சென்று இருந்தோம். அதில் பங்கேற்றப் பிறகு என் கணவரின் உடல் நலம் கொஞ்சம் குணம் தெரிந்தது. ஆனால் முழுமையாக குறைய வில்லை.

மகான் சூட்சுமத்தில் 45 நாட்கள் மருந்து எடுத்து கொள்ளுமாறு கூறினார். என் கணவர் அதன்படியே செய்தார். அவருடைய உடல்நலம் பூரண குணம் அடைந்தது.

அதுபோல் என் மாமனாரின் சதாபிஷேக விழா நல்லபடியாக நடக்க வேண்டும் என்று மகானை எண்ணி பிரார்த்தனை செய்தோம். மகான் சூட்சுமத்தில் எல்லாம் நல்லபடியாக நடக்கும் என்று கூறினார், சதாபிஷேக செலவுக்காக என் கணவர் தன் அலுவலகத்தில் கடனுதவி பெறுவதற்காக மேலதிகாரியிடம் லெட்டர் கொடுத்து இருந்தார். சதாபிஷேக நாட்களும் குறித்து விட்டோம். கடனுதவி கிடைக்கவில்லை. மகான் எப்படியும் வழிகாட்டுவார் என்ற நம்பிக்கையில் இருந்தோம். அதே போல் என் கணவரின் நண்பர். நாங்கள் கேட்காமலே பண உதவி செய்வதாக கூறினார். அடுத்த நாளே, அலுவலகத்திலிருந்து பணஉதவியும் கிடைத்தது. ஸத்குருவின் அருளாசியுடன் என் மாமனாரின் சதாபிஷேகம் நல்லபடியாக முடிந்தது.

மகானின் கருணையால், என் கணவர் ஆஸ்துமாவில் கஷ்டப் பட்டாலும் கார்த்திகை மாதம், ஸ்ரீ ஐயப்பனை தரிசித்து வந்தார்.

ஒரு சமயம் தேனீ என்ற ஊரில் ஒரு கோவிலில் நடக்கும் சுதர்சன ஹோமத்தை காணச் சென்றோம். அந்த இடத்தை நெருங்கு வதற்குள் என் கணவருக்கு ஜுரம் அதிகமாகி விட்டது. அவரால்

நடக்கவே முடியவில்லை. அடுத்த பிளாட்பாரமை அடைவதற்கு நிறைய தூரம் கடக்க வேண்டிய இருந்தது. எப்படியோ நாங்கள் மெதுவாக போய் சேர்ந்தோம். அந்த கோவிலின் செயலாளரைப் பார்த்து, மாடம்பாக்கம் கோயிலின் பெருமையைப் பற்றியும், ஸ்ரீ கிரஹலக்ஷ்மி படத்தைப் பற்றியும் அவரிடம் விரிவாக கூறினோம். அதை அப்படியே அவர் வந்த மக்களிடம் கூற, அவர்களில் பலப்பேர் இந்த படத்தை வாங்கி சென்றனர். மகானின் அருளால் நாங்கள் வீடுபோய் சேர்வதற்குள் என் கணவரின் ஜுரமும் குறைந்து விட்டது.

நாம் துக்கப்படுகிற நேரத்தில் முழுமையான கவனத்துடனும், நம்பிக்கையுடனும் மகானிடம் சரணடைந்தால் அவர் நம்மை எந்த நேரத்திலும் கைவிட மாட்டார். இது உறுதி.''

இது மாதிரி நூற்றுக்கணக்கான அன்பர்களிடம் வாழ்க்கையில் மகான் நடத்திய அற்புதங்கள் ஏராளம். எல்லாவற்றையும் எழுதுவது என்பது இயலாத காரியம். ஆனால் உண்மையான நேர்மையான அன்போடும், முழுமையான உள்ளத்தோடும் மகானின் பாதார விந்தங்களில் சரணடைந்தால் கண்டிப்பாக நாம் நினைத்த காரியத்தை நிறைவேற்றி கொடுப்பார். அதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை.

---

*''மாடம்பாக்கம் பாலாயத்தில் கோடிதீபம் ஏற்றி கோடி நன்மை பெறுங்கள். வாழ்வில் ஒளி கிடைத்து மகிழ்ச்சி பொங்கட்டும்''*

## அத்தியாயம்-30

# கடல் கடந்த கருணை வெள்ளம்

நம் வாழ்வை செம்மைபடுத்த, நல்வழி நடத்தி செல்வதற்கு கண்டிப்பாக ஒரு நல்ல குரு தேவை. அதேபோல், குரு காட்டிய பாதையில் நடந்து, அவர் உபதேசங்களை, நடைமுறை வாழ்க்கையில் வாழ்ந்து, செம்மையாக, நெறியுடன் வாழ்ந்து காட்டுவதே ஒரு சிஷ்யனின் தலையாய கடமையாகும்.

குருவருள் இல்லையேல் திருவருள் இல்லை என்று வாக்கியத்திலேயே குருவின் அவசியத்தை உணர்ந்து கொள்ளலாம். அப்படிப்பட்ட உன்னதமான ஒரு உலக மகா ஸத்குரு நமக்கு எல்லாம் கிடைத்திருக்கிறார். அவருடைய கொள்கைகளை, உபதேசங்களை உலகு எல்லாம் பரப்புவது தான் நமது தலையாய கடமையாகும். நம்மை எல்லாம் வழிகாட்டி நடத்தி செல்வதற்கு, ஸத்குருவை புரிந்து கொள்வதற்கு உணர்ந்து கொள்வதற்கு குருஜி சர்மா அவர்களை நமக்கு எல்லாம் ஸத்குரு அனுப்பி இருக்கிறார்.

ஸத்குருவின் பிரதான சீடரும், ஜோதிட நவரத்னமணியுமான குருஜி K.V.L.N. சர்மா அவர்கள், ஸத்குருவின் கொள்கைகளை, பரப்புவதற்காக, பல வெளிநாடுகளுக்கு விஜயம் செய்துள்ளார். ஸத்குருவின் சீடர்கள், உலகெங்கும் பரவி இருக்கிறார்கள். அமெரிக்கா, துபாய், அபுதாபி, சிங்கப்பூர் போன்ற நாடுகளில் உள்ள சிஷ்யர்கள், ஸத்குருவின் ஜன்ம நட்சத்திரமான ஹஸ்தம் அன்று, மகானின் பூஜைகளை மிகவும் விமரிசையாக கொண்டாடு கிறார்கள். குருஜி சர்மா அவர்கள் சிலருக்கு மாமாவாகவும், பலருக்கு Sir ஆகவும் ஒரு நல்ல ஆசானாகவும், வழிகாட்டியாகவும் இருப்பவர்.

குருஜி வெளிநாட்டிற்கு (அபுதாபிக்கு) சென்ற சமயம், அங்கே வசிக்கும் சிஷ்யர்கள் இரண்டு பேர், தன் அனுபவங்களை குருஜியிடம் பகிர்ந்து கொள்கிறார்கள். அதை கீழே எழுதியுள்ளேன்.

## குழந்தை கிடைத்தது

அபுதாபியில் வசிக்கும் திருமதி. அனிதா சதிஷ் தன் அனுபவித்ததை கூறுகிறார். "நானும் என் கணவரும், 1999-ஆம் ஆண்டு மாமாவை (அன்போடு சர்மா மாமா என்று அழைப்போம்) முதன்முதலில் துபாயில் சந்தித்தோம். சுமார், 100 பேர் அடங்கிய, ஒரு அரங்கில் குருஜி சொற்பொழிவு ஆற்றி கொண்டிருந்தார். 1998 ஆம் வருடம் தான், எனக்கு கர்ப்ப பையில் (Fiburoid) இருப்பதாக கூறி அதை எடுப்பதற்கு, டாக்டர்கள் ஒரு அறுவை சிகிச்சை செய்தனர். அறுவை சிகிச்சைக்கு பிறகும் நான் கருத்தரிக்க வில்லை. யாரை கேட்பது. எங்களுடைய, இந்த துக்கத்தை யார் தீர்த்து வைப்பார்கள் என்று எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. அந்த சொற்பொழிவு முடித்தவுடன், குருஜி அவர்கள் எங்களை கூப்பிட்டு உங்களுக்கு குழந்தை இல்லையா? என்று கேட்டார். மாமாவிடம் எங்களுடைய கஷ்டத்தை கூறினோம். அவர் "மருத்துவ ரீதியாக என்ன செய்ய வேண்டுமோ அதை செய்தீர்கள், ஆன்மீக வழியில் சில பரிகாரங்கள் செய்ய வேண்டும். ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளிடம் நம்பிக்கை வையுங்கள் அவர் உங்கள் துயரை துடைப்பார் என்று கூறினார்.

குருஜி கூறியபடியே நாங்கள் இந்தியாவிற்கு வந்து, கார்த்திகை மாதத்தில் (November) செய்ய சொன்ன பரிகாரத்தை செய்தோம். நாங்கள் திரும்பவும் டிசம்பர் மாதம் துபாய் சென்றோம். ஸத்குருநாதரின் கருணையினால், நான் ஜனவரி மாதம் 2000 ஆம் ஆண்டு, எந்தவித மருத்துவ உதவி இல்லாமல் நான் கருத்தரித்தேன். எல்லாம் தாத்தாவின் (சேஷாத்ரி ஸ்வாமிகளை அன்புடன் அழைப்போம்.) கருணையினால் தான் நடந்தது. அவர் எங்கள் பிரார்த்தனைக்கு செவி சாய்த்தார். அக்டோபர் 2000 ஆம் ஆண்டு அன்று ஒரு அழகிய பெண் குழந்தைக்கு தாயானேன்.

அதிலிருந்து, நாங்கள் மாமாவை கேட்காமல், எங்கள் வாழ்க்கையில் எதையும் செய்ததில்லை. "இன்னொரு குழந்தையும் பிறக்கும்" என்று மாமா சொன்னார். 2004 ஆம் ஆண்டு மார்ச் மாதம், இன்னொரு அழகிய பெண் குழந்தை பிறந்தது. ஸத்குரு நாதரின் அருளினால் இருவரும் நல்ல ஆரோக்கியத்துடன் நன்றாக இருக்கிறார்கள். அபுதாபியில் மாமாவின் ஜோதிட ஆலோசனை யால் பயன் அடைந்த பக்தர்கள் ஏராளம். ஸத்குருவின் லீலைகளை அனுபவித்து உணர்ந்தவர்கள் ஏராளம். ஒவ்வொரு மாதமும் ஹஸ்த

பூஜையை (குருவின் ஜன்ம நட்சத்திரம்) மிகவும் விமரிசையாக கொண்டாடுகிறோம். எங்கள் வாழ்க்கையை ஸத்குருவின் பாதாரவிந்தங்களின் ஒப்படைத்து விட்டோம். எங்களுக்கு நல்ல வழிகாட்டுவார் என்பதில் நாங்கள் உறுதியாக இருக்கிறோம்.

அபுதாபியில் கெமிக்கல் இன்ஜினியராக பணிபுரியும் திரு. கிருஷ்ணகுமார் தன் அனுபவத்தை தன்னுடைய வார்த்தையில் கூறுகிறார். "என் உத்தியோகத்திலும் சரி, என் சொந்த வாழ்க்கை யிலும் சரி பல வித குழப்பங்கள் இருந்தன. அபுதாபியில் என் படிப்பிற்கும், அனுபவத்திற்கும் சரியான வேலை கிடைக்கவில்லை. இது எனக்கு மிகவும் மன உளைச்சலை கொடுத்தது.

என் வேலையை விட்டு சென்னைக்கு திரும்பி விடலாமா என்று யோசித்து கொண்டிருந்தேன்

அந்த நேரத்தில்தான் ஜூன் மாதம் 2004 ஆம் ஆண்டு சர்மா மாமாவை சந்திக்கும் சந்தர்ப்பம், என்னுடன் வேலை செய்யும் நண்பரின் மூலம் கிடைத்தது. மாமாவிடம் என் எதிர்கால வாழ்க்கையை பற்றி அறிந்து கொள்வதற்காக சென்றிருந்தேன். உண்மையை சொல்ல வேண்டும் என்றால் என்னுடைய நண்பரின் ஊந்துதலினால் தான் சென்றேன். எனக்கு 15 நிமிட நேரம் தான் ஒதுக்கப்பட்டது.

சர்மா மாமா, மஞ்சள் கலரில் கனக புஷ்பராக கல்லை என்னுடைய ஆட்காட்டி விரலில் போட்டுக் கொள்ள சொன்னார். செப்டம்பர் 2004 ஆம் ஆண்டு வரை நான் வேலையை மாற்றக் கூடாது என்றும் சொன்னார். வேலையில் நல்ல மாற்றம் தானாக வரும். அதுமட்டுமின்றி அக்டோபர் 2006-க்குள் வேலையில் பெரிய நிலையில் வருவேன் என்றும் சொன்னார்.

மாமா சொன்னதை நம்பி நானும் பொறுமையாக செப்டம்பர் மாதம் வரை காத்திருந்தேன். என் வாழ்க்கையில் ஒரு எதிர்பாராத திருப்பம் கிடைத்தது. நான் வாங்கின சம்பளத்தை விட 10 மடங்கு சம்பள உயர்வு உள்ள வேலை ஒன்று கிடைத்தது. அது குறுகிய காலத்திற்கு தான் என்றாலும், மாமா சொன்னதை மனதில் நிறுத்தி அதை ஒத்து கொண்டேன். ஸத்குருவின் கருணையினாலும், என்னுடைய நல்ல நேரத்தினாலும், அந்த வேலை அக்டோபர் 2006 மட்டும் நீடித்தது. என்னுடைய சொந்த வாழ்க்கையிலும் எல்லா குழப்பங்களும் நீங்கி என் குடும்பத்தோடு சந்தோஷமாக

இருந்தேன். அக்டோபர் நடுவில் எனக்கு இந்தோனேசியாவில் என் நண்பரின் உதவியுடன் நல்ல வேலை கிடைத்தது. வருமானமும் பல மடங்கு பெருகியது. சர்மா மாமா ஏற்கனவே இந்த மாற்றம் வரும் அன்று சொல்லி இருந்தார். என்னுடைய வேலையிலும் சரி, குடும்ப வாழ்க்கையிலும் சரி மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறேன்.

சர்மா மாமாவின் ஆலோசனையினாலும், கனக புஷ்ப ராக கல்லினாலும், நரகத்திலிருந்து சொர்க்கத்திற்கு சென்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. என்னுடைய உணர்ச்சிகளை விவரிப்பதற்கு வார்த்தைகளால் முடியவில்லை. மாமாவின் சரியான ஜோதிட ஆலோசனையை எண்ணி வியந்தேன். அவருக்கு என்றென்றும் நான் கடமைப்பட்டிருக்கிறேன். என் எதிர்காலத்திலும், அவர் எனக்கு உறுதுணையாக இருப்பார் என்று நம்புகிறேன்.''

அமெரிக்காவில் டெட்ராய்டு-இல் வாழும், திருமதி. கலாலஷ்மி நரசிம்மன் அவர்கள் தன்னுடைய அனுபவத்தை நம்முடன் பகிர்ந்து கொள்கிறார். ''குருஜியின் பரிச்சயம் என் அண்ணா திரு. நாகராஜன் அவர்களின் மூலம் எங்களுக்கு கிடைத்தது. 1997 ஆம் வருடம் குருஜி அவர்கள் அமெரிக்கா வந்திருந்த பொழுது, எங்கள் வீட்டில் பௌர்ணமி பூஜை செய்தார். பூஜை முடிந்தவுடன் என்னுடைய மாங்கல்ய பலம் மிகவும் பலவீனமாக இருப்பதாகவும், 7 வருடகாலம் என் கணவர் ஜாக்கிரதையாக உடம்பை பார்த்துக் கொள்ள வேண்டும் ஆக்ஸிடெண்ட் ஆக கூட வாய்ப்பு இருக்கிறது என்றும் கூறி, சில பரிகாரத்தையும் செய்ய சொன்னார். மேலும் ஸத்குரு உங்களுடன் இருப்பார். அவர் மேல் நம்பிக்கை வையுங்கள் நல்லது நடக்கும் என்றும் கூறினார். அன்றிலிருந்து நாங்கள் இருவரும் ஸத்குருவையே சரணாகதி அடைந்தோம். 7 வருட காலம், நான் உயிரை கையில் பிடித்து கொண்டுதான் இருந்தேன். ஆனால் ஸத்குரு நாதர் எங்களுடன் இருக்கும்பொழுது பயப்பட தேவையில்லை. இந்த ஏழு வருடத்தில் ஒரு சிறு கீறல் கூட அவர் உடலில் ஏற்படவில்லை. இதிலிருந்து ஸத்குரு நம்முடன் இருக்கிறார் நம்மை வழிநடத்தி செல்கிறார் என்பது உறுதி ஆகிவிட்டது. முழு சரணாகதி ஒன்று தான் தாரக மந்திரம்'' என்று கூறினார்.

துபாயில் வசிக்கும் திரு. இராமமூர்த்தி அவர்கள் தன் அனுபவத்தை கூறினார். ''முதன் முதலாக 1996 ஆம் ஆண்டு, மாமாவை (குருஜி சர்மா) மும்பாயில் பார்த்தேன். அப்பொழுது மிகவும் கஷ்டமான நிலையில் இருந்தேன். மாமாவிற்கு, ஜாதகம்

பார்க்க காசு கூட கொடுக்க முடியாத நிலையில் இருந்தேன். மாமா என் ஜாதகத்தை பார்த்து விட்டு, குருநாதர் படத்தை கொடுத்து, உனக்கு நல்லது நடக்கும் நம்பிக்கையோடு இரு என்று கூறினார். இந்த சம்பவம் நடந்த கொஞ்ச காலத்திற்கு எல்லாம் துபாயில் எனக்கு வேலை கிடைத்தது. 11 வருடத்திற்குள் சென்னையில், அமெரிக்காவில், துபாயில் என்று 3 கம்பெனிக்கு சொந்தக்காரனாகி விட்டேன்.

இவை எல்லாம் ஸத்குருவின் கருணையினாலும், என்னுடைய விடாமுயற்சியினாலும்தான் என்று பெருமையாக கூறி கொள்கிறேன்'' என் வாழ்வில் எத்தனையோ மேடு பள்ளங்கள், இருந்தும், நான் சிறிதும் கவலைப் படவேயில்லை. ஸத்குரு நாதர் எனக்கு துணை இருப்பார் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை இன்றும் இருக்கிறது. என் வாழ்வே ஸத்குரு நாதர்தான்'' என்று உணர்ச்சி பூர்வமாக கூறுகிறார்''.

துபாயில் வசிக்கும் கேப்டன் ரவியின் மனைவி திருமதி உஷா ரவி அவர்கள் தன் அனுபவத்தை நம்முடன் பகிர்ந்து கொள்கிறார்.

''முதலில் என் பெற்றோரின் வாழ்க்கையில் நடந்த அனுபவத்தை கூறுகிறேன். எங்கு வெளியில் சென்றாலும், ஸத்குருநாதருக்கு சிறு காணிக்கைகளை எடுத்து வைத்து விட்டு செல்வது அவர்களின் வழக்கம். ஆராதனையின் ஹோமத்தில் பணம் கட்டுவதற்காக அறநிலையத்தின் அலுவலகத்திற்கு புறப்பட்டனர். ஹோமத்தின் தொகை ரூ. 300 தான். அதை மட்டும் எடுத்துக் கொண்டு, பையில் இருக்கும் தொகை எதற்கு என்று நினைத்து வீட்டில் வைத்து விட்டு சென்றனர். அலுவலகத்தில் வேலை செய்யும் திருமதி. ஜானகி தொலைபேசியில் என் பெற்றோர்களை கூப்பிட்டு, ரூ. 150 குறைகிறது. ஹோமத்திற்காக பொருள்கள் வாங்க வேண்டும் என்று கூறினாள். தான் வீட்டில் வைத்த அதே தொகையை கேட்டவுடன் என் பெற்றோர்கள் மலைத்து நின்று விட்டனர்.

ஒரு சமயம், மகானின் ஹஸ்த பூஜையும், குரு பௌர்ணமியும் ஒன்றாக வந்தது. என்னால் சந்தர்ப்ப சூழ்நிலையால் கலந்து கொள்ள முடியவில்லையே என்ற மிகுந்த மன வருத்தத்துடன் குருநாதரை நினைத்து கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு அன்பர் ஹஸ்த விபூதியுடன் வந்து, ''உங்கள், வீட்டிற்கு எவ்வளவு நாள்

கிளம்பி, இப்பொழுது தான் வரமுடிந்தது. இந்த பிரசாதத்தை உங்களிடம் சேர்ப்பதற்கு வந்தேன்'' என்று கூறினார். நான் குருநாதரின் கருணையை நினைத்து வியந்து நின்றேன். எனக்கு என்ன பேசுவது என்றே தெரியவில்லை. ஒவ்வொரு சோதனையான கால கட்டத்திலும் குருநாதரின் அருளால் கடந்து இப்பொழுது மகிழ்ச்சியுடன் இருக்கிறோம். ஸ்தூல குருவாக மாமா (குருஜி) இருக்க ஸூஷ்ம குருவாக குருநாதர் இருக்க எங்களுக்கு குறை ஒன்றும் இல்லை'' என்று கூறினாள்.

இப்படி பல அன்பர்கள் தங்கள் அனுபவங்களை, நம்முடன் பகிர்ந்து கொள்ள துடிக்கிறார்கள். துக்கப்படும் ஆன்மாக்களுக்கு, அதிலிருந்து விடுதலை கொடுத்து, அவர்களுக்கு அருளை வாரி வழங்குவதில் ஸத்குருவிற்கு இணை ஸத்குருதான்.

## அத்தியாயம்-31

# ஸ்ரீகாஞ்சிபரமாச்சாரியாளும் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளும்

முன்சென்ற அத்தியாயத்தில் கூறியுள்ளபடி, மண்டகுளத்தூர் ஸ்ரீ கிருஷ்ணசாமி வீரராகவர் என்பவரின் கட்டுரையிலிருந்து, சின்னக் காஞ்சீபுரத்தில் உள்ள தெற்கு மாடவீதியில் இருக்கும் வீட்டில்தான் மகான் சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு ஞானோதயம் ஏற்பட்டது என்பது தெரியவந்தது. இதற்குச் சான்றாகப் பல நிகழ்ச்சிகளை நாம் பார்த்தோம். இந்த நேரத்தில் ஒன்று கூறவேண்டும். காஞ்சிபரமாச்சாரி யாளுக்கும், சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கும உள்ள நெருக்கத்தைக் குறிப்பிட்டே ஆகவேண்டும். அதைப்பற்றி அருள்திரு. பரணீதரன் அவர்கள், 1.5.1994 அன்று ஆனந்தவிகடனில் "அன்பே அருளே" என்ற தலைப்பில் எழுதிய தொடரில் ஒரு பகுதியை நன்றியுடன் கீழே வெளியிட்டுள்ளோம்:-

திரு. பரணீதரன் அவர்களுடைய வார்த்தைகளில் கூற வேண்டும் என்றால், "கண் அறுவை சிகிச்சை முடிந்து பெரியவர் கல்யாண மண்டபத்தைவிட்டுப் புறப்படும் போது அறுவை சிகிச்சை செய்த டாக்டருக்குச் சொல்லியனுப்பியதைப் புரிந்துகொள்ள முடிந்தது. "ஆனால், நான் உடனிருக்க வேண்டும் என்று உத்தரவானது எதற்காக?" என்று புரியாமல் அங்கு வந்த எனக்கு, சேஷாத்ரி ஸ்வாமிகள் வாழ்ந்த இல்லத்துக்கு எழுந்தருளும்போது நானும் உடன் இருக்க வேண்டும் என்று கருணைத் தெய்வம் அருள் பாலித்திருக்க வேண்டும் என்பது அப்போதுதான் புரிந்தது!

ஸ்ரீ காஞ்சிமகான், எவ்வகையிலும் அருகதையற்ற என்னிடம் அன்புசெலுத்தி, அருள்மாரி பொழிந்ததோடு, ஸ்ரீ காமாட்சி தேவியின் தாசராய், மாசித்தராய், பிரம்மஞானியாய்த் திகழ்ந்த ஸ்ரீசேஷாத்ரி

ஸ்வாமிகளின் பெருமைகளை எனக்கு அடிக்கடி எடுத்துக்கூறி அம்மகானது சேவையில் எனக்கு ஆர்வம் ஏற்படச் செய்தார். அதன்மூலம் இந்த ஜென்மாவைப் பயனுள்ளதாக்கி எங்கள் வம்சம் தழைக்க வழிவகுத்துத் தந்தவரும், என் முன்னோர்கள் செய்த தவப்பயனாக இப்பிறவியில் என்னை ஆட்கொண்ட வருமான வள்ளல்பெருமானுக்கு என் உள்ளத்தை உறைவிடமாக்கி உயிருள்ள வரை வழிபடுவதைத் தவிர என்னால் வேறு என்ன கைம்மாறு செய்ய இயலும்?

"அருணாசல மகிமையை" எழுதிக் கொண்டிருந்தபோது "சின்னக் காஞ்சிபுரத்தில் 1870 முதல் 1889 வரை ஸ்வாமிகள் வாழ்ந்திருந்த வீடு எதுவென்று தெரிவில்லையே" என்று நான் ஒரு நாள் பெரியவாளிடம் கூறியபோது, "அதை நீ கண்டுபிடியேன்" என்று அருளி அதைக் கண்டுபிடிப்பதற்கான முயற்சிகளில் என்னை ஈடுபடுத்தி, "இவரைப் போய்ப்பார்," "அவரிடம் போய்க் கேள்" என்று என்னைத் தூண்டி இரண்டு மூன்று வீடுகளில் எதுவாக இருக்கும் என்று பிரச்சினை எழுந்தபோது, அந்த வீட்டைக் கட்டிய கொத்தனார் ஏகாம்பரம் என்ற முதியவர் பழைய நினைவுகளில் மூழ்கி "பத்தொன்பதுவயசுல அந்தவீட்டுப் பெரியபுள்ளை பைத்தியம் பிடிச்சு, வீட்டைவிட்டு ஓடிட்டாரு" என்று கூறிய விவரத்திலிருந்து தான், அந்த ஞானப் பித்தரின் வீட்டை இறுதியாகக் கண்டுபிடிக்க முடிந்தது என்ற விவரத்தை அருணாசல மகிமையில் குறிப்பிட்டு இருக்கிறேன். அதன் பிறகு கொல்லவார் சத்திரத்தில் பெரியவர் தங்கியிருந்தபோது, ஒருநாள் "திருவாரூரில் சங்கீத மும்மூர்த்தி களின் வீடுகளை வாங்கியிருக்கிற மாதிரி நாம் இந்த வீட்டை வாங்கிடலாமா? என்று கேட்டதும், பின்பு பெரியவா குறிப்பிட்டவர் களைக் கொண்டு ஒரு கமிட்டி அமைத்துப் பணம் வசூலித்து, திரு. டி. சிவப்பிரகாசத்திடமிருந்து அந்த இல்லத்தை வாங்கியதும், அதன் பிறகு பெரியவர் அங்கு ஸ்வாமிகளின் பெரிய வண்ணப்படம் ஒன்று வைக்கச் சொன்னதும், அங்கு பூஜை செய்ய அசிக்காடு கோபால தீட்சிதர் குடும்பத்தைக் குடியமர்த்தியதும், அவரை அங்கு அக்னி ஹோத்திரமும், இஷ்டி ஹோமமும் செய்யப் பணித்ததும், ஸ்வாமிகளின் திதியான மார்கழி மாதம் நவமியன்று ஆராதனை தொடங்கி வைத்ததும், பின்னர் தேனம்பாக்கம் சிவாஸ்தான மண் தரையில் ப்ளான்போட்டுக் காட்டி, அருளாணை யிட்டபடி பெரியவர் அந்த இல்லத்தை மாற்றியமைத்து மண்டபம் ஒன்று எழுப்பச்

செய்ததும், அதை நிர்வகிக்க ஓர் அறக்கட்டளையை நிறுவச்செய்து, நல்லி திரு. குப்புசாமிசெட்டி, "சங்குபாணி" சிவராஜ் முதலியார், கே.ஆர். விஸ்வநாதன் இவர்களுடன் என்னையும் அறங்காவலர் களாய் நியமித்ததும், 1985-இல் தைமாத ஹஸ்த நட்சத்திரத்தன்று ஸ்வாமிகளின் ஜயந்தியைக் கொண்டாடும்படி கூறி அதை வருடாந்தர விழாவாக நடத்த அருளியதும் பெரியவா விளம்பர மின்றி சாதித்துள்ள நூற்றுக்கணக்கான அறப்பணிகளில் ஒன்றாகும்.

1987-ஆம் ஆண்டு ஜனவரி 21-ஆம் தேதி ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் ஜயந்தி நாள், (தை மாதம் ஹஸ்தம்) வழக்கப்படி அன்று காலை பெரியவாளுக்கு ஜெயந்திப் பத்திரிகை சமர்ப்பிக்கச் சென்றிருந்தேன். அப்போது இரண்டு நாட்களுக்குமுன் நான் திருவையாறு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி ஆராதனைக்குச் சென்று வந்ததையும், அங்கு கண்ட காட்சிகளையும் பெரியவர்களிடம் விவரமாகக் கூறினேன். அங்கு நடைபெறும் உஞ்சவிருத்தியைப் பற்றி நான் கூறியபோது, பெரியவா, சேஷாத்ரி ஸ்வாமிகளின் ஜெயந்தியிலும் உஞ்சவிருத்திக்கு ஏற்பாடு பண்ணிடு" என்றார். "அடுத்த வருடத்திலிருந்து தொடங்குகிறேன்" என்றேன் நான். "அடுத்த வருஷம் என்ன? இந்த வருஷமே, இன்னிக்கே ஆரம்பிச்சுடு" என்றார் பெரியவா.

"உஞ்சவிருத்திக்கு எப்படி ஏற்பாடு பண்ணணும் என்று எனக்குத் தெரியாது. யாரையாவது கேட்டுத்தான் பண்ணணும். திடீர்னு எப்படி?"

"ஏன்? என்ன கஷ்டம்? உஞ்சவிருத்தி பிராம்மணரைத் தேடிண்டு எங்கே போறதுன்னு யோசிக்கிறியா? இதோ இவருக்கு ஒரு தலைப்பாகை கட்டி ஒரு சொம்புலே கயிற்றைக் கட்டி; தோள்லே தொங்கவிட்டு, வீதியிலே போனா, பொண்டுகள் வந்து அட்சதை போடுவா. அதை வாங்கிண்டு வரவேண்டியது தானே" என்றார் பெரியவர்.

பெரியவா காட்டிய முதியவர் சேதுராம சாஸ்திரிகள், உயரமாக, எலும்பும் தோலுமாகப் படத்தில் பார்க்கும் தியாகராஜ ஸ்வாமிகள் போன்றே இருந்தார், "பஜனைக்கு ஏற்பாடு பண்ணனுமே" என்றேன்.

"யார் சொன்னா? இவரை அழைச்சுக்கோ நீ ஏதாவது நாமாவளி சொல்லிண்டு கைகளினாலே தாளம் போட்டுண்டே முன்னாலே போ போதும். இன்னும் யாராவது வந்தா அவாளையும்

சேர்த்துக்கோ. இல்லாவிட்டால் நீங்க ரெண்டுபேர் மட்டும் மாட வீதியைச் சுத்திண்டு வாங்கோ.''

''என்ன சொல்லிண்டு போறது''. பெரியவா யோசித்து விட்டுக் கையில் தாளம் போட்டபடி.

*''ஜய ஜய ஜய ஜய காமாட்சி*
*ஜய ஜய ஜய ஜய காமகோடி*
*ஜய ஜய ஜய ஜய சேஷாத்ரி''ன்னு*

சொல்லிண்டே போ. ''வெயில் ஏர்றதுக்கு முன்னாலே போங்கோ'' என்று கூறி எங்களை அனுப்பி வைத்தார்.

அன்று பெரியவா சொல்லிக்கொடுத்த மாதிரியே உஞ்ச விருத்தி நடைபெற்றது. சேதுராம சாஸ்திரிகளும் நானும் சங்கர ராமனும், மணியும் சென்றோம். அதற்கு அடுத்த ஆண்டிலிருந்து பாபநாசம் ஸ்ரீ குஞ்சுமணி பாகவதரின் பஜனைக் கோஷ்டியினர் உஞ்சவிருத்தியில் கலந்துகொள்ளத் தொடங்கினர். அவர்கள் பின்னால் பாடிக் கொண்டுவர நாங்கள் ஐந்தாறு பேர் முன்னால் பெரியவாள் உபதேசித்த

*ஜய ஜய ஜய ஜய காமாட்சி*
*ஜய ஜய ஜய ஜய காமகோடி*
*ஜய ஜய ஜய ஜய சேஷாத்ரி*

என்ற நாமாவளி மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு போவோம். அவ்வப்போது பஜனைக் கோஷ்டியினரும் இந்த நாமாவளியைச் சங்கீத மெருகுடன் உள்ளம் உருக இசைப்பார்கள்.

என் நண்பரும் நானும் ஸ்வாமிகளின் இல்லத்தைப் பதிவு செய்யும் விஷயமாக ஒருநாள் பெரியவாளிடம் பேசிக் கொண்டு இருந்தோம். நண்பரின் பெயர் சேஷாத்ரி. அப்பொழுது பெரியவா சிரித்துக்கொண்டே ''இந்தப் பணியிலே மொத்தம் எத்தனை ''சேஷாத்ரி'' சம்பந்தப்பட்டிருக்கார்கள்?'' என்று கேட்டார். நாங்கள் மனக்கணக்குப் போட்டுக் கொண்டிருந்தபோது ''மொத்தம் அஞ்சா, நாலா?'' என்று கேட்டார். நாங்கள் ''நாலு'' என்றோம். பெரியவா ''அஞ்சு'' என்று சொல்லிவிட்டு விரல்விட்டு எண்ணத் தொடங்கினார். ''முதல்லே சேஷாத்ரி ஸ்வாமிகள் (நண்பரைக் காட்டி) இவன் ஒரு சேஷாத்ரி. டாக்குமென்ட்டெல்லாம் சரி பார்த்தாரே வக்கீல், அவர்

ஒரு சேஷாத்ரி. ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ் கிளார்க் ஒரு சேஷாத்ரி, அப்புறம் உங்கப்பாவும் சேஷாத்ரியாச்சே''.

ரொம்பப் புத்திசாலியைப்போல் ''சேஷாசலம்'' என்று திருத்தினேன் நான்.

''ரெண்டும் ஒண்ணுதாண்டா'' என்றார் பெரியவா. அதன் பிறகு சேஷாத்ரி ஸ்வாமியைப்பற்றிக் குறிப்பிடும்போதெல்லாம் என் தந்தையின் நினைவுவரத் தொடங்கியது. அதேபோன்று அப்பாவை நினைக்கும் போதெல்லாம், அவர், பெயரைக் கூறும் போதெல்லாம் எனக்குச் சேஷாத்ரி ஸ்வாமிகளின் பெயரும் நினைவுக்கு வரத் தவறுவதில்லை.

சேஷாத்ரி ஸ்வாமிகளின் பெரிய உருவப்படம் ஒன்றைத் தயார் செய்து தேனம்பாக்கம் எடுத்துச் சென்றிருந்தேன். அப்போது கண் ஆபரேஷன் ஆகாததால் படத்தின் மிக அருகில் போய் உட்கார்ந்து பெரியவா உன்னிப்பாகக் கவனித்துப் பார்த்தார். பின்னர் படத்திலுள்ளது போலவே கால்களை மடித்து இடக்கையை முகவாயில் வைத்துக்கொண்டு புன்சிரிப்புடன் காட்சிதந்து ''இந்த மாதிரிதானே ஸ்வாமிகள் உட்கார்ந்திருக்கார்?'' என்று கேட்டார். எனக்கு ஒரு கணம் சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கும், பெரியவாளுக்கும் வித்தியாசமே தெரியவில்லை. இந்த அபூர்வக்காட்சியைக் கண்டு நெகிழ்ந்து போய், ஆனந்தக் கண்ணீர் பொங்க இருவருக்கும் சேர்த்து நமஸ்காரம் செய்து எழுந்தேன்.

பின்னர் ஒருநாள் சேஷாத்ரி ஸ்வாமிகள் ஞான சித்தராய்த் திகழ்ந்த பரப்பிரும்ம நிலையை எனக்கு உணர்த்தவும் அவர்மீது எனக்கு மாறாத பக்தி ஏற்படவும் என்னிடம் ஒரு கேள்வியைக் கேட்டார் பெரியவா. இன்று நினைவிலும் கனவிலும் அந்தக் கேள்வி என் இதயத்தில் எதிரொலித்துக் கொண்டேயிருக்கிறது.

''டேய் நான் சேஷாத்ரி ஸ்வாமிகள் போல ஆவேனா? அந்த நிலை எனக்கு வருமா?

எந்த மகானை ஒவ்வொரு கணமும் நான் தெய்வமாகத் தரிசித்துப் பரவசப்பட்டுக் கொண்டிருக்கிறேனோ, அந்தப் பரிபூரணனே சேஷாத்ரி ஸ்வாமிகள் அடைந்த நிலையை அடைய விரும்புகிறார் என்றால் சேஷாத்ரி ஸ்வாமிகள் எந்த நிலையிலிருந்தார் என்பதை இதற்கு மேல் தெளிவாக விளக்கிச் சொல்ல முடியுமா?

இந்த ஆண்டு ஜனவரி 6-ஆம் தேதி சேஷாத்ரி ஸ்வாமிகளின் ஆராதனை நாள். அதற்கான சில ஏற்பாடுகளைச் செய்வதற்காக டிசம்பர் மாதம் 29-ஆம் தேதி ஸ்ரீ மடத்துக்குச் சென்றிருந்தேன். பெரியவர் இரண்டு மூன்று நாட்களாகத் தரிசனமே தராமல் உள்ளேயே படுத்திருப்பதாகக் கூறினார்கள். தொந்தரவு செய்ய வேண்டாம் என்று நான் சிம்ஸன் வைத்தாவிடம் சேஷாத்ரி ஸ்வாமிகள் ஆராதனை 6-ஆம் தேதி (வியாழன்) அதைப் பெரியவா காதில் போட்டுவிடும்படி கூறினேன். "வேண்டாம், வருஷா வருஷம் வந்து சொல்லுவியே அதேமாதிரி உள்ளே வந்து நீயே பெரியவாகிட்டே சொல்லிட்டுப் போயிடு" என்று என்னை உள்ளே அழைத்துச் சென்றார்.

பெரியவர் படுத்துக் கொண்டிருந்தார். "சேஷாத்ரி ஸ்வாமிகள் ஆராதனை 6-ஆம் தேதி பெரியவர்கிட்டே விஞ்ஞாபம் செய்து கொள்றேன்" என்றார்.

அதைக் கேட்டுக்கொண்ட பெரியவா "சரி" என்பது போல் தலையசைத்தார். அதுதான் சரீரத்துடன் கூடிய பெரியவாளின் கடைசி தரிசனம் எனக்கு!

ஜனவரி 8-ஆம் தேதி ஏகாதசியன்று மதியம் பெரியவர் சரீரத்தை மறைத்துக்கொண்டு விட்டார்.

சேஷாத்ரி ஸ்வாமிகளின் ஆராதனை மார்கழி மாதம் நவமி. பெரியவாளின் ஆராதனை மார்கழி மாதம் ஏகாதசி.

எங்கும் நிறை அகண்ட பிரும்மமாய், அன்பாய், அருளாய், பேரறிவாய், பேரொளியாய் என்றென்றும் பிரகாசித்துக் கொண்டிருக்கும் பிரபஞ்ச மகாசக்திக்கு எனது இந்த நீங்கா நினைவுகளைக் காணிக்கை யாக்குகிறேன் என்று எழுதியுள்ளார்.

அருள்திரு. பரணீதரன் அவர்களுக்கும் ஆனந்த விகடனுக்கும், அறநிலையத்தின் சார்பில் நன்றி.

மண்டகுளத்தூர் வாதூல திரு. கிருஷ்ணசாமி வீரராகவன் என்ற பெரியவருக்கு 93 வயதாகிறது. அவர் சேஷாத்ரி ஸ்வாமிகள் பூத உடலுடன் வாழ்ந்த காலத்திலிருந்தே இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கிறார். முன் சென்ற அத்தியாயத்தில் ஸ்வாமிகள் வாழ்ந்த இடம், அவர் ஞானோதயம் பெற்ற இடம் எது என்பதை திரு. கிருஷ்ணசாமி வீரராகவன் எழுதியுள்ள கட்டுரையிலிருந்து

தெரிந்து கொண்டோம். இப்பொழுது அவருக்கு மகானிடம் உள்ள நெருக்கத்தைப் பற்றிச் சிலவற்றைத் தெரிந்து கொள்ளலாம். அவருடைய வார்த்தையிலேயே கூறவேண்டும் என்றால், நான் திருவண்ணாமலையில் தேர்முட்டித் தெருவில் என் தமக்கையுடன் வசித்துக்கொண்டு இருக்கும்பொழுது எங்கள் வீட்டுத் திண்ணையில் ஸ்வாமிகள் உட்கார்ந்து இருப்பார். அவரிடம் ஆசி பெறும்பொழுது அவர் "நூறு ஆயுசு" என்று கூறி என்னை ஆசீர்வதிப்பார். இம்மாதிரி நூறு ஆயுசு வாழ்த்து என் வாழ்நாளில் நூறு முறைகள் பெற்ற பாக்கியம் அடைந்து இருக்கிறேன். இந்த 93-ஆவது வயதில் இதை எழுதும் பாக்கியம் பெற்றேன் என்றால் அதற்குக் காரணம் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் ஆசியாகும் என்று கூறினார்.

மகான் அருணையில் வாழ்ந்த நாற்பது ஆண்டுகளில் இரு முறை பிளேக் நோய் வந்தது. மக்கள் எல்லாரும் வெளியேற்றப் பட்டார்கள். சேஷாத்ரி ஸ்வாமிகளையும் விழுப்புரம் செல்லும் இரயிலில் உட்காரவைத்து அனுப்பினார்கள் காவல் துறையினர். ஆனால் சிறிதுநேரம் கழித்துப் பார்த்தால் அவர் திருவண்ணாமலை வீதியில் உலாவுவதைப் பார்த்தேன. இருமுறையும் இவ்வாறே நடந்தது. மகான் ஒருநாளும் அண்ணாமலையாரைப் பிரிந்து வாழ மாட்டார்.

4.1.1929-ஆம் ஆண்டு மகான் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் ஜீவன்முக்தி அடைந்தார். அந்நிகழ்ச்சியை அச்சமயத்தில் உடனிருந்த தொண்ணூற்றுமூன்று வயதான மண்டகுளத்தூர் வாதூல ஸ்ரீ கிருஷ்ண சாமி வீரராகவர் தன் அனுபவத்தைச் சொல்கிறார். மகான் "பூத உடலைவிட்டு உயிர் பிரிந்ததும், நானும் சின்னப் பட்டம் குப்புசாமி குருக்களும் அருகில் அமர்ந்து பார்த்துக்கொண்டு இருந்தோம். அந்த வீட்டின் இரு திண்ணைகளில் கீழ்ப்பக்கத் திண்ணையில் இருக்கும் பூத உடலைக் கிழக்கு முகமாக உட்கார்ந்த நிலையிலே நாங்கள் இருவரும் வைத்தோம். அவரை விபூதியால் அலங்கரித் தோம். இரமணாஸ்ரமத்திற்குச் செய்தி அனுப்பினோம். மாலை நான்கு மணியளவில் பக்தர்கள் எல்லாரும் குழுமி மகானிற்கு இறுதி மரியாதை செலுத்தினர். சமதிருஷ்டிபாவம் மகானிடம் அதிகமாக இருந்ததால், அவருடைய பூத உடலைத் தரிசிக்க, ஜாதி, மத, இன வேறுபாடு இன்றி அனைவரும் வந்தனர். பின்பு உடல் அடக்கம் செய்யப்பட்டது.

## யோகியும், மகானும்

ஸத்குருநாதரின் தொடர்பு குருஜி திரு. சர்மாவிற்கு ஏற்பட்ட தினத்திலிருந்தே அவர் இன்றைய தினம் திருவண்ணாமலையில் வாழ்ந்துகொண்டிருக்கும் யோகி ராம்சுரத்குமார் அவர்களைச் சந்தித்து ஆசிபெறுவது வழக்கம். தரிசிக்கச் செல்லும்போது எங்கு வந்தீர்கள்? என்று கேட்பார். மகான் சேஷாத்ரி ஸ்வாமிகளின் ஆஸ்ரமத்திற்கு வந்தேன் என்று கூறும்பொழுது மகத்தான பிரம்ம ஞானியான மகானை அல்லவா தரிசிக்க வேண்டும்? எதற்காக இந்தப் பிச்சைக்காரனைப் பார்க்க வந்தாய்? என்று கேட்பார். இப்படிப் பல தடவை சந்திப்பு நடந்தது. ஒருமுறை அவரைச் சந்தித்த பொழுது அவரிடம் ''சுப்ரமணி'' என்று அவர் செல்லமாக அழைக்கும் நாய் இருந்தது. யோகியை நமஸ்கரித்து குருஜி சர்மா அமர்ந்த பொழுது, அவரது மடியில் அந்தச் சொறிநாய் வந்து படுத்துக் கொண்டது. யோகியின் கண்கள் தீர்க்கமாக குருஜி சர்மாவையே கவனித்துக் கொண்டிருந்தன. அருவருப்படைந்து நாயை விரட்டுகிறானா? அருளாசியைப் பெற விழைகிறானா? என்று குருஜி சர்மாவை யோகி சோதித்தார் போலும். சிறிதுநேரத்தில் அந்த நாய் எழுந்து சென்றது அர்த்தம் புரியவில்லை. ஆனால் அறியாமை விலகியது. யோகி அவர்கள் கையினாலேயே அவருடைய படத்தை அருளாசி யுடன் குருஜி, சர்மாவிற்கு வழங்கினார். இன்றும் அது ''குரு கம்யூட்டர் ஜோதிட அலுவலகத்தில்'' பூஜையில் வைக்கப்பட்டுள்ளது.

மற்றொரு சமயம் ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் பிருந்தாவனம் அமைக்க, தமிழ்நாட்டின் பல பாகங்களிலிருந்து ''பிடிமண்'' எடுத்து வரவேண்டும் என்று குருஜி. சர்மாவிற்குப் பராசக்தியிடமிருந்த ஆணை வந்தது. திருவண்ணாமலையிலும் எடுக்கவேண்டும். எங்கெங்கு யாரால் எடுக்கப்படவேண்டும் என்று கூறப்பட்டது. திருவண்ணாமலையில் ''பிடிமண்'' எடுக்க குருஜி. சர்மாவும் மற்றவர்களும் சென்றபொழுது முதலில் யோகியைத் தரிசித்து ஆசிபெற்று செல்லலாம் என்று எண்ணி அவரிடம் விவரங்களை எடுத்துக் கூறினார். அதைக் கேள்வியுற்ற யோகி பரவசமடைந்து குருஜி. சர்மாவின் கையை விடாமல் பிடித்துக் கொண்டு ''பெரிய பாக்கியம், பெரிய பாக்கியம்'' என்று சொல்லி உடன் வந்து அருணாசலேஸ்வரர் ஆலயத்தைச் சுற்றி நல்லாசி களைப் பொழிந்தார். அந்தநேரத்தில் யோகியின் உருவத்திலே மகானே உடனிருந்து நடத்திக் கொடுப்பது போன்ற உணர்வு,

உள்மகிழ்ச்சி குருஜி. சர்மாவிற்கு ஏற்பட்டது. அகில உலகத்திற்கே அருட்பெரும் ஜோதியாக, ஆன்மீக சக்திகளை எல்லாம் ஒன்றுதிரட்டி ஒரே சக்தி பீடமாக ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் பிருந்தாவனம் அமையப் போகிறது என்று அன்றே யோகியால் உறுதியாக்கப் பட்டது. அந்தப் பிடிமண் நிறைந்த கலசத்தை யோகி தனது தலையின்மீது வைத்து மந்திரங்களை உச்சாடனம் செய்து கொடுத்து வாழ்த்தி அருளியதை நினைக்கும் பொழுது மெய் சிலிர்க்கிறது.

யோகிகளுக்கு எல்லாம் யோகியாக, ஞானிகளுக்கு எல்லாம் ஞானியாக, சித்தர்களுக்கு எல்லாம் மகா சித்தராக, பிரபஞ்ச ஜோதியாக, ஞானசக்தியாக, உலகத்திற்கு ஒரே குருவாக நமது மகான் இன்றும், என்றும் வாழ்வார் என்பதை உணர முடிந்தது. கண்ணோடு கண் நோக்கி ஒளியோடு ஒளி கூட்ட யோகியால் முடியும். ஆனால் எங்கே இருந்து நினைத்தாலும் உடன் அங்கு வந்து நல்லாசிகளை வழங்க மகானால் முடியும். உருவம் இரண்டு. ஒளி ஒன்று. எத்தனையோ மகான்கள் இந்த ஞான பூமியில் இன்றும் வாழ்கிறார்கள். அத்தனை மகான்களும் ஒன்று திரண்ட ஒரே சக்தி ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள். பாகுபாடு வேண்டாம்!



ஸ்ரீ சந்திரசேகர சரஸ்வதி ஸ்வாமிகள் (காஞ்சி பரமாச்சார்யாள்)

அத்தியாயம் - 32

# குருவின் அவசியம், சூட்சும உபதேசங்கள்

ஜகத்குரு ஆதி சங்கரர் தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தில் நமது வாழ்க்கையில் குருவின் அவசியம் ஏன் என்பதைக் கீழ்கண்ட செய்யுளின் மூலம் விளக்குகிறார்.

यस्यैव स्फुरणं सदात्मकमसत्कल्पार्थकं भासते
साक्षात्तत्वमसीति वेदवचसा यो बोधयत्याश्रितान् ।
यत्साक्षात्करणाद्भवेन्न पुनरावृत्तिर्भवाम्भोनिधौ
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

*யஸ்யைவ ஸ்புரணம் ஸதாத்மக-மஸத்*
*கல்பார்தகம் பாஸதே*
*ஸாக்ஷாத் தத்வமஸீதி வேதவசஸா*
*யோ போதயத்யாச்'ரிதான் ।*
*யத்ஸாக்ஷாத்கரணாத்பவேன்ன*
*புனராவ்ருத்திர்: பவாம்போநிதௌ*
*தஸ்மை ஸ்ரீகுருமூர்தயே நம இதம்*
*ஸ்ரீ தக்ஷிணாமூர்தயே ॥*

உலகத்திற்கு ஞானவிளக்காக இருந்துகொண்டு, உண்மையில்லாமல், ஆனால் உண்மை போல் தோன்றும் மாயத்திரையை நீக்கி, தன்னிடம் அடைக்கலம் அடைந்த சீடர்களுக்குப் பிரம்மதத்துவத்தை உணர்த்தி, வேத சாஸ்திரத்தில் குறிப்பிட்டுள்ள, "தத்வமஸி" என்ற

வார்த்தையின் அர்த்தத்தை விளக்கி - தத்வார்த்த வாழ்க்கையின் மூலம் சம்சார வாழ்க்கையை வென்று மறுபிறவியில்லாமல் செய்யக் கூடிய ஈடு இணையில்லாத உயர்ந்த நிலையில் இருக்கும் குரு தக்ஷிணாமூர்த்தி பகவானை நான் நமஸ்கரிக்கிறேன்.

உண்மைத் தத்துவங்களை உணர்ந்துகொள்ள குரு கண்டிப் பாகத் தேவை. நமது இந்துமதத் தத்துவங்களும், ஆன்மீக ஆராய்ச்சி யாளர்களும், உயர்நிலை ஆன்மீக வாழ்க்கைக்குக் குரு மிக அவசியம் என்றே வலியுறுத்திக் கூறியுள்ளனர். இன்றையதினம் நாம் காணும் மகான்களும், சித்த சுத்தி அடைந்த யோகிகளும்கூட ஒரு குருவிட மிருந்து உபதேசம் பெற்றுத்தான் இந்த மகத்தான நிலையை அடைந்து உள்ளனர். தத்துவங்களை எடுத்துக்கூறி ஆன்மாவை தெய்வீகப் பாதையில் அழைத்துச்செல்லும் தூண்டு கோலாகக் குரு இருக்கிறார். மனிதன் வணங்கும் அனைத்துத் தெய்வங்களின் பிரதிநிதியாகக் குரு விளங்குகிறார். இந்துமத சாஸ்திரங்களில் குருவிற்கு உயர்ந்த ஸ்தானம் கொடுக்கப்பட்டு உள்ளது. குரு சேவையும், குரு பக்தியும், சீடனின் தலையாய கடமையாகும். "கதிரவனின் ஒளியைக் கண்டு கமலம் மலர்வதைப் போல" ஆயிரம் இதழ்த் தாமரை போன்ற ஆத்ம மலர் குருவின் ஞானஒளியால் விழிப்பூட்டப்பட்டுத் தூண்டப்படுகிறது. மனிதனின் அறியாமை என்ற இருளை அகற்றி, ஒளியைக் காட்டி, தெய்வீக அறிவுத்திறனை குரு கொடுக்கிறார்.

தெய்வீகம் ஒதுக்கப்பட்டு, பண்பாடு, கலாச்சாரம் இவை சின்னா பின்னமாகி, சத்சங்கத்தின் மதிப்பிற்கு இடமளிக்காமல் இருக்கும் தற்கால சமுதாயத்தில், உண்மையான, ஒழுக்கமான, நேர்மையான வாழ்க்கை நடத்தும் மனிதர்களைப் பார்ப்பது அரிது. இலௌகீக வாழ்க்கையின் சாதனைகளையே பெருமையாகக் கருதி, ஆன்மீக வளர்ச்சி தேவை என்பதைச் சரியாகப் புரிந்துகொள்ளாத காரணத்தினால் வாழ்க்கையின் அஸ்திவாரமே தத்தளிக்கக்கூடிய விளைவுகள் ஏற்படுகின்றன. காலச்சக்கரம் சுழன்று, மாறுபட்ட சூழ்நிலை ஏற்படும் இக்காலத்தில் பொருளாதார வளர்ச்சியும், தொழில்நுட்ப வசதிகளும் அவசியம்தான். குறிக்கோள் இல்லாத வாழ்க்கை பயனற்றது. மனஅமைதியும், மகிழ்ச்சியும்பெற தனி மனிதன் மட்டுமின்றி, இந்தச் சமுதாயமே ஆன்மீக வளர்ச்சி அடைய வேண்டும் என்பதை வலியுறுத்திக் கூறவேண்டியது மிக அவசியம்.

தெய்வீக ஞானமும், வழிகாட்டுதலும் மனிதனுக்குக் கிடைப்பது அரிதாக இருக்கும் இந்த உலகத்தில் கண்டிப்பாக வழிகாட்ட ஒரு குரு தேவை என்ற சூழ்நிலை ஏற்படுகிறது.

போலிகளும், மாயாஜாலவித்தைகள் செய்பவர்களும், மாயையைக் காட்டி மயங்கச் செய்பவர்களும் நிறைந்த இவ்வுலகத்தில் உண்மை ஒளியைக் கிளப்பி, ஆத்ம தத்துவத்தை விளக்கி, ஜீவனுக்கு ஜீவனாக ஆத்மார்த்த அனுபவத்தை நல்கும் ஸத்குருவைக் காண்பது மிகக்கடினம். ஆனால், ஆத்மதாகம் அவசியமானதும், உண்மை யானதுமாக இருந்தால் மனிதனுக்கு ஸத்குரு கிடைத்து, கடினமான அவனது வாழ்க்கைப் பாதையை மாற்றி, ஒளி கூட்டி வாழ்க்கையைப் பிரகாசிக்கச் செய்வார்.

ஆழ்ந்த அர்த்தமுள்ள வாழ்க்கையைத் தேடி அலையும் ஆண்களுக்கும், பெண்களுக்கும், நவீன நாகரீக வாழ்க்கையில் அடிமைப் பழக்கங்களால் ஆட்கொள்ளப்பட்டு, மீண்டும் புனிதமான புனர்வாழ்க்கையைத் தெய்வசக்தியின் துணையோடு அமைத்துக் கொள்ள விரும்புபவர்களுக்கும், வாழ்க்கையில் கஷ்டங்களையே அனுபவித்துச் சுமையைத் தாங்கமுடியாமல் தத்தளித்துக்கொண்டு இருப்பவர்களுக்கும், அதிலிருந்து மீண்டு புனிதமான, பவித்திரமான வாழ்க்கையை அமைத்துக்கொள்ள விரும்புபவர்களுக்கும் ஒரே பதில், நீங்கள் "ஸத்குருநாதரிடம் சரணாகதி செய்வதுதான்". அந்த ஸத்குரு அர்த்தமுள்ள அமைதியான வாழ்விற்கு வழிகாட்டுவார். **"எங்கெல்லாம் உண்மையோடும், ஆழ்ந்த பக்தியோடும் நான் பூஜிக்கப்படுகிறேனோ அங்கெல்லாம் நான் எப்பொழுதும் இருப்பேன்". இது ஸத்குருவின் அருள்வாக்கு.**

ஸத்குருநாதரை நோக்கி முழுநம்பிக்கையோடு நாம் ஒரு அடி எடுத்து வைத்தோமென்று சொன்னால் நம்மால் முடியாது என்று நினைப்பதைக்கூட முடியும்படியாகக் குருநாதர் செய்வார். ஸத்குரு நாதரின் அருள்வாக்கு மற்றவர்களுடைய வாழ்க்கைக்கு எப்படி வழிகாட்டியது என்பதைச் சென்ற அத்தியாயங்களில் படித்தோம். மன அமைதி கிடைக்க ஸத்குருவின் கருணையோடு கலந்த உதவி இன்றியமையாதது.

குரு அவசியம் தானா? என்று கேள்வி மீண்டும், மீண்டும் எழுகிறது.

காஞ்சி பீடாதிபதியாக இருந்த ஸ்ரீ பரமாச்சார்யாள் அவருடைய உரைகளின் தொகுப்பான, ''தெய்வத்தின் குரல்'' என்னும் புத்தகத்தில் கீழ்க்கண்டவாறு கூறியுள்ளார்.

'ஈசுவரனைக் காட்டிலும், குரு பெரியவர்; ஈசுவர பக்தியைக் காட்டிலும் குருபக்தி விசேஷம் என்கிறார்களே ஏன்?' என்று கேட்டால், ஈசுவரனை யாரும் பார்க்கவில்லை பிரத்தியக்ஷமாக நாம் பார்க்கக் கூடிய ஒரு மனிதர் எப்போதும் சுத்தமாய், ஞானம் உடையவராய், அசைவு இல்லாத சித்தம் உடையவராய், அப்பழுக்கு இல்லாமல் நமக்குக் கிடைத்துவிட்டால் நாம் எந்த மனச்சாந்திக்காக ஈசுவரனிடத்தில் போகிறோமோ அந்தச் சாந்தி இவரிடம் பக்தி செலுத்தினாலே கிடைத்து விடுகிறது. அதனால்தான்

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुः गुरुर्देवो महेश्वरः ।
गुरुः साक्षात् परंब्रह्मा तस्मै श्रीगुरवे नमः ॥

*குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணு: குருர் தேவோ மஹேச்வர: ।*
*குரு: ஸாக்ஷாத் பரம் பிரம்மா தஸ்மை ஸ்ரீகுரவே நம:*

என்று சொல்லியிருக்கிறார்கள். இந்த லோகத்தில் குருவுக்கும், பரமாத்மாவுக்கும் அபேதம் சொல்லியிருப்பது ஒரு விசேஷம். Incidental ஆக இதிலேயே இன்னொரு விசேஷம். இதில் விஷ்ணு, சிவன் இருவரையும் சொல்லியிருப்பதால் இந்த ஸ்லோகத்தைச் சொல்லி நம் குருவந்தனம் பண்ணினால் நமக்கு சிவவிஷ்ணு அபேத பாவமும் உண்டாகிவிடும்.

ஆனால் தெய்வபக்தியை மறக்கக்கூடாது. இந்தக் குருவை இவனோடு சேர்த்து வைப்பதே தெய்வந்தானே? தெய்வ அநுக்கிரஹம் இல்லாவிட்டால் இந்தக் குருவை இவன் எப்படி அடைவான்?

''தெய்வாநுக்ரஹத்தாலேயே ஒருத்தனுக்குக் கிடைக்கிற மூன்று பெரிய வாய்ப்புகள்! ஒன்று, மநுஷ்ய ஜன்மா கிடைப்பது; இரண்டு, ஸத்ய தத்துவத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆசை பிறப்பது; மூன்று, மஹா புருஷனான ஒரு குரு கிடைப்பது'' என்று ஆசார்யாள் 'விவேக சூடாமணி' ஆரம்பத்தில் சொல்லியிருக்கிறார்.

எல்லாருக்கும் எக்காலத்திலும் குரு ஈச்வரன் தான்; தக்ஷிணா மூர்த்திதான்.

நம் குருவுக்கும், அந்தக் குருவுடைய குருவுக்கும் அவருடைய குருவுக்கும் ஞானம் எப்படி பூர்ணமாக ஏற்பட்டிருக்கும்? இப்படி ஒவ்வொருவருக்கும் ஒரு குருவைச் சொல்லிக்கொண்டே போனால் கடைசியில் ஒருத்தருக்கு ஸாக்ஷாத் ஈசுவரனே குருவாக இருந்து ஞானத்தைத் தந்திருக்க வேண்டும் என்று தெரியும். அதனால்தான் தெய்வத்தை மறக்கக்கூடாது என்றார்கள்.

இதையே வேறுவிதமாகவும் சொல்வதுண்டு. குரு, ஈசுவரன் என்று இரண்டு பேர் என்று வைத்துக்கொள்ளாமல் ஈசுவரனே குருவாக வந்திருக்கிறான் என்று வைத்துக்கொண்டுவிட்டோமானால் குரு பக்தி, ஈசுவர பக்தி என்று இரண்டும் தனித்தனியாகப் பண்ணவேண்டாம். குருவே ஈசுவரன் என்று கருதி அந்தக் குருவான ஈசுவரன் ஒருத்தனிடத்திலே பூர்ண சரணாகதி பண்ணிவிடலாம். குரு பரம சுத்தமானவராக, உத்தமமானவராக இல்லாவிட்டாலும்கூட, இவர் மூலமாக நாம் நித்யசுத்தனும், உத்தமோத்தமனுமான ஈசுவரனையே பக்திபண்ணுவதால், அந்த ஈசுவரனே இவர் மூலமாக நமக்கு அநுக்ரஹம் பண்ணிவிடுவான். இதனால்தான் குருவையே ப்ரம்மா-விஷ்ணு-சிவன் இந்த மூன்றுக்கும் ஆதாரமான பரப்பிரம்மம் என்று எடுத்த எடுப்பில் சொல்லிக் கொடுக்கிறார்கள்.

அதனால் குரு என்று ஒருத்தரை அடைந்தபிறகு, அவர் எப்படியானாலும் இருக்கட்டும் என்று நாம் நம் பக்தியில் இறங்காமல், சலிக்காமல் அவரையே உபாஸித்து வரவேண்டும்; சுச்ரூஷை பண்ணவேண்டும். இப்படிப் பண்ணினால் கடைசியில் ஈச்வரன் அவர் மூலமே நமக்கு ஸுத்தியை, ஞானத்தைக் கொடுத்து விடுவான். அவர் மோக்ஷத்துக்குப் போனாலும், போகாவிட்டாலும் நாம் போய்விடுவோம்.

தூர்த்த குணம், கெட்ட பழக்கமுள்ள குருவை உபாஸிக்கிறோம் என்று உலகம் பரிஹாஸம்தான் செய்யும். செய்துவிட்டுப் போகட்டும். இதனால் நமக்கு எந்த அளவு நஷ்டம் வந்தாலும் வந்துவிட்டுப் போகட்டும். முடிவில் இதற்கெல்லாம் ஈடு செய்வதான பரமலாபம் கிடைக்காமல் போகாது. நமக்கென்று இலாப- நஷ்டம், மானாவமானம் பார்க்காமல், ஓரிடத்தில் நம்பி சரணாகதி பண்ணி விட்டால், முடிவில் அதற்காக ஈச்வரன் பரம இலாபமான ஆத்ம ஞானத்தைக் கொடுத்து விடுவான்.

லோகத்தில் லாப நஷ்டம் என்பவை உண்மையில் நிரந்தரமாக இல்லை. அவை கொஞ்சநாள் இருப்பதுபோலத் தோன்றுவனதாம். ஆதலால் மீதி இடங்களில் தான் லாப நஷ்டம் பார்த்தாலும் பார்க்கலாம்; குருவினிடத்தில் மட்டும் லாப நஷ்டம் பாராமல் சரணாகதி பண்ணிவிட வேண்டும்.

மாடியிலிருந்து விழுந்தால் பூமி தாங்கும். மரத்திலிருந்து விழுந்தாலும் தாங்கும். பூமியிலேயே தடுக்கி விழுந்தால் அப்போதும் பூமிதான் தாங்கும். ஈசுவராபசாரத்தைக் குருவினிடம் சொல்லித் தீர்த்துக் கொள்ளலாம். குருவிடம் அபசாரம் பண்ணினால், எங்கே அபசாரம் பண்ணினோமோ அங்கேயேதான் போகவேண்டும்.

குரு ஒருவரைத் தேடவேண்டுவது நமது கடமை. மனம் மாறாமல் இருக்கவேண்டுமென்று பெரியவர்களை நாம் தேடு கிறோம். மனஸை அர்ப்பணம் பண்ணுவதைப் பிரதானமாக வைத்துக் கொண்டால் யாராகயிருந்தாலும் சரி; போதும் இன்னும் சொல்லப் போனால், குரு நல்லவராக இருந்தால் அவரிடம் பக்தியாக இருப்பதில் நமக்கு என்ன பெருமை? யோக்கியதை இல்லாத ஒருவர் குருவாக இருந்தும், அவரிடம் அடங்கியிருந்தாலே மனது நல்ல பக்குவம் அடையும். ஈசுவரன் நம்மைப் பரீக்ஷித்து மனஸின் பக்குவத்தைத் திடப்படுத்தவே இப்படி ஏற்பட்டிருக்கிறது; இதனால் தான், அதிகப் புண்ணியம் உண்டென்று வைத்துக் கொள்ள வேண்டும். மஹாமகக் குளத்தில் ஊற்றுப்போட்டு ஜலம் இறைத்தால் அதில் வெள்ளைக்காரன்கூட ஸ்நானம் பண்ணுவான். எவ்வளவு சேறானாலும் "இது புண்யதீர்த்தம்" என்று முழுகினால்தான் உண்மையான பக்தி இருக்கிறதென்று அர்த்தம். இப்படி நம்மையே பரிக்ஷித்துக் கொள்ளலாம். மஹான்களை அடைகிறது நம்முடைய மனோபக்குவத்தைப் பரீக்ஷிக்க விரும்பாத சோம்பலால்தான். அவர்கள் பெரியவர்களாக இருந்தால் நமக்கு ஒரு பெருமையும் இல்லை. நம்முடைய பக்தியும் பிரயோஜனப் படவேண்டும். ஒரு மஹா க்ஷேத்திரத்தின் கோயிலில் அர்ச்சகர் மிகவும் அஸூத்தியாக இருக்கிறாரென்று வைத்துக் கொள்ளுவோம். அதற்காக நாம் தரிசனம் செய்யாமல் இருக்கிறோமா? நாம் அர்ப்பணம் பண்ணுவது தான் லாபம். குருமஹானாக இல்லாவிட்டாலும், நாம் பக்தியில் திடமாக இருந்தால் அதிகப் புண்ணியம் உண்டாகிறது.

நம் மனம் போகிற வழியில் விடாமல் எங்கேயோ ஓரிடத்தில் அதை அடக்கிப்போட்டு, சரணாகதி பண்ணிவிட்டால் போதும். நம்மைக் காப்பாற்றப் போகிறவர் என்று முதலில் ஒருத்தரை நம்பின போது அவரிடம் பண்ணின சரணாகதியை எக்காலத்திலும் மாற்றிக் கொள்ளாமலிருந்துவிட்டால் எந்தப் பிரயோஜனத்துக்காக இந்தக் குருவிடம் நாம் வந்தோமோ அது ஈஸ்வரப் பிரஸாதமாகக் கிடைத்துவிடும்.

*நன்றி : ''தெய்வத்தின் குரல்''*

மாயை என்ற நாடக உலகத்தில் இருந்து எல்லாவற்றையும் வென்றுவிட்டோம் என்ற ஆணவத்திலும், அகங்காரத்திலும் வாழும் ஆத்மாக்களுக்கு குரு அவசியம் இல்லை என்று தோன்றுவது இயற்கை. அந்த ஆத்மா எதிர்பாராத விபத்துக்களையும், சோதனை களையும், துக்கங்களையும், சந்தித்து சுழற்சி ஏற்பட்டு, இருளே, வாழ்க்கையாக மாறும்பொழுது ''குருவின் அவசியத்தை'' அது உணர்கிறது. இதுவரையில் ''கற்றது கைம்மண் அளவு'' என்பது தெரிகிறது. இன்னும் கற்றுக்கொள்ள வேண்டியது நிறைய உள்ளது என்பதை உணர்கிறது. அதைத் தேடித்தேடி எண்ணம் சுழல்கிறது. மாயைத்திரை விலகுகிறது. இவ்வளவு காலம் நிழல் வாழ்க்கையில் வாழ்ந்துவிட்டோமே என்று வருந்துகிறது. நிஜமான வாழ்க்கைத் தத்துவம் தெரிகிறது. ஆத்மாவின் இரகசியம் உணர்த்தப்படுகிறது. ஆத்ம விசாரணை ஆரம்பமாகிறது. ஆன்மீகப் பயணப்பாதையில் எப்படிச் செல்வது என்ற கேள்வி எழுகிறது. குருவின் அவசியம் புரிகிறது.

ஸத்குருநாதர் வழிகாட்டுகிறார், குரு காப்பாற்றுகிறார். குரு வாழ்க்கைத் தத்துவங்களைக் கற்றுக்கொடுக்கிறார். சீடனின் வாழ்க்கைச் சுமையைக் குரு தாங்கிக் கொள்கிறார். எந்த இடத்திற்குச் சீடனை அழைத்துச் செல்லவேண்டுமோ அந்த இடத்திற்கு, முடிவில்லாத பேரானந்த நிலையை அடைய அழைத்துச் செல்கிறார். குரு அவசியம் இல்லை என்று கூறுவது அறியாமை. குருவின் அவசியம் சொல்லிப் புரிவது இல்லை அனுபவித்துத் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் தன் சீடர்களுக்கு இன்றும் சூட்சமத்தில் பலவிதமான உபதேசங்களைக் கொடுத்துக்கொண்டே

இருக்கிறார். குருபக்தி, மனதைக் கட்டுப் படுத்துதல், வாழும் விதம் போன்றவற்றைப்பற்றிக் கூறுவதாக அவருடய உபதேசங்கள் அமைந்துள்ளன.

1. குரு பக்தி மிகவும் முக்கியம்
2. உன் கடமையைச் சரிவரச் செய், குருவின் அருள் தானே கிடைக்கும்.
3. குருவிடம் உண்மை நம்பிக்கை வை. அருள் பொங்கும்.
4. 'குருவே துணை' என்று எப்பொழுதும் எண்ண வேண்டும்.
5. குருவின் புகழ்பரப்ப சீடன் ஒழுக்கத்துடன் இருந்து செயலில் ஈடுபட வேண்டும்.
6. குருவின் ஆசிகளைக் கட்டாயப்படுத்திப் பெறமுடியாது. இயல்பாகவே அது உன்னிடம் வரும்.
7. பாத்திரத்தின் அளவே நீர் கிடைப்பது போல், ஆத்மாவின் தகுதிக்கேற்ப குருவின் அருள் கிடைக்கும்.
8. குரு தன்னிடம் பேசவேண்டும் என்று நினைக்க வேண்டாம். கடைக்கண் பார்வை போதும்.
9. குருவின் ஆணையை நம்பிக்கையுடன் நிறைவேற்று. குரு அருள் இல்லையேல் திருவருள் இல்லை.
10. மகான்களின் ஆணைப்படி நட. கேள்விகள் கேட்காதே.
11. மாயா சக்தியால் குரு விலகி இருப்பது போல் உனக்குத் தோன்றுகிறது. அவர் உன்னிடம்தான் இருக்கிறார்.
12. தகுதியுள்ள சீடனாக இருப்பதே குருவிற்கு மகிழ்ச்சி கொடுக்கும்.
13. குருவின் அருள் உனது துக்கத்தையும், துயரத்தையும் நீக்கும்.
14. பலனை எதிர்பார்க்காதே கடமையைச் சரிவரச்செய். குருவிடம் சரணாகதி செய். கவலையை விடு.

இந்த அனைத்து உபதேசங்களும் வாழ்க்கையில் குருபக்தியின் மகிமைகளை விளக்குகின்றன. கேள்விகளே கேட்காத குருவிடம் முழுச்சரணாகதி அடைந்த சீடன், அமைதியான மகிழ்ச்சியான

வாழ்க்கைக்கு அஸ்திவாரம் போடுகிறான். குருவிடம் சரண் அடைந்த ஒருவன் தன் செயல்களின் முடிவைப்பற்றிக் கவலைப்படக்கூடாது. அவற்றின் முடிவைக் குருநாதர் பார்த்துக் கொள்வார். நம்பிக்கை மிகவும் முக்கியமானதும் அவசியமானதும் ஆகும். குரு சோதனை செய்யும்பொழுது அதைத் தாங்கமுடியாமல் உபதேசங்களை வெறுத்து ஒதுக்கக்கூடாது. சீடனின் எதிர்கால வாழ்க்கையை, தொலைநோக்குப் பார்வையில் பார்த்து அவனுக்கு வளமான வாழ்க்கையையும், ஆன்மீக வளர்ச்சியையும் குரு கண்டிப்பாக அளிப்பார். தன் மனோ நிலையை ஒருமுகப்படுத்திக் குருவை வணங்கும் சீடனுக்கு அவருடைய கருணையினால் அமைதி கிட்டும். தன் குருநாதர் தன்னை நிச்சயம் காப்பாற்றுவார் என்னும் முழு நம்பிக்கையுடன் அவன் தன் கடமைகளைப் பயமின்றி, கலக்கமின்றி செயல்படுத்த வேண்டும். குரு சோதனை செய்யுபொழுது மீண்டும், மீண்டும் சரணாகதி செய்தால் அதிலிருந்து மீண்டுவிடலாம். குருவிடம் உண்மையாக வேண்டி நின்றால் ஆன்மாவின் இருள்வாழ்க்கையை நீக்கி, பேரொளி பெற்ற பெருவாழ்வாக மாற்றுவார். பாலைப் பக்குவப்படுத்திக் கடைந்து எடுக்கும்பொழுது வெண்ணெய் வருவது போல், கர்மா என்ற கடலைப் பக்குவத்தினால் கடக்கும்போது ஞானம் பிறக்கும். பாலில் வெண்ணெய் மறைந்து இருக்கிறது. நேரிடையாகப் பார்க்கும்பொழுது அது நமக்குத் தெரிவதில்லை. அதைப் பக்குவப்படுத்திக் கடைந்து எடுக்கும் பொழுதுதான் வெண்ணெய் கிடைக்கிறது. அதுபோன்று வாழ்க்கைக் கடலில் பலவித சோதனை களைச் சந்தித்து, குருவின் அருளோடு பக்குவமாக, தெளிவான, தூய்மையான மனத்துடன் ஞானத்தைப் பெறலாம். அறிவதை அறிந்து அடங்கி இருத்தலே ஞானம். முடிவைப்பற்றிக் கவலைப் படாமல் உன்னை நீயே உணர முயற்சி செய். ஞானத்தை அடையலாம்.

சேஷாத்ரி ஸ்வாமிகள் ஆத்ம விசாரணைக்கு முக்கியத்துவம் அளிக்கிறார். ஒவ்வொரு மனிதனின் பிறப்பிலும் இரகசியம் இருக்கிறது. அந்த இரகசியம் என்ன என்பதைப் புரிந்துகொள்ள அவன் முயலவேண்டும். தன்னைத்தானே அவன் தனக்குள்ளே விசாரித்துக் கொள்ளவேண்டும். இதுவே ஆத்ம விசாரணையாகும். அப்படி விசாரிக்கும்பொழுது விழிப்புணர்ச்சி ஏற்படும். லௌகீக சந்தோஷங்கள் மாறுபாடு அடைந்து ஆழ்ந்த, உண்மையான முடிவில்லாத மன அமைதி

கிடைக்கும். அதோடு மட்டுமின்றி மனிதன் தன்னைப் புரிந்துகொண்டு தனக்குள்ளேயே வாழும் ஒரு புனித ஆன்மாவைப் பார்க்கிறான்.

மகானை ஜாக்கிரத்தையுடன் அணுகவேண்டும். கெட்ட எண்ணத்தோடு அணுகினால் அதுவே திரும்பக் கொடுக்கப்படும். நல்ல எண்ணத்துடன் முழு சரணாகதி செய்தால், ஆயிரம் மடங்கு அருளாசிகளைப் பெறலாம்.

மகான்களை ஆராதிக்கும்பொழுது மிகுந்த கவனத்துடன் செயல்பட வேண்டும் என்று தன்னுடைய பக்தர்களுக்கு எச்சரிக்கை செய்கிறார் ஸத்குருநாதர். ஒரு மனிதன் மகானிற்குக் கெட்டதைச் செய்தால் அதனால் அந்த மகான் இழக்கப்போவது ஒன்றும் இல்லை. அது அந்த மனிதனுக்கே இயல்பாகவே திரும்பும். அதனால், அவன் முன்னைவிட மிகுந்த மோசமான நிலையைத்தான் அடைவான். இதில் எவ்விதச் சந்தேகமும் இல்லை. தெளிவான சிந்தனையுடன் ஆசி வேண்டும் என்று பயபக்தியுடன் மகான்களை அணுக வேண்டும். அவர் திருப்தி அடைந்து விட்டார் என்றால் அருளாசிகள் "மடை திறந்த வெள்ளம் போல" பொங்கும். மனிதனை அவர்கள் பார்ப்பதில்லை. ஆத்மாவைப் பார்க்கிறார்கள். பரிசுத்தமாக இருக்கிறதா என்று பார்க்கிறார்கள். அவனுடைய செயலைக் கவனிக் கிறார்கள். நயவஞ்சகம் இருக்கிறதா என்று பார்க்கிறார்கள். ஏதேனும் ஒரு சிறு குறை இருந்தால்கூட அதை துடைத்து எடுத்தபின்புதான் அருளாசிகளைப் பெறமுடியும். உண்மை யான, பரிசுத்தமான, பரந்த தெளிவான சிந்தனைகளோடு இருக்கும் ஆன்மாக்களுக்கு அருள் உடனே கிடைக்கும். வேஷதாரிகள் தண்டிக்கப்படுவது நிச்சயம். விஷமிகளுக்கு மகான்களிடம் இடம் கிடையாது. மகான்களிடம் விளையாட நினைத்தால் விளைவுகள் கொடூரமானதும், கடினமானது மாக இருக்கும். மகான்கள் கருணையே செய்வார்கள். மனிதனைத் திருத்துவதற்காக, அவனுடைய சிந்தனையைத் தெளிவு படுத்துவதற் காகச் சோதனைகள் இருக்கத்தான் செய்யும். சாதாரண நிலையில் இருந்து வாழ்ந்து அசாதாரணமான மகத்தான நிலையை அடைந்த வர்கள்தான் மகான்கள். அவர்கள் தான் ஸத்குரு ஆவார்கள். ஆகையால் இதைப் புரிந்துகொண்டு பவித்திரமான ஸத்குருவை ஒவ்வொரு மனிதனும் தனது இதயத்தில் இருத்தி வைத்து ஆராதிக்க வேண்டும்.

உபதேசத்தைப்பற்றி விரிவாகக்கூறிய இந்த அத்தியாயத்தை முடிக்க வேண்டும் என்றால் ஒன்று கூறியே ஆக வேண்டும்.

ஸத்குருதான் தெளிவாகக் கூறிய இலட்சியத்தின்படி தன்னுடைய பக்தர்கள் வாழ்ந்துகாட்ட வேண்டும் என்று எதிர்பார்ப்பார். அந்தக் கொள்கையிலிருந்து வழுவினால் நிச்சயமாகத் தண்டனை உண்டு. இதை ஏற்றுக்கொள்வது கடினமாகத்தான் இருக்கும். ஆனால், விவேகத்துடன் யோசித்தால்தான் உண்மை புரியும். ஒரு ஆசிரியர் தன்னுடைய மாணவனை எவ்வாறு திருத்துவாரோ, அவ்வாறுதான் மகானும் தன்னுடைய சீடர்களிடம் உள்ள தவறுகளைச் சுட்டிக் காட்டித் திருத்துவார். தன்னுடைய கொள்கைகளை மனிதன் உண்மை யாக உணர்ந்தான் என்று தெரிந்தால் ஸத்குரு மீண்டும் கருணையே உருவாக இருப்பார். ஆன்மீக வளர்ச்சியும், ஆத்ம விசாரணையும், உண்மை பக்தியும் இருந்தால் நிரந்தரமான அமைதியான வாழ்வைப் பெறலாம். இந்த உலகத்திலே வாழ்க்கையில் பலதரப் பட்ட நிலையிலே இருக்கும் மக்களுக்குக் குருநாதரின் உபதேசங்களைக் கடைப்பிடிப்பது கடினமானது மட்டுமல்ல, சிலசமயம் முடியாமலும் போகலாம். ஆனால் நாம் ஒன்றை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். எவ்வித வழியும் இல்லாமல் அனாதையாக, ஒளி கிடைக்காதா என்று ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கும் ஆன்மாக்களுக்கு அன்புக் கரங்கள் கொடுத்து, அரவணைத்து, நல்வழிகாட்டி, வளமான வாழ்க்கையை ஸத்குருநாதர் அளிப்பார் என்பது சத்தியம்.

ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் வாழ்க்கை வரலாறு மனிதன் சரியான பாதையில் முறைப்படி வாழ்வாங்கு வாழ வழி காட்டியாக விளங்குகிறது. இறைவுணர்வோடு ஆத்மஒளியைக் காட்டி தனக்கு மட்டும் வாழாமல், இந்தச் சமுதாயத்திற்காகவே வாழ வழி காட்டுகிறது. வாழ்க்கையில் மனிதன் மறந்துபோன விஷயங் களை நினைவூட்டி, தத்துவங்களை உணரவைத்து, அவரது அருளாசியும் உதவியும் உண்மையான சீடனுக்கு உண்டு என்பதைப் புலப்படுத்து கிறது. எப்படி ஒரு குச்சியை நேராகப் பிடித்துவைத்து விட்டால் எவ்விதப் பிடியும் இல்லாமல் விழுமோ, அப்படி ஸத்குருவிடம் "குருவே துணை" என்று சரண் அடைய வேண்டும். ஸத்குருநாதர் கண்டிப்பாகக் காப்பாற்றுவார். மனஅமைதியைத் தந்து எல்லா மங்களங்களையும் அளிப்பார். வழிகாட்டி விட்டார் ஸத்குரு. அந்த வழியில் செல்வது நமது கடமை.

குருவாய், உருவாய், தனிப்பெருஞ்ஜோதியாய் ஸத்குரு வழி காட்டுவார். பயணம் தொடரட்டும். பலன் கிடைக்கட்டும். வளமுடன் வாழ்க்கை அமையட்டும். மகானின் அருள் பொங்கட்டும்.

அத்தியாயம் - 33

# எதிர்கால திட்டம்

ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளின் சூட்சும ஆணைப்படி கும்பாபிஷேகம் 30-5-2004 ஆம் ஆண்டு இனிதே நிறைவேறியது. மகான், கூறியபடி அனைத்து வேலைகளும் நேரம் தவறாமல் அறநிலையத்தினர் நடத்தினர். கும்பாபிஷேகம் நல்ல படியாக முடிந்தது குறித்து மகிழ்ச்சியாக இருந்தாலும் கோவில் திருப் பணிகள், மலைபோல் குவிந்து கிடக்கின்றன. அதனை ஒவ்வொன் றாக நிறைவேற்றுதல் வேண்டும். மக்கள் நலன் கருதியே அனைத்து திட்டங்களும் வகுக்கப்பட்டுள்ளன.

## ஸ்ரீசேஷ சரஸ்வதி அன்னதான மண்டபம்

மண்டபத்தில் இன்னும் பல வேலைகள் முடிக்கப்படாமல் இருக்கின்றன. ஒரே நேரத்தில் ஆயிரம் பேருக்கு அன்னம் அளிப்பதற்கு உண்டான, எலக்ட்ரிக் குக்கர்கள் தேவைபடுகிறது. எலக்ட்ரிக் லைட், ஃபேன் ஆகியவைகள் அனைத்தும் தேவைப் படுகிறது. முதியோர்கள் கீழே அமர்ந்து உணவு உட்கொள்ள முடியாதவர்களுக்கு, அமர்வதற்கு டேபிள், சேர் தேவைப்படுகிறது. சிறுக சிறுகபணிகள் முடிந்தவண்ணம் இருக்கின்றன. பசும் சாணத்தை வைத்து எரிப்பொருள் தயாரித்து அதிலிருந்து வரும் எரிவாயுவை பயன்படுத்தி (கோபர் கேஸ்) அன்னதானத்திற்கு உணவு தயாரிக்க திட்டமிட்டுள்ளோம்.

## தியான மண்டபம்

மனதை ஒருநிலைப்படுத்தி தெய்வத்திடம், மனதை செலுத்தி, ஆழ்நிலை தியானம் செய்வதற்கு தியான மண்டபம் ஒன்று அமைக்கப் பட உள்ளது. குருநாதர் சன்னதியிலிருந்து குருவாயூரப்பன் சன்னதி

வரை, ஸ்ரீ நந்திகேசுவரர் சன்னிதி வரைக்கும், மகா மண்டபம் மகானின் சூட்சும ஆணைப்படி, கட்டுவதற்கு அறநிலையம் முயற்சி செய்து வருகிறது. ஜாதி, மத, இன, மொழி, வேறுபாடின்றி, அனைவரும் வந்து அமர்த்து தியான செய்து மன அமைதி பெற ஏதுவாக மண்டபம் அமைய உள்ளது.

## தங்கத் தேர்

அம்பிகை வலம் வருவதற்கு தங்கத்தேர் அமைக்க உள்ளோம். கற்பனையில் நினைத்தாலே அது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கிறது. அது நிஜமாக இருக்கும்போது எப்படி இருக்கும் என்று சிந்தித்துப் பாருங்கள். சக்தி பீடத்தில் தங்கத் தேர் பவனி வருவதற்கு ஏராளமான நிதியுதவி தேவைப்படுகிறது. அதற்குப் பொரு ளாகவோ, தங்கமாகவோ உதவி செய்து தங்கத் தேரை அமைத்து அம்பிகையின் அருளைப் பெற அழைக்கிறோம்.

## ஆலயத்தின் மதில்சுவர்

சக்தி பீடத்தின் மதில் சுவர்கள் கருங்கல்லால் கட்டப்பட வேண்டும். உட்பிரகாரம், வெளிபிரகாரம் என்று இரண்டு பிரகாரத்தை அமைக்க உள்ளார்கள். அதுமட்டுமின்றி தங்கத்தேர் வலம் வருவதற்கு ஏதுவாக ஓடுத்தளம் (தரை) அமைக்க உள்ளனர்.

## சித்தர்களின் சன்னதிகள்

பதினெட்டு மகா சித்தர்களின் சன்னதிகளும் பர்ணசாலைப் போல் அமைத்துள்ளன. அதை கருங்கல் கட்டிடமாக மாற்றுவதற்கு, ஸத்குருநாதரிடமிருந்து உத்தரவு வந்தது. அதை கருங்கல் கட்டிட மாக ஆலயத் திருப்பணிகள் ஆரம்பிக்கும் முன் பதினென் சித்த மகாபுருஷர்களுக்கும், ஆலயத்தின் உள்ளே பாலாலயம் ஒன்று அமைக்கப்பட உள்ளது. கட்டிட திருப்பணி முடிந்தவுடன் அதற்கு கும்பாபிஷேகம் செய்ய உள்ளோம். கட்டிட பணி விரைவில் ஆரம்பிக்கப்பட உள்ளன. அதற்கு ஏராளமான நிதியுதவி தேவைப் படுகிறது. கருங்கல்லாலான ஒரு சித்தர் சன்னதி அமைப்பதற்கே ஏறத்தாழ 3.5 லட்ச ரூபாய் தேவைப்படுகிறது. பதினெட்டு சித்த மகாபுருஷர்களுக்கு அமைப்பது என்றால் எவ்வளவு தேவைப்படும் என்பதை நீங்களே சிந்தித்து பாருங்கள். நமது வாழ்வில் தீர்க்க முடியாத பிரச்சனைகளைத் தீர்த்து வைத்து நமக்கு எல்லாம் அருளை

வாரி வாரி வழங்கி கொண்டிருக்கும் சித்தர்களுக்கு செய்வதற்கு நாம் கடமைப்பட்டிருக்கிறோம் அல்லவா?

## ஸ்ரீ ஆதி சக்தி பீட பாலாலய கும்பாபிஷேகம் :

ஸ்ரீ ஆதி சக்தி பீட கணபதி அமர்ந்து அருள் பாலிக்கும் பாலாலயம் கட்டி பன்னிரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. அதற்கு கும்பாபிஷேகம் செய்ய வேண்டும். சித்தர் சன்னதிகளை கருங்கல்லில் கட்டிய பிறகு, சக்தி பீடத்தில் கும்பாபிஷேகம் செய்யும் போது ஸ்ரீ ஆதி சக்தி பீட கும்பாபிஷேகமும் செய்ய திட்டமிட்டு உள்ளோம்.

## வேதபாட சாலை

சின்னஞ்சிறுவர்களுக்கு ஜாதி, மத, இன, மொழி வேறு பாடின்றி வேதம் பயில வேதபாடசாலை ஒன்று அமைக்க உள்ளார்கள். வேதம் மட்டுமின்றி, சமயக்குரவர்கள் நமக்களித்த பொக்கிஷமான தேவாரம், திருவாசகம் போன்ற திருமறைகளையும் கற்றுக்கொடுக்க திட்டமிடப்பட்டுள்ளது.

## மூலிகைத் தோட்டம்

ஸத்குருவின் திருவுளப்படி மூலிகை தோட்டம் ஒன்று அமைக்கப் படவேண்டும். ஏழை எளிய மக்கள், இதனால் பலனடைய வேண்டும். சித்த மருத்துவ ஆராய்ச்சி மையம், சித்த மருத்துவமனை ஆகியவைகள் அமைய உள்ளன. இவையெல்லாம் எதிர்கால திட்டடத்தில் உள்ளது. இந்த ஆராய்ச்சி மையத்தில் எளிதில் கிடைக்க முடியாத மூலிகைகளை அங்கு பயிரிடப்பட்டு மருந்தாக தயார் செய்து ஏழை எளியவர் களுக்கு குறைந்த விலையில் கொடுக்க உள்ளோம். இம்மையத்தில் இந்தியாவில் பல இடங்களில் முடங்கி கிடக்கும் ஓலைச்சுவடிகளை கண்டெடுத்து ஆராய்ந்து மக்களுக்கு பயன்படும் வகையில் அரிய பல மருந்துகளை தயார் செய்து கொடுக்க உள்ளோம்.

## இதர பணிகள்

ஆதரவற்றோர்களுக்கும், யாரும் இல்லாத விதவைப் பெண் களுக்கும், மகானின் ஆணைப்படி ஒரு இல்லம் அமைக்க அற நிலையத்தினர் எண்ணியுள்ளனர்.

படிக்கின்ற ஆனால் நிதிவசதி இல்லாத மாணவர்களுக்கு நிதிஉதவி வழங்குதல், ஆகிய பல திட்டங்கள் நடைபெற உள்ளது.

அதுமட்டுமன்றி, பாலாலயத்தில் இலவச மருத்துவ முகாம் ஒன்று பிரதி ஞாயிறு அன்று நடைபெற்று வருகிறது. அதற்குரிய இடவசதி போதவில்லை. அதை விரிவுபடுத்துவதற்கு திட்டம் தீட்டியுள்ளனர். நவீன வசதியுடன் கூடிய இலவச மருத்துவமனை ஒன்று நிறுவ திட்டம் தீட்டியுள்ளோம்.

மேற்கூறிய அத்தனை திட்டங்களுக்கும் ஏராளமான நிதிஉதவி தேவைப்படுகிறது. பொருளாகவோ (கட்டிடம் அமைப்பதற் குண்டான, சிமெண்ட், கருங்கல், செங்கல்) அல்லது பணமாகவோ, காசோலைகளாகவோ அனுப்பலாம். இதற்கு 80-G வரிவிலக்கு உண்டு. இத்திட்டங்களில் கலந்து கொண்டால் பித்ருதோஷம், சுமங்கலி தோஷம் நீங்கி பூர்வ ஜென்ம பாபம் நீங்கும். லக்ஷ்மி கடாட்சம் பெருகும். ஏழு தலைமுறைகளை சித்தர் அருள் காக்கும்.

மகானின் அருள் எல்லோருக்கும் கிடைக்கட்டும்.

பங்கெடுங்கள்! பயன் பெறுங்கள்

---

1. இலவசமாக மருத்துவமனை அமைய தாராளமாக நிதியுதவி செய்யுங்கள்
2. சித்தர்கள் சன்னதிக்கு அர்ச்சனை செய்து நவக்கிரஹ தோஷ நிவர்த்தி பெறுங்கள்
3. அன்னதானம் செய்து ஆனந்தம் அடையுங்கள்.

---

# ஸ்ரீ சேஷாத்ரிநாத ஸத்குரு சரணம்

ஒவ்வொரு வாக்கியத்தின் முடிவில் 'சரணம்' என்று சேர்த்துச் சொல்லவும்.

| | | | |
|---|---|---|---|
| சரணம்! | சரணம்! | சரணம்! | சரணம்! |
| ஸத்குரு! | சரணம்! | சரணம்! | சரணம்! |
| சரணம்! | ஸத்குரு! | சரணம்! | சரணம்! |
| சரணம்! | ஸத்குரு! | சரணம்! | சரணம்! |

| | |
|---|---|
| *அழியாப் பிறப்பில் அத்வைதா* | *சரணம்* |
| *அண்ணாமலை யொளிர் அழகா* | ,, |
| *அடங்காச் சிரிப்பே உடையாய்* | ,, |
| *ஆன்ம நிஷ்டையிலே உவந்தாய்* | ,, |
| *ஆனந்த மயமாம் உருவே* | ,, |
| *ஆனந்தம் தந்திடும் திருவே* | ,, |
| *இணையில் நல்லுரைச் சிங்கமே* | ,, |
| *இங்கித மறியும் இறையே* | ,, |
| *ஈன விருப்புகள் அற்றவா* | ,, |
| *ஈதிபாதை தவிர்க் கொற்றவா* | ,, |
| *உறு "நீர்க்காக்கை" யாம் சீலா* | ,, |
| *உன்மத்தன் போலலை பாலா* | ,, |
| *ஊனுறைக் காமங்கள் அற்றவா* | ,, |
| *ஊக்க வணிகர்க்கு உற்றவா* | ,, |
| *இருடி உரைகள் தெளிந்தோய்* | ,, |
| *இருளில் இமையோர் கூடினோய்* | ,, |
| *ஏகாந்தமதில் ரமிப்பாய்* | ,, |
| *ஏற்றிய பாவங்கள் எரிப்பாய்* | ,, |
| *ஐச்வர்யங்களை அளிப்பாய்* | ,, |
| *இகபர சுகங்களை வெறுத்தாய்* | ,, |
| *ஒதுங்கிட வோர்மனை இல்லோய்* | ,, |
| *ஓங்காரத்தில் லயம் அடைந்தோய்* | ,, |
| *ஒப்புயர்வற்ற ஸத்குருவே* | ,, |

ஔடத உயர்ஞானத் திருவே ,,
கருணைக் கடலாய்க் கனிந்தாய் ,,
காமகோடி திலக வரமே ,,
கர்மயோகப் பித்த சரமே ,,
கசடு படிந்த சடையாய் ,,
காமனைக் கடியும் கதிராய் ,,
காஞ்சிக் கனிதந்த மணியே ,,
கடும்புலன் மனது வென்றாய் ,,
கண்டதை யுண்டு களித்தாய் ,,
கரபங்க ளேழைப் பணிந்தாய் ,,
காணிது கடவுளாய்க் கண்டாய் ,,
ககன நிறை குரு ஆனாய் ,,
கடுங்கோடை பணிகள் கொண்டாய் ,,
சாமர்த்தியமிகு சாரனே ,,
சிந்தைத் சித்திரங்கள் காண்பானே ,,
சிறுகடை நோக்குச் சிறப்போய் ,,
சரிவில் சரியை உடையோய் ,,
சல்லடை போற்சலி மதியோய் ,,
சீடர்கண் திறந்தருள் சீரோய் ,,
ஜனனந் தவிர்க்கும் விஜயா ,,
ஜாக்ராண்ம விழிப்புடை தூயா ,,
ஜபமுறை அறிந்த சீலா ,,
ஜகத்குரு வாகிய தேவா ,,
ஜடிதியில் வரமருள் வேலா ,,
ஞானதீர்த்தா பணி பாதா ,,
சிட்டெனப் பறந்திடு தேவா ,,
தொடிகை மதலைக்கருள் தேசிகா ,,
டோலா புரிக் கோயில் கொண்டவா ,,
டக்காதி வொலியிற் களித்தாய் ,,
தன்மனை மெத்தைகள் அற்றவா ,,
தத்துவ போதநிறை உற்றவா ,,

திரிநேத் திரஞ்ஞானந் தந்தவா ,,
தீயுண்ட துணியாயத் திகழ்ந்தவா ,,
தீயவெம் மாரனை எரித்தாய் ,,
தேவி ராமர் அண்ணாமலை பூஜித்தாய் ,,
தர்மநுட்பமெல்லாந் தெரிந்தாய் ,,
தொல்லிருள் தொலைத்தருள் தூயனே ,,
நமவென்றாரிடர் கடி வேலனே ,,
நித்யநிர் மலனாய் நின்றவா ,,
பரமறைப் பழி ஞானக் குன்றவா ,,
பரமாம் பிரமப் பொருளே ,,
பாப புண்ணியவழி கடந்தோய் ,,
பயன்விட்டழிவில் நிலை நின்றோய் ,,
வெருங்காட் டுரைநிலைச் சான்றோய் ,,
பிறவிப் பெருங்கடற்படகோய் ,,
பெருமங்களந்தரு உருவோய் ,,
பெரும்பிணி போக்கி அருள்வோய் ,,
பேரொளி யுலகப் பரிதியே ,,
மாயை கடந்த நற் கதியே ,,
மாபேரறிவது உடையோய் ,,
மந்திர சாஸ்திர வல்லோய் ,,
யாது கிடைக்கினுங் களிப்போய் ,,
யார்தருங் கஞ்சிக்கும் உவந்தோய் ,,
யமத்தாற் புலன்கள் ஆண்டவா ,,
யதேச்சை நடையுடைத் தாண்டவா ,,
யோகபீடத்திலவதரித்தோய் ,,
யுக்தமாம் ஊண்நடை உடையோய் ,,
யோகக்ஷேமப் பற்று அறுத்தோய் ,,
அரவப் பிரம்மம் அறிந்தோய் ,,
இராம சொரூப இலக்கே ,,
இராம தத்துவ விளக்கே ,,
லலிதா தேவியருள் பெற்றவா ,,

லீலையருளுரு நற்றவா ,,
வல்லி மரகதத்தனையா ,,
வரதரொளி தரு சேயா ,,
வர்ணாச்ரம நிலை நட்டவா ,,
வேதாந்தக்கடல் வித்தகா ,,
சக்தியருள் மிளிர் வாழ்வா ,,
சீடருளக் கொதி தீர்ப்பவா ,,
ஷண்முகாலய மெத்தைக் கீர்த்தியே ,,
ஸஞ்சார தக்ஷிணா மூர்த்தியே ,,
சற்சீடர் சூழுங் ஸத்குருவே ,,
சீராம் குருபீடம் அமைத்தோய் ,,
அனைய உயிர்க்கும் அருள்வோய் ,,
அனைவருமுய்ய மிகத் துணிகரமாகவே
யோகபீடம் நடத் திடுவோய் ,,
எல்லாம் வல்ல சக்திமய சிவமே ,,
எங்கும் நிறை நாராயண பரமே ,,
வேண்டாததெல்லாம் அழிப்பாய் ,,
வேண்டுவ தெல்லாம் அளிப்பாய் ,,
ஸஹஸ்ரதள பதுமத்தா ,,
ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி நாதா ,,
எல்லாமறி ஸத்குரு தேவா ,,
எளிதில் "தங்கக்கை" ஆனவா ,,
என்றுமே "நானவன்" என்றாய் ,,
ஏழைபிழை பொறுத்துமே அருள்வாய் ,,
ஸ்ரீ ஸத்குரு சரணம் சரணம் சரணம் ,,
ஸ்ரீ பரமகுரு சரணம் சரணம் சரணம் ,,
ஸ்ரீ பரமேஷ்டிகுரு சரணம் சரணம் ,,
ஸ்ரீ பராபரகுரு சரணம் சரணம் ,,
ஸ்ரீ ஸத்குரு திருவடி தேவா சரணம் ,,
சரணம்! சரணம்! சரணம்! சரணம்! ,,
சரணம்! சரணம்! பித்தா சரணம்! ,,

சரணம்! சரணம்! சித்தா சரணம்! ,,
சரணம்! சரணம்! தத்தா சரணம்! ,,
சரணம்! சரணம்! உன்மத்தா சரணம்! ,,
சரணம்! கருணாஸாகரா சரணம்! ,,
சரணம்! கர்மயோகதீரா சரணம்! ,,
சரணம்! ஸூக்ஷ்மப்ரவேசா சரணம்! ,,
சரணம்! மௌனோபதேசா சரணம்! ,,
சரணம்! சரணம்! சரணம்! சரணம்! ,,
சரணம்! சரணம்! சரணம்! சரணம்! ,,

சுபம்

ஸ்ரீ ஸத்குருவே நம:

## ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள்

# அஷ்டோத்தர சத நாமாவளி

### ஸ்ரீ ஸத்குரு சரண ஸ்ரீ ஞானதீர்த்த ஸ்வாமிகள் இயற்றியது

ஒவ்வொரு நாமாவளிக்கு முன்பு 'ஓம்' என்றும் முடிவில் 'நம:' என்றும் சேர்க்கவும்

ஓம் *அஜாக்ஷராத்வைதானந்தாய நம:*
ஓம் *அருணாசல பூஷணாய*
ஓம் *அட்ட ஹாஸாய*
ஓம் *ஆத்மநிஷ்ட த்ருப்தாய*
ஓம் *ஆனந்தினே*
ஓம் *ஆஹ்லாததாய*
ஓம் *இடாஸிஹ்மாய*
ஓம் *இங்கித(ஜ்)ஞ் ஞாய*
ஓம் *ஈஹா ஹீனாய*
ஓம் *ஈதி நாசனாய* 10
ஓம் *உதகாக சீலாய*
ஓம் *உன்மத்தாய*
ஓம் *ஊர்மிஹீனாய*
ஓம் *ஊருஜப்ரியாய*
ஓம் *ரு(ரி)ஷிப்ரியாய*
ஓம் *ருபுஸ்தோமாய*
ஓம் *ஏகாகினே*
ஓம் *ஏன நாசகாய*
ஓம் *ஐச்வர்ய ப்ரதாய*
ஓம் *ஐஹிகத்விஷே* 20
ஓம் *ஓகஹீனாய*
ஓம் *ஓங்காராலயாய*
ஓம் *ஔபம்யரஹித குரவே*

ஓம் ஔஷதோத்தம சேவதயே
ஓம் கருணாப்தயே
ஓம் காமகோடி திலகாய
ஓம் கர்மயோகினே
ஓம் கச்சர ஜடாய
ஓம் காமாரயே
ஓம் காஞ்சீகநிஸமுத் பவாய 30
ஓம் கண்டி தேந்த்ரிய மானஸாய
ஓம் காத்யாகாத்ய ஸுவர்ஜிதாய
ஓம் கரஸப்த நமஸ்காரிணே
ஓம் கல்விதம் ப்ரஹ்ம ஸத்மதயே
ஓம் ககன ஸத்ருச குரவே
ஓம் கர்மஹிமாதி ஸஹிஷ்ணவே
ஓம் சாருசாராய
ஓம் சித்ரகுப்தாய
ஓம் சாக்ஷுஷீச ஸுபண்டிதாய
ஓம் ச்யுதிஹீனாய 40
ஓம் சாலநீ தீயே
ஓம் சாஸ்த்ர சக்ஷுருன்மீலகாய
ஓம் ஜநிஹீனாய
ஓம் ஜாகரூகாய
ஓம் ஜபசீலாய
ஓம் ஜகத்குரவே
ஓம் ஜடிதி ப்ரஸாதகராய
ஓம் (ஜ்) ஞானதீர்(த்)தார்(ச்) சிதாங்க்ரிகாய
ஓம் டிட்டிபாதிக கதயே
ஓம் டிம்பாநுக்ரஹதேசிகாய 50
ஓம் டக்காதிதோஷ மானஸாய
ஓம் தல்பஹீனாய
ஓம் தத்வ யுக்தாய
ஓம் த்ரிநேத்ர ஞானதாயகாய
ஓம் தக்த படாய
ஓம் தர்(ப்)பகாரயே

ஓம் தேவீராமாத்ரி பூஜிதாய
ஓம் தர்மஞ்ஞாய
ஓம் த்வாந்த நாசனாய
ஓம் நதார்(த்)திக்னாய 60
ஓம் நித்ய நிர்மலாய
ஓம் பராரிஹறாய
ஓம் பரம்ப்ரஹ்மணே
ஓம் புண்யாபுண்ய விவர்ஜிதாய
ஓம் பலத்யாகாம்ருதத்வ புஜே
ஓம் ப்ருஹறதாரண்யகாலயாய
ஓம் பவ நாவிகாய
ஓம் பாவுகாய
ஓம் பிஷஜே
ஓம் பாலோகபாஸ்கராய 70
ஓம் மாயாதீதாய
ஓம் மாமனீஷிணே
ஓம் மந்த்ர சாஸ்த்ர விசாரதாய
ஓம் யத்ருச்சாலாப ஸந்துஷ்டாய
ஓம் யவாகூஸந்த்ருப்தாய
ஓம் யமினே
ஓம் யதேச்சாசரண தீராய
ஓம் யோகபீடாவதார க்ருதே
ஓம் யுக்தாஹறார விஹறாராய
ஓம் யோகக்ஷேம விவர்ஜிதாய 80
ஓம் ரவரஸஞ்ஞாய
ஓம் ராமஞ்ஞாய
ஓம் ராமதத்வப்ரகாசகாய
ஓம் லலிதானுக்ரஹறபாத்ராய
ஓம் லீலானுக்ரஹற விக்ரஹறாய நம:
ஓம் டோலாபுர்ய யுதிஷ்டிதாய நம:
ஓம் வள்ளி மரகத ஸூதவே
ஓம் வரதௌஜதர வடவே
ஓம் வர்ணாச்ரம ப்ரதிஷ்டாத்ரே

ஓம் வேதாந்தார்ணவ பண்டிதாய 90
ஓம் சக்திவிலாஸ சாரித்ராய
ஓம் சிஷ்யஹ்ருத்தாப ஹஸ்தாய
ஓம் ஷடானனாலய சய்யா பூஷணானந்த சின்மயாய
ஓம் ஸஞ்சார தக்ஷிணாமூர்த்தயே
ஓம் ஸச்சிஷ்யாவ்ருத ஸத்குரவே
ஓம் ஸுகுருபீடஸ்தாபகாய
ஓம் ஸூக்ஷ்மப்ரவேச பண்டிதாய
ஓம் ஸர்வோத்தார ப்ரஸாஹஸ்யோகபீட ஸஞ்சாலகாய
ஓம் ஸர்வ சக்த்யாத்மக சிவாய
ஓம் ஸர்வ வ்யாப்ய நாராயணாய 100
ஓம் ஸர்வாரிஷ்ட நிவாரகாய
ஓம் ஸர்வாபீஷ்ட ப்ரதாயகாய
ஓம் ஸஹஸ்ரதள பத்மஸ்தாய
ஓம் ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி நாதாய
ஓம் ஸர்வஞ்ஞாய
ஓம் ஹிரண்ய பாஹவே
ஓம் ஹம்ஸபராய
ஓம் க்ஷமாகராய 108
ஓம் ஸ்ரீகுரவே
ஓம் ஸ்ரீபரமகுரவே
ஓம் ஸ்ரீபரமேஷ்டி குரவே
ஓம் ஸ்ரீபராபர குரவே
ஓம் ஸமஸ்தகுருமண்டல தேவதாப்யாம்
ஓம் ஸ்ரீஸத்குருபாதுகாப்யாம் நம:

சுபம்

# அடைக்கலம் தரும் அமைதி ஸ்தலம்

ஞானம் என்பதை நாம் கடைவீதியில் சென்று வாங்க முடியாது. அனுபவித்து ஆராய்ச்சி செய்து, குழம்பி, குருஅருள் பெற்று தெளிவு அடைந்து பரிசுத்த நிலையை அடைய வேண்டும். பரிசுத்த நிலை அடைந்த பிறகு காமம், குரோதம், லோபம், மோகம், மதம், ஆச்சரியம் என்ற இந்திரிய சுகங்களுக்கு அங்கே இடம் இல்லை.

இப்படிப்பட்ட சித்தத்தை சுத்தம் செய்து சத்து, சித்து ஆனந்த நிலையை அடைந்து, ஜீவனையே சிவனாக்கி இயங்கி வருபவர்கள் தான் உண்மையான சித்தர்கள். வயிற்று பசி, காமப் பசி, ஆன்மீகப் பசி இவற்றை எல்லாம் ஆராய்ந்து, அனுபவித்து காற்றையே ஆகாரமாகக் கொண்டு அஷ்டமாசித்துக்கள் கைவரக்கூடிய வெட்ட வெளியிலே சூட்சும உடலுடன் அம்பிகையின் ஆணைக்கு கட்டுப் பட்டு, மனித வாழ்க்கையை சீர்படுத்தி, பிரச்சினைகளை தீர்த்து வைத்து, தெய்வீக ஆற்றலின் அருமை பெருமைகளை உணர வைத்து, சாமன்ய மனிதனையும் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்துபவர்கள்தான் உண்மையான 18 சித்தர்கள்.

மகத்தான மகத்துவங்கள் அடங்கிய 18 சித்தர்கள் பரிவாரங் களாக அமர்ந்து அன்னையோடு இணைந்து சூட்சும இயக்கத்தை நடத்தி கொண்டிருக்கிறார்கள். அகில அண்டங்களுக்கெல்லாம் நாயகி யாக சித்தர்கள் எல்லோரும் வழிப்பட்ட வாலை பரமேஸ்வரியாக நம் அன்னை ஸ்ரீ லலிதா மகாதிரிபுரசுந்தரி ஆட்சி பீடத்தில் நாயகியாக மாடம்பாக்கம் சக்தி பீடத்தில் காமேஸ்வரனோடு இணைந்து காமேஸ்வரியாக அருளாட்சி செய்து வருகிறார். அவர்கள் எல்லோரும் வெறும் சிலைகளாகவா இருக்கிறார்கள்? நம்மோடு பேசிக் கொண்டிருக்கிறார்கள். இந்த சக்தி பீடத்தை பொறுத்தமட்டில் இறைசக்திக்கும், மனித சக்திக்கும் இடையே தரகர்கள் யாரும்

தேவை இல்லை. நீங்களே நேரிடையாக சித்தர்களோடு பேசலாம். உங்கள் குறைகளை சொல்லலாம். மனம் விட்டு அழலாம், கதறலாம், புலம்பலாம், பகிர்ந்து கொள்ளலாம். உங்கள் மனச் சுமையை அங்கே இறக்கி வைக்கலாம். மன அமைதியோடு நீங்கள் செல்லலாம். இங்கே இருக்கும் அர்ச்சகர்களோடு பகிரந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. மனிதன் மகான் ஆவது கடினம். மனிதனை கடவுளாக பார்க்கும் குற்றத்தை நாம் செய்யாமல் மகான் களையும் 18 சித்தர்களையும் வழிபட்டு, ஆத்மதாகம் தணிந்து ஆன்மீக பாதையில் தெளிவான நிலையில் நமது சித்தர்கள் சாம்ராஜ்யம் நோக்கி புனிதப்பயணம் தொடரட்டும். பேரொளி வழிகாட்டட்டும்.

பதிணென் சித்தர் பச்சைகல் ஸ்ரீ சக்ரமகாமேரு சக்தி பீடத்தின் சிறப்பம்சங்கள்

1. உலகிலேயே முதன்மையான சிவனும், சக்தியும் இணைந்து தரிசனம் கொடுக்கும் ஒரே பச்சைகல் ஸ்ரீ சக்ர மகாமேரு
2. ஸ்ரீ காமதேனு
3. பச்சைக்கல் ஸ்ரீ ராஜகாளியம்மன் (தெத்துப்பட்டி)
4. பஞ்சசக்திகளை வெளிப்படுத்தும் ஐந்து ஸ்தல விருட்சங்கள்
5. திருநாகேஸ்வரத்தில் உள்ளபடி தேவியருடன் ஸ்ரீ நாகராஜர் சன்னதி
6. ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு தனி சன்னதி
7. குருவாயூரில் உள்ளபடி ஸ்ரீ குருவாயூரப்பன் சன்னதி
8. ஒரே நேர்கோட்டில் அமைந்துள்ள ஸ்ரீ சக்ர மகாமேரு, விமானத்தில் அமைந்துள்ள திதி நித்யா தேவிகள், தங்க கலசம் தரிசனம் செய்யும் பாக்கியம்
9. ஸ்ரீ வித்யா மந்திர திருஷ்ட்வாக்கள் அலங்கரிக்கப்பட்ட ஸத்குரு ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகள் விமானம்.
10. நவக்கிரஹங்களின் சக்திகளை தன்னுள்ளே அடக்கி அருள் பாலிக்கும் பதினெட்டு சித்தர்களுக்கு தனித்தனி சன்னதிகள்.
11. ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப்பட்ட தலைசிறந்த ஸ்ரீவித்யா முறைப்படி அமைக்கப்பட்ட சக்தி பீடம்
12. 18 சித்தர்கள், அன்னை பராசக்தி, மற்றும் அனைத்து அருள் சக்திகளையும் ஒரே ஸ்தலத்தில் தரிசிக்கும் பாக்கியம்

பதினெட்டு சித்தர்களின் கருங்கல் கட்டிட திருப்பணிகள் நடந்து கொண்டிருக்கின்றன. தாராளமாக நிதியுதவி அளியுங்கள். சித்தர்களின் அருளை பெறுங்கள்.


































ஸ்ரீ லலிதா மஹா திரிபுரசுந்தரி, 18 சித்தர்கள்
மாடம்பாக்கம், சென்னை - 600 073, இந்தியா.
✆ : 91-44-22281408, 22281337
Website: www.seshadri.info



ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் பிருந்தாவனம் அறக்கட்டளையின் நிறுவனரும், தெய்வீக ஜோதிடரும், ஸ்ரீ வித்யா உபாசகரும், ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் பிரதான சீடருமான ஸ்ரீ லட்சுமி நாராயண சர்மா எனும் குருஜி K.V.L.N. சர்மா அவர்கள் தென் இந்தியாவில் கும்பகோணத்திற்கு அருகிலுள்ள கஞ்சனூர் என்ற ஊரில் பிறந்தார். ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் முழு சரணாகதியடைந்து அவருடைய கருணைக்கும், அன்புக்கும், வழிகாட்டுதலுக்கும் பாத்திரமானவர். குருஜி சர்மா அவர்கள், பூரண ஸ்ரீ வித்யா உபதேசத்தை தன் குருவான ஸ்ரீமதி. விசாலாட்சி ஸ்வாமிநாதன் அவர்களின் மூலமாக பெற்றவர். ஸ்ரீ விசாலாட்சியின் குரு ஸ்ரீ நாகசுப்ரமண்ய சாஸ்திரிகள், அவருடைய குரு பூக்கடை ஸ்ரீ சுந்தரேச சாஸ்திரிகள். இவர் ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளிடமிருந்து நேரடியாக ஸ்ரீ வித்யா உபதேசம் பெற்றவர். ஸத்குருவின் சீடர்களுக்கு குருஜி சர்மா அவர்கள் குருவாகவும், வழிகாட்டியாகவும் இருந்து வருகிறார். ஸத்குருவின் சூட்சும ஆணைகளையும், ஆசீர்வாதங்களையும் இவர் மூலமாக பல சீடர்கள் பெற்று வருகிறார்கள். ஸத்குரு சூட்சுமத்தில் குருஜி சர்மா மூலம் ஆணையிட்டு வழிகாட்டுகிறார் என்பதற்கு அத்தாட்சியாக மாடம்பாக்கத்தில் அவர் கட்டியுள்ள பச்சைகல் ஸ்ரீ சக்ர மகாமேரு 18 சித்தர், சக்தி பீட பிருந்தாவனம் காட்சியளிக்கிறது. உலக பொது அமைதி வழிபாட்டு ஸ்தலமாக விளங்கும் இந்த பிருந்தாவனம் அனைத்து மக்களுக்கும் தாயாக விளங்கும் அன்னை பராசக்தியை மகாமேருவாக ஸ்ரீ வித்யா முறைப்படி மையமாகக் கொண்டு சித்தர் தத்துவ முறையில் ஜாதி, மத, இன, மொழி வேறுபாடின்றி அனைவருக்கும் அருள்பாலிக்கும் இடமாக அமைந்துள்ளது. இங்கிருந்து ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் குருஜி K.V.L.N. சர்மா மூலமாக மனித வளமேம்பாட்டிற்காக வாழ்க்கை பிரச்சனைகள் அனைத்தையும் தீர்த்து அருளாசிகளை வழங்கி கொண்டிருக்கிறார்கள்.

வணங்கிடுவோம் வாழ்த்துகளைப் பெறுவோம்.

**குருஜி K.V.L.N. சர்மா** அவர்களிடம் ஜோதிட ஆலோசனையை பெற விரும்பும் அன்பர்கள் முன் பதிவு செய்து கொண்டு வரவும்.
தொலைபேசி என். 91-44-24938734
Website: www.seshadri.info

**சக்தி-பீடம் விலாசம்**
எண். 1, சன்னதி தெரு,
மாடம்பாக்கம், சென்னை - 600 073.
போன் : 22281408, 22281337

Sri Maruthy ✆ : 044-28524256

